# A FEW SELECT OPINIONS OF TAMIL SCHOLARS ON THE FIRST EDITION OF BHOJA CHARITRAM

From

M.R.Ry.

P. ARUNACHALA NAICKER Avl.,

*Tamil Pandit, Muthyalpet*
*High School, Madras,*
*21st December* 1900.

Dear Sir,

Your Bhoja Charitram has given me infinite pleasure. Almost all the thoughts are very natural and the wordings in which they are clothed are all sweet, impressive, apt and graphic. Most of the quoted stanzas illustrate the morals with great effect. On the whole, the drama is well got up, and in my opinion may serve as a good and beautiful example to Tamil literary men to follow suit.

The accompanying pieces of poetry which I have composed are my opinions expressed in verse.

I am,
Yours sincerely,
(Signed) P. ARUNACHALA NAICKER.

---

நிலவுபொழி தனிக்கவினை போஜ ராஜன்
நீண்ட சரித்திரத்திலுறு சுவைகளியாவும்
குலவு வடமொழி பயின்றோர் நவின்றே யேமம்
கொள்ளுமா தெல்மொழியிற் பயின்றோர்தாமும்

அலகுபெறு மகிழ்வெய்தக் கருதி யன்னோன்
அருங்கதையைத் தமிழி னாடகமாத் தந்தான்
இலகு கவுணியர் குலத்தோன் கலைவலாளன்
எழில்பெறு நாராயணப்பே ரினியன்றானே.

நயத்தகு நாராயணப் பேர்ப்புலவ னிங்கு
நற்றமிழாற் புனைந்த விம்மா நாடகந்தான்
செயத்தகு நல்வினைக ளுக்கோர் விளக்கமாகித்
தீமை யெனும் படுகுழிக்கோர் தடையுமாகி
வியத்தகு செந்தமிழ்ப்புலவர் தமக்கும் தாந்தேர்
விரிந்த கதைதனைத் தமிழ் நாடகமாய்ப்பாடப்
பயத்த குணவழி காட்டியாகி யென்றும்
பரியளியா திற்குமெனப் பகரற்பாற்றே.

---

From

M.R.Ry.

T. BALASUNDARA MUDALIAR Avl.,

*Munshi to the Tamil*

*Translator to Government,*

*Madras,*

*19th January* 1901.

Dear Sir,

I have perused your Bhoja Charitram with immense pleasure. It is highly gratifying to note that the plot of the drama is edifying, that the language throughout is lucid and natural, and that the quotations from Classical works are most appropriate.

I sincerely wish your exemplary work every success.

Very truly yours,
(Signed) T. BALASUNDARAM.

---

From

M.R.Ry.

T. RAMAKRISHNA PILLAI, B.A., F.M.U.,
*Tamil Translator, High Court, Madras.*
THOTTAKKADU HOUSE,
*Poonamallee Road, Madras.*

Dear Mr. NARAYANA SASTRY,

I have gone through your interesting drama-Bhoja Charitram-and am glad to tell you that you have succeeded in your task admirably. The plot has been woven with skill and accept my sincere congratulations on the excellence of your performance......Believe me,

Your well-wisher,
(Signed) T. RAMAKRISHNA.

*21st January* 1901.

---

From

The Editor, SWADESAMITRAN, *Madras.*

*சுதேசமித்திரன், செவ்வாய்க்கிழமை,*
*1900ஹு டிசம்பர் 11உ*

போஜநாடகம்

---

போஜராஜனது சரித்திரம் செந்தமிழில் ஒரு திவ்விய நாடகமாக ஹைகோர்ட்டு வக்கீல் கனம் T. S. நாராயண சாஸ்திரி, பி. ஏ., பி. எல். அவர்களால் எழு

தப்பட்டு நமது பார்வைக் கனுப்பப்பட்டதை வெகு இன்பத்துடன் வாசித்துக் களித்தனம். அறிவைப் பரப்பும் இத்தகைய புத்தகங்களே நம் நாட்டுக்குத் தற்காலம் வேண்டியவைகள். அறிவிலார் கண்ணிலாராயின் இந்நாடகம் கண் கொடுக்குமென்பதில் சிறிதேனும் ஐயமின்று. இயல், இசை, நாடகமெனும் முத்தமிழிலும், இயற்றமிழும், இசைத்தமிழும், சிலாக்கியமாகவிருக்க, நாடகத்தமிழ் நம்படைக்கில்லாத குறையை யகற்ற நம்மவரெல்லாம் முயலவேண்டுவது அவசியமானதினால் சாஸ்திரியார் அவர்கள் நன்மை கடைப்பிடித்து முன்வந்ததிற்காக நாம் மிகவும் சந்தோஷப்படுகிறோம். போஜநாடகமோ மிகவும் அருமையான நடையில் எழுதப்பட்டு, இடையிடையே பழைய நூல்களிலிருந்து மேற்கோள்கள் சமயோசிதமாய் அமைக்கப்பட்டுப் பொருட்போக்கும் கருத்தும் வாசகக் கிளர்ச்சியும் ஒன்றைவிட்டொன்றகலாத பான்மை தாங்கிப் படிப்போருக்கு இன்பமேபயந்து, அன்னோர் மனதில் துன்மார்க்கம் அழியும், சன்மார்க்கம் இடையூறுகளால் நலிவுறினும் இறுதியில் வெற்றியே கொள்ளும் எனும் நல்லறிவைப் புகட்டி, சிலாக்கிக்கத்தக்க நாடகச் சாமர்த்தியத்துடன் எழுதப்பட்டிருக்கிறது. ஆசிரியர் ஆங்கிலேயப்பட்டம் பெற்று, வடமொழி தென்மொழிகளில் மிக வல்லுநர் என்பதை இப்புத்தகமே நன்கு விளக்கும்.....மித்திரநேயர்களும் மற்றும் தமிழபிமானிகளும் இப்புத்தகம் வாங்கி வாசிக்கவேண்டுவ தவசியமென நாம் முற்றிலும் கூறுவோம்.

# முகவுரை

போஜசரித்ர மென்னும் பெயர் கொண்ட இந் நாடகமானது வடமொழியிலுள்ள போஜப்ரபந்தம் என்னுஞ் சரித்ரத்திலுள்ள ஸ்ரீ போஜராஜனுடைய பால்ய சரித்ரத்தைப் பெரும்பான்மை யநுஸரித்து ஸ்வதந்த்ரயூஹத்தால் கதைப்போக்கைச்சிறிது மாற்றி, ஸம்ஸ்க்ருதாங்கல நாடக லக்ஷணத்திற்கு இன்றியமை யாத சிலவற்றைச் செறித்து, நவரஸங்களு மமைய நூதநமாய் இயற்றப்பட்டுளது. ஏனைய நாடகங்களைப் போலாது, இதன் கண்ணே சில வடமொழிச் சொற் களும் அத்யாவஸ்யமான விடங்களில் உபயோகிக்கப் பட்டுள. அவ்வாறுபயோகித்தல் தமிழ்ப் பாஷைக்கு ஓர் ஏற்றமும் கம்பீரமும் அழகும் பயக்குமென்பதே எமது துணிவு. இதை மிகை என்று கருதுவோர் எம்மை மன்னிப்பாராக.

இது நிற்க, இந்நாடகத்தின் கண்ணே யாம் இயற் றிய செய்யுட்களன்றியும், மேற்கோள்களாகப் பல செந்தமிழ் நூல்களினின்றும் பாடல்கள் எடுத்துக் காட்டப் பட்டுள. சில மேற்கோட் செய்யுட்களை ஸந் தர்ப்பத்திற் கேற்றவாறு சிறிது மாற்றியுங் கொண்டி ருக்கின்றோம். மேலும் நாடகத்திற்கு ஒரு முக்ய

அங்கமாதலால் தமிழில் இசைப்பாட்டுகளாகக் கீர்த்தனங்களு மாங்காங்கு அமைக்கப்பட்டுள. அவசியமான விடங்களில் வடநூல் மேற்கோள்களும் காட்டப்பட்டுள்ளன.

இந்நூதந நாடகம் சென்ற 1898ஞு ஏப்ரல்மீ 16உ சென்னை வித்வந் மநோ ரஞ்ஜநீ ஸபையோரால் விக்டோரியா ஸபாமண்டபத்தில் அரங்கேற்றப்பட்டது. அதற்காக யாம் அவர்களுக்கு வந்தநஞ்செய்யக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

இந்நூலானது எமது லௌகிகத் தொழில்புரியுமிடத்து இடையிடையே கிடைத்த அவகாசங்களில் எழுதி யொருவாறு அச்சிடப்பட்டதாதலின் தவறுகள் பல விருக்கக்கூடும். பெரியோர் அவற்றைத் திருத்தி எம்மீது கருணைபுரிவாராக.

சார்வரிஞு
அற்பிசிமீ, 3உ
ஸௌந்தர மந்திரம்,
சென்னை

தி. ஸ. நா.

# போஜசரித்ரம்

## நாடக பாத்ரங்கள்

**போஜன்** :—பூர்வம் தாராராஜ்யத்தை யாண்டுவந்த ஸ்ரீ நவஸாஹஸாங்க விக்ரமாதித்ய ரென்னும் ஸிந்துல மஹாராஜரின் புதல்வன்—(நாடகத் தலைவன்)

**முஞ்ஜன்** :—ஸிந்துல மஹாராஜருடைய ஸஹோதரன்—(போஜனுக்குப் ப்ரதிநிதியாய்த் தாராராஜ்யத்தைப் பரிபாலித்து வருபவன்)

**புத்திஸாகரர்** :—ஸிந்துல மஹாராஜருடைய முதன் மந்த்ரி—(போஜனுக்கு வித்யை கற்பித்து வருபவர்)

**பரிமள காளிதாஸன்** :—போஜனுடைய ஸஹபாடிகளில் ஒருவன்—ம்ருகாங்கதத்தருடைய புதல்வன், பத்மகுப்தனென்று வேறு பெயர் பூண்டவன்—(போஜனுக்குப் ப்ராணநேசன்)

**தநிகன்** :—போஜனுடைய ஸஹபாடிகளில் மற்றொருவன்—தநஞ்ஜயருடைய புதல்வன்

**பத்ரநாராயணன்** :—முஞ்ஜனுடைய முக்ய மந்த்ரி

**வத்ஸராஜன்** :—ரமாங்கதருடைய புதல்வன்—முஞ்ஜனுடைய ஸேநாபதி

ம்ருகாங்கதத்தன்
நீலகண்டன்
ஹரிஹரன்
தநஞ்ஜயன்
வாமநபட்டன் } :—மூஞ்ஜனுடைய ஸபாஸதர்கள்

ஆதித்யவர்மா :—உஜ்ஜயிநீ நாட்டரசன்

ஸுக்ஷேமன் :—ஆதித்யவர்மாவின் மந்த்ரி

வீரஸேநன் :—ஆதித்யவர்மாவின் ஸேநைத்தலைவன்

ஸாரதாநந்தர் :—ஒரு யதீந்த்ரர், பூர்வாஸ்ரமத்தில் ஆர்யபட்டரெனப் பெயர்பூண்டவர்

கோவிந்தபண்டிதர் :—தாராநகரில் வஸித்துவந்த ஓர் எளிய ப்ராஹ்மணர்

ஸோமஸுந்தரதீக்ஷிதர் :—உஜ்ஜயிநீ நகரில் வஸிக்கும் ஒரு ப்ராஹ்மணர்

பீமன்
பைரவன் } :—வத்ஸராஜனுடைய கிங்கரர்கள்

கோபாலன்
க்ருஷ்ணன் } :—தாரைநகரில் வஸிக்கும் இரண்டு இடையர்கள்

ஜயபாலன் :—கள்ளர் ஜாதியைச்சேர்ந்த பில்லர்களுக்கரசன் —(லீலாவதியை வளர்த்துவருபவன்)

கைலாஸநாதன் :—தாரைநகர் விநாயகர் கோயில் அர்ச்சகர்

பிக்ஷேச்வரன் :—அக்கோயிலில் வேதமோதும் ஒரு ப்ராஹ்மணன்

ஹம்மீரன்
வீரன்
காலபாசன்
விரூபாக்ஷன் } :—ஜயபாலனைச் சேர்ந்த பில்லர்கள்

ராமக்ருஷ்ணன்<br>ஸ்ரீநிவாஸன் } :—கோவிந்தபண்டிதருடைய பிள்ளைகள்

ப்ராஹ்மணர், ப்ரபுக்கள், பௌரர், காவலாளர், ஸைநிகர், ஸேவகர் முதலாயினோர்

---

ஶஶிப்ரபை :—ஸிந்துலமஹாராஜருடைய பட்டமஹிஷி—(போஜனுடையதாய்)

சாருமதி :—காலஞ்சென்ற பூபாளநாட்டரசனுடைய பட்டமஹிஷி—(ஸிந்துலராஜருடைய ஸஹோதரி)

விலாஸவதி :—சாருமதியின் புதல்வி—(போஜனுடைய முதன்மனைவி, நாடகத்தலைவிகளி லொருத்தி)

பத்மாவதி :—ஆதித்யவர்மாவின் பட்டமஹிஷி

லீலாவதி :—ஆதித்யவர்மாவின் புதல்வி—(ஜயபாலனால் வளர்த்து வரப்பட்டவள்; போஜனுடைய இரண்டாம் மனைவி, நாடகத்தலைவிகளில் மற்றொருத்தி)

மதநமாலிநி :—முஞ்ஜனுடைய முக்ய பரிசாரிகை

தரங்கவதி :—விலாஸவதியின் தோழி

ஸுநந்தா :—கோவிந்தபண்டிதருடைய பத்நி

ஜாநகி :—கோவிந்தபண்டிதருடைய பெண்

சண்டிகை :—ஜயபாலனுடைய மனைவி

காவதநை<br>தண்டபாணி } :—ஜயபாலனுடைய சேடியர்

யவநியர், சேடியர், முதலாயினோர்

---

## நாடக நிகழ்விடம்

பெரும்பான்மை

தாராராஜ்யத்தின் தலைநகராகிய தாரையிலும் ;

தாராராஜ்யத்துக்கும் உஜ்ஜயினீராஜ்யத்துக்கும்

மத்தியிலுள்ள பில்லர்களது துர்க்கத்திலும் ;

சிறுபான்மை உஜ்ஜயினீ நகரிலுமாம்.

உ

கடவுள் துணை

# போஜ சரித்ரம்

ஒரு புதிய தமிழ் நாடகம்

இஃது

இருபத்தொன்று சித்ரபடங்களுடன்

சென்னை ஹைகோர்ட் வக்கீல்

டி. எஸ். நாராயணசாஸ்திரியார், பீ.ஏ., பீ.எல்.

இயற்றியது

மூன்றாம் பதிப்பு

சென்னை

ஸ்ரீ [illegible] அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

1916

# ஸ்ரீ நடராஜர்

## அல்லது

### "ப்ரபஞ்ச மஹா நடன்"

(நாந்தியைச்சொல்லிக்கொண்டு ஸூத்ரதாரன் ப்ரவேசித்தல்)

ஸூத்ர:—(கைகூப்பி வணக்கமாய்)

அருளாகி யருவாகி யேகமாகி
யறிவாகி யுருவாகி யனைத்துமாகிக்
குருவாகிக் கோனாகிக் கடவுளாகிக்
குறிப்பரிய பெரும்பொருளாம் ப்ரஹ்மமாகி
யரனாகி யரியாகி யயனுமாகி
யகிலபுவநங்களையு மாக்ரமித்துக்
கருணைபொழி நடராஜன் கனிவிலக்கிக்
காத்தருள்வ னென்று மெமைக் களிமீக்கூர்ந்தே!

—ப்ரஸ்தாவனை, பக்கம். க

# போஜ சரித்ரம்

## ப்ரஸ்தாவநை

(நாந்தியைச் சொல்லிக்கொண்டு ஸூத்ரதாரன் ப்ரவேசித்தல்)

ஸூத்ரதாரன்:—(கைகூப்பி வணக்கமாய்)

அருளாகி யுருவாகி யேக மாகி
யறிவாகி யுருவாகி யனந்த மாகிக்
குருவாகிக் கோனாகிக் கடவு ளாகிக்
குறிப்பரிய பெரும்பொருளாம் ப்ரஹ்ம மாகி
யரனாகி யரியாகி யயனு மாகி
யகிலபுவ னங்களையு மாக்ர மித்துக்
கருணைபொழி நடராஜன் ஜவனி லக்கிக்
காத்தருள்வ னென்றுமெமைக் களிமீக்கூர்ந்தே!

(நேபத்யத்தில் நடர்கள் சேர்ந்து வடமொழியில் கானஞ்செய்தல்)

ராகம்-சங்கராபரணம், தாளம்-ஏகதாளம்

பல்லவி

விஜயதாம்! பரேஶிதா! விஜயதாம்! மஹேஶிதா!

அநுபல்லவி

விஜயதாம்! ஸதாய-மகில-ஸுஜநவர்மரக்ஷிதா!
விஹவ-ஹரித-ஜிதஜி-தகில-ஸுரவாநமணபிதா! (விஜ)

சரணங்கள்

ஸகலஶக்தி ஸம்யுத:-ஸகலவஸ்து ஸங்க்ரஹ:!
ஸகல தர்மயார்த்த-காரண-நிபுண தூர்ய ஸஜ்ஜித:!
ஸகல-நிகம-ஜலதி-மதந-ஸுதா ரஸவிதித: ! (விஜ)
கருணயா புநாத்விமாம்! கருணேயேஶ்வரஸ்ஸபாம்!
கருணயா புநாது-விபுல-ஹ்ருதய ராஜநீர ஸாஹஸாம்!
கலித-ஸாஜந-ஹ்ருதய-நளிந-தரணிருசி நிஸாம்! (விஜ)

ஸுமந்த்ர:—(செவிகொடுத்து, வியப்புடன் எப்பக்கமுஞ் சுற்றிப் பார்த்து) ஆ ஆ! இஃதென்ன ஆச்சர்யம்!

எம்மே கங்கண மின்பமாக வொருகா
 லேகித் தொலிக்கின்றதோ?
செம்மா கத்தினு மம்புதங்க ளணிபோற்
 சேர்ந்திங்கு பெய்கின்றன!
அம்மா! மின்னலு மின்னுகின்ற தழகாய்
 ஆகாய வட்டத்திலே!
ஸம்மோ தத்துட னிங்கின் றனமயில்
 ஸங்கங்க ளும்பாடியே!

ஸம்சயம்! இது மேக முழக்கந்தான்! (யோஜித்து) ஆயினுமிது மழைக்கு அகாலமாயிற்றே! சார்க்காலமும் முன்னமே கழிந்து போயிற்றே! இஃதென்னே அபூர்வமான மேககர்ஜனையாகவன்றோ இருக்கின்றது! (மேல்நோக்கி) வானமுங் கொஞ்சமேனுங் களங்கமின்றி ஸாதுக்களுடைய ஹ்ருதயம்போல் நிர்மலமாய் விளங்குகின்றது. இதோ!

இலங்குராஜஹம்ஸமேஶாபை
 யோங்கவே யதேஷ்டமாய்த்
துலங்கு மித்ர மண்ட லந்த
 ழைக்கவே ஸாகத்திஞற்

பளிங்கை யொத்த ஸத்ப தங்க
ளாகவே ப்ரகாசமாய்
விளங்கு மார தாகமத்தைக்
காண்கிறேன் விநோதமாய் !

(நாணத்தினால் புன்னகைசெய்து) ஆ! நமது ஸங்கீதசாலையில் வாசிக்கப்படும் வாத்ய கோஷத்தைக்கேட்டு எப்படி மயங்கலானேன்! (விமர்சையுடன்) இன்னும் நமது ஸங்கீதசாரிகை ஏன் வரக்காணோம்! (நேபத்யாபிமுகம் நோக்கி) இவ்வளவு மட்டும் போதும்! நேபத்யவிதானம் முடிந்திருந்தால் சீக்கிர மிங்கு வரலாம்.

(ப்ரவேசித்து)

நடி:—(பரபரப்புடன்) ஐயா! இதோ வந்துவிட்டேன்! என்ன செய்யவேண்டுமோ அதைக் கட்டளையிட்டால், செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றேன்.

ஸூத்ர:—(நடியை நோக்கிக் கோபத்துடன்) ஆர்யே! இது நல்ல வேடிக்கையே! உலகமெங்கும் புகழ்பெற்ற இப் பாரதகண்டத்தின்கண் முத்துமாலையின் இடையே நடுநாயகம் போல் விளங்கும் இச்சென்னைமாநகரின் நந்தனவனம்போ லிருக்கின்ற விந்த ஸார்வஜநோத்யான வனத்தின்கண் அத் யுந்நதாலங்காரசோபிதமாய் அத்யச்புதமாந் தீபபங்க்திகளால் தேஜோமயமாய் விளங்கும் இவ்விக்டோரியாஸபாமண்டபத் தில், அநேக விடங்களிலிருந்து வந்துள ப்ராசீந நவீந நூல்களை நன்கு கற்றுராய்ந்தறிந்த வித்வச் சிரோமணிகள் அநேகர் இன்றைக்கு நமது ஸபையோர் நடத்தப்போகின்ற புதிய நாடகத்தைப் பார்ப்பதற்காக மிக்க ஆவலோடு காத் துக்கொண்டிருக்க, அஃதொன்றுமறியாதவள்போல் மெதுவாய் வாராநின்றனையே! இஃதென்னை?

நடி:—(பயத்துடன்) ஐயா! யான் என்செய்வேன்? ஸகலருடைய மநதையுங் கொள்ளை கொள்ளுமன்றோ ஸங்கீதம்! நமது நேபத்ய சாலையில் நடந்த ஸகலேந்த்ரியாநந்தகரமான

காநரஸத்தை யுட்கொண்டவர் எவர்தாம் தம்மதி மயங்காம லிருப்பார் ?

கூவுங் கோகில நாதமோ ! மதுரமாய்க்
கொஞ்சுங் கிளிச்சொற்களோ !
மேவுங் கிந்நர சக்ரவர்த்தி மிதுநம்
மேலாங் குழல்நாதமோ !
கோவும் போற்றிடு மிந்தவாத்ய மதுவைக்
கொள்ளில் ஜகந்தன்னிலே
யாவுந் தம்மதியை மறந்து விடுமே
யாருங் களித்துய்வரே !

ஸூத்ர:—ஆம் ! நீ சொல்வது வாஸ்தவமே! ஸங்கீதோப லிஷத்வித்யாபரவசனாய் ஒரு க்ஷணகாலம் யான் வந்திருக்கு மிடத்தையும் கார்யத்தையுங் முற்றிலும் மறந்துவிட்டேன். இக்காநாம்ருதத்திற்கு ஒவ்வாமையாலன்றோ,

சர்க்கரை பாகா யிளகிச் சலித்திடுதல்
பக்குவப் பாலும் வெளுத்திடுதல்- தக்கக்
கரும்புதனைத் துண்டாகக் கண்ட மிடுதல்
அரும்பழத்தைக் கிள்ளை யடல் ?

இத்திவ்ய காநத்தைக்கேட்டு இவ் வித்வத்ஸபையும் மநங் களித்து ஆநந்தஸாகரத்தில் அமிழ்ந்திருக்கின்றதென்றே நிச் சயிக்கின்றேன்.

நடி:—ஐயா ! இப்பொழுது எந்த நாடகத்தைக்கொண்டு இம் மஹா ஸபையோரைக் களிப்பிக்கலாம்?

ஸூத்ர:—ஆர்யே ! இதற்குள்ளேயே மறந்துவிட்டனை யே ! இப்பொழுது தான் நமது நாடகாபிநயத்தைப்பார்க்க வந் திருக்கும் இம்மஹாஸபையோரால் ஸ்ரீராஜாதிராஜ போஜ மஹாராஜருடைய பால்ய சரித்ரத்தை நாடகரூபமா யபி

நயிக்கவேண்டுமென்று ஆஜ்ஞாபிக்கப்பட்டோமே! ஆகவின் தாமதமின்றி ஒரு ஸங்கீத மெடுத்துப்பாடுவாய்.

நடி:—(குதூஹலத்துடன்) ஐயா! ஸ்ரீபோஜ மஹாராஜருடைய சரித்ரம் வடமொழியிலன்றோ எழுதப்பட்டிருக்கின்றது! அத்திவ்யபாஷையும் வெகுகாலமாய் நம்மவரால் அநாதரிக்கப்பட்டு வருகிறபடியால், ம்ருதப் ப்ராயமாகவன்றோ ஆயிற்று! அப்படியிருக்க, இச்சரித்ரத்தை நம்மவர் யாவருங் கண்டுகளிக்கும்படி நமது தேசபாஷையில் எப்படி நாம் நாடகரூபமாய் அபிநயிப்பது? மேலும் இச்சரித்ரம் வடமொழியிலும் நாடகரூபமாய் எழுதப்பட்டிருக்கவில்லையே!

ஸூத்ர:—ஆர்யே! நீ யுரைப்பதுண்மையே! இக்காலத்தில் நமது தேசபாஷைகளில் உள்ள நாடகங்களை அபிநயித்தாலன்றிப்பயனில்லை. ஆயினும் ஸம்ஸ்க்ருத பாஷையின் பதங்களையுபயோகியாமல், அதன் பத்ததியை அநுஸரியாமல் நமது தேசபாஷைகளில் நாடகம் எழுதுவது அஸாத்யம். அப்படி எழுதப்படினும் அதற்கு ஸம்ஸ்க்ருதாங்கலநாடகங்களின் காம்பீர்யம் கொஞ்சமேனுமிருப்பதில்லை. ஆனதுகொண்டே நமதுமுன்னோர்கள் தமிழ் முதலிய த்ராவிடபாஷைகளில் நாடகமொன்று மெழுதினரல்லர்! அது பற்றியே தமிழ்ப்பாஷையிற்றவிர மற்றைய தேசபாஷைகளில் இப்போழ்து நாடகமெழுதுவோர் ஸம்ஸ்க்ருதபாஷையின் பதங்களையும், அதனது பத்ததியையும் ஏராளமாக உபயோகிக்கின்றனர். இத்தோரணியை யநுஸரியாமையாற்றான் இக்காலத்தில் தமிழ்ப்பாஷையில் வெளிவரும் சில நாடகங்கள் ரஸஜ்ஞர்களால் நன்றுமதிக்கப்படுகின்றனவில்லை. இப்பெருங்குறையைச் சிறிதேனும் நீக்குவதற்காகவே நமது ஸபையின் முக்க்ய அங்கத்தினர்களில் ஒருவரும், ஸம்ஸ்க்ருதாங்கலத்ராவிட பாஷைகளில் வல்லுநருமான ஒருவரால், இப்போஜமஹாராஜருடைய சரித்ரம் தமிழ்ப்பாஷையில் எளியநடையில் ஒருநாடகமாக எழுதப்பட்டுளது.

இப்புதிய நாடகத்தைக் கொண்டே இம்மஹாஸபையோரை இன்று களிப்பிக்க நாடுகின்றேன்.

நடி:—ஐயா! அக்கவியின் குடிப்பெயர் முதலியன யாவோ?

ஸூத்ர:—ஆர்யே! சொல்லுகின்றேன்; கேள்!

சேணுறு சீர்த்தி சான்ற
திருக்கவு ணியர்கு லத்தோன்,
பேணிய நீதி யுற்றோன்,
பிறப்பிலி திருமால் என்போன்,
மாணிய ல்ராம க்ருஷ்ண
மஹீஸுரர் பெற்ற செல்வன்,
வாணியி னருளா லிந்த
நாடகம் வகுத்தான் மன்னோ!

நடி:—அங்ஙனமாயின் மிக்க ஸந்தோஷம்! இதுவரைக்கும் பார்த்திராத இந்நூதந நாடகத்தைக்கொண்டு இம்மஹாஸபையோரது நல்லபிப்பிராயத்தைக் கொள்ளுவோமென்றே யான் நம்புகின்றேன்.

ஸூத்ர:—ஆர்யே! உனது சொல் உறுதிப்படுகிற வரையிலும் எனக்கு நம்பிக்கையுண்டாகாது. ஆயினும் இம்மஹாஸபையோரைக் காக்கவைப்பது ஸரியன்று! ஶீக்ரம் ஒரு பத்யம் எடுத்துப்பாடு; கேட்போம்.

நடி:—ஆஹா! அப்படியே பாடுகிறேன்!

ஸ்ரீதேவ தேவேஶ! ஸ்ரீகரா ராதித!
ஶ்ரிதபக்த பாலக! ஶ்ருத நிதாந!
விஶ்வமெங் குஞ்சேர்ந்து விஷயத்தி லொட்டாது
விவிதமாய்த் தோன்றிடும் விஶ்வ நாத!

த்வந்த்வவர் ஜிதனாகி த்வயஹீந னாகியுந்
த்வேஷமுடை யோர்கட்கு த்வேஷி யாயும்
மஹநீய ரோதிடும் மார்கத்தி லேசென்று
மநுநீதி வழுவாத மாந வர்க்கு
நோய்க ளொன்றும் வாரமலே நொடியி லேகி
ரந்த்ர மகிலத்தை யுங்காட்டி ரக்ஷணித்து
ஜ்ஞாந மரணாதி பாதையை ஜடிதி யாக
நீக்கு மீஶனே! எம்மை நீ நீடு காக்க!

ஸூத்ர:—(ஸந்தோஷத்துடன்) ஆர்யே! ஆநந்தம்! ஆநந்தம்!! ஸந்தர்ப்பாநுபத்தமாய்த் தகுந்த பாடலைப் பொறுக்கி யெடுத்தனை! இம்மங்களகரமான ஆரம்பத்தினாலேயே நமது வித்வந் மநோ ரஞ்ஜநீ ஸபையார் நடத்து மிந்நாடகம் குறை யின்றி ஸமக்ரமாய் நடந்தேறுமென்று நம்புகின்றேன்! ஆகலின், நாம் ஶீக்ரஞ்சென்று நாடகபாத்ரங்களை யனுப்புவோம், வருக!

நடி:—அப்படியே செய்வோம்!

(இருவரும் நிஷ்க்ரமித்தல்)



# போஜ சரித்ரம்

## முதல் அங்கம்

### முதற் களம்

இடம்—தாரைநகர்: முஞ்ஜராஜன் ஆஸ்தாந மண்டபம்
(தநஞ்ஜயர், ம்ருகாங்கதத்தர் என்னுமிரண்டு
ஸபாஸதர்கள் ப்ரவேசித்தல்)

தநஞ்ஜயர் :—என் ஐயா ம்ருகாங்கதத்தரே! நமது நாட்டின்மீது படையெடுத்து வந்த ஆந்த்ரதேசத்தரசன் தோற்று விட்டானாமே! வாஸ்தவந்தானா?

ம்ருகாங்கதத்தர்:—ஆம்! என்ன? ஒன்றுந் தெரியாதவர் போற் கேட்கின்றீர்? முன்னர் நம்மைப் பரிபாலித்துவந்த ஸ்ரீ ஸிந்துல மஹாராஜா அவரது தவப்புதல்வர் போஜகுமாரர் தாம் இவ்வெற்றிக்குக் காரணமாம்.

தந:—என்ன! நமது போஜகுமாரரா? அவர் குருகுலத்தில் நம் புதல்வர்களோடு புத்திஸாகரரிடத்தில் வித்யாப்யாஸஞ்செய்துகொண்டிருந்தனரே! அவர் எங்ஙனம் இந்த யுத்தத்திற்குச் சென்றிருக்கக்கூடும்?

ம்ருகா:—ஆம் நீர் கூறுவது ஸரியே! ஆயினும், நமது முஞ்ஜ மஹாராஜா அவர்கள் யாது காரணம்பற்றியோ தாம் நேரில் யுத்தத்திற்குச் செல்லாததனாற் போஜகுமாரராயினும் செல்லின் நலமென்று தெரிவித்தனராம். போஜகுமார

ரும் ஶஸ்த்ரப்பயிற்சியில் மிகவுந் தேர்ந்தவரானதால் தாமே யுத்தத்திற்குச் செல்லவேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டனராம். புத்திஸாகரரும் அதற்கு ஸம்மதித்து என் குமாரன் காளிதாஸனுடன் அவரை யனுப்பினர்!

தந:—(ஆத்மகதமாய்) இவையெல்லாம் ரஹஸ்யமாய் நடந்திருப்பதை யோஜித்தால் ஏதோ மஹாராஜா அவர்களின் மநதில் ஒரு விசேஷமான எண்ணமிருந்திருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. (ப்ரகாஶமாய்) நல்லது! நமது ஸேனைத் தலைவர் வத்ஸராஜர்முதலிய ஶூரத்தவீரர்களெல்லாரும் யுத்தத்திற்குச் சென்றிருக்க இப்பொழுதுதான் பதினெட்டு வயது நிரம்பிய போஜகுமாரரே இவ்வெற்றிக்குக் காரணமாயினரென்று கூறுவது ஆஶ்சர்யோக்தியாக வன்றோ இருக்கின்றது!

ப்ருகா:—ஐயா! தநஞ்ஜயரே! இஃதோர் ஆஶ்சர்யமா?

பிறந்ததுட்ஸிம்ஹக் குட்டி
பிளக்குமேல் யானை வேந்தை,
யறற்கணோர் சிறிய மீனுஞ்
ஜநித்ததும் நீந்து மாயின்,
சிறந்தவிந் துலர்கு லத்தில்
சீருட னவத ரித்த
திறங்கொடோள் வலிய போஜன்
ஜெயிப்பதும் விந்தை யாமோ?

ஸ்ரீஶகாரி ஸ்ரீஹர்ஷவிக்ரமாதித்தியனைப்போல் நம் நாட்டின்மீது படையெடுத்துவந்த ம்லேச்சர்களை யெல்லாம் நம் நாட்டில் நிற்கவொட்டாமல் பறக்கடித்து, விக்ரமாதித்ய னென்று விருதுபெற்று, தனது அஸாதாரணமான ஸாஹஸத்தினால் ரத்நாவதிக்குச் சென்று, வஜ்ராங்குஶனைக் கொன்று, பொன் தாமரையைத் தந்து, நாகராஜன் கந்நிகையான ஶஶிப்ரபையை மணந்து, நவஸாஹஸாங்கனென்று ப்ரஸித்தி பெற்ற ஸ்ரீஸிந்துல மஹாராஜர் வயிற்றிற்பிறந்த போஜகுமா

ரர், இவ்வெற்றி யடைவது விந்தையா? அப் போஜகுமாரர் யுத்தத்திற்குச் சென்றிராவிடின் நமது ஸேனை முற்றும் மடிந்துபோயிருப்பதுமன்றி, நம் ஸேனைத்தலைவரும் அப் பால கேஶிக்கு, அடிமைக் கைதியாய்ப் போயிருக்க வேண்டுமாம்.

தந:—இவையெல்லாம் உமக்கெப்படித் தெரியுமோ? உங்கள் குமாரன் வந்துவிட்டனனோ?

ம்ருநா:-எனது குமாரனோ? போஜகுமாரரைவிட்டு அவன் ஒரு நிமிஷமாயினும் பிரிந்திருப்பனோ? உயிருமுடலுமென்றன்றோ அவர்களைக் கூறவேண்டும். யுத்தத்திற்குச் சென்றிருந்தவர் யாவரும் நமது நகரத்திற்கு வெளியே சிறிது தூரத்தில் ஸேனைகளுடன் இறங்கியிருக்கின்றனராம். நமது ஸேனைத் தலைவர் ரமாங்கதர் குமாரர் வத்ஸராஜர் மாத்ரம் இஜ்ஜய ஸமாசாரத்தை மஹாராஜா அவர்களுக்கு முன்னரே தெரிவிப்பதற்காக வந்திருக்கின்றனராம். இந்த ஸங்கதிகளெல்லாம் அவர் சொல்லத் தான் தெரியவந்தன.

தந:—அப்படியாயின், அஃது உண்மையாகத்தான் இருக்கவேண்டும். நானும் போஜகுமாரருடைய வல்லமையைப் பற்றி என் குமாரன் தநிகன் புகழ்ந்து பேசக்கேட்டிருக்கின்றேன். நல்லது! இன்று இவ்வளவு அவஸரமாய் ஸபைகூடுவதற்குக் காரணம் உமக்குத்தெரியுமோ?

ம்ருநா:—இஜ்ஜய ஸமாசாரத்தைக்கேட்டு நாடு நகரத்தார் யாவருமொருங்கு கூடிப் போஜகுமாரரை எதிர்கொண்டு சென்று மர்யாதையுடன் அழைத்துவருவது மன்றி, முன் ஸிந்துல மஹாராஜருக்கு வாக்களித்தபடியே இந்நாட்டையு மவருக்கு ஒப்புவிக்கும்படியாக நமது முஞ்ஜமஹாராஜா அவர்களிடத்தில் விண்ணப்பஞ் செய்து கொண்டனர்களாம். அதுபற்றியே இந்த ஸபை கூடுவதாகப் புத்திஸாகரர் சொல்லினர்.

தந:—ஆம்! அப்படிசெய்வது அவஶ்யமே! இப் போஜகுமாரரைப்போன்றஸத்வவீரர்கள் அரசாட்சிபுரிந்தாலன்றோ நம் நாட்டிற்கு நன்மைவிளையும். ஆயினும் இப்பதினொன்கு வர்ஷ

காலமாய் இவ்ராஜ்ய ஸுகங்களை யநுபவித்துவருகிற நமது முஞ்ஜமஹாராஜா அவர்கள் இப்போது நம் வேண்டுகோளுக்கு ஸம்மதித்து ராஜ்யத்தைப் போஜகுமாரருக்கு ஒப்புவிப்பாரென்று யான் நம்பவில்லை.

புருகா:—நீர் சொல்வது வெகு நன்றாயிருக்கின்றது! ஒருவனுடைய நாட்டை மற்றொருவன் துராக்ரமமாய் அபஹரித்துக்கொள்வதும் ந்யாயம்போலும்? நமது மஹாராஜா அவர்கள் போஜகுமாரருக்கு இவ்ராஜ்யத்தை யொப்புவிக்க ஸம்மதிக்காமல் அக்ரமமாய் அபஹரிக்க நாடினால், நம்போன்ற ந்யாயஸபாஸதர்கள் சும்மாவிருக்கலாமா? அரசன் அந்யாயஞ்செய்யப்புகின் அதைத் தடுப்பதன்றோ அமைச்சருக்கு முறைமை! முற்றுமறிந்து செய்தலும், செய்யவேண்டியதை யரசனுக்கு முற்படச் சொல்லுதலும், நற்செயலறியாத வரசருக்கு இடித்துரைத்தலும் மந்திரிகளுக்கு லக்ஷணமன்றோ?

* 'தம்முயிர்க் குறுதி யெண்ணார்
　　தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
　　விடாதுநின் றுரைப்பர் மேலோர்!
செம்மையிற் றிறம்பல் செல்லாத்
　　தேற்றத்தார் தெரியுங் காலம்
மும்மையு முணர வல்லார்
　　ஒருமையே மொழியு நீரார்!'

அப்படி நாம் கேட்காமற் சும்மா இருப்பினும் குடிகளும் கேளாமல் இருப்பார்களா? போஜகுமாரருக்கு வயது வந்தவுடன் இவ்ராஜ்யத்தை ஒப்புவித்துவிடுவதாக நமது மஹாராஜா அவர்கள் ஒத்துக்கொண்டது யாவருக்குந் தெரிந்தவிஷயமே.

தந:—ஆம்! அவையெல்லாம் ஸரியே! ந்யாயமுமென்னமோ அப்படித்தான். ஆனால், நமது மஹாராஜா அவர்கள் ந்யாயத்திற்குக் கட்டுப்படுகிறவரர்தாமே?

* கம்பராமாயணம்

பிருகா:—(கோபத்துடன்) ஆமாம்! நாமெல்லோரும் சும்மா விருந்துவிட்டால் அரசன் மநம்போனபோக்கெல்லாம் போகின்றான். அது யாருடைய பிழையோ? இன்று மாத்ரம் ஸபையிலெல்லோரும் முகதாக்ஷிண்யத்தை விட்டு ந்யாயப் படி நடப்பார்களாயின், மஹாராஜா அவர்கள் எப்படிப் போஜ குமாரருக்கு ராஜ்யத்தை யொப்புவிக்க ஸம்மதியாரோ பார்க்கின்றேன்.

தந:—எல்லாம் ஸபையில் தெரிகின்றது! நாமிங்கு வீர் யங்கூறுவதிற் பயனென்ன? (நேபத்யத்திற்குள் தூர்யகோ ஷம் முழங்கச் செவிகொடுத்து) ஓ ஓ! மஹா ராஜா அவர்கள் வருகின்றார்கள்போலும்!—போதும்! இதனுடன் நிறுத்துவம் நமது ஸம்பாஷணையை! (பரபரப்புடன் எழுந்து தன் ஆஸநத் திற் கருகிற்சென்று, அரசன் வரவை யெதிர்பார்த்து நிற்றல்)

பிருகா:—ஆமாம்! அதையுந்தான் பார்ப்போம்! யானே பார்ப்பானாயின் பார்த்தே விடுகின்றேன். (மெதுவாய் எழுந் திருத்தல்)

(பின்னர் இரண்டு அங்கரக்ஷகர்கள் வெள்ளியந்தடி யேந்தி, "பராக்கு! பராக்கு!" என்று சொல்லிவரவும், புத்தி ஸாகரர், பத்ரநாராயணர், வத்ஸராஜர், நீலகண்டர், ஹரி ஹரர், வாமநபட்டர் முதலான முக்ய ஸபாஸதர்களை முன் னிட்டுக்கொண்டு, இரண்டு யவநிகள் வெண்சாமரை வீசிவர, முஞ்ஜ மஹாராஜர் ஸபாமண்டபத்திற் ப்ரவேசித்தல்)

ஸபையோர்கள்:— (மஹாராஜா ஸிம்ஹாஸநத்தில் வீற் றிருக்க, தத்தமிடங்களில் நின்று பாடுதல்)

### ஆங்கலகீதி

ஜய! ஜய!! போ ராஜராஜ - ஜய ரமா விபோ!
ஜய! ஜய!! போ முஞ்ஜராஜ - ஜய மஹா ப்ரபோ!

மாளவதேசம் முழுதும் - மன்னவனே நாம்
ஆளும்வண்ண மருள் புரிவன் - ஆதிதேவனே!—(ஜய.)

நாடுநகரெங்கணும்நம் - நாட்டின்பெருமையை
கூடியே நம்பகைவர்களும் - பாடிப்போற்றவே !—(ஜய).

முஞ்ஜராஜன்:—(ஸபையோர்களை இங்கிதத்தினால் வீற்றிருக்கச்செய்து) எமது நன்மையை ஸந்ததமுங்கோரும் ஸபையோர்காள் ! ஏதோ எம்மாலியன்றமட்டும் எமது தமையனார் நடந்தபடி இப்பதினான்கு வர்ஷகாலமாய் நுங்களையும் மற்றுமுள்ள ப்ரஜைகளையும் ஜாக்ரதையாகவே பரிபாலித்து வந்தனம். இன்னும் அவ்வாறே நுங்களருளால் இவ் ராஜ்யத்தை நீதிநெறி வழுவாது காத்துவருவம். நமது ஸேனைத் தலைவர் வத்ஸராஜர் இருக்குமளவும் நமக்கு யாதொரு குறையும் நேரிடாது. (வத்ஸராஜரை நோக்கி) ஸேநாபதீ ! அந்த்ர தேசத்தரசனை யெதிர்த்துச் சென்ற நமது ஸேனை என்னவாயிற்று ? நம் பகைவனது வ்யாபாரம் எந்நிலையிலுள்ளது ?

வத்ஸராஜர்:—மஹாராஜா ! வெற்றி நமக்கே தான் !

சுடரொளி கண்டு ஸுகம்பெறத் தீயினின்
மடமையால் விழுவரும் வண்டின் செயல்போல்,
அந்த்ர தேசத் தரசன் கதியும்
மந்த்ர மின்றி மதியும்மயங்கி
நாமீர சாளும் நாட்டையெதிர்த்துத்
தாமர சாளத் தண்டுடன் வந்ததும்
தெரிந்தவே யலவோ ? திருப்பவு மடியேன்
விரித்துரைப் பானேன் வேந்தர்மா மணியே !

ஆகலின் யான் விசேஷமாய்ச் சொல்லவேண்டிய தொன்றுமில்லை. நம் பகையரசர் பொலகேசியார் போர்க்களத்தில் தோல்வியுற்று நம் இளவரசர் போஜகுமாரர் கையால் மாண்டு போயினர்.

ஸபை:—ஸாது ! ராஜகுமாரரே ! ஸாது !! பிள்ளைகளிருந்தால் இப்படிப் போஜகுமாரரைப்போல் சூரத்தவீரர்களாயிருக்கவேண்டும்.

முஞ்ஜ:—வத்ஸராஜரே! நம் போஜனுடைய பராக்ரமம் நமக்கு முன்னரே தெரிந்ததன்றோ? அதனாலேதான் போஜன் ஒருவனே போதுமென்று யாமும் யுத்தத்திற்குச் செல்லவில்லை. ஆகலின் அவன் பொலகேசியை ஜயித்ததில் சிறிதும் ஆச்சர்யமின்று! ஆயினும் இவ்வெற்றியின் விவரத்தை யொருவாறு அறியவிரும்புகின்றோம்.

வத்ஸ:—வாசஸ்பதிராஜதேவ! அப்படியே கூறுகின்றேன்! முன்னர் அராஜகமாயிருந்த த்ராவிடதேசத்தை வென்று விட்டோமென இறுமாப்படைந்து, வீட்டின்கணுள்ள பாலைப் பருகின ஒரு சிறிய பூனை பாற்கடலையு மருந்துவோமென்று பேரெண்ணங் கொள்வதுபோல், இத் தாராராஜ்யத்தையும் வென்று விடலாமென்று வீணாசைகொண்டு அவ்வாந்த்ரதேசத் தரசர் நம் நாட்டின்மீது படையெடுத்து வந்தனரன்றோ?

ஹேமந்த ருதுவில் எங்கும் பரவிப்
பூமி பெங்கணும் புகைபோற் கவிந்து
பங்தி பங்தியாப் பனித்திர ளனைத்தையும்
அழுன்றெழு மிரவி யரைநொடிப் பொழுதிற்
பறக்க டிப்பது போலவே, நமது
மறக்கொ ளுதவப் போஜ ரொருவரே
பொலகேசியின்பல முள நால்வகை
சேனை யாவையுந் ஜெயித்தனர் விந்தையே!

ஸபா:—நல்லது! இளவரசரே, நல்லது!

வத்ஸ:—வல்லப நரேந்த்ர! அதிகமாய்க்கூறுவதிற் பயனென்னை? பொலகேசியாரது ஸேனா ஸமுத்ரம் முழுவதையும் நமது இளவரசரொருவரே தமது வீர்யப் ப்ரதாபத்தால் வறட்டி, அவ்வரசனையுங் கோதாவரியின் கரையிற்புரட்டி, க்ருஷ்ணா நதிக்கரைவரையினும் நமது கீர்த்தித் த்வஜத்தை நாட்டி, அவனது ஸேனைகளை யெங்கும் சிதறவோட்டாமலோட்டி, அந்த்ர தேசம் முழுவதையும் நமக்கு ஸ்வாதீனப்படுத்தி விட்டனர்!

ஸபை:—(மிக்க ஸந்தோஷத்துடன்) ஸபாஷ்! ஸபாஷ்!!

வத்ஸ:—இது மாத்ரமன்று! அவரது தாளாண்மையையுந் தோளாண்மையையு மெடுத்துரைக்க யாவரால் ஆகும்? த்வந்த்வ யுத்தத்தில் தனக்கொப்புயர் வில்லையென்று அஹங்கரித்திருந்த அப் போலகேசியை, அச்செருக்கொழிய, தாமொருவராகவே, த்வந்த்வயுத்தத்திலேயே மடித்து முடித்தனர்! மன்னர்திலகா! பெருங்காட்டில் வெயிலாலுலர்ந்து போன முட்செடிகளின் குவியல்களை ஒரு சிறிய தீப்பொறி யண்டிக் கொளுத்துமாறு, தாமொருவராய் நின்று, நம்பகைவரை யெதிர்த்துச்சென்று, அவரைக்கொன்று, அவரது ஸேனைகளை யுத்தத்தில் வென்று, நமது நாட்டின் மஹிமையைப் புவியெங்கும் விளங்கச்செய்த ஸுகுமாரனை, ஶத்ருக்கள் பணியும்ஶூரனை, தேவருமஞ்சுந் தீரனை, பதினெட்டு வயதான பாலகுமாரனை, நம் போஜகுமாரனைத் தாம் புதல்வனுயடையப்பெற்றது, தாமும், அடியேனும், இந்நாடுஞ் செய்த தவப்பயனேயன்றி வேறன்று.

ஸபை:—நன்குரைத்தீர் வத்ஸராஜரே, நன்குரைத்தீர்!

முஞ்ஜ:—(ஆத்மகதமாய், சிந்தித்துக்கொண்டு) ஆ ஆ! நாம் கொண்ட எண்ணங்களெல்லாம் வீணாய்ப் போயினவோ! இந்த ஶல்யத்தை நீக்குவதற்காகவே ஒருவேளை போஜன் யுத்தத்திலாயினும் மடிந்துவிடுவனென்று வெகு பக்வமாய்ப் புத்திஸாகரரையுமேமாற்றிப்போஜனைப்போலகேசியை எதிர்த்துச் செல்லும்படி அனுப்பினோம். 'தானொன்று நினைக்கத் தெய்வம் வேறொன்று நினைக்கு' மென்பது இவ்விஷயத்தில் வாஸ்தவமாய் முடிந்தது! தான் மடியாது, தன் பகைவரைக்கொன்று, வெற்றி மாலைபுரிந்து, வீரகண்டையணிந்து, நாடுநகரத்தார் யாவருங்கண்டு களிக்க நல்வரவாய்ப் போஜன் திரும்பி இந்நகர் வருவனென்று யாம் கனவிலும்நினைக்கவில்லையே! ஆ ஆ! இனி யவனை யொழிப்பது எங்ஙனம்? (தலைமீது கரத்தை வைத்துக் கலங்கிப் பெருமூச்செறிதல்)

புத்திஸாகரர்:—ராஜராஜேச்வர! தமது நாட்டிற்கு இவ்வளவு கீர்த்தியையும் பிரக்யாதியையுங் கொண்டுவந்த தமது குமாரன் போஜனது குணங்களைத் தாமே அறிந்திருக்கின்றீர். ஆகலின், யான் அதைப்பற்றி புகழ்ந்துபேசுவது அநாவச்யம். தாமும் இப்பொழுதே அடியேங்களோடு எதிர்கொண்டு சென்று தக்க மர்யாதையுடன் அவனை யழைத்து வருதல் அழகு. அன்றியும், அவனது பிதா ஸிந்துல மஹாராஜர் நாடாகிய இத் தாரா ராஜ்யத்தையும் இப்பொழுதே அவனுக்கு ஒப்புவிப்பது தமக்குத் தர்மம். இதுவே தமது குலத்திற்கும் கீர்த்திக்குஞ் சிறந்த மேன்மையைவிளைக்கும். மேலும், தமது தமயனார் ஸிந்துல மஹாராஜர், இறந்துபோகும்பொழுது, தமக்குரைத்த வசனங்களைத் தாமிப்பொழுது கவனிக்கவேண்டும். "எனது பிரியமுள்ள தம்பீ! யான் இன்னும் சற்று நேரந்தான் ஜீவித்திருப்பேன். இப்பொழுது உன்னிடத்தில் யான் ஒப்புவிக்கும் பொருளைப் பாதுகாப்பாய் என்று நம்புகின்ற என்னை மண்ணாசையாலாயினும் பெண்ணாசையாலாயினும் நீ த்ரோஹஞ்செய்வாயாகில்,ஸர்வஸாக்ஷியாகிய பரமேச்வரன் உன்னைத் தண்டிப்பானென்பது நிச்சயம்! எனது குலதீபமாகிய போஜனை யடைய யான் செய்த தவம் உனக்கே தெரியும். அவனுக்குத் தக்கவயது வந்து முடிசூட்டுமுன்னரே எனக்கு அந்த்யகாலம் நேரிட்டுவிட்டது. ஆகலின், என் செல்வனுக்காக நீயே இவ் ராஜ்யத்தை யரசாண்டுவந்து, அவனுக்குத் தக்கவயது வந்தவுடன், ஒரு தகுந்த ராஜகந்நிகையையும் மணம் புரிவித்து இவ்ராஜ்யத்தையும் ஒப்புவித்து விடுவாயென்று பூர்ணமாய் நம்புகின்றேன்!"—ராஜஸிம்ஹ! தாமிவ்வசனங்களை இந்த ஸமயத்திலே நினைக்கவேண்டும்! இப்பொழுது போஜனுந் தக்க வயதுவந்து பகைவரும் புகழத்தக்க ஸாமர்த்யமுள்ளவனாயினன். இம்மங்களகரமான ஸமயத்திலேயே போஜனுக்குத் தாம் முடிசூட்டுவீராயின், அமோகவர்ஷரென்று உலகமெலாம் பரவியிருக்குந் தமது கீர்த்திக்குத் தகுதியுண்டாகும்.

IV

## KING MUNJA'S COUNCIL

OR

'VATSARAJA EXTOLLING BHOJA'S VALOUR"

—*Act I*, *Scene* 1, *Pages* 14-15

Facing page கள

# முஞ்ஜராஜனது ஆஸ்தாநம்

## அல்லது

## "வத்ஸராஜர் போஜனது பராக்ரமத்தைப் புகழ்தல்"

வத்ஸ:—வல்லப நரேந்த்ரா! அதிகமாய்க் கூறுவதிற் பயனென்னே? புலகேசியாரது ஸேனாஸமுத்ரம் முழுவதையும் நமது இளவரசரொருவரே தமது வீர்யப் ப்ரதாபத்தால் வருட்டி, அவ்வரசனையுங் கோதாவரியின் கரையிற் புரட்டி, க்ருஷ்ணாநதிக் கரை வரையினும் நமது கீர்த்தித் த்வஜத்தை நாட்டி, அவனது ஸேனைகளை யெங்கும் சிதற வோட்டாமலோட்டி, அந்த்ரதேசம் முழுவதையும் நமக்கு ஸ்வாதீனப் படுத்திவிட்டனர்.

ஸபையோர்:—(மிக்க ஸந்தோஷத்துடன்) ஸபாஷ்! ஸபாஷ்!!

வத்ஸ:—இதுமாத்ர மன்று. அவரது தாளாண்மையையுந் தோளாண்மையையு மெடுத்துரைக்க யாவரால் ஆகும்? த்வந்த்வயுத்தத்தில் தனக்கொப்புயர்வில்லையென்று அஹங்கரித்திருந்த அப் புலகேசியை, அச் செருக்கொழிய, தாம் ஒருவராகவே, த்வந்த்வயுத்தத்திலேயே மடித்து முடித்தனர். மன்னர்திலகா! பெருங்காட்டில் வெயிலா லுலர்ந்துபோன முட்செடிகளின் குவியல்களை ஒரு சிறிய தீப்பொறி மண்டிக் கொளுத்துமாறு தாமொருவராய் நின்று, நம் பகைவரை யெதிர்த்துச் சென்று, அவரைக் கொன்று, அவரது ஸேனைகளை யுத்தத்தில் வென்று, நமது நாட்டின் மஹிமையைப் புவியெங்கும் விளங்கச்செய்த ஸௌகுமாரனை, ஶத்ருக்கள் பணியும் ஸூரனை, தேவகுரு மந்த்ரியை, பதினெட்டு வயது பாலகுமாரனை, நம் பத ஜகுமாரனைத் தாம் புத்ரனாகப் பெற்றது, நீரும், [illegible] [illegible] செய்த [illegible] [illegible].

— அங்கம் 1, களம் 1, பக்கம் [illegible]

* "சாதல்வந் தடுத்த காலுந்
தனக்கொரு சாத லின்றிப்
பூதல மிருக்குங் காறும்
புகழுடம் பிருக்கும்: அந்தக்
கோதறு புகழின் யாக்கை
கொடையினாற் செல்வங் கூர
வாழ்தலை யுடையா ரன்றே
வானமும் வணங்கு நீரார்!"

ஆகலின், இப்பொழுதே போஜனை எதிர்கொண்டு சென்று, நகருக்கழைத்துவந்து, அவனுக்கு இவ்ராஜ்யத்தையுந் தந்து, தமது புகழ் பூமியெங்கும் விளங்க, எம்மையும் மற்றைய ப்ரஜைகளையும் ஸந்தோஷிக்கச் செய்வீரென மிக்க வணக்கமாய்ப் ப்ரார்த்திக்கின்றோம்.

ஸபை:—மஹாராஜ! தாங்கள் அப்படியே செய்வீரெனப் ப்ரார்த்திக்கின்றோம்.

முஞ்ஜ:—(ஒன்றுந்தோன்றாமற் சற்றுநேரம் பேசாமலிருந்து, கோபங்கொண்டு, பற்களை நறநறவென்று கடித்து ஸபையோரைச் சூழ நோக்கி) ஸபையோர்காள்! என்னசொன்னீர்கள்? இதை யெமக்கெடுத்துரைக்கவோ இன்று கூடினீர்கள்! இவையெல்லாம் புத்திஸாகரருடைய துர்புத்தியோ?

தர்ம மாயிது காறு முங்களைத்
தாங்கி வந்ததின் லாபமோ?
மர்ம மாயெமை மாய வார்த்தையின்
மாய்க்கி றீர்மதி யிநர்காள்!
சர்ம மென்றெமைக் கையெடுக்கினிற்
சாகு வீர்விஷ மேயியே,
தூர்ம நோரத மாடி கட்டிடிற
ழாங்கு வீர்விழுந் திங்ஙனே!

* பிள்ளையார் புராணம்

புத்தி:—மஹாராஜ! நீதியை யெடுத்துரைத்தனன். தாம் அதைக் குணமென்று கொண்டாற் கொள்ளுங்கள், கொள்ளாது தள்ளினால் தள்ளுங்கள். யான் எனது கடமையை நிறைவேற்றினேன். இனித் தம்முடைய சித்தம்.

* "அன்புறு மறத்தினா லடிக்கு மின்பமே
யின்பெனத் தக்கதா மேலை யின்பெலாந்
துன்பமும் பழியையுந் தோற்று மாதலா
லன்புறு மறத்தினை மறப்பிற் கேடுறும்."

முஞ்ஜ:—(பெருமூச்செறிந்து) தநஞ்ஜயரே! நீரும் அவர்களுடனே சேர்ந்து கொண்டீர் போலும்?

தந:—ராஜராஜேந்த்ர! யாது மறிந்த தமக்கு யான் என்ன கூறப்போகிறேன்? இப்பதினைந்து வர்ஷகாலமாய்த் தாங்கள் இவ்ராஜ்யத்தை இறைபயமேனும் முறைவழுவாது பரிபாலித்து வந்தீர்! இன்னும்,

தினையும் விடாதிச் செல்வ மெல்லாம்
இச்சை யாலிங் கிருந்தநு பவித்தல்
எச்சிலை யருந்து மிழிவே யன்றோ?
மிகப்பெரும் போஜன் தகப்பன் முப்பாய்
இருந்து மரசைத் துறந்தில னென்றே
உலகம் நவின்றிடில் நலமோ வுரைப்பீர்?

ஹா:—யாதுமறிந்த நீதிமன்ன! அடியேன் என்ன உரைக்கப் போகின்றேன்! தாம், போஜகுமாரரைப் புதல்வராயடைந்த பாக்யமே பாக்யம்! தாமும் அருமைப் புதல்வருக்கு உரியனவெல்லாம் திருந்தச் செய்தீர்! தம்முடைய அநுக்ரஹத்தாலே அவரும் மஹாபராக்ரமவீரனென்னும் பெயரைப் பெற்றனர். இனிப் போஜகுமாரருடைய க்ருதஜ்ஞைக்கு அளவிராது!

* [illegible] புராணம்

வத்ஸ:—மஹாராஜ! போஜகுமாரருடைய குணத்தை யும் பராக்ரமத்தையும் அறியாதவர் யாவர்? அவரது வெற்றியைக் கேட்டது முதல் நாடு நகரத்தார் யாவரும் அவரிடத்தில் மிக்க அன்புவைத்திருக்கின்றனர். ஆஹா! போஜ குமாரரா? மஹான்! என்ன வீர்யம்! என்ன விநயம்! என்ன பெருமை! என்ன பொறுமை! என்ன ஜீவகாருண்யம்! என்ன ஸமதாபுத்தி! என்ன கல்யாணகுணம்! மஹாஸத்யவாதி! மஹாபராக்ரமஶாலி! ஸகல வித்யைகளையு முணர்ந்தவர்! ஸகல தர்மங்களையுமறிந்தவர்! வருணன் வீர்யத்தில்! நராதரம் தைர்யத்தில்! ப்ருஹஸ்பதி புத்தியில்! ஸ்ரீய:பதி ஶக்தியில்! ஆஹா! பெருமையிற் புரந்தரன்! பொறுமையிற் பூதேவதை! கோபத்திற் காலாந்தகன்! ப்ரதாபத்திற் பரமேஶ்வரன்! மந்மதனும் அவரது அழகைக் கண்டால் வெட்கங்கொண்டோடுவான்! ஆஹ்லாதத்தைக் கொடுப்பதில் அம்ருதகலைகளால் நிறைந்த பூர்ணசந்த்ரனு மவனுக்கு நிகரல்லன்! ஆதித்யனைப் போல் தேஜஸ்வீ! அஶ்விநீதேவரைப்போல் ஓஜஸ்வீ! அவர் சிறுபாலகராயிருப்பினும் அவரிடத்தில் எனக்குப் பெரியோர்களிடத்தில் உண்டாவதுபோல் பஹுமாந புத்தியுண்டாகின்றது. ராஜேஶ்வர! அவர், தம்மைப் பெற்றபிதாவென்றே நினைத்திருக்கின்றனர்! அவரை யரசனாகக் கொள்ள விரும்பாதார் யார்?

வர்மந:—அம்மஹாபுருஷனுடைய குணதிஶயங்களை வர்ணிக்க ஆதிஶேஷனாலு மாகாது! கொடுப்பதிற் குபேரன்! நடப்பதிற் குமாரன்! யயாதியைப் போலுதாரன்! ஶிபியைப் போற் கம்பீரன்! அவரைப் பதியாக அடைய யார் தாம் விரும்பார்?

முஞ்ஜ:—(சிந்தித்துக்கொண்டே, ஆத்மகதமாய்) ஸரி. இப்பொழுது இவர்களுடைய வேண்டுகோளுக்கு விரோதமாய்ப் பேசுவதிற் ப்ரயோஜநமில்லை. நாமும் இந்த ஸமயத்தில் ஸம்மதிப்பவனைப்போலவே நடிக்கத்தான்வேண்டும்! (ப்ர

காரமாய்) ஸபையோர்காள்! உங்கள் வேண்டுகோளுக்கு யாம் மிகவும் மெச்சுகின்றோம். யாம், இதுவரையில் உங்களது மனோ நிச்சயத்தைப் பரீக்ஷை செய்வதற்காகவே சும்மாவிருந்தோமே யன்றி வேறில்லை. யாமும் இதோ சீக்கிரத்திலேயே போஜ னுக்கு முடிசூட்டத் தீர்மானித்திருக்கின்றோம்.

ஸபை:—மிகவும் ஸந்தோஷம்! மஹாராஜ! மிகவும் ஸந்தோஷம்!

வத்ஸ:—மன்னர் மன்னவ! இன்னொரு விஷயத்தைப் பற்றி யான் கூறத் தவறிவிட்டனன். நமது இளவரசருடன் யுத்தத்திற்குச்சென்ற அவரது ப்ராணநேசர் நமது மித்ர காங்கதத்தர் குமாரர் பாலகாளிதாஸருக்கும் நாம் தக்க மர் யாதை செய்யவேண்டும். அவரை என்னவோ ஸாமாந்யராக நினைத்திருந்தோம். அவரை இந்நாட்டிற்கு ஒரு சிறந்த ஆபரணமென்றே கொள்ளல்வேண்டும்!

* "நல்லவுந் தீயவு நாடி நாயகற்
செல்லையின் மருத்துவ னியல்பி னென்னுமோர்
நல்லவந் துறுவன வற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்!"

அவர் தம்முயிர்க்குறுதி சற்றுமெண்ணமல் நம்மிளவரசரையே ஒருமுறை பகைவரிடத்தினின்றுங் காப்பாற்றினர். ஆதலால், அவருக்குச் செய்யும் மர்யாதை நம் போஜருக்கும் அதிக த்ருப்திகரமாகவே யிருக்கும்.

பத்ர:—ஆம்! மஹாராஜ! அவருக்குத் தக்க மர்யாதை செய்தல் ந்யாயமே! அவருக்குத்தெரியாத ராஜநீதி யொ ன்றுமேயில்லை. அவரைப் போஜகுமாரருக்கு வெளியில் ஸஞ் சரிக்கும் ப்ராணனென்றே கொள்ளல்வேண்டும்.

முஞ்ஜ:—ஆ! அதற்கென்ன? அப்படியே செய்வோம்.

* கம்பராமாயணம்

ஸபை:—எல்லாந் தம்முடைய கடாக்ஷமே !

முஞ்ஜ:—(வெறுப்புடன்,எழுந்து) ஸபையோர்காள்! யாம் அவஸரமாய் வெளியிற் செல்லவேண்டியிருத்தலால் விடை தரல்வேண்டும். புத்திஸாகரரே ! யாம் போய்வருகின்றோம். (கோபமாய்ப் பரிவாரத்துடன் நிஷ்க்ரமித்தல்)

ப்ருகா:—(யாவருஞ்செல்ல, தநஞ்ஜயரை நோக்கி) தநஞ்ஜயரே ! பார்த்தீரா ! நாமின்று நினைத்தவெல்லாம் அப்படியே முடிந்துவிட்டன.

தந—இன்னும் முற்றும் பார்ப்போம் ! மஹாராஜா அவர்கள் போன அவஸரத்தைப்பார்த்தால் எனக்கு ஸம்சயமுண்டாகின்றது. எதற்கும் தனியே பேசுவோம். (யாவரும் நிஷ்க்ரமித்தல்)

# முதல் அங்கம்

## இரண்டாங் களம்

இடம்-தாரைநகர் : முஞ்ஜராஜனரண்மனையில் ஓர் அறை

(முஞ்ஜராஜன் ஆஸநத்திலிருந்தபடி ப்ரவேசித்தல்)

முஞ்ஜராஜன் :—(சிந்தித்துக்கொண்டு) ஆ ஆ ! இன்று நாம் என்ன பெருமோசம் போனோம் ! அப்பாதகனாகிய புத்திஸாகரன் வார்த்தையைக் கேட்டல்லவோ போஜனுக்கு இந்த தாராராஜ்யத்தை ஒப்புவித்துவிடுவதாக ஸபையிற் கூறிவந்தோம். இப்பதினான்கு வர்ஷகாலமாய் இவ்ராஜ்யஸுகங்களையெல்லா மநுபவித்துவந்து இப்பொழுதிவ்வரசாட்சியைத் துறப்பதென்றால் எங்ஙனம் கூடும் ?—இன்று, திடீரென்று, ப்ரஜைகள் போஜனுக்கு ராஜ்யத்தை ஒப்புவிக்கும்படி

நம்மைக்கேட்டதென்னே? இதுவரையிலும், அவர்களை ஜாக்ரதையாகத்தானே பரிபாலித்து வந்தோம்! இதுகாறு மவர்களும் கீழ்ப்படிந்தே வந்தனர்களே!—(யோஜித்து) சீ! எல்லாம் நாம் செய்த பிழையே! போஜனை யுத்தத்திற்கு அனுப்பியதனாலன்றோ அவனது குணாதிசயங்கள் ப்ரஜைகளுக்குத் தெரியவந்தன! யாதேனும் ஒரு கார்யத்தைச் செய்ய விரும்பினால், முன்னரே அதன் பயனை யாராய்ந்து செய்தல்வேண்டும்.

உசிதமிதனைச்செய்த லுசிதமீ தல்லவென்
றுற்றுநோக் கிடல்வேண்டு முத்தமர்கள்.
பிசகியொரு தொழிலையும் பெரியோர்கள் செய்யார்கள்
பின்வரும் பயனைமுன் பிரித்திடாமல்,
பசுவென நடப்பவர் பகுத்தறிவு தான்கெடவே
பரதேசி யாவர்கள் படித்திருந்தும்,
விபரீதமாம் வல்வியம தென்னவோ ராதுசெயல்
நிலையைக் குலைக்குமே நித்யகாலம்!

இதுவுமன்றி, நாம் அரசனாயிருந்துவருவதுபற்றி, பயத்தினால் ஒருவேளை நம்மிடத்தில் அன்புள்ளவர்கள்போற் குடிகள் நடித்து வந்திருக்கக்கூடும். எப்படியிருப்பினும் இச்செங்கோல் நம்மை விட்டு நீங்குமாயின் ப்ரஜைகள் முன்போல் நம்மை மதிப்பார்கள் என்று யாம் நம்பவில்லை. சாமுயிரோடிருந்தும் மரித்தவருக்கொப்பாவோம்!

பிணியிலா வுடல மல்லதே,
பிழையிலாப் பெயரு மல்லதே,
அணியுமா பரண மல்லதே,
அயர்விலா வழகு மல்லதே;
பணமெனுஞ் சூடு நீங்கிற்
பாரினிற் புத்தி மானுங்
க்ஷணத்திலே முற்றும் வேறாய்க்
காண்பதும் விந்தை யன்றோ!

ஆகையால், எவ்வகையிலும், இந்நாடு நம்மைவிட்டு நீங்காவண்ணம் தக்க உபாயஞ்செய்யவேண்டும் !—(ஆலோசித்துக்கொண்டிருத்தல்.)

(ப்ரவேஶித்து)

மதநமாலிநி:—(கைகூப்பி) மஹாராஜ! யாரோ ஒரு யதீந்த்ரர் தங்களைக்காணும்பொருட்டு வெளியிற் காத்துக் கொண்டிருக்கின்றார்.

முஞ்ஜ:—அப்படியா ! ஶீக்ரம் அழைத்துவா!

மதந:—அப்படியே மஹாராஜ! (வெளியில் நிஷ்க்ரமித்தல்.)

முஞ்ஜ:—இவர் யாவராயிருக்கக்கூடும் ? நம்மிடத்தில் இத்தருணத்தில் வருவதற்குக் காரணமென்ன? இப்பதினைந்து வர்ஷகாலமாய் நம்மிடத்தில் ஒரு ஸந்ந்யாஸியும் வந்ததில்லையே ! அந்தோ ! நாம் ராஜ்யத்தை ஸ்திரப்படுத்துவோமா வென்று யோஜிக்கும் பொழுதே, குறுக்கே யதீந்த்ரர் ஒருவர் முளைத்தனரே! நமதெண்ணம் நிறைவேறுமோ ?

(ப்ரவேஶித்து)

ஶாரதாநந்தர்:—(கடவுளை ஸ்தோத்ரஞ்செய்துகொண்டே)

ராகம்-பிலஹரி: தாளம்-ஆதி

பல்லவி

ஸ்மரணைசெய் மநமே - ஸ்மராரிபுவையென்றும்,
துரிதமயதருண - கிரிகுலிஶனை !

அநுபல்லவி

அருட்பெருங்கடலினை - அன்பருக்கிஷ்டனை,
பரமபுருஷனை ஸ்ரீ - பார்வதீநாதனை! (ஸ்மரணை)

சரணங்கள்

வானவர் பணிவோனை - யாக்குத்தந்தருள்வோனை
ஞாநிகட்கிறைவனை - ஞாநஸ்வரூபனை ! (ஸ்மரணை)

ஜ்யோதிக்குள்ஜ்யோதியாய் - சுடருக்குட்சுடருமாய்

ஆதியந்தமிலாத - ஆநந்த மூர்த்தியை ! (ஸ்மரணை)

முஞ்ஜ:—(நோக்கி) ஆஹா ! இவருடைய தேஜஸ்ஸே தேஜஸ்ஸு !

கையில் தண்ட கமண்டலுக்கள், இடையிற்
காவிக் கரைவேஷ்டியும்,
மெய்யில் பஸ்ம விலேபமும், களமதில்
மாசற்ற ருத்ராக்ஷமும்;
பொய்யா மிவ்வுல கத்தைவிட் டிவர், அஹோ !
பூண்டிங்கு ஸந்யாஸமும்,
மெய்யாம் ஶங்கர ரென்னவே வருகிறார்
விஶ்வேஶனைப்போற்றியே !

(ஆஸநத்தைவிட் டெழுந்திருத்தல்)

ஶார:—(அரசனருகிற்சென்று) ராஜனே! நினக்கு மங்களமுண்டாகுக !

முஞ்ஜ:—அடிநான் ! வந்தநம் ! (வந்தநஞ்செய்தல்)

ஶார:—நாராயண ! நாராயண ! !—பெருக நின்வாழ்வு !

முஞ்ஜ:—ஸ்வாமி ! தாங்கள் இவ்வாஸநத்தில் எழுந்தருள வேண்டும் !

ஶார:—(ஆஸநத்திலுட்கார்ந்து) நீரும் நும், ஆஸநத்தில் வீற்றிருப்பீர் !—நாராயண ! நாராயண ! !

முஞ்ஜ:—(உட்கார்ந்து) ஸ்வாமி ! தாங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள் ?

ஶார:—ராஜனே ! எம்போன்றவர்களுக்கு நாடேது நகரேது ?

* 'வீடேதது வாசலேது விஷயமேது வேந்தனே !
மாடுமக்கள் மனைவியேது மற்றுமாவ தேதுகாண் ?
நாடுபெற்ற நடுவர்கையி லோலைவந் தழைத்திடி-
லோடுபெற்ற தவ்விலைபெறா தகாணுமிவ்வுடல் !'

யதிகளான எம்போன்றவர்கள் எங்கிருப்பினுமென்ன ? இவ்வுலகத்தில் நடக்கும் ஸகலவிஷயங்களும் எமது ஞாநத்ருஷ்டிக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

முஞ்ஜ:—தங்கள் திருநாமதேய மெண்ணே ?

ஸார:—எம்மை இந்த ஆஸ்ரமத்தில் ஸாரதாநந்தரெனச் சொல்லுவார்கள் எமக்குப் பூர்வாஸ்ரமத்தில் ஆர்யபட்டர் என்று பெயர்.—நாராயணா ! நாராயணா ! (ஜபமாலை மணியைப் புரட்டுதல்)

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) ஓ ஓ! ஜ்யோதிஷஸாஸ்த்ரபாரங்கதரான ஆர்யபட்டரா ! இவரை ஸர்வஜ்ஞரென்றே கூறுவார்கள் ! ஆகலின், இவரைக்கேட்டால் நமதெண்ணம் முடியும் முடியாதென்று தெரிந்துகொள்ளலாம். (ப்ரகாஸமாய்) ஸ்வாமி ! தாங்கள் அடியேனை நாடிவந்த கார்யம் யாதோ ? உரைத்திடில் அடியேன் செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றேன் ! தநம் வேண்டுமாயினும் அல்லது எது வேண்டுமாயினும் கேட்கலாம் !

ஸார:—(அரசனது முகக்குறியை யுணர்ந்து, ஆத்மகதமாய்) இவ்வரசன் துராஸையினாற் பரஸ்வத்தை யபஹரிக்க நினைத்திருக்கின்றனன். இப்பாதகனிடத்தில் த்ரவ்யம் வாங்கிச்சென்றால், நாமும் க்ருதார்த்தராய் விடுவோம், இவ் வ்யாஸ பௌர்ணமியும் க்ருதார்த்தமாய் விடும். நல்லது ! வந்ததற்கு உண்மையைக் கூறிவிட்டுச் செல்வோம். (ப்ரகாஸமாய்) ராஜனே ! எம்போன்றவர்களுக்கு ஒரு கார்யமு முளதோ ?

* சிவவாக்கியர் பாடல்

ராகம்-காபி : தாளம்-சாப்பு

பல்லவி

கார்யமு முனதோ - காமனைத்தீய்த்தவன்
கழலினையடைந்திக் - காசினியே !

அநுபல்லவி

தூரிதவிநாசனைத் - தூயவர்க்கிறைவனை
பரிந்திடு மநத்துடன் - படர்வோர்க்கே ! (கார்)

சரணங்கள்

மூகுரகபோலனை - முனிஜநபாலனை
அகமதிலெணிபவர்க் - கன்பொடுசித்பமும் ! (கார்)

சமதமகருணை - ஸம்பூர்ணர்களாய்
விமல நல்லுருவாய் - விளங்கிடுமவர்க்கே ! (கார்)

அரசே! எம்போன்ற துறவிகள் வருவது லோகாநுக்ரஹார்த்தமே !

முஞ்ஜ:—ஸ்வாமி! அடியேன் ஒருவிஷயமறிய விரும்புகின்றேன்.

ஸார:—ஏதோ தெரிந்தமட்டுங் கூறுகின்றோம். எந்த விஷயந் தெரிந்துகொள்ளவேண்டுமென்றாலும் கேட்கலாம்.

முஞ்ஜ:—அப்படியாயின், நான் இப்போது எண்ணியிருப்பதை உணர்ந்துரைப்பீர்களோ ?

ஸார:—ஆ ஆ ! கூடியவரை யுணர்ந்துரைக்கின்றேன். (சற்றுநேரம் கண்களை மூடி யோகநிஷ்டையிலிருப்பதுபோல் நடித்துப் பெருமூச்சுடன் கண்களைத் துடைத்துக்கொண்டு) நாராயண ! நாராயண ! !—ராஜனே !

'இருப்பது பொய்! போவதுமெய்!
யாதிருந்து மென்னும்?
எவரிருந்து மென்செய்வார்?
யமன்வருங்காற் றேடும்
பொருள்கொடுத்துப் பிழைப்பாயோ?
தமரையனுப் புவையோ?
பொய்யுரைத்தாற் சென்றிடுமோ?
பிற்கணத்தே வருவேன்
உருக்கம்வையு மையாவென்
றழுதும்விடு வானோ?
ஊட்டிவளர்த் திடுமுடம்பி
னொடுகொடுபோ கானோ?
செருக்கெதுவோ நிலையில்லாப்
பொருட்கழுவாய் வேந்தே!
சிச்சீநீ யறிந்துகெட்டாற்
செப்புவர்யா ருனக்கே!'

முஞ்ஜ:—(திடுக்கென்று பயந்து மெதுவாய் தனக்குள் ஸமாதானஞ் செய்துகொண்டு) ஸ்வாமீ! நெஞ்சத்துமிக்கதனை முகமே காட்டுமென்பார்கள்! ஆயினும் இன்னும் வேறேதாயி னும் ரஹஸ்யமான விஷயம் எடுத்துரைப்பின் தம்மைஸர்வஜ்ஞர் என்றே கொள்ளுவேன்.

ஸா:—ராஜனே! நீர் எம்மை ஸர்வஜ்ஞரென்றாலும் ஸர்வஜ்ஞராகோம், அப்படி கொள்ளாவிடினும் மூடராகோம்! இயற்கையிற்றானே இரண்டுபடாத பூர்ணவின்பமானவராய் ஸகலபுவனங்களையும் படைத்தளித்தழிக்க வல்லவரான உண் மைக்கடவுள் ஒருவரே ஸர்வஜ்ஞர்! அவர்தாம்ஸகலப் பராணி

* அநுபவானந்த தீபிகை

களின் மநத்திலு மிருப்பதையெல்லாம் நன்கு அறியவல்லர்! யாமும் அவரது அநுக்ரஹத்தாற் சிற்சிலவிஷயங்களை அறிந்து கூறவல்லோம். ஆயினும், தமக்கு வருத்தமுண்டாகக்கூடுமென்றஞ்சிச் சொல்ல மயங்குகின்றோம்!

முஞ்ஜ:—(சிந்தித்துக்கொண்டே, ஆத்மகதமாய்) நமக்கு வருத்தத்தைத்தரத்தக்கது யாதிருக்கக்கூடும்? எதற்கும் தெரிந்திருந்தாற் புருஷ ப்ரயத்நத்தினால் ஒருவேளை கேடு ஸம்பவிக்கினும் தக்க உபாயஞ்செய்து அதை நீக்கிக்கொள்ளலாம்! (ப்ரகாஶமாய்) ஸ்வாமீ! யாதொரு பயமுமின்றி மொழியலாம்.

ஶார:—ராஜனே! அப்படியாயிற் கேட்கலாம்! தாமிப்பொழுதுன்னியது இரண்டு விஷயங்களைப்பற்றியே: ஒன்று ஒரு பெண்ணைக்கொள்ளல்; மற்றொன்று ஒரு புருஷனைக் கொல்லல். இவ்விருவரும் தமக்குப் பந்துக்களே!

முஞ்ஜ:—(பயந்து, வணக்கத்துடன்) ஆம்! எண்ணிய விஷயங்கள் எவ்வாறு முடியுமோ? அதை உரைப்பீர்!

ஶார:—அரசே! சொல்கின்றேன், கேளும்! ஸ்த்ரீயைக் குறித்தது ஸபலமாகும்; மற்றது அபலமாகும்!

முஞ்ஜ:—ஸ்வாமி! தாங்கள் இரண்டாவது விஷயத்தைப் பற்றிக் கூறியது அடியேன் மநத்திற்குச் செம்மையாய்ப் புலப்படவில்லை. ஒரு ப்ரார்த்தனைக்குத் தாங்கள் உத்தரமளிக்க வேண்டும்! எனக்குப்பின் இத் தாராராஜ்யத்தை யார் ஆளுவர்?

ஶார:—(ஆத்மகதமாய்) இப் பாதகன் தன தெண்ணம் முடியுமாவென்று ஐயப்பட்டு வினவுகின்றனன்! நாமும் கூடமாகவே விடையளிப்போம். (ப்ரகாஶமாய்) இதுவும் அவ்விரண்டாவது விஷயத்தைப்பற்றியதுதான். மறுபடியுஞ் சொல்லுகின்றேன்! உமக்குப்பின் போஜன் இம் மாளவதேஶம் முழுவதும் ஆளுவன்.

முஞ்ஜ:—(ஸந்தோஷமுள்ளவன்போல் நடித்து) எல்லாம் தங்கள் ஆசீர்வாதமே!

ஸார:—ராஜனே! இன்னுங்கேளும், போஜனது யோக ரீதியை!

கலைமகளுங் கற்பகமுங் கடுந்தவத்தி
 னொருருவிற் களித்து வாழ,
அலைகடல்சூழ் புவியதனி லடைந்தவுருப்
 போஜனென வறைதலாகும்;
நிலையுளதாம் புகழெய்தி நீணிலத்தை
 யைம்பத்தைந் தாண்டி னோடும்
சிலவலவ! திநமூன் றுந் திங்களேழும்
 தீமையற வாண்டிடுவன் றிகைத்திடே னீ.

முஞ்ஜ:—மிகவும் ஸந்தோஷம்! அடியேன் மீது தமது க்ருபா நோக்க மிருக்கவேண்டும்.

ஸார:—எமது க்ருபாநோக்கமிருந்தென்ன? இராதென்ன? ஈசனுர் அருள் இருக்கவேண்டும். அதுவுந் துறப்பெனுந்தெப்பமே துணையெனக்கொண்ட எம்போன்றவர்களுக்கே அடையற்பாலதாயின், காமக் க்ரோத லோப மோஹ மத மாத்ஸர்யங்களாகிற பெருமுதலைகளால் ஸங்குலமான பிறப்பெனும்பெருங் கடலில் மூழ்கி நிற்கும் நும்போன்ற அரசர்கள் வாழ்ந்திருக்க வேண்டுமாயின் தெய்வத்தினிடத்திலும் தர்மத்தினிடத்திலும் பூர்ணமான ச்ரத்தையிருக்கவேண்டும்.

முஞ்ஜ:—(தன் கழுத்திலணிந்திருந்த முத்துமாலையைக் கழற்றி) ஸ்வாமீ! தாங்கள் இதை அங்கீகரித்து எம்மை அநுக்ரஹிக்கவேண்டும். (முத்துமாலையை நீட்டல்)

ஸார:—(அதைத்தடுத்து) ராஜனே! ஜபமாலை யணிந்திருக்கும் எம்போன்ற துறவிகட்கு அரசர்கள் அணிந்துகொள்ளத் தக்கதான இம்முத்துமாலையாற் பயன் யாது? தமக்கேயிருக்

கட்டு மிவ்வாபரணம் ! ஆயினும், உமது நன்மையை நீர் உண்மையாய் நாடுவீராயின் இதை மாத்ரம் கவனித்து நடந்து கொள்வீர் !

* "தாநத்திற் குரித்து மன்று,
தானினைந் தீயிற் சால
ஈநத்தி லுய்க்கவிற்கும்;
எச்சத்தை யிழுக்கம் பண்ணும்,
மாநத்தை யழிக்கும், துய்க்கின்
மாற்றலர்க் கடிமை யாக்கும்,
ஊநத்தி நரகத் துய்க்கும்
பிறர்பொரு ளுவக்கின் வேந்தே!"

நல்லது எமக்கு அநுஷ்டாந காலமாய்விட்டது ; போய்வருகின்றோம் ! (சிறிது தூரம் பரிக்ரமித்து, ஆத்மகதமாய்)

† "கற்பூரப் பாத்திகட்டிக் கஸ்தூரி
யெருப்போட்டுக் கமழ்நீர் பாய்ச்சிப்
பொற்பூர வுள்ளியினை விதைத்தாலு
மதன்குணத்தைப் பொருந்தக் காட்டும்:
சொற்பேதை யருக்கறிவிங் கினிதாக
வருமெனவே சொல்லினாலு
நற்போதம் வாராதாங் கவர்குணமே
மேலாக நடக்குந் தானே !"

இதுவரை வாராதபுத்தி இனி நம் சொற்களால் வரப்போகின்றதா ? எது நடக்கவேண்டியதோ அது நடக்கவே நடக்கும் ! (விஷ்க்ரமித்தல்)

முஞ்ஜ:—(எழுந்து உலாவிக்கொண்டே) ஆ ஆ ! நம்முடைய எண்ணம் ஒன்றும் நிறைவேறாதுபோலும் ! என் செய்வோம் ? சும்மா இருப்பின் ராஜ்யத்தை ஸ்திரப்படுத்துவது எங்ஙனம் ?

* சாந்தி புராணம் † விவேகசிந்தாமணி

ராகம்-அடாணா: தாளம்-ரூபகம்

பல்லவி

சும்மாவிருந்தால் - ஸுகம்வருமோ ?

அநுபல்லவி

சும்மாவிருந்தாலினி - யெம்மாத்திரம்ஸுகமும்
இம்மாநுடப்புவியில் - நம்மாலடைவதுண்டோ ! (சும்மா)

சரணங்கள்

எல்லாந் தெய்வீகமெனச் - சொல்லுவோரெவரேனும்
வெல்லா ரொருபொருளும் - நல்லா ரவர் உளரோ? (சும்மா)
நன்றால் முடியுமதை - முன்றாற் செய்மனிதற்கே
எந்நாளுந்தினை மண்ணும் - பொன்னாய்க்குவியுமது! (சும்மா)

ஆகலின், நாம் தக்கயோஜனை செய்யவேண்டும். உனக்குப்பின் போஜன் ஆளுவனென்றார்! "உனக்குப்பின்?" அப்படி யெனில் என்ன பொருள்? நாமிறந்த பிறகா?—சீசீ! அப்படியிராது. மேலும் இதனிற் பயனில்லை என்றுரைத்தார்! இதற்கென்ன செய்வது? (ஆஸநத்தில் உட்கார்ந்து சற்றுநேரம் யோஜித்து) போஜன் உயிருடனிருப்பினன்றோ இவ்ராஜ்யத்தை எனக்குப்பின் ஆளப்போகின்றான்? அவனைத் தொலைத்து விட்டாலோ?—சீ சீ! என்ன எண்ணங்கொண்டோம்! ஒரு தீங்குமறியாத அந்தபாலகனையோ நாம் கொல்வது? ஐயோ! நம்மிடத்திலும் தன் பிதாவினிடத்திலிருப்பதுபோல் அன்பு பாராட்டி வருகின்றனனே! மேலும் எந்தமையனார் இறந்துபோகும்பொழுது இவனை எம்மிடத்தில் நம்பி ஒப்புவித்தனரே? அப்படியிருக்க எவ்வளவு கொடியத்ரோஹம் புரியநினைந்தோம்!—(யோஜித்து) ஆனால் போஜன் உயிருடனுள்ளவும் நமக்கிந்நாடு கிடையாது. அவனே ந்யாயமாய் இவ்ராஜ்யத்திற் குரியவன்! நமது ப்ரஜைகளும் அவனது வெற்றியைக் கேட்டதுமுதல் அவனே அரசனாக வரவேண்டுமென்று விரும்புகின்றனர்கள்!

நாமும் ராஜ்யத்தைப் போஜனுக்கு ஒப்புவித்து விடுவதாக ஸபையில் வாக்குக்கொடுத்து வந்தோம்! இதற்கென்ன செய்யலாம்? தர்ம ஸங்கடமாயல்லவோ முடிந்துவிட்டது!—(சற்றுநேரந் தலைமீது கரத்தைவைத்து ஆலோசித்து ஆஸநத்தைவிட்டெழுந்து) சீ! ஒரு ஸ்வல்பத்திற்கஞ்சினால் மஹத்தான நஷ்டம் நேரிடும்! துணிந்து ஒரு கார்யத்தைத் தொடங்கினாலன்றி நாமிதுகாறும் பிழைத்த பிழைப்பெல்லாம் வீணாய்விடும். ஆகலின், எவ்விதமுயற்சியினாலாவது போஜனைத்தொலைத்து விடுவதே நலம்.—நல்லது! 'மாளவதேசம் முழுதும் போஜன் அளுவன்' என்றனரே! அஃதெப்படி? மாளவதேசத்தின் ஒரு பிரிவாகிய உஜ்ஜயினீராஜ்யம் நம்மைச் சேர்ந்ததன்றோ! விக்ரமார்க்கனுடைய ஸந்ததியில் வந்தவனான ஆதித்யவமர்னன்றோ அதையாளுகின்றனன்! ஒருகால் இவ்வாறு ஸம்பவிக்குமோ? நமது தமயனாரும் ஆதித்யவர்மனும் பால்யஸ்நேஹிதர்களாவரே! ஒருவேளை அதுபற்றித் தனது குமாரியைப் போஜனுக்கு மணஞ்செய்வித்து, பிள்ளையில்லாமையினால், ராஜ்யத்தையும் அவனுக்கே கொடுப்பனோ? எவ்வழிச் செல்லினும் ஸங்கடமாயிருக்கின்றதே! (சிந்தித்துக்கொண்டே யுட்கார்ந்து) ஆகலின் அவனை எவ்விதந் தொலைப்பது?—(எழுந்து) சீ! தன்முயற்சியா லாகாத கார்யமென்ன விருக்கிறது?

*" முயற்சியாற் கர்ம மெல்லா
  முடிந்திடு மெவர்க்கு நாள
முயற்சியை யின்றி யெண்ணின்
  முடிவதே தொன்று மின்று;
முயற்சிசெய் துழலுஞ் சீயம்
  முரண்யானை தன்னை யுண்ணும்,
முயற்சியற் றுறங்கின் வாயின்
  முடுகிவீழ்ந் திடுமோ யானை?"

* உத்தமநீதி.

V

## KING MUNJA AND SARADANANDA YATI

OR

"THE PIOUS ASCETIC INDIGNANTLY REFUSING THE SINISTER OFFER OF THE WILY KING"

——*Act I, Scene 2, Pages* 29-30

Facing page

# முஞ்ஜராஜரும் ஸாரதாநந்த யதியும்

## அல்லது

### “ஸாதுவான ஸந்யாஸி வஞ்சகனான மன்னனுடைய கபடமர்யாதையை யங்கீகரியாமல் திக்கரித்தல்”

முஞ்ஜ:—(தன் கழுத்திலணிந்திருந்த முத்துமாலையைக் கழற்றி) ஸ்வாமி தாங்கள் இதை அங்கீகரித்து எம்மை அநுக்ரஹிக்க வேண்டும். (முத்துமாலையை நீட்டல்)

ஸார:—(அதைத் தடுத்து) ராஜனே! ஜபமாலையணிந்திருக்கும் எம்போன்ற துறவிகட்கு அரசர்கள் அணிந்துகொள்ளத்தக்கதான இம்முத்துமாலையாற் பயன் யாது? தமக்கேயிருக்கட்டு மிவ்வாபரணம்! ஆயினும், உமது நன்மையை நீர் உண்மையாய் நாடுவீராயின் இதை மாத்ரம் கவனித்து நடந்து கொள்வீர்!

“தானத்திற் குரித்த தன்று,
தானினைத் தீயிற் சால
ஹீனத்தி லாழ்க்க மிற்றும்,
எச்சத்தை யிழக்கப் பண்ணும்,
மானத்தை யழிக்கும், நல்லின்
மாற்றலர்க் கடிமையாக்கும்,
ஊனத்தி லாழ்த் துய்க்கும்
பிறர் பொருளுவக்கின் வேட்கை!”

—அங்கம், I, களம், 2, பக்கம், ௨௧-௧௦

எதற்கும் நாமிப்படிச் செய்வோம்! அவரும் ஸ்த்ரீயின் மனத்தைக்குறித்த விஷயம் இறைவேறு மென்றுரைத்தனர். நமது ஸஹோதரி சாருமதியின் மகள் விலாஸவதியைப் போஜனுக்கு மணஞ் செய்விப்போம். வேறொரு ராஜ கந்நிகையைப் போஜனுக்கு விவாஹம் செய்வித்தால், அப்பெண்ணைச்சேர்ந்தவரசர்கள் போஜனுக்கு இவ்ராஜ்யம் கிடைக்கும்படி முயலுவார்கள்.—ஒரு வேளை இந்தஸம்பந்தம் நமது குலாசாரத்திற்கு விரோதம் என்று சொல்வார்களோ? சொல்லிக்கொள்ளட்டுமே! நமது ஸஹோதரி நாம் சொல்லுகிறபடி நடப்பாளென்றே நம்புகிறேன்.—ஆனால் அப் புத்திஸாகரன் இந்த ஸம்பந்தத்திற்கு ஸம்மதியானோ! அவன், முன்னரே, தகுந்த ராஜகந்நிகையை விசாரித்துப் போஜனுக்கு மணஞ்செய்விக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தான். போஜனும், ஐந்து வயதுமுதல் அவனிடத்திலேயே வித்யாப்யாஸம் செய்துகொண்டிருப்பதனால், அவனது வார்த்தையைத் தட்டாமல் கேட்பான் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆயினு மந்த யதீஶ்வரர்வாக்குத் தப்புமா? அதையுந்தான் பார்த்துவிடுவோம்!

*"விடாது தனுவிற் செயுமுயற்சி
மென்மேற் பொருளை மிகவளர்க்கும்,
கெடாது சுற்று நட்பினர்தங்
கிளையுந் தாங்கு மியாவர்க்கும்,
தடாத வுபகா ரமும்புரியுந்
தடந்தா மரையா ளையுஞ்சேர்க்கும்,
படாத வூழ்வந் திடுகாறும்
பயனை விளைக்கும் பழியின்றாம்."

ஆதலின், இதுவே ஸரியான யோஜனை! எப்படியாகிலும் விலாஸவதியைப் போஜனுக்கு மணம்புரிவித்து, ஸமயம் பார்த்து,

* பிள்ளையார் புராணம்

அவன் மூலமாகவே ஒருவருக்குந்தெரியாமல் அவனைத் தொலைத்தல் வேண்டும். பாவபுண்ணியங்களை நோக்கின், நாம் மேற்கொண்டகார்யம் முடியாது! இப்பொழுதே நம் ஸஹோதரியினிடஞ்சென்று, அவளது ஸம்மதத்தைப் பெறுவோம்! (ஆஸநத்தைவிட்டெழுந்து நோக்கி) ஆ! நாம் கும்பிடப்போன தெய்வங் குறுக்கேவந்தாற்போல் நமது ஸஹோதரியே மதநமாலிநியுடன், என்னவோ பேசிக்கொண்டு, இதோவருகின்றாள். இதுவே நாம் நினைத்த கார்யங் கைகூடுமென்பதைக் குறிப்பிக்கின்றது!

(மேற்குறித்தபடி மதநமாலிநியுடன் பரபரப்பாகச் சாருமதி ப்ரவேஶித்தல்.)

மதநமாலிநி.—அம்மணீ! இப்படி வாருங்கள்! மஹாராஜா அவர்கள் இதோ விருக்கின்றார்கள்!

சாருமதி.—அடி மதநமாலிநீ! அந்த ஸந்நியாஸிகள் இங்கே வந்தபொழுது எங்கள் அண்ணனைக் கண்டார்களா?

மதந:—ஆம் ஆம்! அம்மணீ! நான் தான் அவரை மஹாராஜா அவர்களிடம் அழைத்துச் சென்றேன்.

சாரு:—என்னவோ? நீ சொல்வதெல்லாம் எனக்கு உண்மையாகத் தோன்றவில்லை.

முஞ்ஜ.—(சாருமதியின் முகத்தை உற்றுநோக்கி, ஆத்மகதமாய்) ஆ ஆ! இஃதென்ன? இவள் ஏதோ பயம் பீடிவிட்டவள்போற் காணப்படுகின்றாள்! ஒருவேளை யிவள் குழந்தை விலாஸவதிக்கு ஏதாகிலும் தேஹ அஸௌக்யமோ? யாது பற்றி இவள் இவ்வளவு பரபரப்புடன் வருகின்றாள்?

சாரு:—(முஞ்ஜன் அருகிற்சென்று) அண்ணா! இதென்ன தாங்கள் பராமுகமாயிருக்கின்றீர்கள்? 'இப்படுபாவியின் க்ருஹத்துக்கு ஏன் வந்தோம்' என்று சொல்லிக்கொண்டே ஒரு பெரிய யதீந்த்ரர் நமது அரண்மனையினின்றும் போகின்றாரா

மே! அவரைத் தாங்கள் பார்த்துப் பிக்ஷாவந்தநஞ் செய்யவில்லையோ? வந்த யதிகளை வணங்கிச் சென்றழைத்து, விருந்து செய்வியாவிடில், வீடு நசித்துவிடுமென்பார்களே!

*"நீத்தவ ராதியோர் நெருப்பு யிர்த்திடிற்
காத்திடுங் கடவுளுங் கலங்கு மாதலால்,
ஏத்துவ தேகட னென்று மேநமக்
காத்தர்கள் பொறுப்பரென் றவம திததிடேல்"!

என்று பெரியோர்கள் கூறுவதைத் தாம் கேட்டதில்லையோ?

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! நமது அவஸரத்தில் அந்த யதீந்த்ரருக்குப் பிக்ஷை சொல்லக்கூட மறந்துவிட்டோம்! நல்லது! இப்பொழுது நடத்தவேண்டிய கார்யத்தைக் கருதுவோம். (ப்ரகாஶமாய்) சாருமதீ! ஏன் வீணுய்ப் பயப்படுகின்றாய்? அந்த யதீஶ்வரரைத்தான் நான் பார்த்தேனே! அவருக்குத் தக்கமர்யாதைகளையுஞ் செய்தேன்! இம் முத்துமாலையையும் அவருக்குக்கொடுத்தேன். அவரோ, 'யாம் துறவி! எமக்கு இதெதற்கு?' என்று மறுத்துவிட்டார். மற்றைப்படி வேறு விஶேஷமொன்று மில்லையே! அவர் வேறு யாரைப்பற்றிச் சொல்லிப்போயினரோ? அது தெரியாமல் நீ வீணுய்க் கலங்குவானேன்?

சாரு:—என்னவோ? என் மநத்திற்குச் சஞ்சலமாகத்தானிருக்கிறது. அவர், நமது அரண்மனைவாயிலிலிருந்து, இப்படிச் சொல்லிக்கொண்டு போவானேன்? இருக்கட்டும், அவர்களுக்குப் பிக்ஷாவர்தநஞ் செய்தீர்களோ? இல்லையே!

முஞ்ஜ:—என்னைப்பிரிகையில் இன்முகத்தோடு பிரிந்தார். அவர் கூறிய கடுமொழிகள் என்னை யொட்டியவை யல்ல. நீ தேறியிரு. கவலையை விடு. அப்புறம்,—நம் போஜன் போல

* பிள்ளையார் புராணம்

கேஸரியை யுத்தத்தில்வென்று திரும்பிவருகின்றானே தெரியுமோ ?

சாரு:—நம்மருமையண்ணனுருடையகுழந்தை போஜனு! மந்திரியாரிடம் வித்யாப்யாஸம் செய்துகொண்டிருந்தானே ! பாலகனுவனே ! அவன் ஏன் யுத்தத்திற்குச் சென்றான் ?

முஞ்ஜ:—பாலகனென்ன? அவனுக்கும் பதினெட்டுவயது நிரம்பிவிட்டது! தானே யுத்தத்திற்குப் போகவேண்டுமென்று சென்றான் ! அதற்கென்ன ? இப்பொழுது பகைவரையெல்லாம் வெற்றிகொண்டு திரும்பினனே !

சாரு:—அப்படியாயின், நங் கண்மணி இப்பொழுதெங்கேயிருக்கின்றான் ? அவனைப்பார்த்து நெடுநாட்களாயின. யுத்தத்தில் யாதொரு காயமுமின்றி க்ஷேமமாய் வந்துசேர்ந்தனனு ?

முஞ்ஜ:—நம் போஜனுக்கு க்ஷேமத்துக்கென்ன குறை ? நமது நகரத்திற்கருகில் ஸேனைகளுடன் இறங்கி யிருக்கின்றனனும். இப்பொழுது அவனை மர்யாதையுடன் நகரத்துக்குள் அழைத்து வரப்போகின்றேன். இன்னொரு யோஜனையுங் கொண்டிருக்கின்றேன்.

சாரு:—அஃதென்ன ? அவனுக்கு இந்த ஸமயத்திலேயே பட்டங்கட்டப் போகின்றீர்களோ ?

முஞ்ஜ:—அதுதான் எல்லாருள்ளத்திலுமிருக்கின்றதே ! அதற்கு முன், இந்த ஶுபஸமயத்திலேயே, தக்க கந்நிகை யொருத்தியைத்தேடி, அவனுக்கு மணஞ் செய்விக்கலாமென்றிருக்கின்றேன்! அவனுக்கும் விவாஹோசிதமான வயது வந்துவிட்டதன்றோ !

சாரு:—ஆம் ! அண்ணு ! அப்படிச் செய்தால், மிகவும் அழகாயிருக்கும்.—ஆனல் இவ்வளவு ஶீக்ரத்தில் அவனுக்குத தக்க ராஜகந்நிகை கிடைப்பது அருமையன்றோ ? போஜ

னுடைய அழகுக்கும் புத்திக்கும் பராக்ரமத்துக்கும் தக்க வதூ எங்கே கிடைக்கப் போகிறாள் ?

முஞ்ஜ:—(நகைத்து) வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க் கோடி வாடி யலைவானேன் ? நமது குழந்தை விலாஸ வதியைப் போஜனுக்குக் கொடுத்தாலென்ன ?

சாரு:—விலாஸவதியையா ! நன்றாயிருக்கிறது ! இப்படிப்பட்ட ஸம்பந்தம் நமது குலத்திலேயே வழக்கமில்லையே ! மாமன் மகளை மணந்தால் மானங்கெட்டு மாய்வ ரென்று மொழிவார்களே ! அவனுக்கு வேறே எந்த ராஜகந்நிகையை யாவது பார்த்து மணஞ்செய்ய வேண்டும் !

முஞ்ஜ:—பேதாய் ! யாராகினும் வாய்க்கொழுப்பாய் ஏதாவது சொல்லிவிட்டால் அதையெல்லாம் ஸ்ம்ருதிவசநமாக நம்புகின்றனையே ! மாமன் மகளை மணக்கக்கூடாதென்று எந்த ஶாஸ்த்ரத்திற் சொல்லியிருக்கின்றது ? "மனைக்கேற்றவள் மாமன் மகள்" என்பது எனது கொள்கை.

சாரு:—இல்லை அண்ணா ! ஶாஸ்த்ரங்களுக்கு விரோதமாய் இல்லாமற்போனபோதிலும் நமது குலாசாரத்திற்கு ஒத்திருக்க வேண்டாமா ?

ராகம் - தோடி : தாளம் - சாபு

பல்லவி

குலதர்மமும் - விடலாகுமோ ?

அநுபல்லவி

குலம்விளங்குவது - குடிமையல்லவோ
நலந் தருவதும் - நல்வழக்க மன்றோ ? (குல)

சரணம்

தூயவம்ஶமேனும் - தொல்லறத்தை விடில்
நேயமார்க்கம் விட்டு - நீங்குவரே மாதர் !
காயஶுத்தி யில்லாக் - காமுகி களாகிக்
காயு நரகிற்பின் - கலங்கி வீழ்வ ரன்றோ ! (குல)

முஞ்ஜ:—(கோபத்துடன்) ஆமாம் ! குலாசாரம் உனக்கொருத்திக்குத்தான் தெரியும் போலும் ! உன்பெண்ணுக்கும் போஜனைக்காட்டினுஞ் சிறந்தவரன் கிடைக்கமாட்டானா ? ஐயோ பாவம்! நம்மை நம்பியிருக்கின்றாளேயென்று உன் குழந்தையின் நலத்துக்காகச் சொன்னேன்! ஆ ஆ ! உனக்கினி யிதைப்பார்க்கினு முயர்ந்த ஸம்பந்தம் கிடைத்துவிடும் !

சாரு:—இல்லை அண்ணா ! நானொன்று சொன்னால் நீங்க ளொன்று நினைத்துக்கொள்ளுகிறீர்கள் ! போஜனையும் தக்க வரன் அல்லனென்று சொல்ல என்மனந் துணியுமா ? நா எழும்புமா ? நமது விலாஸவதிக்கு அவனைவிட உயர்ந்த வரன் எங்கே கிடைப்பன் ? அப்படிப்பட்ட ஸம்பந்தஞ்செய்வது கூடுமானால், அதைப்பார்க்கினு மதிக ஸந்தோஷகரமானது வேறொன்றிருக்கப்போகின்றதோ ? ஆயினும் நமது குலவழக்கத்திற்கு ஒத்திருக்கவில்லையே என்று அஞ்சினேன் ! உங்களுக்கெப்படி யுக்தமாய்த் தோன்றுகிறதோ அப்படியே செய்யுங்கள். உம்முடைய இஷ்டத்துக்கு மாறாய்க்கூறி வேறாய்நடப்பவள்நானல்ல.

முஞ்ஜ:— சாருமதீ ! இப்படிச் செய்வதற்கு யாதொரு ஆக்ஷேபமுமிருக்கமாட்டாது. உன்னுடைய கணவனார் ஸிந்துர ஸேநமஹாராஜர் உயிருடனிருப்பாராயின், உடனே இந்த ஸம்பந்தத்திற்கு வெகு ஸந்தோஷத்துடன் ஸம்மதித்திருப்பார் ! மேலும் இந்தஸம்பந்தம் உனக்கும் உன்குழந்தைக்கும் மேன்மையைத்தந்து, நன்மையை விளைக்குமென்று, இப்பொழுது வந்திருந்த அந்த யதீஶ்வரரே சொல்லிப்போயினர் ! இது ஸரியான ஸம்பந்த மென்பதில் நீ கொஞ்சமேனும் ஸந்தே

றப்படவேண்டியதில்லை! என்ன? இந்த ஸம்பந்தம் உனக்கு ஸம்மதந்தானு? பின்னல் என்னுடைய கட்டாயத்துக்குச் செய்ததாகக் கூறவேண்டாம்!

சாரு:—என்ன அண்ணு! இப்படிச்சொல்லுகிறீர்கள்? கரும்புதின்னவுங் கூலியா? தேவாம்ருதத்தைக்கொடுத்துத் தேவையா என்று கேட்பது போலன்ருே இருக்கின்றது. எனக்குப் பூர்ணஸம்மதம்! இப்படிப்பட்ட கணவனைப் பெற விலாஸவதி கொடுத்துவைக்கவேண்டுமே!

முஞ்ஜ:—அப்படியாயின், நீ சீக்ரம் விலாஸவதிக்கிதைத் தெரிவித்து, மேலே என்னென்ன செய்யவேண்டுமோ அவையெல்லாம் முன்னதாகவே செய்துகொள்! நான் போஜனை நகரத்திற்கழைத்துவந்ததும் அதே கோலமாய் மணக்கோலத்தையும் நடத்திவிடலா மென்று யோஜித்திருக்கின்றேன். உனது கணவனுருடைய நாட்டிலிருந்து ஏதாகினும் சீர் வரவழைக்க வேண்டுமென்ருலும் அதையும் முன்னதாகவே வரவழைத்துக்கொள்.

சாரு:—அப்படியே செய்கின்றேன் அண்ணு! (இரண்டடி பரிக்ரமித்து, கால்தடுக்க, ஆத்மகதமாய்) ஐயோ! என்ன விபரீதம் நேரிடப்போகிறதோ தெரியவில்லையே! விலாஸவதிக்கு இந்நற்செய்தியைச் சொல்லலாமென்று போகப்புறப்படும்பொழுதே கால் தடுக்கின்றதே! இவ்விபரீத ஸம்பந்தம் நன்மையை விளைக்குமோ? நமது குலத்தில் இதுவரையிலும் வழக்கமில்லையே என்று சொன்னல், அண்ணனுர் மனம் புண்ணுகின்ருரே: வாராத கோபமும் வருகின்றதே. இதைச் செய்யாவிடில், வீணுய் என் அண்ணனுருடைய கோபத்துக்கும் பகைக்கும் பாத்ரையாவேன். எதற்கும் ஈச்வரஸங்கல்ப மெப்படியிருக்கின்றதோ அப்படித்தானே முடியப் போகின்றது! ஈசா! உன்னையே நம்பினேன். உன்னையின்றி ஒருவன் மனை

மகனாவதுமில்லை, ஒருவன் பிணமகனாவதுமில்லை. (நிஷ்க்ரமித்தல்.)

முஞ்ஜ:—மதநமாலினீ ! நீயும் நமது ஸஹோதரியுடன் சென்று, இவ்விவாஹம் ஶீக்ரத்தில் நடக்குமாறு முயற்சி செய்ய வேண்டும்.

மதந:—ஆ ஆ ! உத்தரவுப்படியே ! (நிஷ்க்ரமித்தல்)

முஞ்ஜ:—இவளுடைய ஸம்மதம் எப்படியுங்கிடைக்குமென்றே நினைத்தேன். அப்படியே ஸுலபமாய்க் கிடைத்து விட்டது. அப்பாதகன் புத்திஸாகரன் இருக்கின்றானே! அவனுடைய ஸம்மதம் எப்படிக்கிடைக்குமோ தெரியவில்லையே ! அவன் ஸம்மதித்து விட்டால், போஜனுடைய ஸம்மதமுங் கிடைத்துவிட்டது போலவே! பார்ப்போம், அந்த யோகீஶ்வரர் தாம் சொன்னாரே—இந்த ஸம்பந்தங் கூடுமென்று! பிரயாஸைப் பட்டால் பயன்படாமற் போகாது!

* "மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணா யினார்."

என்றபடி எவர்புகழினும், எவர் இகழினும், காரியத்தை முடிப்பதையே எண்ணவேண்டும். ஆகலின், நயவஞ்சகம் பேசியாயினும், புத்திஸாகரனுடைய ஸம்மதத்தையும் ஸம்பாதிப்போம். இதுவே அவனிடஞ்செல்வதற்கு ஸரியான ஸமயம். (நாலடி பரிக்ரமித்துத் திரும்பி) சீ ! என்ன புத்திஹீநம் ! என்ன புத்திஹீநம் ! யானை தன் தலையின்மீது தானே மண்ணைவாரி யிறைத்துக்கொள்வதுபோலன்றோ இருக்கின்றது நான் செய்யப்புகுங்கார்யம்! இவ் விலாஸவதியை நாமே மணந்து, பூபாலனாட்டுக்கும் அரசனாவோமென் றெண்ணியிருந்

* நீதிநெறிவிளக்கம்

தோமே! இப்பொழுது அவளைப் போஜனுக்கு மணஞ்செய் விப்பதனால், நமது காமம் நிறைவேறாததுமன்றி, கொல்லவரு கிறவன் கையில் கூரிய வாளையுங் கொடுப்பதுபோலுமிருக் கிறதே நாம் கொண்ட செய்கை. போஜனல்லவோ அவளு டைய தந்தையின்ராஜ்யத்துக்குரியவனாவான்! இதற்கென்ன செய்வது? நமக்கு நாமே கேடு விளைத்துக்கொண்டோமே! (ஆஸநத்திற் சற்று வீற்றிருந்தபடி யோஜித்து) ஸரி! இந்த ஸம யத்தில் நமது கார்யங் கைகூடுவதற்குப் போஜனுக்கே இவளை மணஞ்செய்விப்போம். பிறகு இவள் மூலமாகவே, போஜ னைக்கொன்று, இவளையும் மணந்து, பூபாளநாட்டிற்கு மரச னாவோம். இதுவே தக்கயோஜனை!

(எழுந்து நிஷ்க்ரமித்தல்)

## முதல் அங்கம்

முற்றிற்று

# இரண்டாம் அங்கம்

## முதற் களம்

இடம்:—தாரைநகர் : ஒரு ராஜவீதி

(காளிதாஸன், தந்திகன் என்னுமிரண்டு ஸஹபாடிகளுடன் போஜன் ப்ரவேசித்தல்)

போஜன்:—நண்பர்காள்! நாம் இன்று வாசித்த க்ரந்தம் மநத்திற்கு எவ்வளவு ஆநந்தத்தையும், உத்ஸாஹத்தையும் உண்டாக்குகின்றது! காவ்யமென்றால் எல்லாம் ஸ்ரீவால்மீகி ராமாயணம் ஆகுமோ?

அமரரெலா மடிபணியு மிராம காதை,
ஆதியில்நா ரதமுனிவர் சொற்ற காதை,
கமலபவ ரருள்புரிந்தே யுரைத்த காதை,
கம்பீர மாம்பெரிய காவ்ய காதை,
ஸமரஸவித் தாந்தத்தின் ஸத்ய காதை,
ஸாதுக்கள் மிகப்போற்றும் புண்ய காதை,
அமுதரஸம் பொழியுமொரு திவ்ய காதை,
ஆதிகவி வால்மீகி வகுத்த காதை!

காளிதாஸன்:—ஆமாம்! வால்மீகியின் திறம் இனி யாருக் குண்டாகும்? அவருடைய வாக்கே வாக்கு! அவர் இயற்றிய காவ்யத்தின் மஹிமையை யெடுத்துரைக்க அவருக்கே யல்லது ஸரஸ்வதி யொருத்திக்குத்தான் முடியும்.

சொன்னயம் பொருணயம் சொற்றசொற் றொடர்நயம்
நன்னடை நவரஸம் நல்லணி நிரம்பிய
வின்னயம் பொருந்திய வீரரா மன்கதை
உன்னிய தெலாந்தரு மோங்கிய தாருவே !

போஜ:—'ஆத்மகோடிகளுக்கு அஸாத்யமானதொன்று மில்லை' என்னும் பழமொழிக்கு, இச்சிறந்த காவ்யமே பெரிய நிதர்ஶநம். பாருங்கள் !

கணிகொண்ட மூவுல கனைத்தையும் வென்றுளோன்,
காலனும் வெருவு வீரன்,
கார்மிடற் றண்ணன்முதன் மூவரு மடங்கிடக்
கருதுமர சாட்சிபுரிவோன்,
மணிகொண்ட கடலெனுங் காப்புடை யிலங்கையா
மாட்சிசேர் பதிவாழ்பவன்,
மற்கொண்ட திண்புயக் கிரிகொண்டு கைலாய
மாமலை பெயர்த்தஸூரன்,
அணிகொண்ட வித்துணைச் சீர்கொண்ட பகைவனும்,-
அன்றடவி வாழ்க்கை யுற்றோன்,
அரியகா தலிதனைத் தேடிமெலி வெய்தினோன்,
அழிவா நரப்படையினோன்,
பணிகொண்ட தயரதன் றநயனாற் கொல்லுண்ட
பகாருங் கதையைநோக்கில்,
பாருளோ ரெவரேனு மநவலிமை யொன்றினால்
பலவினை முடித்திடுவரே !

தநிகன்:—ராஜ குமாரா ! நீ சொல்வது உண்மையே ! ஆயினு மிப்பழமொழிக்கு ஸ்ரீ அகஸ்த்ய பகவானுடைய சரித்ரமே ஸரியான அத்தாட்சி !

கும்பத் திடைபபிறந் துற்றுளோன், அன்னையின்
　　கொங்கையமு துண்ணுதவன்,
கோரமாங் காட்டிடைக் காயிலே பறித்துண்டு
　　கொல்பசி தணித்துவாழ்ந்தோன்,
வெம்புங் கடுங்கதிர்க் கும்பனிக் கும்புகுதும்
　　வீடொன்று மில்லாமலே,
மேலாடை யின்றிமர வுரிதொடுத் துக்கானம்
　　வீடெனக் கொண்டிருந்தோன்,
பங்கப் படுந்துயர் மெலிந்துளானாயினும்,
　　படுகடற் புனலையெல்லாம்
பரிந்தொரு கரத்திடைக் கொண்டருந் திச்சுகம்
　　பகர்வலா ரிக்களித்த
துங்கப் பெருங்கதை யறிந்துளோ மாகையால்,
　　தொல்புவியின் மநவலிமையால்
தொட்டுமுடி யாவினையு முள்ளதோ? இல்லையே
　　சூழ்ந்துற நினைந்திடிலரோ!

போஜ:—ஸகே காளிதாஸ! இவ்விஷயத்தைப்பற்றி நீ என்ன சொல்லுகின்றாய்?

காளி:—நண்பர்காள்! நீவிர் கூறுமுதாஹரணங்களெல்லாம் என் மநத்திற்கு ருசிக்கவில்லை. ராமரோ மஹாதேஜஸ்வீ! அகஸ்தியரோ மஹாதபஸ்வீ! இத்தன்மையானவர்கள் உதவியின்றி ஒரு கார்யத்தை ஸாதிப்பது ஆஶ்சர்யமன்று. இந்த லோகோக்திக்கு ஸரியான நிதர்ஶநம் மந்மதனுடைய விக்ரமமே! பாருங்கள்!

கையினிற் பிடித்த வில்லினைக் காணிற்
　　கணுவுடை முறிதருங் கரும்பே!
காதலைத் தூண்ட விடப்படு மம்போ
　　கரும்பிர ஸங்கள்சூழ் மலரே!

செய்யவின் ஞானே வடுக்குற நிமிர்ந்த
சிறந்தமென் சிறகுடைச் சுரும்பே !
ஸேனையோ சேலைத் திருத்துமை விழிச்செந்
துவரிதழ்த் தெரிவையர் தாமே !
மெய்யுற விளங்கும் வெண்குடை தானோ
விசும்பிடை யெழுதரு நிலவோ !
விளம்புமித் தகையன் மந்மத னென்பான்,
வீறுகோ ளுருவிலா னேனும்,
ஐயவா னுள்ளோர் மண்ணுளோர் யாரும்
தோல்விகொண் டோடிடச் செய்வன் !
துகளற நினைக்கின் முயலுவோர்க் கரிய
தொடர்வினை தானுமொன் றுளதோ !

போஜ:—ஸகே ! நன்குரைத்தாய் ! உனது திறமே திறம் !—நமது ஆசார்யர் புத்திஸாகரரும் வெளியிற்சென்றனர். நாம் இவ்வஸ்தமய ஸமயத்தில் எங்கே செல்வோம்?

காளி:—இதோ ! இவ் ராஜ மார்க்கத்தைப்பார்த்தாயா ? இப்பொழுது எவ்வளவு ரமணீயமாயிருக்கின்றது !

* "பத்தி மாட மணிக்கொடி பானுவின்
மெய்த்த பூம்புறத் தைவர வெங்கதிர்
கைத்த வங்களிற் காளிந்தி யைப்படி
வைத்தி ருந்துதா லாட்டுதன் மானுமே !"
ஆகலின் இவ்வழியே செல்வோம் !

தந்தி:—ஆம் ! ராஜகுமார ! இவ்விடமே செல்வோம் !

போஜ:—நண்பர்காள் ! இவ்வஸ்தமய ஸமயத்தின் அழகைப் பார்த்தீர்களா ?

* நைடதம்

* "புதைத்த காரிருட் படமொழித்
தித்துணைப் போதும்,
உதித்த கீழ்த்திசை மகட்புணர்ந்
தாயென வூடிக்,
கொதித்து, மேற்றிசை யணங்கலத்
தகப்பதங் கொடுமே
லுதைத்த தாலெனச் சிவந்தது
வெய்யவ னுடலம்!"

தந்:—ராஜகுமார! நன்று வர்ணித்தனை! இச்சந்த்ரோதயத்தின் அழகைப்பார்!

† "சரிந்தவெங் கதிரோன் வீழத்
தராபதி ஸந்தி செய்யப்
புரிந்தசிந் தையனுப் போகப்
பூங்குழன் மடவார் தம்மைப்
பிரிந்தவர்க் கால மாகிப்
பிரிவிலோர்க் கமிழ்த மாகி
விரிந்தவெண் ணிலவை வீசி
வெண்மதி தோன்ற லுற்றான்!"

போஜ:—காளிதாஸ! நீயு மிந்த ஸந்த்யாகாலத்தை வர்ணிப்பாய்?

காளி:—ஸகே! அப்படியே வர்ணிக்கின்றேன் கேட்க!

விஸ்ர முள்ளவன் வித்தை போலர
விந்தமோடை யொடுங்கவும்,
ஸஜ்ஜநரங்கிய நாட்டிலேயெனச்
சுரும்பர்சால வொடுங்கவும்,

அமறந லோபியி னர்த்தம்போல்விழி
விஷ்ப்ரயோஜந மாகவும்,
அசலை யைக்கொடு மன்னர்போலிருள்
காணதோ வதை செய்வதே !

போஜ:—காளிதாஸ! உன் புத்தியின் கூர்மையே கூர்மை ! கொடிய அரசனைப்போல் இருள்பூமியைப் பாதிக்கின்றதென்று நீ வர்ணித்தது மிகவும் ஸரியே! அவ்வாறு ப்ரஜைகளை வருத்தியதனாலன்றோ, அப்போலகேசரியும் மடிந்தனன்!

காளி:—ஆமாம் ! பிறர் நாட்டின்கணுள்ள பிழைகள் புலப்படுமேயன்றித், தந்நாட்டில் நடக்கு மக்ரமங்கள் தெரியுமா? (மெதுவாய்) உனது சிறிய தந்தையார் ஆண்டுவரும் இந்நாடு இப்போது என்னபாடுபடுகின்றதென்று நீ யறியாய் ?

போஜ:—என் தந்தையார் ஆண்டாலென்ன? வேறு யாராண்டாலென்ன ? அக்ரமமாய் நடக்கு மரசர்களைக் கொலைசெய்தலும் குற்றமாகாது !

"குற்றம் புரியா திருந்துபிறர்
குற்றங் களைக சிறிதேனும்,
குற்றம் புரியிற் சிற்றெறிவைக்
குவையை யழிக்கு மாறேபோல்
பற்றும் பெருவாழ் வினையழிக்கும்,
பகைவர்க் காக்க மிகப்பெருக்கும்,
முற்றும் பெருநோ யுழப்பிக்கும்,
முனியா ராலு முனிவிக்கும் !"

நந்தி:—நீ யுரைத்தது மிகவும் ஸரியே !

---

* பிள்ளைகள் புராணம்

VI

## BHOJA AND HIS FELLOW-STUDENTS

OR

"BHÔJA IS SURPRISED TO LEARN THE MISERABLE STATE OF HIS KINGDOM"

——*Act II, Scene*, 1, *Page* 50

Facing Page [illegible]

# போஜகுமாரரும் அவரது ஸஹபாடிகளும்

## அல்லது

### "போஜன் தன் ராஜ்யத்தில் நடக்குமக்ரமங்களைக் கவனித்தல்"

காளி:—அப்படியொன்றுமில்லையே ராஜகுமாரா, அதோ பார்! இரண்டு ஸ்த்ரீகளை இரண்டு புருஷர்கள் மடக்கிக் கொண்டு பூஜை செய்கின்றார்கள்.

போஜ:—(உற்றுநோக்கி) என்ன காளிதாஸ! எல்லாம் உனக்கு வேடிக்கையாயிருக்கின்றது. எவர்களோ இரண்டு மஹாபாதகர்கள் யமகிங்கரர்கள்போல் அப்பெண்மணிகளை மடக்கிக்கொண்டு அந்யாயமாய் வருத்துகின்றார்கள்: அவர்களைப் பூஜை செய்கின்றார்கள் என்கின்றாயே!

காளி:—இந்நகரில் அதுவும் ஒரு பூஜைதான்! அதை வேறுவிதமாய்க் கொள்ளில் ராஜத்ரோஹத்திற் காளாவோம்.

போஜ:—இவர்கள் யாவரோ? இப்பெண்மணிகளின் கணவர்களோ?

காளி:—பாவம்! இப்பெண்மணிகளின் கணவர்களா? ஶிவ! ஶிவ!!

போஜ:—பின் யாவர் இப்பாதகர்கள்? இக்ஷணமே இவர்களைத்தொலைத்து வருகின்றேன்.

காளி:—இவர்கள் உன் சிறிய தந்தையார் முஞ்ஜ மஹாராஜா அவர்களது ப்ரதாந ஸேவகர்கள்!

போஜ:—என்ன! இவ்வளவு கொடுமையா என் சிறிய தந்தையார் ஆண்டுவருந் நகரில் நடக்கின்றது?

—அங்கம். II, களம். 1, பக்கம். ௬௦



VI]

போஜகுமாரரும் அவரது ஸஹபாடிகளும்

[சக

நஞ்ச மன்னவரைந் நலிந் தாலது
வஞ்ச மன்று மநுவழக் காகுமால்.'

காளி:—ராஜகுமார! அந்த எட்டறிவெல்லாம் பிறருக்கு உபதேசிக்கும்பொழுதுதான்! ஸ்வாநுஷ்டாநத்தில் எல்லாருக்கும் வழவழப்புத் தான்!—அது போகட்டும்! அதோ பார்த்தையா!

உதித்துமறை போழ்திலே
யுணவுகொண் டிதோமாடுகள்
மதித்துமடி பாலையும்
வடியவிட்டு, செல்கின்றதும்,
பதைத்திளைய கன்றுகள்
பரிவுகொண்டு தந்தாயுடன்
குதித்து விளையாடலும்,
குழலிசைத் தலும் நேர்த்தியே!

போஜன்:—ஆம்! வெகு ரமணீயமாகவே யிருக்கின்றது!

தங்கியே பிணையூஞ் சேய்க டாங்கியே
கொங்கை யோவெனக் குடங்க ளேந்தியே,
வங்கி யோசைபட மறுகு தன்னிலே
யங்கநா மணிகள் போதல் அந்தமே!

காளி:—ஆம்! பிள்ளைகளின் அருமை பெற்றவர்களுக்கன்றோ தெரியும். (மறைவாய்) ஆ ஆ! ராஜகுமார! இப்பொழுது உன் பிதா உயிருடனிருப்பாராயின் நீ எங்களைப் போல் இப்படிப் பரதேசியாய்த் திரிவாயா? ஐயோ! அந்தப் பாவி முஞ்ஜன்—

போஜ:—என்ன! காளிதாஸ! மறைவாய் உனக்குள் ஏதோ சொல்லிக் கொள்கின்றனை? யான் கேட்கத்தகாத ரஹஸ்யமோ?

* கம்பராமாயணம்

காளி:—அப்படி யொன்றுமில்லையே! ராஜகுமார அதோ பார்! இரண்டு ஸ்த்ரீகளை இரண்டு புருஷர்கள் மடக்கிக்கொண்டு பூஜை செய்கின்றார்கள்!

போஜ:—(உற்று நோக்கி) என்ன காளிதாஸ! எல்லாம் உனக்கு வேடிக்கையாயிருக்கின்றது. எவர்களோ இரண்டு மஹாபாதகர்கள் யமகிங்கரர்கள்போல் அப்பெண்மணிகளை மடக்கிக்கொண்டு அந்யாயமாய் வருத்துகின்றார்கள்: அவர்களைப் பூஜை செய்கின்றார்கள் என்கின்றாயே!

காளி:—இந்நகரில் அதுவும் ஒரு பூஜைதான்! அதை வேறுவிதமாய்க் கொள்ளில் ராஜத்ரோஹத்திற் காளாவோம்.

போஜ:—இவர்கள் யாவரோ? இப்பெண்களின் கணவர்களோ?

காளி:—பாவம்! இப்பெண்மணிகளின் கணவர்களா? ஶிவ! ஶிவ!

போஜ:—பின் யாவர் இப்பாதகர்கள்? இக்ஷணமே இவர்களைத் தொலைத்து வருகின்றேன்.

காளி:—இவர்கள் உன் சிறிய தந்தையார் முஞ்ஜ மஹாராஜா அவர்களது ப்ரதாந ஸேவகர்கள்!

போஜ:—என்ன! இவ்வளவு கொடுமையா என் சிறிய தந்தையார் ஆண்டுவருந் தலைநகரில் நடக்கின்றது?

காளி:—(சிறிது நகைத்து) இதைக் கொடுமையென்று சொல்கின்றனையே! இதனை எவ்வளவோ சிறந்த மர்யாதையென்றல்லவோ கொள்ளல்வேண்டும்!

போஜ:—இவ்வளவு அக்ரமங்களையும் பார்த்து, என் சிறிய தந்தையார் கேளாமலிருக்கின்றாரா?

காளி:—அப்பா! அவரே வந்திருப்பின், இந்நேரம் இப்பெண்மணிகளின் ப்ராணன் பறந்தோடியிருக்குமே!

போஜ:—(கோபத்துடன்) என்ன காளிதாஸ! பெரியோர்களைப் பழிக்கின்றனே?

காளி:—பழித்தால், உன்னைப் பழிக்கவேண்டும்! யான் ஒருபோதும் பெரியோரைப் பழியேன்!

* "குரவரைப் பெரியரைக் கூறு மாகமம்
விரவுறு மறைகளை மேத குப்படி
பரவுத லலதவர் பாங்கர் நிந்தனை
கரவுற வுளத்தினுங் கருதொணாததே!"

போஜ:—என்ன! காளிதாஸ! நீ சொல்வதெல்லாம் விந்தையாயிருக்கின்றது. என்னை எதற்காகப் பழிக்கவேண்டுமென்கின்றனே?

காளி:—நீ இவ்விரண்டு வருஷங்களுக்கு முன்னரே இவ் ராஜ்யத்தின் பட்டத்திற்கு வந்திருக்கவேண்டுமே! உன்னுடைய கடமையன்றோ ப்ரஜைகளுக்கு யாதொரு தீங்கும் வாராமல் அவர்களைப் பரிபாலிப்பது?

* "உரைசெயு மறத்தி னூற்று
லொருகுடை நிழற்ற முந்நீர்த்
தரைமுழு தாள வேண்டிற்
றகைபெறு மமைச்சு நாடு
புரையறு மரணே மிக்க
பொருள்படை நட்பென் றூறும்
வரைசெயப் படாத யாக்கை
யுறுப்பென மதித்துக் கோடி!"

போஜ:—இது விந்தையினும் விந்தையே! என் சிறிய தகப்பனார் ஆண்டுவரும்பொழுது, யான் எப்படி இவ்ராஜ்யத்தின் பட்டத்துக்கு வரக்கூடும்?

* பிள்ளையார் புராணம்

காளி:—நீ படித்திருக்கும் ஶாஸ்த்ரங்களில் ஒருவன் தேடிய ஸொத்துக்குப் புத்ரனிருக்கும்பொழுது, ப்ராதா தான் பாத்த்யஸ்தனென்று படித்தாய்போலும் ?

போஜ:—இல்லை ! புத்ரன் தான் முக்க்ய பாத்த்யதை யுடையவன் ! என் சிற்றப்பன் ஸொத்துக்கு யான் எப்படி உரியவனாவேன் ?

காளி:—ஆம்! அவருடைய ஸொத்தாயிருப்பின், நீ சொல்வது வாஸ்தவமே !

போஜ:—பின் யாருடையது இத் தாரா ராஜ்யம் ?

காளி:—உன் பிதா ஸிந்துலமஹாராஜருடையது ! அவர் இறந்து போகுங்காலையில் நீ பால்மணம்மாறாத பஞ்சவர்ஷ பாலகனாயிருந்தனையாம் ! அதுபற்றியே உன் பிதா உனக்கு வயது வருமளவும், இவ் ராஜ்யத்தைப் பரிபாலித்துவரும் படி, உன் சிறிய தந்தையாரிடத்தில் ஒப்புவித்தனராம் !

போஜ:—என்ன ! இது என் பிதா ஆண்டுவந்த ராஜ்யமா ?

காளி:—ஆம் ! அதைப்பற்றித் தான் இவ்வக்ரமங்களுக்கெல்லாம் உன்னையே பழிக்கவேண்டுமென்று யான் கூறினேன் !

போஜ:—(சிந்தித்து) என் சிறிய தந்தையார் எதற்காக இவ்ராஜ்யத்தை யின்னுமெனக்கு ஒப்புவிக்காதிருக்கின்றார் ?

காளி:—அதுவிஷயம் உனக்கும் அவருக்குந்தான் தெரிய வேண்டும். அக்ரமத்தையே அறநெறியாய்க் கொள்ளும் மன்னன் முன், எம்போன்ற ப்ரஜைகள் என் செய்வார்கள் ?

போஜ:—நல்லது ! இவ்விஷயங்களெல்லா முனக்கெப்படித் தெரியும் ?

காளி:—இவ்விஷயங்களெல்லாம் உனக்கு ஒருவனுக்கு மாத்ரம் புதியவை, மற்றவர்களுக்குப் பழையவைகளே !

போஜ:—நமது ஆசார்யர் புத்திஸாகரருக்குத் தெரியுமா?

தாஸி:—என்ன! ராஜகுமார! அப்படிக் கேட்கின்றாயே? அவர் உன் பிதாவுக்குப் ப்ராணஸ்நேஹிதராயிருந்தாரே; அது பற்றியே தான் உன் பிதா உன்னை அவரிடத்தில் ஒப்புவித்தனராம்!

போஜ:—இவை யெல்லாமெனக் கெங்ஙனம் தெரியும்? யாராயினும் இவ்விஷயங்களை என்னுடன் சொல்லியிருந்தாலன்றோ? நமது ஆசார்யரும் உரைத்திலர்? நீ சொல்வனவெல்லாம் எனக்குப் புதுமையாகவே யிருக்கின்றன. இவை யெனக்குக் களிப்புடன் கவற்சியை விளைக்கின்றன.

தாஸி:—நல்லது! இப்பொழுதாயினுந் தெரிந்துகொண்டனையே! நீ இனிச் செய்வதைப் பார்ப்போமே!

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! இதுவரையில் நம் நிலைமை நமக்கே தெரிந்ததில்லை! என் பிதாவுக்கு அவ்வளவு ப்ராண நேசரென்று சொல்லின அக்கிழவரும் சொன்னாரில்லை. (உதட்டைக் கடித்துக்கொண்டு) ஐயோ! இவராதீநத்தில் இன்னு மெத்தனை நாள் இருக்கவேண்டுமோ? இன்றே எனது குருகுலவாஸத்தை முடித்தேன்! இன்றே எனது படிப்பையும் விடுத்தேன்!—(யோஜித்துப் பெருமூச்செறிந்து) ஆ ஆ! யான் மிகக்கொடியன்! மிகக்கொடியன்!! என் ஸொந்த அத்தை மகளையே மணந்து, இரண்டு வர்ஷகாலமாகியும், பரமத்ரோஹியான யான், இக்கிழவருடைய துர்ப்போதனையைக் கேட்டுக்கொண்டு, அவள் முகத்தையும் பார்த்திலனே! ஐயோ! அப் பேதை என்னைப்பற்றி யாது நினைப்பள்? என் அத்தை சாருமதி தான் என்னைக்குறித்து எவ்வளவு வருந்தாள்?

* "வருவாய்க் கியைய வாழ்தலு மறுவில் கற்பின் மனையாள்போற்
பொருள்யா வுளவா மதுவன்றிப் புகழும் பயனு மிகவுண்டாம்,

* பிள்ளையார் புராணம்

கருதா ரெதிரே யிமிலேற்றுக்
காமர் நடையு முறுமதனு
லொருவா தவளோ டுவப்புறவே
யுற்று வாழ்த லறனுகும் !"

இனி எப்படியாயினும் இக்கிழவரிடத்தினின்றும் ஸ்வாதீநம் பெறல் வேண்டும்! (ப்ரகாமாய்) நண்பர்காள்! யான் இப் பட்டணத்தை நாளைக்காலையிற் சுற்றிப்பார்க்க நினைத்திருக்கின்றனன்! நீவிரு மென்னுடன் வருவீர்களா?

இருவரும்:—மிகவும் ஸந்தோஷம்! அப்படியே வருகின்றோம்!

போஜ:—ஸகே! காளிதாஸ! யானின்றே குருகுல வாஸத்தை முடிக்க நினைத்திருக்கின்றேன்—நமது ஆசிரியர் என்ன எண்ணினும் ஸரி.

காளி:—அது ந்யாயமே! நமது ஆசிரியரு மிதற்கு ஸம் மதிப்பாரென்றே நம்புகின்றேன்!

தந்:—நண்ப! இதோ நமது ஆசிரியரும் வருகின்றார்! நாம் வீட்டுக்குப்போவோம்.

காளி:—ஆம்! என்னவோ யோஜனை பண்ணிக் கொண்டு வருகின்றார்! (போஜனை நோக்கி) ராஜகுமார! நாங்கள் போய்வருகின்றோம். நமது ஆசிரியரும் இதோ வருகின்றார்! அவர் சொல்லைமாத்திரம் நீ அவமதியாதே!

"* தந்தைசொன் மறுப்பவர்கள், தாயுரை கடப்போ
ரந்தமறு தேசிகர்த மாணையை யிகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாறினர்கண் மாறாச்
செந்தழல வாயநிர யத்தினிடைச் சேர்வார்!!"

(இருவரும் நிஷ்க்ரமித்தல்).

* கந்தபுராணம்

போஜ:—ஸரி ! இவர்களும் போய்விட்டனர்கள் ! நமது ஆசிரியரும் வருகின்றார் ! நாம் எவ்விதத்திலேனும் இவரிடத்தினின்றும் ஸ்வாதீநம் பெறல்வேண்டும்.

(ப்ரவேஶித்து)

புத்திஸாகரர்.—ஆஹா ! ஸிந்துல மஹாராஜர் இறந்து போகும்பொழுது என்னசொன்னார் ! "என் ப்ரியமுள்ள மித்ரனே ! நம் தம்பி முஞ்ஜன், துர்போதனையால், என்செய்வனோ? ஆயினும், ராஜ்ய பாரத்தை வஹிப்பதற்கு ஸாமர்த்ய முள்ள ஸஹோதரனை விட்டுவிட்டு, ஶிஶுவான புத்ரனுக்குப் பட்டங்கட்டினால், வீணாய்உலகநிந்தைக்காளாவேன். ஒருவேளை யவன் ராஜ்யத்துக் காசைப்பட்டுப் பாலகனான என் தநயனை விஷம் முதலியவற்றால் கொன்றுவிட்டாலும் விடுவன். ஆக வின், என் கண்மணி போஜனுக்கு ராஜ்யம் கிடைக்காமற் போனாலும் போகட்டும். அவனை உயிருடன் காப்பாற்றுவது உன் கடமை !" ஐயோ ! அவர் இப்படி யுரைத்திருக்க, அச் சண்டாளன், நாட்டைக்கைப்பற்றிக்கொண்டதுமன்றிப், போஜனுக்கும் கேடு நினைத்திருக்கின்றானே ! இதுவுமன்றி, ஏதோ கெட்ட எண்ணங்கொண்டு, தன் தங்கையின் மகளையே இவனுக்குப் பலவந்தமாக மணஞ்செய்வித்தனன் ! இவளோ முஞ்ஜனுடைய ஆதீநத்திலிருக்கின்றாள் ! என்னவென்றாலும் ஸ்த்ரீகளின் புத்தி பேதமையுடையதாயிற்றே. இதுபற்றியே போஜனுக்கு ராஜ்யங் கிடைக்குமளவும், அவனை இவளுடன் சேராதிருக்கும்படி கட்டாயப்படுத்திவருகின்றேன் ! காரண மறியாதவூரார் என்னைக்குறித்து என்ன நினைப்பார்கள் ? அப் பெண்மணிதான் நம்மை எவ்வாறு பழியாதிருப்பள் ? எப்படி யிருப்பினும், போஜனுடைய உயிரைக் காப்பாற்றுவது என்னுடைய முக்ய்யக் கடமையாயிருக்கின்றது. போஜனுக்கோ ஒன்றுந்தெரியவில்லை. விஶேஷவித்யை கற்றவனாயிருப்பினும் உலகநடக்கை யறியாதவனாயிருக்கின்றனன் ! எதற்கும் ஸகல ப்ராணிகளிடத்திலும் அந்தர்யாமியாயிருந்து அவரவர்களு

டைய புத்திகளைப் ப்ரேரேபிக்கின்ற பரமாத்மா இருக்கின்றார்! நானும், போஜனது ப்ராணநேசன், காளிதாஸனைக்கொண்டு, அவனுக்கு அவனது நிலைமையைத்தெரிவிக்கும்படி சொல்லி யிருக்கின்றேன்! அவனும், போஜனுடன் இந்நேரம்பேசிவிட்டு, இப்பொழுதுதான் நம்மைக்கண்டு நகிகனுடன் வீட்டிற்குத்திரு ம்புகின்றான்! போஜனும் ஏதோ நம்முடன் வசனிப்பதற்காக வே தனியாய் யோஜித்துக்கொண்டு நிற்கின்றனன்போலும். நல்லது! அருகிற்சென்று விசாரிப்போம்! (போஜனருகிற்செ ன்று) குமார! என்ன ஸமாசாரம்? ஏன் ஒருமாதிரியாய் இருக் கின்றனை?

போஜ:—என்னை இதுகாறும் படிப்பித்துப் பாதுகாத்து வந்த குருநாத! வந்தநம்! (வந்தநஞ்செய்தல்)

புத்தி:—குழந்தாய்! உனக்கு அமோகமாய் மங்களமுண் டாகுக!

போஜ:—ஆசார்ய! யான் தங்களிடத்தில் ஒருசிறு விண் ணப்பஞ் செய்துக்கொள்ளவேண்டியிருக்கின்றது!

புத்தி:—என் செல்வனே! உன்னிஷ்டப்படி செய்கின் றேன்! நின்கருத்தை வெளியிடுவாய்.

போஜ:—யான் இன்றையதினமே குருகுலவாஸத்தை முடிக்கலாமென்று நினைத்திருக்கின்றேன்—

புத்தி:—அதற்கென்ன? இப்பொழுதே யநுமதிதந்தேன்!

போஜ:—மேலும், என்பிதா ஸிந்துலமஹாராஜர் பரிபா லித்து வந்த இந்நகரைச் சுற்றிப்பார்க்க நாளைக்காலையில் வருவ தாக என் நண்பர்களுடன் சொல்லியிருக்கின்றேன். அதற்குந் தாங்கள் அநுமதிகொடுப்பீர்களென்று ப்ரார்த்திக்கின்றேன்!

புத்தி:—குமார! அப்படியே வேண்டியனவெல்லாம் ஸித் தஞ்செய்து தருகின்றேன்! இவ்வித உணர்வு உனக்கு எப் பொழுது பிறக்கப்போகின்றதென்றே இதுநாள் வரையில் ஏங் கிக் காத்திருந்தேன்!

போஜ:—ஆசார்ய! யான் இன்னுமொரு விண்ணப்பஞ் செய்யவேண்டியிருக்கின்றது.

புத்தி:—அஃதென்ன? உன் இஷ்டப்படியே செய்கின் றேன்! சீக்ரம் அதையுமுரைத்திடு.

போஜ:—யான் விலாஸவதியைப்பார்க்க, நாளை இரவு செல்வதாக, எண்ணியிருக்கின்றேன்! அதற்குந் தாங்கள் விடை தந்தருளவேண்டும்.

புத்தி:—அப்பா! அவ்வாறுசெய்வதில் யாதோர் ஆக்ஷே பமுமில்லை. நின் அத்தை சாருமதீதேவியார் மஹாபதிவ்ரதை! விலாஸவதியும் விசேஷ வித்யைகற்றவள்! ஆயினும் ஸ்த்ரீகள் பரதந்த்ரைகளானபடியால் ஜாக்ரதையாயிருத்தல் வேண்டும்! சிறந்த விவேகிகள்கூட மதனெனுந்தீயினால் மனமெனுங்குடி சையைக் கொளுத்திவிட்டு யுக்தாயுக்தங்களை யறியார்களாயின், ஸாமர்த்தப்பேதையரும் பரனுடைய ஆதீநத்தி லிருப்பவருமான ஸ்த்ரீகள் எவ்வாறு அறியப்போகின்றனர்?

* "தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை மங்கைய ரால்வருங்
காம மில்லை யெனிற்கொடுங் கேடெனும்
நாம மில்லை நரகமு மில்லையே!"

ஆதலால், யான் இனி அதிகமாய் உனக்குக் கூறவேண்டிய தென்ன விருக்கின்றது! நீ பண்ணிய ப்ரதிஜ்ஞையை மாத் ரம் மறவாதே! அதை உனது நன்மைக்காகவே ஞாபகம் மூட்டுகின்றேன்.

போஜ:—ஒருபோதும் மறவேன்! யான் இன்றிரவு தனியாயிருக்க விடைதரல்வேண்டும்!

புத்தி:—ராஜகுமார! அப்படியேசெய்! யானும் அவ ஸர நிமித்தமாய்அந்த்ரதேசத்துக்குச்செல்லவேண்டியிருக்கின் றது. நான் வருவதற்கு இரண்டு மூன்று நாட்கள் சென்றாலும்

* கம்பராமாயணம்

செல்லும்! இன்றிரவே உனக்குவேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம்செய்துவிட்டுப்போகின்றேன்! ஜாக்ரதையாக மாத்ரம் இருந்துகொள்!

* "நல்ல வினைக்கு நற்பயனுந்
தீய வினைக்குத் தீப்பயனு
மில்லை யெனும்வல் லிழுதையரு
மெள்ளும் விடருந் தூர்த்தர்களுஞ்
சொல்லு நடரு முதலாகத்
தொக்க குழுவைச் சேர்ந்தொழுகிற்
புல்லு மறிவைத் திரித்திருமைப்
பொருளுங் கெடுப்பர் புகழோடே!"

(இருவரும் நிஷ்க்ரமித்தல்.)

## இரண்டாங் களம்

இடம் - தாரை நகர்: விலாஸவதியின் அரண்மனையில் சயநக்ருஹம்

(மஞ்சத்தில் வீற்றிருந்தபடி சாருமதியும் விலாஸவதியும் ப்ரவேசித்தல்)

விலாஸவதி:—அம்மா! என் தந்தையார் "சூரஸேந மஹாராஜர் பரிபாலித்துவந்த பூபாளநாட்டிற்கு என்னையுங் கூடவே யழைத்துப்போகலாகாதோ? ஐயோ! உன்னைவிட்டுப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு க்ஷணமும் என்னை யுகம்போல் வருத்துகின்றதே! யான் படுந்துயரங்களை யெடுத்துரைத்து, ஆறு

---

* பிள்ளையார் புராணம்

தல் பெறுவதற்குக்கூட, ஒருவருமில்லாமற்போய்விடுமே. அந்தோ! பாவியேன் என் ஜனித்தேன் ?

சாருமதி:—(ஸமாதானஞ் செய்துகொண்டு) என் கண்மணீ ! உனக்குத் தெரியாததென்ன இருக்கின்றது ? உன் தந்தையார் ஆண்டுவந்த ப்ரஜைகளை ஸந்தோஷிப்பதற்காகவே, யான் அவ்விடம் இன்று அவஶ்யமாய்ச் செல்லவேண்டியிருக்கின்றது. அன்றேல், உன்னைவிட்டு ஒரு க்ஷணப்பொழுதேனும் யான் பிரிந்திருப்பேனு ? மேலும், குழந்தாய், உனக்கு விவாஹமாகாதிருப்பின், உன்னையு மென்னுடன் அழைத்துச்செல்வேன். விவாஹமான பெண்கள் புருஷனிருக்குமிடத்திலன்றோ இருக்கவேண்டும். அதற்காகவே யான் உன்னை இவ்விடத்திலேயே நின்மாமனுடைய ஸம்ரக்ஷணையில் விட்டுவிட்டுச் செல்கின்றேன். இதற்கெல்லாம் நீ வ்யஸநப்படலாமோ ?

விலா:—அம்மா ! யான் விவாஹஞ் செய்துகொண்டதன் பயன் இதுதானோ! ஐயோ ! மணந்து இரண்டுவர்ஷமாகியும் இதுவரையில் என் ப்ராணநாதர் இங்கு வந்திலரே ! என்முகத்தையும் பார்த்திலரே ! என்குறை தீர்த்திலரே ! அத்தை மகளென்றும் யோஜித்திலரே !-குருகுலவாஸத்திலிருப்பதனுல் வரப்படாதென்று நினைத்தனரோ ? அல்லது இவள் கொடியவளென்றெண்ணி என்னைக் கைவிடுத்தனரோ ? ஐயோ ஒன்றுமறிகிலேனே !—(இடப்பக்கந்துடிக்க) ஆ ஆ ! இஃதென்ன ! எனது இடது கண்ணும் இடது தோளுந் துடிக்கின்றனவே ! (திடீரென்று வலக்காதிற் கைவைத்து) ஐயோ ! இருந்தாற்போல் எனது வலது செவியில், வண்டொன்றுவந் தூதுவதுபோல், ஒரு ஶப்த முண்டாகின்றதே ! என் செய்வேன் ? எவ்வாறு ஸஹிப்பேன் ?

ராகம்-எதுகுலகாம்போதி: தாளம்-ரூபகம்

பல்லவி

ஐயோ யானுமோர் - அணங்காய்ப் பிறந்ததை
வையகத்தில் யார்க்கு - வரைந்திடுவேன் !

அநுபல்லவி

கடல்புடைச் சூழுமிந்த - காசினியி லெனக்கு
அடைக்கலம் வேறுண்டோ-அறைந்திடுவாய் அம்மா !(ஐ)

சரணங்கள்

மங்கைமார் மாலையிட்ட - மணவாளனைப் பிரிந்து
மண்ணிலொரு க்ஷணமும் - வஸிப்பாரோ ?
எங்கும் வசையாமே - இகழ்ச்சிக்கு மிடமாமே
என்றும் பழியாமே - ஏதுயான் செய்குவேன் ?(ஐ)
என்றுமே வாராத - என்றன் ப்ராணநாதர்
இன்றிங் கெனைக்காண இணங்கிவருவாரோ !
ஒன்றுமே யறியாமல் - உறுவதுந் தெரியாமல்
ஊக்கங் கொண்டென்மநம்-உருகுகின்றதம்மா! (ஐ)

சாரு:—குழந்தாய்! நீ இப்படிப் பாமரரைபோல் வ்யஸநப்படுவது ஸரியன்று !

"வகுத்தான் வகுத்தவகை யல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தலரிது"

என்று தேறியிரு.

" ஆழவமுக்கி முகக்கினும், ஆழ்கடலில்
நாழிமுகவாது நானாழி—தோழீ
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன்"

என்று சொன்னது நம்போன்ற பெண்களுக்கேயென்று அறியாயா? தலையிலெழுதி யிருப்பதை யார் அழிக்கவல்லர்? ஸீதாதேவியைப் பார்க்கினும் சிறந்த உத்தமி இப்பதினான்கு புவநங்களிலு முண்டோ ?

ராகம்-சங்கராபரணம் : தாளம்-ரூபகம்

பல்லவி

அன்னை ஸீதை - அன்று பட்ட துயர்
என்னவென்று - எடுத்துரைப்பேன் !

அநுபல்லவி

ஜநகன் புதல்வி - தரணியின் செல்வி
அனலினில் மூழ்கி - அறநெறி நாட்டிய— (அன்னை)

சரணம்

நகரினி லொருவன் - நவின்ற பழிக்காக
ஜகத்தினி லெங்குமே - ஸத்யஸந்தனெனும்
மிகப்பெரும் ஸ்ரீராமன் - மின்னனையாளைக்கான்
புகச்செய்ததைக் கேட்டும் - புலம்புதலாமோ நீ?— (அ)

ஆகலின், குழந்தாய் நம்மாலாகத்தக்கது ஒன்றுமில்லை.

* "மாதவர்க ளடிபேணி
மற்றவர்கள் விதிமுறையே
யோதியநல் வழிவழுவா
துபவவித்திங் குன்னுடைய
காதலனை யெப்போழ்தும்
கருத்திடைவைத் துபர்தவஞ்செய்,
யீதுனக்குக் கர்மங்கா
ணென்றுமென் கண்மணியே!"

விலீர:—அம்மா! நீ யிப்படிக் கூறுவதும் ஸரியோ?

† "தக்ககண வன்சீறத்
தன்னைக்கை விட்டகன்ற
புக்ககத்தார் கைவிடுவர்
பிறந்தகத்தார் போற்றூர்கள்;
அக்கணமே பழியிங்வ
ரங்கியர்க ளிருவினையேன்
மிக்கொரிடங் காண்கிலேன்
விதியேயோ விதியேயோ!"

* கம்பராமாயணம் † ஒட்டக்கூத்த ராமாயணம்

(ப்ரவேசித்து)

மதநமாலிநி:—அம்மணி ! வந்தனம் !

சாரு:—என்ன ! மதநமாலிநீ ! என்னசேதி ? ஏன் உன் முகம் ஒருமாதிரியா யிருக்கின்றது ?

விலா:—நரங்கவதி எங்கே! இன்றுகாலைமுதல் அவளைக் காணவில்லையே ?

மதந:—இன்று அவள் தந்தையாருக்குக் கவையாம் ! ஏதோ இக்கடிதத்தைத் தங்களிடத்திற் பத்ரமாய்க் கொடுக்கும்படி சொன்னாள் ! (ஒரு கடிதத்தை விலாஸவதியினிடம் நீட்டல்)

விலா:—(கடிதத்தைப் பிரித்துப்பார்த்து ஸந்தோஷத்துடன் ஆத்மகதமாய்) ஆ ஆ ! இஃதென்ன ? என் கணவனார் எழுதியதோ ? (மீண்டும் நோக்கிக் கண்களில் ஒற்றிக்கொள்ளல்)

சாரு:—(விலாஸவதியை நோக்கி) என்னடி ! குழந்தாய்! ஏதாயினும் நம் போஜனைப்பற்றியஸமாசாரமோ? நீ இக்கடிதத்தைப் பிரித்துப் பார்க்கும்பொழுதே ஒருவித ஸந்தோஷக்குறி உன்முகத்தில் தோன்றுகின்றதே ! என்ன ஸங்கதி ?

மதந:—ஆகா ! அவ்வளவு இருந்தால் விலாஸவதிக்கென்ன குறை? அக் கடிநசித்தன்கூட இவளை நினைப்பானோ? அங்கேதான் பூர்ணமாய்ப் போதனை ஏறியிருக்கிறதே? நல்ல சேதியுமுண்டோ அம்மணி ?

ராகம்-பியாக் : தாளம்-ரூபகம்

கண்ணிகள்

என்னென்றுரைப்பேன்முன்
சொன்னதைவிட இனி
உந்தன் கணவனென்னும்
அந்தகப் பாதகனை ! (க)

அன்று மணந்தவுன்னை
இன்றுதான் காணலிவன் ?
யாதென்றறிந்தாயோ
மாதர்பசுங்கிளியே ! (௨)
அரசியே யுன்னையவன்
ஸரஸமொழிகளினால்,
அடிமையாக்கிடுவானக்
கொடியவேசிக்கையோ! (௩)

விலா:—(சிறிது சினந்து) என்ன ! மதநமாலினீ ! அடாத வார்த்தைகளை விடாது தொடுக்கின்றனையே! எப்படி யிருப்பினும் ஸ்த்ரீகளுக்குப் புருஷனல்லவோ முக்ய தெய்வம்.

தெரிந்து தன்னை வல்லபன்
தெருக்களிற் றவிக்கவிட்
டிருந்தபோதிலுங் கலந்
திழிந்தவேசி யோடுமே,
சிறந்த மன்னவர் குலத்
துதித்த தேவி மார்களுக்
கறிந்துதான் மணம் புரிந்த
நாத னல்ல வோகதி?

ஆகலின், இனிமேல் அப்படிப்பட்ட வார்த்தைகளை என் முன் மொழியாதே ! உன்னை இம்முறை மன்னித்தேன்.

மதந:—(முகத்தை யொருவாறு சிடுத்துக்கொண்டு) எனக்கென்ன அம்மணீ? ஏதோ தங்களுடைய நன்மைக்காகச்சொல்லவந்தேன். சிவ! சிவ !! நீங்கள் இருவரும் ஸுகித்து வாழ்வதை நான் தடுப்பேனா !

விலா:—அதற்கன்று, மதநமாலினீ ! ஒரு நல்ல ஸமாசாரத்தைச் சொல்லவிருந்தால், குறுக்கே அவமொழி யுரைக்கின்றனையே ! இந்த அவஸரந்தான் கூடாதென்கின்றேன்.

மதந:—என்ன அம்மணி! தங்கள் கணவனூர் சேதி தானே?

விலா:—(லஜ்ஜையுடன்) ஆமாமடி! அஃது உனக்கெப் படித் தெரியும்? இக்கடிதத்தைப் பிரித்துப் பார்த்தாயோ?

மதந:—அம்மாடி! ஊரெல்லாம் தமுக்கடிபடுகிறது, என்ன ரஹஸ்யம்! என்னரஹஸ்யம்!!

விலா:—இதென்ன விந்தையாயிருக்கின்றதே!

மதந:—ஆமாம்! விந்தைதான்! அப்பொழுது ராஜகுமா ரர் செருப்படிப் பட்டதும் விந்தைதான்!

விலா:—என்ன! என் கணவரையா? அரசனில்லாத காடா இது? (கண்கள் சிவக்க) என் மாயன் அரசாளும்பொ ழுது, என்கணவனுரையு மிவ்வாறு புகுந்தடித்தார்களா? (எழுந் து உதடு துடிதுடிக்க)

* "எய்திய குற்றத் தோர்கள்
யாவரா யினுங்கண் ணோடா
தைதென நாடி நீதி
யறந்தலை பிழையாத் தண்டஞ்
செய்வதே செங்கோ லாகுஞ்
செய்யகோ லின்றே லென்னு
முய்திசெய் மழையான் மக்க
ளுறுபய னுற்ற போலும்!"

இக்ஷணமே என் மாமனிடஞ் சென்று அப்பாதகர்களுக்குத் தக்கதண்டம் விதிப்பிக்கின்றேன்! (பரபரப்புடன்போக யத் தித்தல்)

மதந:—அம்மணீ! செருப்பென்றாற் செருப்பா? அவ மானமான சொற்களைக்கேட்டாற் போதாதா? அதைத் தான் சொல்லவந்தேன்: நீங்கள் அவஸரப்படுகின்றீர்கள்!

* பிள்ளையார் புராணம்

விலா:—மதநமாலினீ! போது மிந்த அதிக ப்ரஸங்கம்! இதனுடன் நிறுத்துன்பேச்சை! என் மநத்தைச் சஞ்சலப்படுத்தவேண்டாம். யான் சொல்லவந்த ஸமாசாரமிதன்று.

மதந:—அப்படியானல் சொல்லுங்களேன்! நல்ல ஸமாசாரமாயிருந்தால் எல்லாருக்கும் ஸந்தோஷந்தானே!

விலா:—அதைத் தான் யான் சொல்லத்தொடங்கினேன். நீ அதற்குள், அவஸரப்பட்டு, அடாதவார்த்தைகளையெல்லாம் வாய்க்குவந்தமட்டும் மொழிந்தனை! உனக்கு ஒரு தடவை சொன்னுற் போதாது—

மதந:—ஆமாம்! நான் அவ்வளவு கெட்டவள் தான் எப்படியிருந்தாலும் நான் தூரங்கவதி யாவேனு?

விலா:—(புன் சிரிப்புடன்) இல்லை! மதநமாலினீ! இன்றையதினம் என் ப்ராணநாதர் இங்குவருவதாக எழுதியிருக்கின்ருர்! ஏதோ யான் செய்த பாக்யம் போலும்.

சாரு:—நமது போஜனு இங்கு வருவதாகச் சொல்லியனுப்பினன்?

விலா:—ஆம் அம்மா! இதோபாருங்கள். (கடிதத்தைச் சாருமதியினிடத்தில் பிரித்தபடி கொடுத்தல்)

மதந:—எதற்காக வருகிருராம் தெரியுமா?

விலா:—அதொன்றும் விவரமாய்த் தெரியவில்லை! அவர் எழுதியனுப்பிய தோரணையைப்பார்த்தால், அவருக்கு என்மீது க்ருபை பிறந்ததுபோலவே தோன்றுகிறது!

சாரு:—(கடிதத்தை முற்றும் பார்த்துவிட்டு) ஆம்! வேறென்ன இருக்கக்கூடும்? மணஞ்செய்ததுமுதல் இவ்விரண்டு வர்ஷகாலமாய் வாராதவன் இன்றிங்கே வருகிறதென்றால், அவன் மநம் திரும்பியே தான் இருக்கவேண்டும்.

மதந:—எனக்கொன்றும் அப்படித் தோன்றவில்லை; அவன் மநமாவது திரும்புகிறதாவது? எந்தப் பேதையைக்

கெடுப்பதற்கோ? அம்பு வணங்குவது பிறர் அகம் பிளக்கவே யன்றோ!

**சாரு:**—(சினங்கொண்டு) பாங்கீ! உன் நிலைமையை யறியாமல், தாறுமாறாய் குளறுகின்றாய்! ஏது? வரவர மர்யாதை யறியாதவளாகின்றாய்! சும்மா விருக்கின்றே னென்று மேன் மேலு மேறுகின்றனையோ? இனி உன்னுக்கை யுள்ளடக்கிப் பேசு! பத்ரம்!

**மதந:**—அம்மணீ, மன்னிக்கவேண்டும்? ஏதோ தங்கள் விலாஸவதியின்மீது வைத்திருந்த அன்பினால் தெரியாமல் இவ்வளவு தூரம் ஸ்வாதீநமாய்ச் சொல்லிவிட்டேன். ஆம்! மநத்திலொன்றெண்ணி வெளியிலொன்று சொல்லுகிறவர்களுக்குத்தான் இது காலம். நான்போய்வருகின்றேன் அம்மணீ! நான் ஏன் உங்களுக்கு வருத்தத்தை யுண்டாக்கவேண்டும்?
(நிஷ்க்ரமித்தல்)

**சாரு:**—குழந்தாய்! இனி உனக்கென்ன குறை? உன் புருஷனும் வருகின்றான்! நாழிகை யாகின்றது! நான் போய்வரச் செலவுகொடு.

**விலா:**—அம்மா! நீங்கள் போய்விட்டால், இந்த ஸமயத்தில் யான் என்செய்வேன்?

**சாரு:**—என் கண்மணீ! நான் வெகு ஶீக்க்ரத்தில் திரும்பி வந்து விடுகின்றேன்! நீ தடைசெய்யாதே! உன் கணவனுடைய ப்ரியத்தைப் பெறுவதற்கு எப்படி யெப்படி நடந்து கொள்ளவேண்டுமோ, அப்படியெல்லாம் நடந்துக்கொள்! நான் போய் வருகின்றேன்! (ஸ்நேஹத்துடன் மருவி முத்தமளித்து நிஷ்க்ரமித்தல்)

**விலா:**—ஐயோ! என் மநம் ஊசல்போல் அலைகிறதே. என் கொழுநர் வருகிறாரென்று ஒருவாறு களிப்படைந்த போதிலும், என்னுள்ளம் என்னவோ ஸங்கடத்தை யடைகின்

றதே ! உண்மையாய் என் ப்ராணநாதரையுமின்று யான் காண்பேனே ?

ராகம் - சாவேரி: தாளம் - ரூபகம்

பல்லவி

மன்னா ! வாரீர் - என்னைப் பாரீர் !

அநுபல்லவி

மாராபிராமனே ! - மன்னுயிர்நேசனே !
பாராளும்வேந்தர்கள் - பயந்தோடு மீமானே ! (மன்)

சரணம்

வருந்து மிவ்வேழையேன் - மடிவேனென்றொருகாலே
பிரிந்த கன்றைத்தேடித்-திரும்பும் பசுவைப்போலே!(மன்)

ஹே கௌரீ! புண்ணியவந்தருடைய துயரைப்போக்கும் ஸங்கரீ ! இவ்வேழையின் மநம் இப்படிப் பரிதவிக்கும்படி பார்த்துக்கொண்டிருப்பது நின் கருணைக் கழகோ ? நின்னையே நித்யமும் நம்பியிருக்கு மென்னை இப்படி ஸோதிப்பதும் ந்யாயமோ ? ஹா ! பக்த ஸம்ரக்ஷகீ ! உன்னைத்துதித்து வணங்கவு மென்னாலாகுமோ ?

ராகம் - காபி: தாளம் - ஏகதாளம்

கண்ணிகள்

ம்ருகாங்க மௌளி காமிநீ ! ம்ருகேந்த்ர காமிநீ !
நகாதிராஜ புத்ரிகே ! நமோஸ்து தேம்பிகே !
புராரிதேவி ! ஸங்கரீ ! புராதநீஸ்வரீ !
பரேஸி ! யுன்னையேத்துவேன்! பணிந்துபோற்றுவேன்!

அந்தோ ! உத்தமவயதையடைந்தும் வனிதைகள் வல்லபனைப் பிரிந்திருந்தால் உலகம் என்ன சொல்லும் ? ஹேஜகதீஸ்வரீ ! எனக்குறும் நிந்தையை நீக்கி, என் மனோரதத்தை நீ தான் பூர்த்திசெய்யவேண்டும் ! ஹே தேவீ ! நின் கருணைகடாக்ஷலேஸமிருக்குமாயின், யாருக்குத்தான் என்னகுறை?

* "பதியுண்டு! நிதியுண்டு! புத்திரர்கள், மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்!
பவிசுண்டு! தவிசுண்டு! திட்டாந்த மாகவேம
படரொனுந் திமிரமணுகா!
கதியுண்டு! ஞானமாங் கதிருண்டு! சதிருண்டு!
காயஸித் திகளுமுண்டு!
கறையுண்ட கண்டர்பா லம்மை! நின் றருளிற்
கருத்தொன்று முண்டாகுமேல்;
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா நந்தவொளியே!
நாதாந்த ரூபமே! வேதாந்த மோனமே!
நானெனு மகந்தைதீர்த்தேன்:
மதியுண்ட மதியான மாணிக்க வல்லியே!
மதுரவேத நன்றங்கையே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே!"

உன்னையே ஸந்ததமும் நம்பினேன்! என்னை யாட்கொண்டருள்வாய்! (செவிகொடுத்து) இதோ யாரோ மாடத்தின்மீது வருகின்றார்போலும். ஒருவேளை நமது ப்ராணநாதரோ? (குதூஹலத்துடன் எழுந்திருத்தல்)

(ப்ரவேசித்து)

முஞ்ஜன்—(ஆத்மகதமாய்) இதுவே ஏற்ற ஸமயம்!

† "ஆற்றல் மூன்றும், உபாயங்கள்
நான்கும், இடத்தோ டமைந்திடினும்,
போற்றித் தனக்கு வென்றியுறும்
பொழுது தேர்ந்தே வினைபுரிவர்!

* தாயுமானவர் பாடல் † பிள்ளையார் புராணம்

ஏற்ற காலம் வருமளவும்
எண்ணிச் சும்மா விருப்பதுவே
வீற்றுச் சமர்க்குப் பின்வாங்கும்
வெற்றித் தகரே யாகுங்கொல்!"

ஆதலாற்றான், இவ்விரண்டு வர்ஷகாலமாய், நமது எண்ணத்தை முடிப்பதற்கு ஸமயம் பார்த்துக்கொண்டிருந்தோம்! அப்பயனும், இன்று காலையில், நாம் செய்த ப்ரயத்நங்களையெல்லாம் வீணாக்கி, நகரில் அமர்க்களஞ்செய்துவிட்டு, இப்பொழுது விலாஸவதியினிடம் வருவதாகக் கடிதம் எழுதியிருக்கின்றானும். அதை எப்படியோ நமது மதநமாலினி ஸமயத்தில் அறிந்து நமக்குத் தெரிவித்தனள்! இதுவே அவனைத் தொலைத்துவிடுவதற்கு ஸரியான தருணம். அவன் கையைக்கொண்டே அவன் கண்ணைக்குத்திவிடுகிறேன். அவன் செய்கையினாலேயே அவனை மடித்துவிடுகிறேன்.

ராகம் - மத்யமாவதி: தாளம் - அடதாளம்

பல்லவி

தருணந் தருணமிதுவே - வினைசெய்யத்
தருணந் தருணமிதுவே!

அநுபல்லவி

தருணந் தருணமிது - தாரா ராஜ்யத்தைக்
கருதியவண்ணம் நாம் - கைவஸஞ் செய்தற்கு. (தருணம்)

சரணம்

போஜகுமாரனிங்கே-வாராதவன்
ராஜகுமாரிதனை
நேசத்துடன்காண-வருகின்றான்
ராஜனைப்போல்மதித்து,

ஆசைகொண்டுதீப-ஜ்யோதியில்விழவரும்
நாசமடையுமந்த-நெருப்புப்பூச்சியைப்போலத்
தேசமுழுதுமாள-வாசயத்திலெண்ணி
மோசம்போவதற்கென்றன்-பாசத்திலகப்பட்டு! (தருண)

எதற்கும், போஜன் இங்கு வருவதற்கு முன்னரே, விலாஸவதி யின் மநத்தைக்கலைத்தால்தான் நமதெண்ணத்தை முடிக்கலாம். போஜனை இவள் பார்த்துவிட்டால், பிறகு நமது தந்த்ரமெல் லாம் வீணேயாகும்! (மாடத்திலேறி விலாஸவதியினருகிற் செல்லல்)

விலா:—(நோக்கி) இதென்ன! என்னருமை மாமனோ? (குதூஹலத்துடனெழுந்து) மாமா! வாருங்கள்! வந்தநஞ் செய்கின்றேன்! (வந்தநஞ் செய்தல்)

முஞ்ஜ:—தீர்க்க ஸௌமங்கலியாயிருந்து ஸகல ராஜபோகங் களையு மநுபவிப்பாயாக!

விலா:—மாமா! நல்ல ஸமயத்தில் வந்தீர்கள்!

முஞ்ஜ:—என்ன விசேஷம், குழந்தாய்?

விலா:—விசேஷ மொன்றுமில்லை! எது தாம் இந்நேரத் தி லிங்கு வந்தது?

முஞ்ஜ:—(விலாஸவதியுடன் சொல்லத்தகாததுபோல் நடி த்து) ஐயோ! ஈச்வர! இப்படிப்பட்ட குழந்தையுந் துன் பத்தை யடைவது நின் கருணைக்கழகோ? (ப்ரகாசமாய்) குழந் தாய்! ஒன்றுமில்லை! இன்று காலைமுதல் உன்னைக் காணவில் லையே யென்று வந்தேன்.

விலா:—இல்லை! தங்கள் முகத்தைப் பார்க்கும்பொழுதே ஏதோ விசேஷமிருக்கிறதாகத் தோன்றுகிறது. (முஞ்ஜன் பெ ருமூச்செறிய) என்னை அன்புடன் வளர்த்துவந்த மாமா! தங் கள் மநத்திற்கு என்ன ஸங்கடம் நேர்ந்தது? தாங்கள் அதைச்

சொல்லக்கூடாதென்றெண்ணியும், தமது செயல்களே ஏதோ ப்ரமாதத்தைக் குறிப்பிக்கின்றனவே ! என்னிடத்திலதை யுரைக்கலாகாதோ ?

முஞ்ஜ:—விலாஸவதி ! உன்னை என் யான் அன்புடன் வளர்த்துவந்தேன் ? உன்னிடத்தில் இப்படிப்பட்ட பாஸத்தைக் கடவுள் சற்பிப்பானேன் ? கிளியைவளர்த்துப் பூனைக்குக் கொடுத்தவனைப்போலல்லவோ யான் ஆய்விட்டேன் !

விலா:—மாமா ! எனது தௌர்ப்பாக்கியத்திற்குத் தாங்கள் வ்யஸநப்பட்டு என்ன செய்யலாம் ? நான் இட்டுவைக்காதவள் ! (லஜ்ஜையுடன்) ஆயினும், மாமா ! இவ்வளவு பராங்முகமாயிருந்தவர் இன்றிங்கே வருகின்றாராம்.

முஞ்ஜ:—(கேட்கப் ப்ரியமில்லாதவன்போல் நடித்து) அவன் இவ்விடத்திற்கும் வருகின்றானா ? ஆ ஆ ! யான் எப்படி வாஸ்தவத்தை யுரைப்பேன் ? அல்லது வாய்திறவாமல் தான் எப்படியிருப்பேன் ?

விலா:—(ஆத்மகதமாய்) ஐயோ ! எனக்காக என் மாமா அவர்கள் எவ்வளவு பரிதாபப்படுகின்றார் ? உள்ளதைச்சொன்னால், நான் வருந்துவே னென்று நினைக்கின்றனரோ ? என்ன செய்யலாம் ? யாதிருக்கும் ? (ப்ரகாஸமாய்) மாமா ! எது ஸம்பவித்தாலும் யான் அநுபவிக்கக் காத்துக்கொண்டிருக்கின்றேன்! தாங்கள் என்ன செய்வீர்கள் ? எல்லாம் யான் செய்த பாவமே! தங்கள் மநத்திலிருப்பதைச் சொல்லுங்கள்.

முஞ்ஜ:—(மிக்க வ்யஸநமுள்ளவன்போல் நடித்து) ஆ ஆ! கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டதுபோலாயிற்று ! நாம் எடுத்து வளர்த்த குழந்தைக்கு நாம் செய்ததே தீங்காய் விளைந்ததே. குழந்தாய் ! இன்று சாலையில் ஒரு கலஹம் நேர்ந்ததே தெரியுமா ?

விலா:—ஆம் ! ஏதோ ஒருவேஸிக்கும் அவருக்கும் கலஹம் நடந்ததாக மதநமாலினி கூறக்கேட்டேன்.

முஞ்ஜ:—ஐயோ ! பாவிகள் அதையும் உனக்குத் தெரிவித்திருக்கிறார்களா ?

விலா:—அப்படியாயின், நமக்கு நல்லது தானே ! அவனைப் பிரிந்துவிட்டால், அவருக்கென்மீது சிறிதேனும் தயையுண்டாகாதோ ?

முஞ்ஜ:—ஐயோ ! முக்தே ! நடந்ததை முற்றிலுங்கேட்டாலன்றோ தெரியும் !

விலா:—மாமா ! என்ன சேதியோ ?

முஞ்ஜ:—(மெதுவாய்) ஐயோ ! இதை நாமும் இவளுடன் சொல்லவேண்டியிருக்கிறதே.

விலா:—(ஶங்கையுடன்) என்ன ? விளங்கச் சொல்லுங்கள் !

முஞ்ஜ:—ஐயோ ! போஜன் உன்னை அவ்வேஶிக்கு அடிமையாக்கிக் கொடுப்பதாகக் கூறினனும். அதற்கவள் 'உம்மாலும் முடியாது, த்ரிமூர்த்திகளாலும் முடியாது' என்றனளாம்.

விலா:—அதன் மேல் !

முஞ்ஜ:—அதன்மேல் அவன் கோரமான ஶபதமொன்று செய்தனனும் !

விலா:—(பயஸம்ப்ரமத்துடன்) ஆ ! அஃதென்னவோ ?

முஞ்ஜ:—அந்தோ! உன்னை யவ்வேஶிக்கு அடிமையாகவாவது செய்கிறது, இல்லாவிட்டால் உன்னைக்கொன்றுவது விடுகிறதென்று ஸத்யஞ் செய்தனனும். அதற்காகத்தான் அவன் இன்று உன்னிடத்தில் வருவதும் ! எனக்குத்தெரிந்து இவ்வக்ரமத்தைச் செய்தால், யான் தண்டித்துவிடுவேனென்று பயந்து, உன்னிடத்தில் நயமாயிருப்பவன்போற் சிலநாள் நடித்து, பின்பு அவ்வேஶியினிடத்தில் உன்னைத் தள்ளப் போகின்றுன். அது முடியாமற்போனல், தன் ஶபதத்தை நிறைவேற்றுவதற்காக, எப்படியாவது விஷம் வைத்து உன்னைக் கொன்றுவிட்டா

லும் விடுவான் !—(மெதுவாய்) ஐயோ! இக்கொடியவன் கையில் நீயுமகப்படும்படி நேர்ந்ததே! இவையெல்லாம் பார்த்து, யானும் ஸஹித்திருக்கின்றேனே ! (ஒருபுறமாய்ச் சாய்ந்து பெருமூச்செறிதல்)

**விலா:**—(ஆத்மகதமாய்) ஆ ஆ! என் பர்த்தா இன்று வருகிறாரென்று, கடிதத்தைக் கண்டதும், எவ்வளவு ஆநந்தத்தை யடைந்தேன் ! ஐயோ ! என் ஸந்தோஷமெல்லாம் தணலாய் மாறிவிட்டதே! (ப்ரகாசமாய்) மாமா! இப்படியு முலகிலுண்டோ!

**முஞ்ஜ:**—குழந்தாய் ? அப்படியில்லாததனாலேதான், யான் இவ்வளவு பரிதவிக்கின்றேன்!

**விலா:**—இவையெல்லாம் வாஸ்தவமென்று தங்களுக்கு நன்றாய்த் தெரியுமா?

**முஞ்ஜ:**—விலாஸவதி! பொய்வார்த்தையைக் கொண்டுவந்து எனச்குச் சொல்லத்துணிவார்களா?

**விலா:**—(வெறுப்புடன்) மாமா ! இதற்கென்ன செய்யலாம்?

**முஞ்ஜ:**—இப்படிப்பட்ட புருஷனுடன் வாழ்வதைப்பார்க்கினும்—.

**விலா:**—ஆ ஆ ! என் கணவனுரும் இவ்வளவு கடிநசித்தராயிருப்பரென்று யான் கனவிலும் நினைத்ததில்லையே! ஹா! தெய்வமே! இவையெலாங் கனவோ? அவரு மிப்படிச் செய்யத் துணிவரோ?

* "கைகேயி மநந்திரியக்
　　　கற்பித்த கூனியைப்போல்,
　மையார்கண் மடவாரோ,
　　　மைந்தரோ மண்ணுலகில்,

* ஒட்டக்கூத்த ராமாயணம்

ஐயோவென் காதலரை
யாரோவிக் காரியத்தைச்
செய்வாயென் றிப்பொழுது
சிந்தையுறக் கற்பித்தார்!"

ஐயோ! மங்கையர்கள் என்னைப் பழித்து நகைப்பார்களோ?" பெண்ணாய்ப்பிறந்தாரில், யான் படுந்துயரம் யார் படுவர்?

* "அன்னேயோ! ஐயவோ!
ஆருயிர்த் தோழியர்காள்!
தந்நெறி லாதவென்றித்
தொழுங்கணவர் தாஞ்செய்த
வின்னாக விச்செயலைக்
கேட்டீரா தென்படுவீர்?
என்னேரிவ் வுலகத்தில்
யாரேனிங் கினைபடுவேன்!"

(பூமியில் மூர்ச்சித்து வீழுதல்)

முஞ்ஜ:—(விலாஸவதியைத் தாங்கி உபசாரஞ் செய்து கொண்டு) என் கண்மணி! எழுந்திரு! எழுந்திரு!! இப்படி வருந்துவதில் ப்ரயோஜநமென்னை?

விலா:—(மெள்ள எழுந்துட்சார்ந்து) மாமா! தாங்கள் என்னை அக்கொடிய வேஸியின் கையிலிருந்து காப்பாற்றவேண்டும்!

முஞ்ஜ:—குழந்தாய்! என்ன இப்படி வ்யஸநப்படுகின்றாய்? நானுங் கூடியவரை தக்கவர்களைக்கொண்டு அவனுக்கு எவ்வளவோ நற்புத்தியுரைப்பித்தேன்! அவனோ எதற்கும் திரும்புகிற வழியாயில்லை—ஐயோ! ராஜகுலத்திற் பிறந்து, இத்தாரா ராஜ்யத்திற்கு மரசியாயிருக்கவேண்டிய உன்னை, அப்பாதகிக்குக் கீழ்ப்படுத்த அவன் மநமுந் துணிந்ததே! ஆ ஆ! இவ

* ஒட்டக்கூத்த ராமாயணம்

ளைப்போன்ற அழகுள்ள ராஜஸ்த்ரீயை மணந்தும், எவர்தா மிப்படிச் செய்யத்துணிவார்? இவனுடைய ஹ்ருதயம் இரும்போ! இவனது கருத்துக் கல்லோ!—எப்படியிருப்பினும் நமக்குமாத்ரம் அவன் மீதுள்ள அன்பு நீங்கவில்லையே!

**விலா:**—பெற்றவர்களைப் பார்க்கிலும் வளர்த்தவர்களுக்கன்றோ பாஶ மதிகம்! ஆயினும், தாங்கள் எப்படியாவது என்னை இத்தருணங் காப்பாற்றவேண்டும்!

**மூஞ்ஜ:**—குழந்தாய்! உங்களிருவருடைய நன்மையைத் தேடுவதன்றி வேறென்னவேண்டியதெனக்கு? இன்னு மவனை நல்வழியில் திருப்புவதற்கு, யாதொருயோஜனை செய்திருக்கின்றேன்! அப்படிச் செய்வாயாகில் நீவிரிருவரும் ஸுகமாய்வாழலாம்.

**விலா:**—மாமா! தாம் எங்கள்மீது வைத்திருக்கு மிவ்வளவற்ற அன்புக்கு, யான் என்ன ப்ரதி செய்யப்போகின்றேன்!

**மூஞ்ஜ:**—என் கண்மணீ! நீயும் போஜனும் மநமொத்து ஸுகமாய் வாழ்வதைவிட வேறென்ன ப்ரதிவேண்டியது? அவனது மநத்தைத்திருப்ப வொருயோஜனையுந் தோன்றாமல், ஜகதாநந்தபாஸ்கரரென்னும் ஒரு ஸாதுவினிடத்தினின்றும் எவ்வளவோ ப்ரயாஸப்பட்டு ஒரு மூலிகை வரவழைத்திருக்கின்றேன்—ஆயினும் அதனில் ஓர் அபாயமிருக்கின்றது. அதைப்பற்றியே யோஜிக்கின்றேன்.

**விலா:**—அஃதென்னவோ?

**மூஞ்ஜ:**—இம்மூலிகையைக் கொடுத்தாற் பயனில்லாமற் போகாது! ஆயினும் அவன் புத்தி மூன்று நாழிகைக்குள் நல்வழியில் திரும்பாவிட்டால், அவன் இறக்கவேண்டிவருமென்று சொல்லினர். ஆதலாற்றான், பின் சொன்னவாறு நடந்தால் என்ன செய்வதென்று யோஜிக்கின்றேன்! விபரீத மேதாகிலும்

ஆகிவிட்டால், பிள்ளைவரங் கேட்கப்போய்ப் புருஷனைப் பறி கொடுத்தது போலல்லவோ முடியும்? முதலுக்கே மோஸமாகுமே!

**விலா:**—ஸிவ! ஸிவ!! புருஷனையிழந்தும், யான் இருக்க வேண்டுமோ! வேண்டாம்! வேண்டாம்!! யான் அவரைவிட்டுப் பிழைத்திரேன்.

**முஞ்ஜ:**—(மெதுவாய்) ஹா! ஈஸா! என்னவிபரீதங்களைக் கூட்டி வைக்கின்றனை! இக்குழந்தையின் மநத்திற்கும் அக்கொடியோனது அகத்திற்கும் எவ்வளவு வ்யத்யாஸம்! (உரத்து) குழந்தாய்! அதுபற்றியே எனக்குஞ் சிந்தனை. ஆயினும் தைவாநுஸங்கற்பத்திற்கு விரோதமாய் நம்மால் நடக்கமுடியுமோ?

* "முகிர் தரு தவமுடை முநிவ ராயினும்,
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்,
மதியின ராயினும், வலிய ராயினும்,
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்?"

விண்ணவரும் விதிப்பயனை வெல்லார்களாயின், நம்போன்ற மனிதர்களால் எவ்வாறதைத்தடுக்கமுடியும்? அவன் மரிக்க வேண்டுமென்றிருந்தால், நம்மாலதை விலக்கக்கூடுமோ? எதற்கும் ஸ்ரீமுகுந்தனுடைய க்ருபையினால், அவன் இம்மூலிகையையுட்கொள்ளிற், சீர்ப்படுவனென்றே நம்புகின்றேன்.

**விலா:**—மாமா! தாங்கள் வேறென்ன நினைக்கப்போகின்றீர்கள்? ஆயினும்—

**முஞ்ஜ:**—விலாஸவதீ! இன்னுமொரு ஸங்கதிகேட்டையோ! யான் போஜனுக்கு இவ் ராஜ்யத்தைச் ஸீக்ரத்திலேயே ஒப்புவித்துவிட நிஸ்சயித்திருக்கின்றேன். அவனுக்கு, எப்படியிருந்தாலும், யுக்தவயது வந்துவிட்டது. இனி நான்

* கந்தபுராணம்

இவ் ராஜ்யத்தை வஹித்து வந்தால், ப்ரஜைகள் என்னை அக்ரமமாய் ஆளுவதாக நினைப்பார்கள்!

விலா:—மாமா! உம்மையு மப்படி எண்ணுவார்களா !

முஞ்ஜ:—குழந்தாய், எவரையு முன்னைப்போலவே நினைக்கின்றாய். நேரமாய்விட்டது ! ஸங்க்ரஹமாய்ச் சொல்லுகின்றேன் கேள் ! எப்படியிருப்பினும், போஜனுக்கு ஶீக்ரத்தில் ராஜ்யத்தை ஒப்புவிக்கவேண்டியதே ந்யாயம். நானும் அப்படியே ஒப்புவிக்க நிஶ்சயித்திருக்கின்றேன். அது பற்றியே, அவ்வேஶியும், உன்பதவியையடைந்து, இராணியாகவேண்டுமென்று, இவ்வாறெல்லாம் முயலுகின்றாள்.—ஐயோ ! நீ ராஜகுலத்திற் பிறந்து, ராஜகுலத்திற் புகுந்ததையுங்கூட நினையாமல், உன்கணவனைக்கொண்டே, உன்னைத் தனக்குத் தாஸியாக்கிக்கொள்ள நினைத்திருக்கின்றாளே ! இவ்வந்யாயத்திற்கென்ன செய்கிறது ? அவள்மீது பழிசொல்வதிற் பயனென்னை ? போஜனுக்குப் புத்தியில்லையே ! பிறர் சொன்னாலுங் கேட்கிறதில்லை ! எதற்கும் இம்மூலிகையைக் கொடுப்பதே நலமென்று தோன்றுகிறது.

விலா:—ஒருவேளை, அவர் இறந்துவிடில், என்ன செய்வது ? புருஷனல்லவோ ஸ்த்ரீகளுக்கு கதி !

முஞ்ஜ:—குழந்தாய் ! உன்னிஷ்டம். யான் ஏதோ பலவந்தஞ்செய்வதாக நீ நினைக்கவேண்டாம். உனக்கு நன்மையுண்டாகுமென்றே சொன்னேன். இனி என்மீது பழியில்லை. ஸர்வ விதத்திலுமிழிவான அவ்வேஶிக்குத் தாஸியாயிருந்து ஊழியம் பண்ணினாலும் ஸம்மதமே ! இல்லை, முஞ்ஜனுக்கு மருமகளும், ஶூரஸேநமஹாராஜருக்கு மகளுமாயிருக்கவிரும்பினால்,கருணைக்கடவுளான ஸ்ரீக்ருஷ்ணபகவானை மநத்தில் த்யாநஞ்செய்துகொண்டு, இம்மூலிகையை உன் கணவனுச்குப் பாலிற்கலந்து கொடுத்து ஸுகமாகவாழ்ந்திரு! (ஒருபொட்டளத்தை நீட்டல்).

விலா:—(ஆத்மகதமாய்) ஐயோ! எந்தவழிபோயினும் ஸங்கடமாயிருக்கின்றதே! இதற்கு யான் என்செய்வேன்? (பொட்டளத்தைச்கையில்வாங்கிப் பிரித்துக்கொண்டே) இம்மூலிகையைக் கொடுப்போமா? (மூலிகையைப்பார்த்து) ஐயோ! காலகூடவிஷம்போலிருக்கின்றதே! இதைக்கொடுத்து, ஒருவேளை என் கொழுநர் இறந்துவிட்டால், என்செய்கிறது?— ஐயோ! பாவியேன் என் ஜநித்தேன்! எதேவீ! ஒன்றுந் தோன்றவில்லையே!

ராகம்-மாதுலகாம்போதி: தாளம்-ரூபகம்

பல்லவி

பெண்ணாய்ப்பிறப்பதே - பெருந்துயர்க்கிடந்தேவி!
எண்ணம் வினது யாதோ?

அநுபல்லவி

மண்ணில் இஜ் ஜன்மம்போல் - மற்றொன்றுண்டோ கேடு?
புண்ணியவந்தர்கள் - புருஷர்களே திண்ணம்!— (பெ)

சரணங்கள்

போதும்பெண் பிறவி - பொருந்தியானெடுத்தது!
தீதினுந் தீதிதுவே!
எதுயான் செய்வேன்?- எங்குண்டிவ்விபரீதம்?
யாதென்றுரைப்பேன்யான்?-எப்படி ஸஹிப்பேன்? (பெ)

பாரினின் மங்கையை-பார்த்தா விவ்வாறு செய்தால்
யாருமே யென்செய்வார்?
பாரும் அம்பா! இந்தப் - பாவிமீதருட்கொண்டு
தீரும் என்றன் குறையை - தீநஸம்ரக்ஷகீ! (பெ)

மூஞ்ஜ:—குழந்தாய்! நீ சிந்தைகலங்குவதைப் பார்த்தால் எனக்கும் மநத்திற் சஞ்சலமுண்டாகின்றது! என்னவோ?

உனக்கெப்படியுக்தமாய்த் தோன்றுகிறதோ அப்படிச் செய்! எனக்கு நாழிகையாகின்றது! நான்போகவேண்டும்.

விலா:—(யோஜித்து) ஸரி! மாமா அவர்கள் சொல்வதே தகுந்தயோஜனை!—சீ என்ன நினைக்கின்றேன்? இக்கொடிய பாவத்தையும் யான் புரியவேண்டுமோ! (முஞ்ஜனை நோக்கி) மாமா! இதற்கு வேறு உபாய மொன்று மில்லையோ?

முஞ்ஜ:—யான் முன்னரே கூறினேனே! இதையன்றி வேறு உபாயம் என் புத்திக்குத்தோற்றவில்லை. உன்னிஷ்டம்! செய்தாற் செய்! விட்டால் விடு!! யான் சொல்லவேண்டியதைச் சொன்னேன்! நான் போய் வருகின்றேன். (எழுந்திருத்தல்)

விலா:—மாமா! தாங்களே அப்படிச் சொல்லிவிட்டால், பேதையான யான் என் செய்வேன்? உம்முடைய தைர்யத்திலன்றோ இதுவரை உயிர்தரித்தேன்! அப்பாதகிக்குப் பலி கொடுப்பதற்காகவோ, தாங்கள் என்னை அவருக்கு மணஞ்செய்வித்தீர்கள்? என்னை இக்ஷணம் கைவிடலாகாது! தங்களுக்கு எப்படி யுக்தமாய்த் தோன்றுகிறதோ, அப்படியே செய்கின்றேன்! தம்மையன்றி எனக்கு வேறு கதியுமுண்டோ?

முஞ்ஜ:—அடிபேதாய்! நான் சொல்வதில் உனக்கு விஶ்வாஸம் உண்டாகவில்லையே!

"ஐம்பது மைந்தாண்டு மெழுமாத மூன்றுநாள்,
இம்மாநிலன் முழுது மின்னரசு செய்வானால்!"

என்று அந்த யதீஶ்வரர்சொன்னவார்த்தை பொய்போமா? ஏன் வீணைய்ச் சஞ்சலப்படுகின்றாய்? இம்மூலிகையைக் கொடுத்தால் உனக்கு ஸுகமுண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. போஜனுக்கும் மங்களமுண்டாகும். நீ யோஜனை செய்யாமலிதனைக்கொடு!

விலா:—அப்படியாயின், இதை எப்படிக் கொடுக்கிறது?

[illegible]—[illegible] [illegible] [illegible] [illegible]தந்து. [illegible]! [illegible] [illegible] [illegible]மாய்க் குடி[illegible].

விலா:—பாலேனுக் கெடுதி நேரிடில்—

மூந்ஜ:—ஒரு கெடுதியும் நேரிடாது! நான்சொல்வதை நம்பு!

விலா:—சரி! அப்படியேதான் செய்கின்றேன்.

மூந்ஜ:—(நான்கடி பரிக்ரமித்து, ஆத்மகதமாய்) ஸ்த்ரீகளின் நெஞ்சம் இவ்வளவு தான்! இல்லாமலா, 'பெண்களின் நெஞ்சம் பேதமையுடைத்து" என்று பெரியோர்கள் மொழிந்தார்கள்! நாம் சொல்லியவற்றை யெல்லா மிவள் வேதவாக்யம் போற் கொள்ளுகின்றாள்! இவ்விஷத்தையும் நாம் சொன்னபடி போஜனுக்குக் கொடுப்பாளென்பதில் ஸந்தேஹமில்லை! நல்லது! புத்திஸாகரரே! நின் புத்தியின் வல்லமையைப் பார்ப்போம்! (நிஷ்க்ரமித்தல்)

விலா:—(சற்றுநேரம் யோஜித்துப் பெருமூச்செறிந்து) ஆம்! மாமா அவர்கள் சொன்னதே ஸரி! ஆசையில்லாக் கணவனை யடைந்துதான் பயனென்னை? இம்மருந்தை என் கணவருக்குக் கொடுப்பதனால் தீங்கென்ன? அவருக்கு என்மீது ஆசையுண்டாக்குவதற்காகவே, மாமா அவர்கள் இவ்வுபாயத்தைச் சொன்னார். அவ்வேசியோ, இவ்வளவு வேசமாய், என்னை ஜயித்துவிடுவள்? ஆ ஆ! நான் பிறந்த குலமென்ன? நான் வளர்ந்தசிறப்பென்ன? யானோ இவ்வேசிக்குத்தாழ்மியாயிருந்து ஊழியஞ்செய்வது? நானோ க்ஷத்ரிய வம்சத்திற் பிறந்தவளாயிருப்பின், இவ்வுலக மழிந்தாலும், என் மாமாஅவர்கள் சொன்னவாறே செய்வேன்! ஆகையால் இம்மூலிகையை இப் பாலிற்கலந்து (அப்படியே செய்து) என்கொழுநருக்குக் கொடுப்பதே ஸரி! மாமா அவர்கள் சொன்னதுபோல், இதனால் அவ

## VII

## VILASAVATI'S BOUDOIR

OR

"BHÔJA'S WONDERFUL EXPERIENCE ON HIS FIRST VISIT TO HIS WIFE VILASAVATI"

——*Act II, Scene* 2, *Page* 83

Facing page

## விலாஸவதியின் ஶயநக்ருஹம்

### அல்லது

### "போஜனுக்குத் தன்மனைவி விலாஸவதியை முதன்முதற் காணும்பொழுதுண்டாகும் விந்தையான அநுபவம்"

---

போஜன்:—(விலாஸவதியி னருகிற்சென்று, உற்றுநோக்கி, ஸந்தோஷத்துடன்) ஆ ஆ! நம்முயிர்க்காதலி விலாஸவதியே இதோ மஞ்சத்தின்மீது ஶயனித்திருப்பதுபோற் காணப்படுகின்றது.

"வண்டினங் கருங்கூந்தலோ? மதன்
வாட்டுவில் லிவள் புருவமோ?
கண்டமே யரும் ஶங்கமோ? முகம்
கார்த்தி சந்திர பிம்பமோ?
கண்டதுங் கவலைத் தொலைக்குமென்
காதலாள் தனியா யிதோ
அண்டர் பூபதிவனிதை போலிவள்
ஆழ்ந்து நித்திரை புரிகிறாள்!

பாவி! யான் ஏன் ஸத்யங் கூறி வந்தேன்? இவ்வளவழகமைந்த மாதரசைக்கூடுவோ மென்பதில்லாமற் போயிற்றே! (ஸமீபஞ்சென்று) என் கண்மணீ! விலாஸவதீ!—(சற்று உற்றுநோக்கி) என்ன! எழுப்பியும் பேசாமலிருக்கின்றாள்! நான் இத்தனைநாளாய் வரவில்லையென்னும் வருத்தமோ! ஆஹா! இஃதென்ன? என்றுமறியாத ஒருவிகாரம் என்னைப் பரவஶப்படுத்துகின்றதே! ஈதென்ன! ஸுகாநுபவமோ? துக்காநுபவமோ? அம்ருதரஸமோ? ஆலாஹல விஷமோ? இவளைப் பார்க்கப்பார்க்க என்மனதிற்கு ஒருவித ஸ்பூர்த்தியும் ஆர்த்தியு முண்டாகின்றதே!

—அங்கம். II, களம். 2, பக்கம். அ௯

ருக்கு மரணம் விதித்திருக்குமாயின் அதை தடுக்க யாவரால் முடியும் ?—

* "ஆவது விதியெனின், அனைத்து மாய்விடும்,
போவது விதியெனின், எவையும் போகுமால்;
தேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ?
ஏவரு மறியொணு ஈஸற் கல்லதே!"

(சற்று விதாவித்து) சீ! எவ்வளவு கொடியவனுயிருப்பினுங் கட்டிய கணவனுக்குக் கொடியமருந்திடுவர்களோ மாதர்கள்? ஆ! என்ன கொடுந்தொழிலைச் செய்யத்துணிந்தேன்! (கையிலிருந்த டாற்செம்மை அங்ஙனே ஒருபுறம் வைத்துவிட்டு) இதனல் எனக்கு எவ்விதக் கஷ்டம் நேரிடினும் யானெப்பொழுதுமித்தகைய கார்யத்தைச் செய்யப்புகேன். (செவிகொடுத்து, பரபரப்புடன்) காலோசை ஏதோ கேட்கின்றதே! (நோக்கி) என் பர்த்தாதான் வருகின்றார்! ஐயோ இவருடன் பேசுவதுதான் எப்படி? எதற்கும் இக்கட்டிலின்மீது படுத்துறங்குவது போலிருப்போம்! அதற்குமேல் என்ன நடக்கின்றதோ பார்த்துக்கொள்ளலாம். (வேகமாய்ப் பரிக்ரமித்துக் கட்டிலின்மீது படுத்து நித்ரைசெய்பவள்போல் நடித்தல்)

(ப்ரவேசித்து)

போஜன்:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! இன்றையதினங் காலையில் நமது உயிர் தப்பியதே ஆச்சர்யம்! நகரைச்சுற்றி வரும்போது அப்பாதகன்—என் சிற்றப்பன்—வேலையாட்களைக் கொண்டே, எனக்கு எவ்வளவு அவமானத்தைச் செய்வித்தனன்!

ராகம் தோடி: தாளம்-ஆதிதாளம்

பல்லவி

ஏது யான் செய்வேன்-எங்குண்டிவ் வந்யாயம்?
யாதென் றுரைப்பேன்யான்-எப்படிப் பொறுப்பேன்?

* கந்தபுராணம்

**அநுபல்லவி**

போதும்போது மிஜ்ஜந்மம்-புவியில் நானெடுத்தது
வாதுசெய்கின்றனே-வஞ்சகச் சிற்றப்பன்! (ஏது)

**சரணங்கள்**

உடுக்கு முத்தரீயமே-உரகமாய்க் கடித்தாற்போல்
முடிக்கு மகுடஞ்சூட்டி-முடிக்காமல் மோஸஞ்செய்தான்!
கொடும்பாவி போலென்னைக்-கொலைபாதகரைக் கொண்டு
அடிக்கவுஞ் செய்வித்தான்-அவமானம் புரிவித்தான்! (ஏது)

மாநுடர் வினைப்பதை-மாற்றுந் தெய்வ மென்றாற் போல்
யான் செய்தீவினைதானோ-யாது மறிகிலேனே!
ஸேனைகள் புகழுமென்-செல்வத்தந்தையா ராண்ட
மானில மாள்வது-வகுத்திடே னென்னாளோ? (ஏது)

ஐயோ! இவனோ இப்படி எனது நாட்டைத் துராக்ரமமாய் கைப் பற்றினன்! அக்கிழவரோ எனது யௌவனாநுபவங்களுக் கெல்லாம் தடையாய் வாய்த்தனர்! எப்படியாயினும் இவ்விருவரிடத்தினின்றும் நாம் ஸ்வாதீநம் பெறல்வேண்டும்! (மாடத்தின் மீது சென்று) ஆ ஆ! இஃதென்ன? இங்கு ஒருவரையுங் காணோமே! நாம் எழுதியனுப்பிய கடிதம் சேர்ந்ததோ இல்லையோ? அவள் தோழி தூரங்கவதியினிடங் கொடுத்தனுப்பினேனே! அவள் கொடுத்துத்தானிருப்பள்! விலாஸவதி பின்னெங்கே சென்றிருப்பள்? யான் எண்ணிவருங் கார்யங்களெல்லாமிப்படியே வீணாய்ப்போகின்றனவே! (நான்கு பக்கங்களிலும் நோக்கி) ஆ ஆ! இஃதென்ன? அம்மூலையில் தேஜோமயமாய் ஒன்று விளங்குகின்றது!

ப்ரத்நமா மொளிவீசு ரத்நமோ வறிகிலேன்
ப்ரபைபோல் விளங்குமிப் பவ்ய வடிவம்!
துங்கமா மேருமலைத் தங்கமோ வறிகிலேன்
ஜ்யோதியா யெங்கணுந் தோற்று முருவம்!

வீணைகொண்டின்பமுறு வாணியோ வறிகிலேன்
மின்னலைப் பழிக்குமிவ் விந்தைவடிவம்!
மங்கையோ மதனனது நங்கையோ வறிகிலேன்
வலியவந் தெனையாள வந்த வடிவம்!

(அருகிற் சென்று உற்றுநோக்கி, ஸந்தோஷத்துடன்) ஆ ஆ! நம்முயிர்க்காதலி விலாஸவதியே இதோ மஞ்சத்தின்மீது சயனித்திருப்பதுபோற் காணப்படுகின்றது!

வண்டினங் கருங்கூந்தலோ? மதன்
வாட்டுவில்லிவள் புருவமோ?
கண்டமே யரும்பூங்கமோ? முகம்
கார்த்திசந்திர பிம்பமோ?
கண்டதுங் கவலைத்தொலைக்குமென்
காதலாள் தனியாயிதோ
அண்டர் பூபதிவநிதை போலிவள்
ஆழ்ந் துயித்திரை புரிகிறள்!

பாவி! யானேன் ஸத்யங்கூறிவந்தேன்? இவ்வளவழகமை ந்த மாதரசைக்கூடுவோமென்பதில்லாமற் போயிற்றே! (ஸமீபஞ்சென்று) என் கண்மணி! விலாஸவதீ!—(சற்று உற்று நோக்கி) என்ன! எழுப்பியும் பேசாமலிருக்கின்றாள்! நான் இத்தனை நாளாய் வரவில்லை என்னும் வருத்தமோ? ஆஹா! இஃதென்ன? என்று மறியாத ஒரு விகாரம் என்னைப் பரவசப்படுத்துகிறதே! ஈதென்ன? ஸுகாநுபவமோ? துக்கநுபவமோ? அம்ருதரஸமோ? ஆலாஹலவிஷமோ? இவளைப்பார்க்கப்பார்க்க, என் மநதிற்கு ஒருவித ஸ்பூர்த்தியும் ஆர்த்தியுமுண்டாகின்றதே! என் ப்ரியநாயகீ! விலாஸவதீ! (அவளுக்கு முத்தங் கொடுக்கச்சென்று திடீரென்று பின்வாங்கி) சீ சீ! என்ன காரியத்தைச் செய்யத்தொடங்கினேன்? இவ்வுடன்

சேருகிறதில்லையென்று வாக்குக்கொடுத்துவிட்டுப் பின்வாங்குகிறதா? பிறகு நம்மைப் புத்திஸாகரரென்ன நினைப்பார்? நம் நண்பர்கள்தாம் என்ன சொல்வார்கள்? இவ்வல்ப ஸுகத்துக் காசைப்பட்டோ, நாம் பண்ணிய ப்ரதிஜ்ஞையினின்றும் பிறழுவது?

ராகம்-கல்யாணி: தாளம்-ரூபகம்

பல்லவி

ஸத்திய ஸ்சார்தர்மமும்-ஜகத்தினில்
சற்றுமே கண்டதுண்டோ?

அநுபல்லவி

ஸத்தியமே வேதம்!-ஸத்தியமே தர்மம்!
ஸத்தியமே மோக்ஷம்!-ஸத்தியமே ப்ரஹ்மம்!—(ஸத்திய)

சரணங்கள்

பண்ணிய ப்ரதிஜ்ஞை-பழுதுபடாவண்ணம்
பண்புடைவேதியர்-பகரென அளர்க்கருங்
கண்ணிணையே பேற்றுக்-கருத்துடன் கொடுக்கவே
விண்ணவருலகத்தை-விருதுடனடைந்தனர்!— (ஸத்திய)

பாராளும் சிபிமன்னன்-பன்னிபதெண்ணியே
பூரித்துத்தேஹத்தைப்-புகழ்புறவுக்கிட்டுச்
சீராரும் பதம்பெற்றுச்-சிறந்த பெருமையைத்
தாராளமாய்க்கொண்டு-ஸத்கதிபெற்றனன்!— (ஸத்திய)

ஆகலின், நாம், நீர்க்குமிழிபோல் க்ஷணபங்குரமான இக்காம ஸுகத்துக்காசைப்படலாகாது. வேறே எங்கேயாகிலும் செல்வோம்!—ஆயினும் இவ்வர்த்தராத்ரியில் நாமெங்கே போவது? அரண்மனைக்குச் சென்றால் பரிஹாஸத்திற்கிடமாகும். இன்றிரவை, வெளியிற்சென்று, நகரில் நடக்கும் விசேஷங்களையெல்லாம் பார்த்துக்கொண்டே கழித்துவிட்டு, காலையில் அரண்மனைக்குச் செல்வோம்! (கொஞ்சதூரம் பரிக்ரமித்து) ஆ!

என்ன இது? என்று மில்லாத தாபமொன் றுண்டாகின்றது! (சுற்றிப்பார்த்து) இப்பொற் செம்பில் என்ன வைத்திருக்கின்றது? நீரோ? பாலோ? (கலஶத்தைக்கையிலெடுத்து) பால் தான்? நாம் குடிப்பதற்காகத் தான் விலாஸவதி வைத்திருப்பாள்! (குடிப்பதற்காகக் கலஶத்தைமுகத்தண்டை கொண்டு போய் நோக்கி) ஆ ஆ! இஃதென்ன? இதிலிருந்தபாலையெல்லாம் யாரோ குடித்துவிட்டு மிகுதியை வைத்திருப்பது போலிருக்கின்றது. (உற்றுநோக்கி) இஃதென்ன பாலுங்கொஞ்சம் கறுத்திருக்கின்றது? (பக்கத்தில் ஒரு பூனையைக்கண்டு) ஐயோ! இப்பூனை யேன் சுருண்டு சுருண்டு விழுகின்றது? இதன் வாயில் ஏடு படிந்திருப்பானேன்? இப்பாலைதான் அருந்தியதோ? ஓ ஓ! என்னவோ அவஸ்தைப்படுகின்றதே! என்ன? இருந்தாற்போலிருந்து கீழே வீழ்ந்துவிட்டதே! (பூனையைத்தொட்டு) அந்தோ! இறந்தேபோய்விட்டது! இப்பாலில் என்னவோ மோஸமிருக்கவேண்டும்! இங்கிருப்பதே நமக்கு அபாயம். நாம் ஶீக்ரம் வெளியிற் செல்வதே நலம். (பாற்செம்பைக் கீழே வைத்துவிட்டு வேகமாய் நிஷ்க்ரமித்தல்)

விலா:—(திடீரென்று கண் விழித்துக்கொண்டு, உட்கார்ந்து) ஆ ஆ! இஃதென்ன நிஶப்தமாயிருக்கின்றது? இப்பொழுது தான் என் ப்ராணநாதருடைய இனிய சொற்கள் காதில் அம்ருததாரைபோல் விழுந்தனவே! அவர் இங்கே வந்தனரன்றோ? (நோக்கி) ஒருவரையு மிங்குக் காண்கிலேனே! இஃதென்ன விந்தை! ஆ ஆ என் கொழுநருடைய ப்ரிய வசனங்களைக்கேட்டுக் களிப்பினால் மெய்மறந்து யான் தூங்கிவிட்டேனோ? ஏ கண்காள்! நீங்கள் என் கணவனரது மாசற்ற வடிவத்தைக்காண இன்னுங் கொடுத்துவைக்கவில்லையோ? ஒருவேளை என் ப்ராணநாதர் என்னைப் பரீக்ஷை செய்வதற்காக எங்கேயாகிலு மிங்கு மறைந்து நிற்கின்றனரோ? (எழுந்து) என்னவோ வாக்குக் கொடுத்ததாக வுரைத்தனரே? அஃதைப்பற்றியோ? ஒருவேளை நம்முடைய மாமா அவர்கள்

சொன்ன விஷயமோ? (யோஜித்து) சீ! என்ன வீணெண்ணந் தோன்றுகிறது. அவர் தனியே மொழிந்த வசனங்களே என் மீது அவருக்கு அன்பு வாஸ்தவமாய் இருக்கின்றதென்பதைக் குறிப்பிக்கின்றனவே! அவரது நிர்மலமான ஆக்ருதியே அவரது ஆஶயத்தின் தூய்மையைக் காட்டுகின்றதே! (நான்கடி பரிக்ரமித்து, கால்தடுக்க, கீழேநோக்கி) இஃதென்ன? ஒரு பூனை யிங்கே படுத்திருக்கின்றது! (காலினுற்றள்ளி யதைத்துப் பார்த்துக்கொண்டு) இதென்ன விந்தை! எழுப்ப வெழுப்ப அசையவில்லையே! இறந்துவிட்டதுபோலிருக்கின்றது! (உற்று நோக்கி) இதனுடையவாய் எனோ நுரைத்திருக்கின்றது? ஒரு வேளை என் கொழுநருக்குச் சொடுப்பதற்காக யான்வைத்திருந்த பாலைக் குடித்துவிட்டுத் தான் இப்பூனை இறந்துவிட்டதோ? (மீண்டும் கீழேநோக்கி) ஐயோ! இங்கே வைத்திருந்த பாற்செம்பைக்காணோமே! (படபடப்புடன் சுற்றிநோக்கி) ஆ ஆ! இஃதென்ன? இங்கே வைத்திருந்த பாற்செம்பு, அங்கே வைத்திருக்கின்றதே? அங்கே யார் அதைக்கொண்டுபோய் வைத்திருப்பார்? ஒருவேளை அதில் வைத்திருந்த பாலை என் கணவனார் அருந்தியிருப்பாரோ? (படபடப்புடன் பரிக்ரமித்துப் பாற்செம்பைக் கையிலெடுத்து நோக்கி) அந்தோ! இதிலிருந்த பால் ஒரு துளியாகிலுங் காணோமே! என் ப்ராணநாதர் தாம் இதைக் குடித்திருக்கவேண்டும். (படபடப்புடன் நான்கு பக்கங்களிலும் ப்ராந்திகொண்டவள் போலோடிக்கொண்டு) ஆ! ப்ராணநாத! ப்ராணநாத!! எங்குற்றீர்? இவ்வேழையைக் கண்ணெடுத்துப் பாரீரோ? (விஷாத ஸம்ப்ரமத்துடன்) அந்தோ! இங்கே எவ்விடத்திலும் என் கணவரைக்காணோமே! என்ன நேரிடுமோ அறிகிலேனே! என் ப்ராணநாதர் பிழைத்திருப்பாரா? (வெறுப்புடன்) ஐயோ! எவ்வளவு கடிநசித்தமுடையவளானேன்! அவர் தாமே வருவதாக முன்னரே சொல்லியனுப்பியும், அவரை யான் மதித்திலேனே! ஐயோ! என்றும் வாராதகொழுநர் வந்தால், ஆவலுடன் எழுந்துவந்தெ

திர்கொண்டு உபசரிப்பதைவிட்டு, பொய்த்தூக்கம் பூண்டு பேசாமலிருப்பாரோ பெருந்தன்மையுள்ள வள்ளையரும்? ஒருவேளை இவ்வவமானம் பொருக்கமுடியாமல் 'ஏன் வந்தோம்? ஏன்வந்தோம்?' என்றே எங்கிப்போய்விட்டனரோ என் கணவர்?—இவ்வளவு சீக்ரமாய் அவர் வெளியிற் செல்வதற்குக் காரணமென்ன? (பாற்செம்பை முகந்து) ஆ ஆ! இதனை நோக்கும்பொழுதே மயக்கம் வருகின்றதே! இதனையுட்கொண்டேயிருந்தால் என் ப்ராணநாதர் எக்கதி யாவர்? ஐயோ இதனைப்பார்க்கும்பொழுதே என்னுள்ளம் நடுநடுங்குகின்றதே! என் அன்பரையும் யான் இனி உயிருடன் காண்பேனோ? அந்தோ! இந்நடுராத்ரியில் வேதனைபொறுக்கமாட்டாமல் வெளியிற்சென்று எங்கே தவிக்கின்றனரோ என் ப்ராணநாதர்? ஆ ஆ எவ்விதக் கொடுஞ்செயலைப் புரியலானேன்! பாவியேன் மனத்திற்கு ஒன்றுந் தோன்றவில்லையே! ஏ பரமேஶ்வரீ! ஏ கருணாஸாகரீ! யான் செய்த விப்பெரும் பிழையைப் பொறுத்து என் கொழுநரை நீதான் காப்பாற்றியருளல்வேண்டும்.

உனதுபெய ரொருதரஞ் சொன்னபேர் யமராஜ
 னூரிலொரு நிமிஷமு மிரார்!
வினதுதிரு வடிவையொரு போதுகண் டவர்கள்பின்
 னெடும்பவ ஜலதிகாணார்!
கருமான தயையுடன் கவலைதனை நீக்கியென்
 கணவரைக் காத்தருளுவாய்!
ஸநகாதி முனிவிநுத ஸமகாரிநாயகீ!
 ஸாதுஜந ஸம்ரக்ஷகீ!

ஏ தேவீ! உன்னை யன்றியு மெனக்கு வேறுகதி யுண்டோ? இப்பாவியேன்மீது கருணைகூர்ந்து, அபயந் தந்து, என்றன் கணவரைப் பாதுகாப்பது நின்பாரம்!

(தண்டகம்)

ஜய! ஜய!! ஜய!!! ஸர்வலோகேஶ்வரீ!
ஸர்வகுஹ்யேஶ்வரீ! ஸர்வதேவேஶ்வரீ!
ஸர்வமந்த்ரேஶ்வரீ! ஸர்வதந்த்ரேஶ்வரீ!
ஸர்வயந்த்ரேஶ்வரீ! ஶர்வஹ்ருத்யேஶ்வரீ!
கௌரி! வாகீஶ்வரீ! ராஜ ராஜேஶ்வரி!
ஶங்கரீ! ஸ்ரீகரீ!!

அயனெழுதிய தாயினும் நின்க்ருபா
லேஶமுண்டாகுமேல் வ்ருத்திகொண்டோங்குமே
பாவியென்றென்றுமே! புத்ரபௌத்ராதிஸம்
பத்துமுண்டாகுமே! பக்தரைநித்யமும்
பாதுகாத்தாட்கொளும் பாவநாதீதமே!
ப்ரஹ்மமே! தர்மமே!!

நயமுடனருளுடைகங் காட்டிமாங்
கல்யபிக்ஷைகொடுத் தென்றனை தேவி நீ
நாதனோடின்பமாய்க் கூடியிப் பூமியிற்
பூண்டசெங்கோலுடன் வாழவேநற்றுணை
செய்குவாய் யாங்தொழும் காலகாலன் புகழ்ச்
செல்வியே! கல்வியே!!

பயசயபவ பந்தமெல் லாமுமே
நின்க்ருபாத்ருஷ்டியால் பானுமுன்மாசுபோற்
பற்றறப்போக்கியிப் பாவியேனுங்கவென்
நாதருந்தீர்க்கமா மாயுளோடெய்யவே
தேவி! ஶர்வாணி! தாக்ஷாயணீ! பாஹி மாம்!
பாஹி மாம்! பாஹி மாம்!!

(மதநமாலிநி ப்ரவேஶித்தல்)

மதநமாலிநி :—(ஆத்மகதமாய்) இவ்விடத்தி லென்னென்ன நடக்கின்றதோ, அவையெல்லாமறிந்து, அப்போதைக்கப்போது, தமக்குத் தெரிவிக்கும்படி, மஹாராஜா அவர்கள் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார் ! போஜ குமாரனும் இப்பொழுதுதான் இவ்விடத்தினின்றும் பைத்யம் பிடித்தவன்போல் விரைந்து செல்கின்றான் ! இங்கு நம் விலாஸவதியின் அந்தப்புரத்திற்கு வந்துதானிருக்கவேண்டும் ! என்ன செய்தியோ விசாரிப்போம். (அருகிற்சென்று) ஏனோ விலாஸவதி வருத்தமடைந்தவள்போலிருக்கின்றாள் ! ஏதோ விசேஷம் நடந்து தானிருக்கவேண்டும் ! (ப்ரகாசமாய்) அம்மணீ ! நமஸ்காரம்.

விலா :—ஓ ஓ ! தரங்கவதியா ? தரங்கவதீ ! என் பர்த்தாவைப் பார்த்தாயோ ?

மதந :—அம்மணீ ! நான் மதநமாலிநி. அம்மணீ ! என்ன விசேஷம்? (நோக்கி) ஆ ! இதென்ன தங்கள் தேஹம் இப்படி நடுங்குகின்றதே !

விலா :—மதநமாலிநீ ! என் பர்த்தாவை எங்கேயாகிலும் இப்பொழுது கண்டாயோ ?

மதந :—என்ன அம்மணீ ! ராஜகுமாரரா ? அவர் வந்து தம்முடன் வார்த்தை சொல்ல வில்லையோ ?

விலா :—ஐயோ ! என் தௌர்ப்பாக்யத்தை யான் என்ன சொல்லப்போகின்றேன் ! நான் செய்த கார்யத்தை நினைத்துக் கொண்டால் எனக்கே பயமாயிருக்கின்றது !

மதந :—என்ன அம்மணீ ? என்ன அம்மணீ ?

விலா :—ஐயோ ! சொல்வதற்குக்கூட நாவெழும்பவில்லையே ! வெட்கமும், துக்கமும் தொண்டையை அடைக்கின்றனவே.

மதந :—அப்படிப்பட்ட ஸங்கதி யாதிருக்கக்கூடும் அம்மணீ ?

விலா :—(கண்ணீர்சொரிய) என் பர்த்தாவுக்கு நானே ம்ருத்யு வானேனடி !

மதந:—என்ன அம்மணீ! தாங்கள் சொல்வது ஒன்றும் விளங்க வில்லையே! இப்பொழுது தான், ஒரு நிமிஷத்திற்கு முன், தங்கள் கணவனாரை நான் பார்த்தேனே: அவருக்கென்ன கேடு! பொல்லாத ஸஹாபாடிகளையெல்லாங் கூட்டிக்கொண்டு, ராத்ரி முழுதும் வேசிகள் வீட்டில் திரிவது தானே அவர் வேலை!

விலா:—அடி பேதாய்! அவர் ஒருபொழுது மப்படிப்பட்ட காரியங்களில் ஆசைகொள்ளுகிறவர் அல்லவே! நான் செய்ததைக் கேட்டால் நீயே பயப்படுவாய்!

மதந:—(குதூஹலமுள்ளவள்போல் நடித்து) அஃதென்னவோ?

விலா:—இந்தப்பாற் செம்பைப் பார்த்தாயோ?

மதந:—(நோக்கி) என்ன அம்மணீ! ஒன்று மில்லையே! ஏதோ ஒரு மூலிகை போட்டிருந்ததுபோற் காணப்படுகிறது.

விலா:—மூலிகையா! முழுமோசம்போனேனடி! அதோ பார் அப்பூனையை!

மதந:—(நோக்கி) என்ன! இறந்துபோய்விட்டது போலிருக்கிறது.

விலா:—இதிலிருந்த பாலைக்குடித்துத் தானடி, அது இறந்தது!

மதந:—அதற்கென்ன இப்பொழுது?

விலா:—இவ்விஷப்பாலைப் புத்திமயங்கி என் கணவரருந்தும்படி வைத்தேனடி! அவரை இனியான் உயிருடன் பார்ப்பேனோ?

மதந:—(பாற் செம்பைக் கையில்வாங்கி நோக்கி) என்ன பேதமைத்தனம் அம்மணீ! எல்லாரையும் உங்களைப்போலவே சுத்தமனமுடையவரென்று நினைக்கின்றீர்களே! அவராவது

இப்பாலைக் குடிக்கிறதாவது? அப்பூனை ஏன் இறந்துவிட்டது தெரியுமா?

விலா:—வேறென்ன? இப்பாலையருந்தித்தான் இறந்திருக்கவேண்டும்! அதன் வாயில் எடும், நுரையும் படிந்து கிடக்கின்றதைப் பார்க்கவில்லையோ?

மதந:—ஆம்! அதெப்படி நேர்ந்தது தெரியுமா?

விலா:—எப்படி யென்று சொல்வேன்?

மதந:—உன் கணவர் பெருஞ்சூதுள்ளவரானதனால், உன்னை மோசிப்பதற்காக, இப்பாலைப் யப்பூனைக்குவைத்துப் பரீக்ஷை பார்த்திருக்கவேண்டும்.

விலா:—ஐயோ! என் கொழுநரும் அப்படிச்செய்வரோ?

மதந:—அம்மா! அவரது கபடம் உங்களுக்கென்ன தெரியும்! அவர் சொல்வதெல்லாம் பொய்! அவர் இப்பொழுது அவ்வேசிக்கு வாக்குக்கொடுத்தவிஷயந் தெரியுமா?

விலா:—ஆமாமடி! அவர் இங்குவந்தபொழுது ஏதோ வாக்குக்கொடுத்ததாகச் சொன்னார்!

மதந:—அம்மம்ம! அவரது செயலை என்ன கண்டீர்கள்? சூதும் வாதுங் குடிகொண்டிருக்கின்றனவன்றோ அவரிடத்தில்!

ராகம் - ஆரபி: தாளம் - ஆதி

பல்லவி

எவருக்குத்தான் தெரியும் - அவன் வன்மை!
குவலயத்திலுமினி - யுளதோ கொடுமை!

அநுபல்லவி

பேதை நீ மணந்ததே - பெருங்கொடுந் தொல்லை
பாதகனவனது - பாழ்மனங் கல்லே!

சரணம்

யோஜித்திடி லவன் - பேசிய ஶபதங்கள்
காசைப் பறிக்கும் பொதுக் - காரிகை செயலே ?
மாசிலாத வுன்னை - மாயவார்த்தைகள் சொல்லி
வேஶிக் கடிமை யாக்கி - வீழ்த்திடப் பார்த்தானே !

விலா:—(சினந்து) துடுக்காய்ப் பேசுவதே உனக்கு எப்பொழுதும் ஸஹஜமாயிருக்கின்றது ! அவரது மநத்தை யான் அறிவேன் ! அவருக்கு என்னிடத்தில் வாஸ்தவமான அன்பு இருக்கின்றதென்பதில் ஸந்தேஹமில்லை ! மேலும் அவர் எனக்கு உறவினரன்றோ ?

மதந:—ஆமாம் ! கார்யமாகிறவரைக்கும் உறவினர்தாம் ! ஆ ஆ ! இப்படிப்பட்ட பாதகர்களையும் உறவினரென்று கொண்டாடுகின்றனையே! ஆஹா! அவரது வஞ்சனையே வஞ்சனை !

ராகம்-ஆநந்தபைரவி : தாளம்-ரூபகம்.

பல்லவி

ஓசோ! மைந்தரை - யுறவினரெனலேனோ !
போகார்த்தமே யாவர் - பூவையர் புருடற்கு !

அநுபல்லவி

ஏகச் சத்த்ரத்தின் கீழ் - இருந்தாளத் தக்கவரும்
காகம்போன்ற வேஶி - கையில் தவிப்பதேனோ? (ஓ)

சரணம்

இணங்கி யிறுமாப்புள்ள - இடும்பர்கள் பேச்சுக்கு,
வணங்கி யடிபணிந்து - வருந்தி யழைக்கின்ற
மணந்த மனையாட்டி - மனையிற் றவிக்க வே
றணங்கை யடைந்தவர் அழிந்து போவதேனோ !

விலா:—அடி மதநமாலினீ ! எல்லாப் புருஷர்களும் உனக்கு ஒரேமாதிரிதான் ! கர்ப்பூரவாஸனை கழுதைக்கேன் தெரியும் ? நான் செய்தகார்யத்தைநினைக்க நினைக்க என் மநம்

புண்ணுய்த் தவிக்கின்றதே. ஐயோ! என் கொழுநர் உயிரு டனிருப்பாரா ?

மதந:—(சிரித்து) ஐயோ! அம்மணீ! நா னென்ன சொல் வேன்! உங்கள் வீண்கவலையை நினைத்துக்கொண்டால் என க்குச் சிரிப்புவருகின்றது! அப்படியே விஷமாயிருப்பினும், அதை யவர் அருந்தியிருந்தால், அவர் வெயிளிற் செல்லவுங் கூடுமோ ? இப்பூனையின் கதி அவருக்கு முடனே நேர்ந்திரு க்கு மன்றோ ?

விலா:—ஒருவேளை இப்பாலைக் குடித்துவிட்டுதான் மய க்கங்கொண்டு வெளியிற் சென்றிருக்கலாகாதா ?

மதந:—அவர் இவ்வளவு ஶீக்ரமாய்ப் போனதற்குக் காரணம் தெரிந்ததா ? இதிற்போட்டிருக்கும் மூலிகையைக் காட்டி, உன்மீது பழிபோடுவதற்காகவே புத்திஸாகரர் முதலி யோரை யழைத்துவரச்சென்றிருக்கிறார். அதுபற்றிதான், அவர் ஸஹபாடிகளுடன் கூடிக் கோலாஹலத்துடன் பேசிக்கொண் டிருந்தார்! நீ இப்பொழுதிங்கிருப்பதே தகுதியன்று!

விலா:—(ஆத்மகதமாய்) அப்படியுமிருக்குமோ ? மதநமா லின் சொல்வதும் ந்யாயமாகத்தா னிருக்கின்றது.

மதந:—அம்மணீ! நாமிப்பொழுதே மஹாராஜா அவர்களி டஞ் செல்வோம் வாருங்கள்! அவர்தாம் இத்தருணத்தில் தக்க யோஜனை சொல்வார்!

விலா:—ஆம்! அப்படியே செய்வோம்! (இருவரும் கொ ஞ்சதூரம் பரிக்ரமித்தல்)

மதந:—(திரும்பி நோக்கி) அம்மம்ம! இப்படியும் பேத மைகொண்டிருக்கலாமோ! அப்பாற்செம்பை அங்கேயே வைத் துவிட்டீர்களே! அஃதங்கிருந்தால் ப்ரமாதம் நேரிடுமே!

விலா:—ஆயின், அதையெடுத்துக்கொள்! நம் மாமனிடம் நேரே செல்வோம்.

மதந:—இதைமாத்ர மன்று! இப்பூனையையும் தூரத் தூக்கி யெறியவேண்டும். (பரிக்ரமித்துப் பாற்செம்பை ஒரு கையிலும், பூனையை மற்றொருகையிலுமெடுத்துக் கொள்ளல்)

விலா:—ஆம்! நீ சொல்வது வாஸ்தவமே! அதையுந் தான் எடுத்துச்செல்லல்வேண்டும்.

(இருவரும் நிஷ்க்ரமித்தல்)

## மூன்றாங் களம்

இடம்—தாரைநகர்: ஒரு வீதி

(போஜன் சிந்தித்துக்கொண்டே ப்ரவேசித்தல்)

போஜன்:—(ஆத்மகதமாய்) ஆ! ஆ! என்ன மோசம்! என்ன மோசம்!! யான் வெளியிற் புறம்படுமுன் எண்ணிய தென்ன? இப்பொழுதுண்டாகு மெண்ணமென்ன? இன்று காலையில் என் சிற்றப்பனுடைய ஸேவகர்களால் அவமானப்பட்டது போதாதா? ஐயோ! அப்பாவி விலாஸவதினிடம் யான் ஏன்சென்றேன்? யான் முன்னரே வருவதாகச் சொல்லியனுப் பியும், அவள் என்னை ஒருபொருட்டாயெண்ணினளா? மணந்த மனைவியே யிப்படி யவமதிக்கும்போது, மற்றவர்கள் செய்வது என்ன ஆச்சர்யம்?—இதுவும் நமக்கு நற்காலமென்றே கொள்ளல்வேண்டும்! ஆ! ஆ! அப்பாலைக் குடித்திருந்தால் நமக்கு மப்பூனையின் கதிதானே நேரிட்டிருக்கும்! (யோஜித்து) விலாஸவதியே, இவ்வளவு துணிந்து, நமக்கு விஷம் வைத்திருப்பளா? ஒருவேளை இதுவும் நமது சிற்றப்பனுடைய போதனை யாற்றான் இருக்குமோ?—ஆம்! மற்றவர் யார் அவளிடத்தில்

நெருங்கிப் பேசக்கூடும் ? அன்றேல் நாம் சொல்லியனுப்பியும் பேசாமலிருப்பாளா ? இதில் ஏதோ மோஸம் இருக்கின்றது. நமது ஆசிரியர் சொன்னதுபோல், இவளும் நஞ் சிற்றப்பனுடைய போதனையில் அகப்பட்டிருப்பாளோ ? (ஆலோசித்துப் பெருமூச்செறிய) ஆம் ! நமது நிலைமையை யோஜித்திடில் யார் தாம் நம்மை மதிப்பர் ? எவனுக்குப் பணமிருக்கின்றதோ அவன்தான் பெரியவன் ! அவன்தான் பண்டிதன் ! அவன்தான் புருஷன் !

* 'குணமிருந் தாலுங், குலமிருந் தாலுங்,
கொழுங்கலைஞர்
மணமிருந் தாலும், மதியிருந் தாலும்,
வழுத்திடுவங்
கணமிருந் தாலும், பணமிலேல், யாருங்
கருதலர், அப்
பணமிருந்தால், அவர்க் கெல்லாரு மஞ்ஜலி
பண்ணுவரே !'

ஆகலின், கையில் தநமு மதிகாரமு மெவனுக்கு இருக்கின்றதோ அவனுக்குத்தான் கௌரவமும்.

ராகம் - மோஹநம்: தாளம் - ஆதி

பல்லவி

பணமு மதிகாரமும் - பாங்குடனில்லாதான்
பிணமெனலும் பொய்ப் - பேச்சோ ?

அநுபல்லவி

தாசுங் கநமு மில்லேல் - காசினியி லெவனும்
மாசில்லா திருந்தாலும் - நாச மயன்பெருண் !— (பண)

* தனிப்பாடற்றிரட்டு

**சரணம்**

தந முடையோனையே - தாங்குவர் யாவரும்,
கநமுடையோருக்கே - கண்யமும் புண்யமும்,
தந மில்லையே யாயின் - தாஸனுஞ் சொற் கேளான்,
முனியாதாருங்கூட-முனிந்து கொள்ளுவ ரையோ! (பண)

அன்றியும், அவள் என்னிடத்தில் வாஸ்தவமான காதலுள்ளவளாயின், இவ்வண்ண மிருந்திராள்! (செவிகொடுத்து) யாவரோ கருணமாய்ப்பாடிக்கொண்டு இவ்வழியே வருகின்றார்கள்! (நோக்கி) எவரோ ஓர் எளிய ப்ராஹ்மணர்போலிருக்கின்றார். ஸம்ஸாரத்தை அழைத்துக்கொண்டு எங்கேயோ போகின்றார் போலும்! ஏனோ இவர்களது முகங்களெல்லாம் வாடி யிருக்கின்றன! இவ்விரவில் இச்சிறுபிள்ளைகளை யெல்லாம் இழுத்துக்கொண்டு எங்கே செல்கின்றனரோ? பாவம்! இவர்களுக்கும் என்ன ஸங்கடம் நேர்ந்ததோ! என்ன ஸங்கதியோ ஒரு புறமாயிருந்து கேட்போம்! (ஒருபுறமாய் நிற்றல்)

(மேற்சொன்னபடி **கோவிந்த பண்டிதர்** என்னும் ஒரு ப்ராஹ்மணர் தன் பத்நி **ஸௌந்தரியுடன், ராமக்ருஷ்ணன், ஜாநகி, ஸ்ரீநிவாஸன்** என்னும் சிறு பிள்ளைகளை யழைத்துக் கொண்டு ப்ரவேசித்தல்)

**கோவிந்த பண்டிதர்:**—இதுகாறும் நாங்கள் தங்கியிருக்க இடமளித்த ஹே தடீரமே! நாங்கள் போய்வருகின்றோம்! இதுவரையிலும் எங்களைப் பாதுகாத்துவந்த ஹே க்ருஹதேவதைகாள்! நாங்கள் வேறு நாடுசெல்ல விடையளிப்பீர்! மாளவதேசத்தின்கண் மத்ய நாயகம்போல் விளங்கும் ஹே தாரை நகரே! யாங்கள் இனி எக்காலம் உன்னைக் காண்பேமோ? ஹே ஆபத்பாந்தவா! அநாதரக்ஷகா! நீயே எங்களை வழியிற் காத்தருளவேண்டும்.

VIII

SRI RAJA-RAJES'VARI

OR

"THE PENITENT VILASAVATI PRAYING TO THE GODDESS FOR HER HUSBAND'S SAFETY"

——*Act II, Scene* 2, *Pages* 86-87

Facing page கள

# ஸ்ரீராஜராஜேஸ்வரி

## அல்லது

### "தன்கணவனுர் பிழைத்திருப்பதின் பொருட்டு விலாஸவதி அநுதாபங்கொண்டு பரதேவதையைப் போற்றுதல்"

விலா:—(வெறுப்புடன்) ஐயோ! எவ்வளவு கடிநசித்த முடையவளானேன்! அவர் தாமே வருவதாக முன்னரே சொல்லியனுப்பியும், அவரை யான் மதித்திலனே. ஐயோ! என்றும் வாராத கொழுநர் வந்தால், ஆவலுடன் எழுந்துவந் தெதிர்கொண்டு உபசரிப்பதைவிட்டு, பொய்த்தூக்கம் பூண்டு பேசாமலிருப்பரோ பெருந்தன்மையுள்ள வனிதையரும்?...... ... ..(பாற்செம்பை முகந்து) ஆ ஆ! இதனை நோக்கும்பொழுதே மயக்கம் வருகின்றதே! இதனை யுட்கொண்டே யிருந்தால் என் ப்ராணநாதர் எக்கதியாவர்? ஐயோ! இதனைப் பார்க்கும்பொழுதே என்னுள்ளம் நடுநடுங்குகின்றதே! என் அன்பரையும் நான் இனி உயிருடன் காண்பேனே? அந்தோ! இந் நடுராத்ரியில் வேதனை பொறுக்கமாட்டாமல் வெளியிற்சென்று எங்கே தவிக்கின்றனரோ என் ப்ராணநாதர்? ஆ ஆ! எவ்விதக் கொடுஞ்செயலைப் புரியலானேன். பாவியேன் மனத்திற்கு ஒன்றுந் தோன்றவில்லையே. ஏ பரமேஸ்வரி! ஏ கருணாகரீ! ஏ ராஜராஜேஸ்வரீ! யான் செய்த இப்பெரும்பிழையைப் பொறுத்து என் கொழுநரை நீதான் காப்பாற்றியருளவேண்டும்.

உறைதுபெய ரொருதாஞ் சொன்னபேர் யமராஜ
னாரிலொரு சிவைபு மிரார்!

... ..........

—அங்கம். II, களம். 2, பக்கம். அசு-அஎ



வந்தே மாதரம் அம்பிகாம் பகவதீம் வாணீ-ரமா-ஸேவிதாம்,
கல்யாணீம் கமநீய-கல்பலதிகாம், கைலாஸ நாதப்ரியாம்;
வேதாந்த ப்ரதிபாத்யமாந விபவாம், வித்வந்மநோ ரஞ்ஜநீம்,
ஸ்ரீசக்ராங்கித ரத்நபீட நிலயாம், ஸ்ரீராஜராஜேச்வரீம்.

VIII] ஸ்ரீ ராஜ ராஜேச்வரீ [க

ராகம்-தநாஸி : தாளம்-சாப்பு

பல்லவி

ஈசா எம்மைக் காவாயோ - ஹே ! ஜக
தீசா எம்மைக் காவாயோ !

அநுபல்லவி

ஆசாபிசாசத்தை - அடக்கியாளும் வேந்தே !
தாஸாநுதாஸன் யான் - தவிப்பது மழகோ ?— (ஈசா)

சரணங்கள்

அறை மறை யாகமம் - அக்கினி ஹோத்ரமும்
முறை வழுவாமல் யான்-முடித்ததன் பயனென்னே?—(ஈசா)
வறுமையினுஞ் சிறுமை - மற்று முலகி லுண்டோ
அறிந்துன்னை ஸ்துதிக்கவும்-ஆற்ற லிலையே யந்தோ!—(ஈசா)

ஸுந்தரி :—இதோ ! உங்களைத்தான் ! இப்படி எத்தனை நாளாய் நாம் பட்டினியாயிருக்கிறது ! ஐயோ குழந்தைகளெல்லாம் பசி பொறுக்கமாட்டாமல் வாய்வறண்டு, கண்ணிருண்டு, காதடைந்து, கைசோர்ந்து, மெய்தளர்ந்து, எலும்புகளெல்லாம் எண்ணும்படி துரும்புபோல் இளைத்துக் களைத்துக் குய்யோ முறையோவென்று அழுகிறதுகளே ! வெறுமை யிப்படி அக்னி ஹோத்ரமும் ஔபாஸநமும் பண்ணிக்கொண்டு லோகாபி ராமமாய்ப் பாடிக்கொண்டிருந்தால், சாப்பிடுவதற்கு ஸாதங்கிடைக்குமோ ? உடம்பு சோற்றாலெடுத்த சுவரென்று சொல்லுவார்களே ! உங்களுக்குத் தெரியாததென்ன இருக்கிறது. தேன் ஒழுகுவதுபோல், முத்துமுத்தாய்க் கண்ணீர்சொரிய, மழலைச்சொல்லைச் சொல்லி யழுகிற நமது சிறு குழந்தைகளுக்கு அந்நமளிப்பது உங்கள் கடமையன்றோ ?

ராமக்ருஷ்ணன் :—எங்கே அப்பா போறே ? பசி ப்ராணம்போறதே ! (முகத்தைக் கடுத்துக்கொண்டு தலையைச் சொரிதல்)

ஜாநகி :—அம்மா! தாஹம் ஒட்டிக்கிறதே! ஆத்துக்கு வந்து கொஞ்சம் தூத்தமாறு கொடேன்! (துணியையிழுத்தல்)

ஸ்ரீநிவாஸன் :—அம்மா! பூவா! சாச்சி! சாச்சி! (மார்பில் போர்த்திருக்கும் வஸ்த்ரத்தைத் தள்ளல்)

ஸாந்த :—(கண்ணீர் சொரிந்து, மேலாடையைச் செம்மையாய்ப் போர்த்துக்கொண்டு) நானென்னடாப்பா செய்வேன்! இருந்தால் உங்களுக்கு வஞ்சனையாடா! உங்களப்பா கொண்டுவந்துபோட்டால்தானே நான் உங்களுக்குப் போடுவேன்!

ராம :— அம்மா! நம்ம தச்சுவாத்திலே என்னமோ சீடை உருட்டிறளாமேடி? அது எப்படி யிருக்கும்?

ஸாந்த :—(ஆத்மகதமாய்) ஐயோ! இது தின்கிறபண்டமென்றால், அதைக் கொடுக்கச்சொல்லி அழுங்களே பசங்கள்! இவாளுக்கு நானென்ன சொல்வேன்? (ப்ரகாசமமாய்) அப்பா! அது ஆத்திலே குண்டுகுண்டா யிருக்கும்! அதைப் பசங்களுக்கு விளையாடக் கொடுக்கிறது.

ஜாந :—அம்மா! நம்ம கால்வாங்கரை மணலிலே குண்டுகுண்டா யிருக்குமே கூழாங்கல்லு, அதுவா?

ஸாந்த :—(ஆத்மகதமாய்) ஐயோ! இப்படியே இதுகளுக்கு திநந்திநம் போக்குச் சொல்லிவருகிறேனே! ஒரு பாழுந் தெய்வத்துக்குங் கண்ணில்லையே!

* 'அற்றதலை போக வறுததலை நான் கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ?—வுற்ற
மரமனையாட் கிந்த மக்களை வகுத்த
பிரமனையான் காணப் பெறின்!'

ஸ்ரீநி :—அம்மா! அப்பிச்சி! அப்பிச்சி!

* ஔவையார்

ஜாந :—அம்மா! கொஞ்சம் பழையதாவது போடேன்!

ராம :—அம்மா! வயிறெல்லாம் பசிக்கிறதே! என்னமாவது தின்றதுக்காவது கொடேன்!

ராகம் - முகாரி : தாளம் - ரூபகம்

பல்லவி

பசி பொறுப்பேனோ - அம்மா!
புசியாதிருப்பேனோ?

அநுபல்லவி

போக்குக் காட்டுறாய்-பொழுதுதோறும்
நாக்கு வறட்டுதே-நடக்க நடக்க! (பசி)

சரணம்

பழையதேனுந்தா - பசிதணிக்கக்
கழுநீரேனும்வார் - கலக்கிக் குடிக்க! (பசி)

கோவிந்த :—(ராமக்ருஷ்ணனைக் கையிற் பிடித்து, ஜாநகியைத்தோளில் வைத்து, ஸமாதாநஞ் செய்துகொண்டு) என் செல்வர்களே! நீங்கள் அழாதீர்கள்! இதோ செம்பில் வேண்டிய தீர்த்த மிருக்கின்றது, குடியுங்கள்! (செம்பிலிருக்கும் ஜலத்தை இருவருக்குங் கொடுத்தல்)

ராம :—(செம்பிலிருக்கும் ஜலத்தை கையில் வாங்கிக் கொண்டு, கண்ணீர் சொரிய) ஹா! ஜகதீசா! இவ்வேழையின் பசிதாஹத்தைத் தணிப்பது தமக்குக் கஷ்டமோ?

* "கல்லார்க்குங் கற்றவர்க்குங்
களிப்பருளுங் களிப்பே!
காணார்க்குங் கண்டவர்க்குங்
கண்ணளிக்குங் கண்ணே!

* இராமலிங்கஸ்வாமிகள் அருட்பா

வல்லார்க்கு மாட்டார்க்கும்
வரமளிக்கும் வரமே !
மதியார்க்கு மதிப்பவர்க்கும்
மதிகொடுக்கு மதியே !
நல்லார்க்கும் பொல்லார்க்கும்
நடுநின்ற நடுவே!
நரர்களுக்கும் ஸுரர்களுக்கும்
நலங்கொடுக்கு நலமே !
எல்லார்க்கும் பொதுவில்நடம்
இடுகின்ற பரமே !
என்னரசே யான்புகலும்
இசையுமணிந் தருளே !"

(செம்பிலிருந்த ஜலத்தைக்குடித்து) அப்பா ! இன்னம் பசிக்கிறதே ! ஐயோ ரொம்பவும் பசிக்கிறதே ! எங்கேயானு கொஞ்சம் ஸாதம் வாங்கிக்கொடேன் ?

கோவி :—(அவனை மடியிலணைத்துக்கொண்டு) பையா ! சற்றுப்பொறு ! இதோ பக்கத்தூருக்குப்போய் வேண்டிய ஸாதம் வாங்கித்தருகிறேன்.

ராம :—(மிக்க தைந்யத்துடன்) ஹா ! தெய்வமே !

* "பொன்னார் மேனியனே !
புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல்
மிளிர்கொன்றை யணிந்தவனே !

* சுந்தரஸ்வாமிகள் தேவாரம்

மன்னே ! மாமணியே !
மலர்தாரையுள் மாணிக்கமே !
அன்னே ! உன்னையல்லால்,
இனியாரை நினைக்கேனே !"

ஸாநந்த :—அதுக்குள்ளே நம்முடைய ப்ராணனே போய் விடுமே ! பசங்களின் ப்ராணன் என்னமா யிற்கும் ?

கோவிந்த :—என்ன ? நீகூட இப்படி வ்யஸநப்படுகின்ருய் ! நாள்தோறும் பாகவதம் பகவத்கீதை முதலிய கதா ஸ்ரவணம் செய்வதன் பயன் இதுதானே ? முன் ஜந்மத்தில் தாநதர்மஞ் செய்திருந்தால், இஜ்ஜந்மத்தில் அதன்பயனை யநுபவிக்கலாம். ஜந்மாந்தரத்தில் அவரவர்கள் செய்த இருவித வினைகளுக்குத்தக்கபடியே பாக்யஸாலிகளாகவோ தரித்ரர்களாகவோ பிறக்கின்ருர்கள் ! சிந்தை நொந்து வருந்துவதனுல் என்னபயன் ? நம்மைப் படைத்த ப்ரஹ்மதேவன் தலையில் எப்படி எழுதியிருக்கின்ருனே அப்படியேதான் முடியும்! அதை மாற்ற யாவராலாகும் ?

ஸாநந்த :—ஆம் ! வெறுமையிருந்தால் வினையென்ன செய்யும்? விதி யென்ன செய்யும்? எங்கேயாகிலும் போய்க் கஷ்டப்பட்டாலல்லவோ பொருள் கிடைக்கும் ! பேசாமல் ஆத்திலுட்கார்ந்து மூக்கைப்பிடித்துக்கொண்டிருந்தால், பொருள் தானே வந்து முளைக்குமோ ? உழுது விரை விரைத்தாலல்லவோ நிலம் பலனைத்தரும். யத்நஞ் செய்யாமல் வெறுமையிருந்தால் தெய்வமே ஸாத்தை யள்ளி வாயில் ஊட்டுமோ ?

*"உள்ள முடையான் முயற்சிசெய்ய வொருநாளே
வெள்ள நிதிவீழும் விளையா ததனிலில்லை,
தொள்ளையுணர் வின்னவர்கள் சொல்லின்மட நிற்பின்
எள்ளுனருக் கெக்கழூத்தம் போலவினி தன்றே !"

* ஜீவக சிந்தாமணி

கோவி :—அடி பேதாய்! அவனன்றி யோரணுவாவது அசையுமா? "தேந விநா த்ருணமபி ந சலதி" என்று நீ கேட்டதில்லையோ? நாம் அநுபவிக்கின்ற ஸுகதுக்கங்களெல்லாம் இம்மையில் நாம் செய்யும் இச்சிறு முயற்சியினுலென்று நீ சிறிதேனுங் கொள்ளவேண்டாம். அடி முக்தே! மைந்தர்களை ரக்ஷிக்கப் பொருள்வேண்டுமென்கின்றயே! வானத்தில் ஸஞ்சரிக்கும் பறவைகளும், காட்டில் திரியும் ம்ருகங்களும் தமக்கொரு ரக்ஷகனைத் தேடுகின்றனவோ? கல்லினுள்ளிருக்கும் சிறு தேரைக்கும், கர்பப் பையிற் கட்டுண்டு கிடக்கும் ஜீவனுக்கும் உணவு அளித்துக் காப்பவன் யார்? எல்லாம் கடவுளுடைய செயலன்றே? அப்படி யிருக்க, நீ என் இச்சிறுவர்களைக் குறித்து வ்யஸநப்படுகின்றய்? கல்பித்தவன் காவாது கைவிடுவனே? விடான்! விடான்!! ஆதலால் நாம் அக்கருணைக் கடவுளை நம்பி, வேறே எங்கேயாகிலும் போவோம் வா!! நானுமென்ன, ப்ரயத்நஞ்செய்யாமல், வீணகவா காலத்தைக் கழிக்கின்றேன்? அபீதி த்வயமும் ஸாங்கோபாங்கமாய் வேதாத்யயநஞ் செய்திருக்கின்றேன்! ஆறு ஶாஸ்த்ரங்களையும் அணுமாத்ரமும் விடாமல் ஆராய்ச்சி செய்திருக்கின்றேன்! கல்வியின் அருமையை இப்பொழுது கவனிக்கிறவர் யார்? இப்படு பாவி முஞ்ஜன் ராஜ்யாதிகாரம் அடைந்ததும் சற்றவர்களுக்கு வாழ்வு போய்த் தாழ்வே வந்துவிட்டது!

* 'அட கெடுவாய்! பலதொழிலு மிருக்கக் கல்வி
யதிகமென்றே கற்றுவிட்டே னறிவில் லாமல்,
திடமுளமோ ஹரகமாடக் கழைக்கூத் தாடச்
செப்படிவித் தைகளாடத் தெரிந்தே னில்லை!
தடகுசவே ஸையராகப் பிறந்தே னில்லை!
ஶரியான மறையைவிட்டுத் தைய லார்தம்
மிடமிருந்து தூதுசென்று பிழைத்தே னில்லை!
என்ன ஜந்மமெடுத்துலகி லிரக்கின்றேனே!'

---

* படிக்காசுத்தம்பிரான்

ஐயோ! இக்கொடுங்கோல் மன்னனது அரசாட்சியில், உயிர்க் கொலை புரிந்து, உண்ணுமுணவில் மாருட்டஞ்செய்து, சிறிது மையமில்லாமல் நண்புடையாரிடத்து வஞ்சனை செய்து, நல்ல வர்களை நடுங்கும்படி யுதாஸீனமாய்ப்பேசி, நன்னடத்தையுடை யவர்களைத் தீயநடத்தை யுள்ளவர்களென்று சொல்லியும், அறிவில்லாத அல்பரை ஒழுக்கமுடையோ ரென்றுரைத்தும், தேவாலயத்திலுள்ள ஸொத்துக்களை மறைத்தும், தம்மாதர்க ளைப் பிறருக்குக் கொடுத்தும், இழிவான வேசியர்களை யுத்த மர்களுக்குறவுபடுத்தியும், கற்பிற் சிறந்த பிறர் மாதர்களோடு கலவி செய்யக் கருத்துக்கொண்டும் இருப்பவரான சயவர்க ளுக்கே இதுகாலம்! அவர்களுக்குத்தான் ஸகல உத்யோகங்க ளும் பட்டங்களுங்கிடைக்கும்! கற்றவர்கள் தங்கள் சுவடிகளைக் கட்டிக்கொண்டு கதறவேண்டியதுதான்! தர்ம ப்ரபு! அந்த ஸிந்துல மஹாராஜரோடே கற்றவர்களது கௌரவமும் போய் விட்டது! அவர் ராஜ்யத்தைப் பரிபாலித்துவந்தபொழுது, எந்தவர்ணத்திற் பிறந்தவராலுைங், கற்றவர்களுக்குக் குறை வேயில்லை. ஒவ்வொரு ஸங்க்ராந்தி அமாவாஸைதோறும் அவர் கொடுக்குந் தக்ஷிணையே, ஒவ்வொரு ப்ராஹ்மணனுக்கும், வர் ஷாந்தர காலக்ஷேபத்திற்கும் போதுமானதாயிருந்தது!

* 'ஈயாத புல்ல ரிருந்தென்ன? போயென்ன? எட்டிமரங்
காயா திருந்தென்ன? காய்த்துப் பலனென்ன? கைவிரித்துப்
போயா சகமென் றுரைப்போர்க்குச் செம்பொன் பிடிபிடியா
யோயாம லீபவன் ஸிந்துல ராஜ னொருவ னன்றே!'

* படிக்காசுத்தம்பிரான்

இப்பாவியின் அரசாட்சியிலோ, ஆள்மீந்து தப்புவதே அதிகமாய்த்தோன்றுகிறது. ஒருகால் போஜனாயினும் பட்டத்திற்கு வந்தால் வித்வாங்களுக்கு நல்லகாலம் பிறக்குமென்று எண்ணியிருந்தேன்! இன்று அந்த ஆசையும் நிராசையாய்விட்டது! இரண்டு வர்ஷங்களுக்கு முன்னரே இவ்ராஜ்யத்தின் பட்டத்திற்கு வந்திருக்கவேண்டிய போஜனுக்கே நாசம் நேரிடும்போல் தோன்றுகின்றது. இன்று காலையில் அந்தப் பாவி முஞ்ஜன் செய்த சூழ்ச்சியினின்றும் போஜன் தப்பிப்பிழைத்ததே கேவலம் தைவஸங்கற்பம்! ஆதலால், இனி ஒருக்ஷணமும் இம்மஹாபாபியினுடைய நாட்டில் நாமிருக்கத் தகாது. நடநட!

* "தீயாரைக் காண்பதுவுந் தீதே! திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே!—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே! அவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது!"

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! இவ்வாறு இவர்கள் கஷ்டப்படுவதைக் கண்ணுற்கண்டும், இவர்களது குறையைத் தீர்க்க முடியாதவனா யிருக்கின்றேனே! அப்படி உலகமெல்லாம் புகழ்ந்துகொள்ளப்பட்ட ஸ்ரீஸிந்துல மஹாராஜருக்கு நான் புத்ரனாய்ப்பிறந்ததன் பயனென்னே? இன்னுமிவர்களைப் போல், இருக்கவிடமில்லாமலும், உண்ணச் சோறில்லாமலும், உடுக்க உடையில்லாமலும், கலங்கித் தெருக்களில் திரிகின்ற ஏழைகள் எவ்வளவினரோ? இப் ப்ராஹ்மணோத்தமரைப்போல் உயர்குலத்திலுதித்து, ஹீநத்தொழில் செய்யத்தெரியாமல், இரப்பதைவிட இழிவானது ஒன்றுமில்லையென்றெண்ணி, பிக்ஷை எடுக்கத் துணியாமலும், அரசர்களுடைய ரக்ஷணையில்லாமலும், வீட்டிற்குள்ளிருந்துகொண்டு, பசியினால் தாய் முகத்

* ஔவையார்

தைப் பிள்ளைகள் பார்க்க, புருஷன் முகத்தை மனைவி பார்க்க, அவர்கள் முகத்தை யிவன் பார்க்க, இவர்கள் முகங்களையெல் லாம் ஒருங்குசேர்த்து பார்க்க ஒருவருமில்லாமல், ஆதரவற்று வருந்துங்குடிகள் எத்தனைகோடியோ ? இம்மாது ஶிரோமணி யைப்போல், தாம் புஜிக்காமலே, அகப்பட்ட அந்நத்தையெல் லாம் தம் புருஷருக்கும் பிள்ளைகளுக்கும் படைத்துவிட்டுத், தாம் நித்யோபவாஸமாயிருக்கும் பதிவ்ரதைகள் எத்தனைபெ யரோ ? அந்தோ ! இதென்ன பரிதாபம் ! இந்த ஏழைகளும் ஈசுரனார் ஸ்ருஷ்டித்தஜீவர்கள் தாமே ! இவர்களுக்காகவும் மழை பெய்யவில்லையோ ? அப்படியிருக்க, கோடாநுகோடி ஏழைகள் இப்படி வருந்துவதற்குக் காரணமென்ன ?—இவர் களை யாளும் அரசர்களுடைய பேராசையும் பொறாமையுமே யன்றி, இதற்குக் காரணம் வேறென்ன ? இவர்கள் தின்று பாழாய்ப்போகும் பொருள்களைப்பகிர்ந்து கொடுத்தாலே எண் ணிறந்த ஏழைகள் பிழைப்பார்களே !

(யுக்மகம்)

புண்ணியவா னிவ்வுலகி லறத்தை நாடிப்
　பொருட்டேடி ஸத்திரத்தைப் பொருந்த வைத்தே
எண்ணிறந்த நாடுகளை யதனுக் காக்கி
　யேழைகளுக்கந்நமிட வதனைக் கொண்டு,
விண்ணவரும் விஞ்சையரும் புகழ்ந்து போற்ற
　விருந்திட்டு வானதனில் விருப்பத் தோடு,
கண்ணியமா யதனைப்பன் னூளுங் காக்கக்
　கருதிக்கீர் யஸ்தர்களை யமைக்கு மாறே :
பண்ணவனிவ் வுலகென்னும் ஸத்தி ரத்தைப்
　பாங்குடனே செய்வித்துக் கருணை யாலே,
மண்ணிலுள்ளோ ரெல்லோருந் தாம்பி ழைக்க
　மருவியொரு வருக்கொருவர் நேய மாக,

நண்ணியவோர் தருமத்தைப் பாது காக்க
நரபதியை நியமித்த முறையை, அந்தோ!
எண்ணுத வரசர்களி னியற்கை தன்னை
யென்சொல்வேன்? தண்டனைதான் யாதிவர்க்கோ?

ஸுநந்த :—(சற்றுநேரம் யோஜித்துவிட்டு) அப்படியா ஞல் நாம் எந்த ஊருக்குப் போகலாம்?

கோவி :—எந்த நாட்டில் நமது யோக்யதை யறியப்படு மோ, அந்த நாடே நமது காலக்ஷேபத்திற்குத் தகுந்தது?

போஜ :—(ஆத்மகதமாய்) நல்லது! இவர்களுடைய கஷ்டத்தை முற்றிலும் நீக்க இப்பொழுது முடியாமற்போனபோதிலும், நம்மாற்கூடிய உபகாரத்தை யிவர்களுக்குப் பண்ணுவோம்! நாமின்னுரென்று தெரிவிக்காமலே, இம்முத்துமாலையை யாயினும் இவர்களுக்குத் தந்து, வழியனுப்புவோம். (அவர்கள் அருகிற் சென்று, ப்ரகாசமாய்) ஸ்வாமி! நமஸ்காரம்! தாங்கள் இவ்வேளையில் எங்கே போகின்றீர்கள்? இவர்களெல்லோரும் மிக்க களைப்படைந்திருக்கின்றனர் போலிருக்கின்றதே! இன்றிரவு இங்கேயே யிருந்து, எதாயினும் ஆஹாரஞ்செய்துகொண்டு, வேண்டுமாயிற் காலையிற் செல்லலாமே! போஜனத்திற்கு வேண்டுமாயின் தருகின்றேன்.

கோவி :—(ஜநாந்திகமாய்) இவன் யாரோ இந்த ஊரில் ஒருவன் நல்ல மநமுள்ளவன்போல் தோன்றுகின்முன்! (ப்ரகாசமாய்) அப்பா! நாங்கள் ஜீவநார்த்தம் வேறு நாடு செல்கின்ரேம்! பார்த்த நாழிகை போய்விடுகின்றது! இனித் தாமதிக்கலாகாது!

போஜ :—அப்படியாயின், இதைத் தாங்கள் அங்கீகரித்துக்கொண்டு செல்லுங்கள்! (முத்துமாலையைப் ப்ராஹ்மணர் கையிற் கொடுத்து) இதை விற்று வழிச் செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள்!

**கோவி:**—(வாங்கிக்கொண்டு வெகு ஸந்தோஷத்துடன்) அப்பா! நீ தீர்க்காயுஷ்மானாய் ஸகலைஸ்வர்யத்தையும் பெற்றுச் சக்ரவர்த்தியாய் விளங்குவாயாக! உன்னுடைய தாத்ருத்வத்திற்குத் தராதிபர்களும் நிகரல்லர்! (நோக்கி) நீ யாரோ அறியேன்! ஆயினும் உன் முகத்தில் ராஜதேஜஸ்ஸு ஜ்வலிக்கின்றது! உன்னைப்போன்றவர்கள் ராஜாவாயிருந்தால் என்னைப் போன்றவர்களுக்கென்னகுறை? இந்த ஸமயத்தில் ஈஸ்வரர் தான் எங்களைக் காப்பாற்றுவதற்காக உன்னைக் கொணர்ந்து விட்டனர்!

**ஸுநந்த:**—அப்பா! நீ மஹாராஜாவாயிருந்து நீடூழிகாலம் வாழவேண்டும்!

**போஜ:**—அம்மணீ! எல்லாந் தங்களாசீர்வாதத்தினாற் கிடைக்கும்!

**கோவி:**—அப்பா! நாங்கள் போய்வருகின்றோம்! உனக்கு அமோகமாய் மங்களமுண்டாகுக! (ஐந்தாறடி தூரம் பரிக்ரமித்து, ஆத்மகதமாய்) இம்மஹாபுருஷன் யாரோ? இதுவும் ஈஸ்வராநுக்ரஹமே!

> 'ஹரியே! ஹரனே! ஸுரனே! பரனே!
> அருவே! யருளே! திருவே! தெருளே!
> கிரிஜா ரமணா! கருணா பரணா!
> அருணா டகனே! கருணை புரிவாய்!

(ஸம்ஸாரத்துடன் நிஷ்க்ரமித்தல்)

**போஜ:**—ஆ ஆ! நம் நாடு எந்நிலைக்கு வந்துவிட்டது! சிஷ்டர்கள் நடுநடுங்கியோடவும், துஷ்டர்கள் தழை தழைத்தாடவும் வாய்த்ததே காலம்! அந்தோ! எத்தனைபெயர் இப்ப்ராஹ்மணோத்தமரைப்போல் அந்நமென்பது இன்னதென்றே தெரியாமல், நீரைக்குடித்து வயிற்றைநிரப்பிக் காலத்தைக் கழி

க்கின்றார்களோ? இவர்களெல்லாம் இப்படி வருந்திக்கஷ்டப் படும்பொழுது, நாம் மாத்ரம் ஸுகமாய் ஜீவித்திருப்பதிற் பயனென்னை? பரோபகாரமில்லாத தேஹமிருந்தென்ன, போ யென்ன?

$ "குண்டலத்தி னன்றழகு
கொள்ளல்செவி கேள்வியினால்,
ஒண்டொடியி னன்று கர
முறலழகு கொடையதனால்,
தண்டரள வணிகளுடன்
சாந்தினுடன் றுவுடல்
அண்டினவர் துயர் தீர்க்கும்
ஆற்றலினா லழகெய்தும்."

ஆகலின், இவ்ராஜ்யத்தையடைந்து, ஒன்று இப் ப்ரஜைகளைக்காப்பாற்றும் வழியைத் தேடவேண்டியது! அன்றேல் இந்த நிஷ்ப்ரயோஜநமான உயிரைத்துறக்கவேண்டியது! ஜயமடைந்தால் எத்தனையோ உயிர்களைக் காப்பாற்றலாம்! அன்றேல் நம்முடைய ஜீவனொன்றுக்குத் தானே நஷ்டம்!

* "ஊருணி நடுவூர் நின்ற
வொண்பழத் தருவும் போலப்
பேருறு முயற்சி தன்னாற்
பெருக்கிய பொருள்க ளெல்லாஞ்
சீருற யாவர் மாட்டுஞ்
செலுத்தியொப் புரவி னிற்றி
யாருமொப் புரவாற் கேடுண்
டாயினு மதுவு நன்றே!"

$ சூளாமணி * பிள்ளையார் புராணம்

நல்லது ! இவ் ராஜ்யத்தைப் பெற நம்மாலான ப்ரயத்நத்தைச் செய்வோம் ! பரமேஸ்வரர் பரமதயாளுவானதனால் க்ருபைபுரிவாரென்பது நிஸ்சயம் ! எதற்கும் நாம், நமது நகருக்கு அதிதைவதமான விநாயகர் கோயிலுக்குச்சென்று, ப்ராணதார்த்திஹரரென்று யதார்த்தநாமத்தோடு விளங்கும் அம் முதற் கடவுளை வணங்கி, த்யாநஞ்செய்துவிட்டுப் பின் நடத்தவேண்டியதை யோஜிப்போம் !

(நிஷ்க்ரமித்தல்).

## இரண்டாம் அங்கம்

### முற்றிற்று



# மூன்றாம் அங்கம்

## முதற் களம்

**இடம்—தாரை நகரந்தரகில் ஒரு விநாயகர் கோயில்**

(**பிக்ஷேஶ்வரன்** என்னும் ஒரு ப்ராஹ்மணன் நைவேத்யங்கொண்டு வைக்க, **ஶிவராமன், சந்த்ரஶேகரன், கருணாகரன், பரமஶிவன்** முதலியோர் ஸ்வாமிதர்ஶநஞ் செய்யவரக், **கைலாஸ நாதர்கள்** என்போர் பூஜைமணியை அசைத்துக்கொண்டு விநாயகர் ஸந்நிதிக் கதவைத் திறந்து பூர்வ நீராஜநம் செய்துகொண்டு ப்ரவேஶித்தல்)

**கைலாஸ நாதர்கள்**—(பிக்ஷேஶ்வரன்கூட வேதமோத)

ஓம்! "ஸோமோ வா ஏதஸ்ய ராஜ்ய மாயத்தே, யோ ராஜா ஸந் ராஜ்யோ வா ஸோமேந யஜதே, தேவஸுவா மே தாந் ஹவீம்ஷி பவந்தி, ஏதாவந்தோ வை தேவாநாம் ஸவா:, த ஏவாஸ்மை ஸவாந் ப்ரயச்சந்தி, த ஏநம் புநஸ் ஸுவந்தே ராஜ்யாய, தேவஸூ ராஜா பவதி."

ஓம்! "ந தத்ர ஸூர்யோ பாதி நசந்த்ர தாரகம்,
நேமாவித்யுதோ பாந்தி, குதோய மக்நி:!
தமேவ பாந்த மநுபாதி ஸர்வம்,
தஸ்ய பாஸா ஸர்வ மிதம் விபாதி."

"நதத் பாஸயதே ஸூர்யோ, ந ஶஶாங்கோ ந பாவக:"
யத் கத்வா ந நிவர்த்தந்தே, தத் தாம பரமம் மம"

ஓம்! ஸ்ரீ மஹாகணாதிபதயே நம:, பூர்வ நீராஜநம் தர்சயாமி, நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி.

(கர்ப்பூர தீபாராதனை செய்துவிட்டுத், தட்டை வெளியிற் காட்டிக் கொட்டிவிட்டுப், புஷ்பங்களை எடுத்து அர்ச்சனை செய்ய வாரம்பித்தல்) ஓம்!

| | |
|---|---|
| " ஸுமுகாய நம: | கணாத்யக்ஷாய நம: |
| ஏகதந்தாய நம: | பாலசந்த்ராய நம: |
| கபிலாய நம: | கஜாநநாய நம: |
| கஜகர்ணிகாய நம: | வக்ரதுண்டாய நம: |
| லம்போதராய நம: | சூர்ப்பகர்ணாய நம: |
| விகடாய நம: | ஹேரம்பாய நம: |
| விக்நராஜாய நம: | ஸ்கந்தபூர்வஜாய நம: |
| தூமகேதவே நம: | விக்நேச்வராய நம:" |

ராகம் - காபி: தாளம் - ஏகதாளம்

பல்லவி

கணநாத! கணநாத!
கஜாஸ்ய! குரு மயி-கருணாம் ஜய ஜய!

சரணங்கள்

அகிலஜனைரப் - யக்ரே பூஜித
நிகிலாந்தராய - நிவிராக! ஜய ஜய! (க)

ப்ரணவார்த்தம் தவ - ப்ரதயதி வதநம்,
அணிமாதிகமப் - யதிகம், ஜய ஜய! (க)

சாதுர்வர்ண்யம் - சத்வாரஸ் தே
தாதும் ஹஸ்தா - தக்ஷா ஜய ஜய! (க)

பாசாங்குசௌ தே - ப்ரஸவதி விஜயே
ஆசாமர்த்யயோர் - அநவம், ஜய ஜய! (க)

IX

# BHOJA AND A POOR BRAHMAN FAMILY

OR

" PRINCE BHÔJA PRESENTING A NECKLACE OF PEARLS TO GOVINDA PANDITA "

*Act II, Scene* 3, *Pages* 106-107

Facing page 

2

# போஜனும் ஓர் எளிய ப்ராஹ்மண குடும்பமும்

அல்லது

" போஜகுமாரர் கோவிந்த பண்டிதருக்கு
ஒரு முத்துமாலையை யினுமா யளித்தல் "

---

போஜ:—(ஆத்மகதமாய்) நல்லது! இவர்களுடைய கஷ்டத்தை முற்றிலும் நீக்க இப்பொழுது முடியாமற் போனபோதிலும், நம்மாற் கூடிய வுபகாரத்தை யிவர்களுக்குப் பண்ணுவோம். நாம் இன்னாரென்று தெரிவிக்காமலே, இம்முத்து மாலையையாயினும் இவர்களுக்குத் தந்து வழியனுப்புவோம். (அவர்கள் அருகிற்சென்று ப்ரகாசமாய்) ஸ்வாமி! நமஸ்காரம்! தாங்கள் இவ்வேளையில் எங்கே போகின்றீர்கள்? இவர்களெல்லோரும் மிக்கக் களைப்படைந்திருக்கின்றனர் போலிருக்கின்றதே. இன்றிரவு இங்கேயே யிருந்து, ஏதாயினும் ஆஹாரஞ் செய்துகொண்டு வேண்டுமாயிற் காலையிற் செல்லலாமே! போஜநத்திற்கு வேண்டுமாயின் தருகின்றேன்.

கோவி:—(ஜநாந்திகமாய்) இவன் யாரோ ஒருவன் இந்த வூரில் நல்ல மநமுள்ளவன்போல் தோன்றுகின்றான். (ப்ரகாசமாய்) அப்பா! நாங்கள் ஜீவநார்த்தம் வேறுநாடு செல்கின்றோம். பார்த்த நாழிகை போய்விடுகின்றது. இனித் தாமஸிக்கலாகாது.

போஜ:—அப்படியாயின், இதைத் தாங்கள் அங்கீகரித்துக்கொண்டு செல்லுங்கள்! (முத்துமாலையைப் ப்ராஹ்மணர் கையில் கொடுத்து) இதை விற்று வழிச்செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள்.

கோவி:—(வாங்கிக்கொண்டு வெகு ஸந்தோஷத்துடன்) அப்பா! நீ தீர்க்காயுஷ்மானாய் ஸகலைச்வர்த்தையும் பெற்றுச் சக்ரவர்த்தியாய் விளங்குவாயாக!

—அங்கம். II, களம். 3, பக்கம். கoசு–கoஎ



IX] போஜனும் ஓர் எளிய ப்ராஹ்மண குடும்பமும் [கசரு

கரய்ருத ஊந்த: - கயெயதி பரமம்,
புருஷ³ணமேகம் - புருஷம், ஜய ஜய ! (ஜ)

ஸப்ரஹ ஊஷரந் தவ - ஸ்ப்ரஹ்மாண்ஸ ந் த்வயி,
விஹிதம் ஸம்ஸதி - நிர்மல ! ஜய ஜய ! (ஜ)

ஸக்தஜநஸ்ரம - ஸஞ்ஜந நிபுண,
முக்திம் மே திஸ - முனிநுத, ஜய ஜய ! (ஜ)

ஸர்வேஸ்வர ! தவ - ஸக்திம் ஸஹாயா
ஸர்வே நிமயா: - ஸாஸதி, ஜய ஜய ! (ஜ)

ஸவிராந்தக ப்ரிய - ஸோஊர ஸிவஸத,
நாராயணநுத - நளிந சரண, ஜய ! (ஜ)

ஓம் ! ஸ்ரீ ப்ரணதார்த்திஹரஸ்வாமிநே நம:—நாநாவிய திவ்ய பரிமள மந்த்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

**ஸிவராமன்** :—(அதேஸமயத்தில்)

ரஜோ ஸணபரம் வியிமரீசி பஸஹி ;
க்ருத சராசரஸணம் ப்ரயமத:,
தமோஸணயுதம் ஸிவயமாகிலமுவைர்
விஹத லோகவிஹம் லயவிஜெள ;
ஸத்வஸண மச்யுத மநுப்ரஸ்ருதிஹிர்
யுத ஸமஸ்த ஸவநம் தஊநுவை,
ஸோம்யவில லோகபிதரம் ஸவைகரம்
வியிஸிவாச்யுதபதிம் ஸணபதிம்.

(தீபாராதனை பண்ணத்தொடங்கியதும்) ஹர! ஹர! ஹர! ப்ரணதார்த்திஹர! ஸர்வாபராதாந் க்ஷமஸ்வ!

**கருணாகரன்** :—(அதேஸமயத்தில்)

**ராகம் - நாட்டை: தாளம் - ஆதி**

**பல்லவி**

கணபதியே ஶரணம்!—காவா யென்னைக்
கஜமுகனே ஶரணம்!

**அநுபல்லவி**

இணையில்லாதோனே!—இமையவர்
இடுக்கண்களைந்தோனே! (கணபதியே)

**சரணங்கள்**

மறைப்பெருஞ் ஜ்யோதியனே!—ஆதி
ஆழிகைக்கொண்டவனே!
பொறுத்தருள்வா யென்னை!—புனிதா
புகழ்வேன் யானுன்னை! (கணபதியே)

அநாதரக்ஷகனே!—ஹரஸுத
ஆநந்தகாத்திரனே!
விநாயகனே யபயம்!—விஶ்வ
விதாயகனே யபயம்! (கணபதியே)

(தீபாராதனை தொடங்கும்பொழுது) அர! அர! அர! விநாயக! நீயே ஶரணம்!

**சந்த்ரஶேகரன்**:—(ப்ரதக்ஷிணஞ் செய்துகொண்டே அதே ஸமயத்தில் பாடி நர்த்தநஞ்செய்தல்)

## ஹிந்துஸ்தாநி மெட்டு

### பல்லவி

பார்வதிநந்தந - பவதநயா !
பவபயபஞ்ஜந - பாபஹரா !

### சரணங்கள்

அருளுரு வெளியே - வெளியுறு பொருளே !
அருட்பெருஞ் ஜ்யோதியே - ஆண்டவனே !
மருளுறு தெருளே - தெருளுறு மொளியே !
மறைமுடிமணியே - மாமணியே ! (பா)
தருவளர் நிழலே - நிழல்வளர் ஸுகமே !
தடம்வளர் புனலே - தாரகமே,
திருவள ருருவே - வுருவள ருயிரே !
திருகணபதியே - தீபதியே ! (பா)

(தீபாராதனை நடக்கும்பொழுது) மஹா கணபதியே ! அடியேனை யாண்டு கொண்டருள்வீர் !

பரமசிவன் :—(ப்ரதக்ஷிணஞ் செய்துகொண்டே அதே ஸமயத்தில்)

ஸித்தி விநாயக ! ஶரணம் ஶரணம் !
செந்தா மரைமலர்ப் பாதா ! ஶரணம் !
பக்த ஜநேஷ்டத ! ஶரணம் ஶரணம் !
பார்வதி நந்தந ! ஶரணம் ஶரணம் !
முக்தி யளிப்போய் ! ஶரணம் ஶரணம் !
முருக ஸஹோதர ! ஶரணம் ஶரணம் !
புத்தியும் ஶக்தியுந் தந்தருள்வோனே !
புநிதா ! ஶரணம் ஶரணம் ஶரணம் !

(தீபாராதனை பண்ணும்பொழுது) அர! அர! அர! ஸித்திவிநாயகா ! எங்களைக் காத்தருளும் !

கைலாஸ் :—(முன்போற் பிக்ஷேஸ்வரன் வேதமோத)

"ராஜாயி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹிநே, நமோ வயம் வைஸ்ரவணாய குர்மஹே, ஸ மே காமாந் காமகாமாய மஹ்யம், காமேஸ்வரோ வைஸ்ரவணோ ததாது, குபேராய வைஸ்ரவணாய, மஹாராஜாய நம:"—ஓம் ஸ்ரீ ப்ரணதார்த்திஹரஸ்வாமிநே நம:, உத்தர நீராஜநம் தர்ஸயாமி, நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி.

(கர்பூரஹாரத்தி செய்துவிட்டு வில்வதளங்களையும் விபூதியையும் தட்டில்வைத்து யாவருக்குமளித்தல்)

(அதேஸமயத்தில் போஜன் ப்ரவேசித்தல்)

போஜன் :—(ஆத்மகதமாய்) ஆ ஆ! நாம் வருவதற்கும் ஸ்வாமிக்குக் கர்பூரதீபாராதனை நடப்பதற்கும் ஸரியாயிருக்கின்றது!

* "லக்ஷ்மீந் ததோது நிதரா மிதராநபேக்ஷம்
அங்க்ரித்வயம் நிகமஸாகி ஸிகாப்ரவாளம்;
ஹைரம்ப மம்புருஹ ஸம்பவ ஸௌர்யநிக்நம்
விக்நாத்ரிபேதஸ தயா ரயாரங்ஹரம் ந:"

இவ் விநாயகர் க்ருபையினால் நமக்கொன்றும் குறைவு வாராதென்றே நம்புகின்றேன்! ஆயினுமிந்தஸமயத்தில் இவர்களுக்கு நாமிங்கு வந்திருப்பது தெரிவது தகுதியன்று! ராத்ரி காலபூஜையும் முடிந்தபடியால் இவர்கள் ஸீக்ரத்திலேயே வெளியிற் செல்லுவார்கள்! அதுவரையிலும் நாம் ஒரு பக்கமாய் மறைந்து நிற்போம். (போஜன் ஒருமூலையில் மறைந்து

* போஜ சம்பு

ஙிற்க, குருக்களும் மற்றவர்களும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிக ளைச் செய்துவிட்டு, ஸந்நிதிக்கதவை மூடிக்கொண்டு, ஒருவர் பின் ஒருவராய் வெளியில் நிஷ்க்ரமிக்க) யாவரும் சென்றனர் கள்! (முன்வந்து) இப்போது நாம் கதவைத்திறந்து ஏகாந்தமாய் ஸ்வாமி தர்ஶநஞ் செய்வோம்! (ஸந்நிதிக் கதவைத்திறந்து) மஹாகணபதியே! ப்ரணதார்த்திஹரா! உம்மையே ஶரணம் புகுந்தனன்! என்னை யெக்காலத்திலுங் காத்தருள்வீர்!

தங்கு தாவரமும் ஜங்க மங்களையுந்
தயை யுடன்படைத் தருளின
தநுஜ யக்ஷஸுர நரர்கள் போற்றலுறும்
தந்தை யாமுதற் கடவுளை,
பொங்கு பாற்கடலி னின்று தித்தமகள்
போற்ற, வண்ட மனைத்தையும்
பொறுத்தி குக்ஷியினிற் பாதுகாத்தருளும்
புண்ட ரீக தளாக்ஷனை,
அங்கு மெங்குமொரு ஸச்சி தாக்ருதியு
மந்த காரியை யண்ணலை
ஆதி மத்யமுடி வேது மின்றியரு
ளாகி நின்ற துரீயனை,
எங்கு முள்ளபல ஜாதி யர்க்குமுய
ரீஶ னையிலகு ஜ்யோதியை
யென்று மேயெமது நாத னைத்தொழுது
மேத்தி யஞ்ஜலி செய்குவாம்!

(நேபத்யத்திற்குள் காநம்)

"கோண்டலாராடேயோ! கோடலாராடேயோ!
டிண்டிடிண்டிடேயோ! டேயோ! டேயோ! டேயோ!"

**போஜன்** :—(கேட்டு எழுந்து) இந்த காநம் எங்கிருந்து கேட்கின்றது! எவர்களாவது இடையர்கள் மாடுகளை யோட்டிக்கொண்டு போகின்றனரோ?

(மறுபடியும் நேபத்யத்தில்)

இத்தரோய்! நம்ம மாடுங்களாம் இங்கேவந்திடுச்சுபோலிக்குதுடோய்!'

**போஜன்** :—(நோக்கி) ஆம்! யாரோ மாட்டிடையர்கள் தாம் இருவர் இவ்வழியாய் வருகின்றார்கள்! நாமொருபக்கஞ் சென்று மறைந்து நிற்போம்! (அப்படியே செய்தல்)

(**கோபாலன், க்ருஷ்ணன்** என்னு மிரண்டிடையர்கள் ப்ரவேசித்தல்)

**கோபாலன்**:—இத்தரோய்! இங்கே எங்கேயும் நம்மமாடுகளைக்காணண்டோய்!—இப்போ மணியோசை கேட்டுச்சே யிங்கே தானே தம்பீ?

**க்ருஷ்ணன்**:—இங்கேயல்ல அண்ணே! இந்தக் கோயிலுக்குள்ளே பூசை செஞ்சாங்கடோலிருக்குது! அதுதான் மணியோசை கேட்டிருக்கும்!

**கோபா**:—(ஆச்சர்யத்துடன்) என் தம்பீ! பூசை செஞ்சாக்கே மணி ஓசை கேய்குமோ?

**க்ரு**:—ஆமாண்ணே! பாட்டாருங்க பூசை டண்ணும்போது மணியடிப்பாங்கோ!

**கோபா**:—(குதூஹலத்துடன்) ஆ! அந்த மணியை எங்கெ கட்டுவாங்க? சாமியார் கயுத்திலே கட்டுவாங்களோ?

**க்ரு**:—(சிரித்து) எடையனென்பது உனக்குத்தான் அண்ணே சரியான பேரு! சாமியார் கயுத்திலேயா மணியைக்கட்டுவாங்கோ!

**கோபா**:—பின்னே எங்கே கட்டுவாங்க தம்பீ?

**க்ரு**:—இல்லே அண்ணே! குருக்கயாருங்க இக்கிருங்களே, அவங்க சாமியாருக்கு நேயித்தியம் டண்ணச்சே, கையிலே

மணியை எடுத்துகிட்டு கண கண கண என்று அடிப்பாங்கோ! அது என்னாத்துக்கென்னு? சாமியார் பூமிச்சிக்கு வாராம்!

கோபா:—என் தம்பீ! நேயித்தின்னு பலிபோடுவாங்களோ?

க்ரு:—நம்மளவங்க பூசாலிங்களன்னு டலிபோடுவாங்கோ! பாப்பாருங்க இக்கிறுங்களே, அவங்க சொயகட்டே, வடே, சுண்டல், பாவஷம், பயம் இதெல்லாம் நேவுத்தியம் பண்ணுவாங்க.

கோபா:—(தலையைத் தடவிக்கொண்டு) இப்போதான் ஒருசேதி மண்டையிலே வருது தம்பீ! எங்க அய்யா பெஞ்சாதியிக்கராங்களே—இக்கிராங்களோ இல்லேயோ?—அவங்க மெய்த்த நல்லவங்க தம்பீ! ஒருநா எனக்கு ரவை சொயக்கட்டை குடுத்தாங்க! (நொட்டையிட்டுக்கொண்டு) ஐயோ! என்னமாயிருந்திச்சுன்றே! (ருசியையபிநயித்து) பிளியாம்பயம் கெட்டுப்போயிடுச்சுப்போ!

க்ரு:—என் அண்ணே! அதுச்குள்ளார நூல் வெச்சிருந்தாங்களோ இல்லேயோ?

கோபா:—(ஆச்சர்யத்தையடைந்து) ஆமாந் தம்பீ! அதிலேந்து இசுக்க இசுக்க நூலு நீள சும்மா வந்துச்சுன்றேன்! அது வொனக்கு எப்படி தெரிஞ்சிச்சு தம்பீ? சோஷியமோ?

க்ரு:—சரி! ஏதாவது ஊசச்சொயக்கட்டை ஒங்க அய்யா ஆட்டே மீந்துபோயிட்டிருச்கும். குட்டையிலே கொட்டுவானேன்னுட்டு வொனக்கு சொடுத்திருப்பாங்சோ! பாப்பாருங்க கூட கல்லாயிருந்த்'ச்சுனு கொடுப்பாங்களா?

கோபா:—இல்லே! தம்பீ! மெயுத்தவும் நல்லாயிருந்துச்சு! நீ துண்ணிருந்தான்னு தெரியும்! ஷோஷியம்!

க்ரு:—ஆமாம்! அண்ணே! நான் சொயக்கட்டை எப்பவானு துண்ணிருக்கனு?

கோபா:—அது எப்படியானு போயிட்டுப்போவது தம்பீ! ரவை பொவலைக்காம்பிருந்தா கொடேன்! வாவூறுது!

க்ரு:—ஐயோ! இப்பொதான் ஒரு காசுக்கு பொவலை வாங்கிப்போட்டுக்கிட்டு மீதியை யிந்த தோயித்தியிலே கட்டியா முடிச்சி வைச்சிருந்தேன்! அந்தப் பக்காளிபையன் வந்து ஒரே வாயா வாங்கிப்போட்டுக்கினு பூட்டான் அண்ணே!

கோபா:—போயிட்டுப்போறன்! அந்த கோயிலுக்குள்ளேபோனு, என்னமானு துண்ணரத்துக்குக் கிடைக்காது?

க்ரு:—வேண்டிய பூசை கிடைக்கும் அண்ணே! வேணுமானு நீ போய்ப்பாரேன்!

கோபா:—(கோயிலுக்குட் சென்று மெள்ளக் கதவைத் திறந்து நோக்கி) தம்பீ! எவனோ ஒத்தன் வண்ணுஞ்சாலாட்டம், வவுத்தைச் சாச்சிக்கினு, கொட்டாபிளியாட்டம் குந்திகினுயிருக்கா இங்கே! (நோக்கி) ஹி ஹி ஹி ஹி! (வெறியனைப் பெருஞ்சிரிப்புச் சிரித்தல்)

க்ரு:—என்னுண்ணே! உருண்டுருண்டு சிரிக்கிரே! என்னுண்ணே அதிஷயம்!

கோபா:—அய்யே! மூஞ்சியைப் பார்ரோய்! ஹி! ஹி! ஹி! ஓடியா தம்பி! ஓடியா தம்பீ! இங்கே ஒத்தனுக்கு மூஞ்சியிலே வாலுதொங்குது!

க்ரு——எங்கே யண்ணே? எங்கே? (ஸந்நிதிக்கு வருதல்)

கோபா:—(விநாயகரைக் காண்பித்து) இதோ தெரிலே வாயிலே ஒரு கொம்புகூட முளேச்சு தொங்குது பார் தம்பீ!

க்ரு:—அடடடா! குடிகெட்டது! நீபூட்டே!

கோபா:—என்ன தம்பீ? என்ன?

க்ரு:—அடபயித்தியமே! அவங்கதாண்ணே தெய்வம்!

கோபா:—இதியென்னுதெய்வம் தம்பீ! கங்கம்மாவா? மன்னுரசாமியா! என்ன தெய்வம் தம்பீ யிது?

க்ரு:—அதெல்லா மல்ல அண்ணே! இவங்கதா அண்ணே புள்ளையார்! இவங்களைத்தாண்ணே பாப்பாருங்க இகினேச்சுர ரென்று சொல்றாங்க! பயித்தியமே! பாப்பானண்டை இத்தனை நாளாய் வேலையிலிருந்தும் இது தெரியலையா?

கோபா:—என் தம்பீ! புள்ளையாரின்னுட்டுக்கூட ஒரு தெய்வமிக்குதோ? நம்ப கங்கம்மா திருனாளும்போது எத்தனையோ தெய்வம் காப்புக்கட்டிக் கும்பிடுவமே, அதிலே புள்ளையாரின்னுட்டு நான் கேட்டதில்லையே!

க்ரு:—பின்னே எந்த தெய்வத்தை அண்ணே கேட்டிருக்கை?

கோபா:—எத்தனையோ தெய்வம்! அதுங்களுக்கு கணக்கா வயக்கா! நம்பளுக்குத் தெரியாதென்னு பார்த்துக்கினேயோ? நம்ப ஒருதரம் கங்கம்மா கொடம் எடுத்திருக்கோம் தம்பீ! அப்போ அந்தப் பாட்டெல்லாம் நல்லா கத்துக்கிணேன்!

க்ரு:—என்ன பாட்டண்ணே அது? சொல்லு கேப்போம்!

கோபா:—ஏ ஏ! கொடம் வாண்டாமா! சும்மா பாடுவேனே? நீ கத்துக்கினையானே! சோஷியம் சொல்லித்தரையா, பார்ரேன்!

க்ரு:—சோஷியத்துக்கென்ன? அண்ணே! அல்லாம் ஒனக்குத்தான் கத்துக்கிண்டேன்! நீ பாடண்ணே கேப்போம்! இது மட்டுக்கும் உன்னைப் பாடையிலே பார்க்கலே!

கோபா:—ஆனா கொடங்கொண்டுவந்தையானா பார்ரேன்!

க்ரு:—தலையிலேயிக்குது என்னு எண்ணிக்கோயேன்!

கோபா:—ஆனா, நானுந்தான் பாடினேன்னு எண்ணிக்கோயேன்.

க்ரு:—நல்லது! இதோ தண்ணிப்பானை ஏதோயிருக்குது இதை எடுத்தினுவாரேன். அப்பவானா பார்ரையா? (அங்கிருந்த ஒரு தண்ணிப்பானையை எடுத்து கோபாலன் தலையில் வைத்தல்)

கோபா :—இப்போ,வேணமட்டும்,பார்ரேன். சேள்தம்பீ!! (கங்கம்மா கொடத்தைத்தூக்கி ஆடுகிறவன்போல் நடித்துக் கொண்டு)

> சூரன் கருப்பன் கருப்பண்ணன்
> சொக்கன் நொண்டி நல்லண்ணன்,
> தூற்றித் தூண்டி சாமுண்டி
> தோட்டிய சின்னன் காட்டேரி,
> மாரி முனியன் மன்றாரன்
> மாடன் சங்கிலி பாவாடை,
> மயான வாசி வழிபறித்தான்
> மலையன் பக்கிரி மின்னடியான் ;
> சேரிமின்றாரன் குழியிரிசி
> சிறுகாட் டுடையான் பனைமரத்தான்,
> செல்லன் இருளன் பெத்தண்ணன்
> செல்லிச் சடையன் சத்தகந்நி,
> வீரன் மோகினி யேகாத்தா
> வெறியன் பித்தன் படையாச்சி,
> வெள்ளி முருகன் வெட்டுண்ணி
> வீரி பிடாரி கங்கம்மா !

ஏ கங்கம்மா ! ஏ கங்கம்மா ! ஏ கங்கம்மா ! (பாடிக்கொண்டே குதித்தல்)

கீரு :—(ஒரு பெருஞ்சிரிப்புடன்) அடே ! பயித்தியமே ! இதெல்லாம் நம்பளவங்க தொழப்பட்ட தெய்வம் ஆச்சே அண்ணே ! புள்ளையார் தானே பாப்பாருங்களுக்கு முதல்தெய்வம் ! பின்னே தவடையிலே போட்டுக்கொள்ளண்ணே ! இல்லாட்

டா, ஒன்னே யிந்த ராவிக்குள்ளே தேள் கொட்டும்படி செய்யும் ! நீ வேணுமானு பாத்துக்கோ !

கோபா :—(பயந்து) ஐயோ ! என்ன சேய்ரது தம்பீ ! அம்மாடி ! இப்பவே தேள் சொட்டராப்பலே இருக்குதே ! (இரவில் தேள்சொட்டப்பட்டவன்போல் நடித்தல்)

க்ரு :—நான் சொன்னனே ! பாத்துக்கிண்டையா ? இந்த சாமியார் ரொம்ப சத்தி யண்ணே ! பேசாமல் இப்பவே தோப்பணம் போட்டு தவடையிலே தெரியாமல் செய்தேன்னிட்டுப் போட்டுக்கோ ! ஒன்னுமிரு து ! இல்லாட்டா வாயடச்சிப்பூடும்!

கோபா :—(வாயடைபட்டது போல் மநதில் திகிலடைந்து) வா - வா - வா - வா - வா யெல்லாம் நோவுது தம்பீ ?

க்ரு :—பயப்படாதே அண்ணே ! இந்த சாமியார் பத்தியச்ச தெய்வம் ! நான் சொன்னுப்பேலே செய் ! மன்னிச்சுடுவார்.

கோபா :—(க்ருஷ்ணனுக்கெதிரில்நின்று) சாமீ ! தெரியாமே சேஞ்சிட்டங்கோ பொறுத்துக்கிணம் ! பொறுத்துக்கிணம் ! (க்ருஷ்ணனுக்குத் தோப்பணம் போடுதல்)

க்ரு :—அட மடைமையே ! எனக்கல்ல அண்ணே ! சாமியாருக்குப் போடு ஆறு தோப்பணம் !

கோபா :—ஆமாம் ! ஆமாம் ! புத்தி ! புத்தி !! சாமி ! ஒனக்குத் தோப்பணம் போர்ரேன் ! மன்னிச்சிடுங்கோ ! லாபம் ! இயண்டு ! நாலு ! அஞ்சு !

க்ரு :—என்னண்ணே ! ஒன்னுவிட்டுட்டே ! மூணு சொல்ல வேண்டாம் !

கோபா :—ஆம் தம்பீ ! கணக்கு எப்படியோ மறந்து பூடுச்சு. எங்க அய்யாவீட்டிலே படி சொடுப்பாங்கோ ! அதை அளந்தளந்து கணக்கு மெத்தநல்லா தெரிந்திருந்துசு தம்பீ ! பத்துமட்டுக்கும் தண்ணியாயிருந்துச்சு ! இப்போ எப்படியோ தப்பிபோயிடுச்சு ! இதோ திரியுஞ்சொல்லரேன் சேக்கரையா ? லாபம் ! இயண்டு ! மூணு ! அஞ்சு ! (சொன்னதுஞ் சொல்லா

த்துமாய் தூரத்தில்நோக்கி) ட்றியோ! ட்றியோ! ட்றியோ! (கீச்சுக்குரலுடன் எழுந்து விரைந்தோடுதல்)

கிரு:—அடடடா! எங்கே அண்ணேபோறே! எங்கப்போறே! நில்லண்ணே! நில்லு! கொறையும் போட்டுட்டுபோ! (அவன் போனபக்கம் உற்றுநோக்கி) அய்யய்யோ! பயித்தியத்துக்கு என்னமோ வந்திடுச்சு!

கோபா:—(திரும்பி எரைக்க எரைக்க ஓடிவந்து) தம்பீ! அந்த சங்கன்மாடு நம்ப ரங்கையர் பயிரை யெல்லாம் சாடா மேஞ்சுடுச்சு! ஒரு கதிர்கூடயில்லே!

கிரு:—போயிட்டுப்போவுது! அந்த அகம் பிடிச்ச பாப்பாஹுக்கு வேணுமண்ணே! நீ போடுமெய்த்த தோப்பணத்தையும்! இல்லாட்டா சாமியாருக்கு கோவம் வந்துடும்!

கோபா:—ஆமாந்தம்பீ! அந்த கோணக்கொம்பு மாடு வந்து, நம்பளே இசுத்துக்கினுபோயிச்சு! இல்லாட்டா—தோப்பணமா போர்ரது தம்பீ! ஆனு நீயே எண்ணிக்கோ! (பரபரவென்று பத்து தோப்பண்ணம் போடுதல்)

கிரு:—ஒண்ணு! ரண்டு! மூணு! போறுமண்ணே போறும்! தவடையிலே போட்டுகினு சாமியாரை கும்பிடு!

கோபா:—சாமீ! போட்டுக்கினேன்! (பளபளவென்று தவடைகளிற் போட்டுக்கொண்டு) இகிநேசரா! தண்டம்! தண்டம்! தண்டம்! (கோணலும் மாணலுமாய் நமஸ்காரம்பண்ணி) சாமி! இகிநேசரா! புள்ளேயாரே! இனிமே கோவிச்சிக்கக் கூடாது! அல்லாஞ் சேஞ்சிட்டேன்! (ஸ்வாமியை உற்று நோக்கி செவிகொடுத்து)! தம்பீ! சாமி என்னமோ கீச் கீச்சென்னு பதில் சொல்லுது!

கிரு:—(செவிகொடுத்து) இல்லேயண்ணே! இல்லே! பல்லி பேசுறது?

கோபா:—ஆ! ஆ! ஆனு உன்னே பல்லி சோஷியத்திலே

மெய்த்த கட்டிக்காரன் ருங்களே, அது என்ன பேசிச்சுசொல்லு பாப்போம் ?

க்ரு:—அதுவா அண்ணே ! சோல்றேன் கேளு ! (யோஜித்து) இராஜ பயம் !

கோபா:—அதெப்படி தம்பி ?

க்ரு:—ஜோஷியத்திலே இப்படி சொல்லியிருக்குது அண்ணே !

கீச்சுக்கீச் சென்றொருகால்
கிழக்குமுக மிரண்டுதரம்
பேச்சுகளைத் தான்பல்லிப்
பெருக்கிடிற்காண் ராஜபயம் !

கோபா:—(பயந்து) அப்பாடி ! நான் ஓடியேபூட்டேன் ! ராசா என்ன செய்வாரோ பயமாயிருக்குதே !

க்ரு:—நமக்கல்ல அண்ணே ! அப்படி அது பேசினு ராசனுக்குப் பொல்லாத ஆபத்து என்னு சொல்லுவாங்க ! பாவம் நம்ப ராசா மவன் இச்கிருனே, அவனுக்குதாண்ணே பயம் !

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ ஆ ! இஃதென்ன விபரீதம்! எனக்கென்ன பயம் நேரிடப்போகின்றது? யான் இங்கிருப்பது ஒரு வேளை யிவர்களுக்குத் தெரியுமோ ? (நன்ருய் மறைந்து நிற்றல்)

கோபா:—சொல்லு தம்பி ! (செவிகொடுத்து) திரியும் என்னவோபேசுது ? பார் தம்பி !

க்ரு:—(கேட்டு) அண்ணே ! நாமினிமேல் இங்கிருக்கப்படாது ! அந்தத்துரோகி முஞ்சராசன் இச்கிருனே அவனும் இன்ஞெருத்தனுமா நம்ப ராசா மவனைக் கொல்றத்துக்கு யோசனை செய்ய இங்கே வரப்போருங்க ! இங்கே இனிமேலிருந்தா நம்ப தலைக்கேவரும்; பேசாமே நம்ப போயிடலாம் வா! சாமி இருக்

கிறான்! ராசா மவனை பாத்துக்காதே போவனு? போவோம் வா! (இருவரும் நிஷ்க்ரமித்தல்)

போஜ:—(மநதில் ஶங்கையுடன் முன்வந்து) இவ்விடை யர் சொல்லிப்போனது உண்மையாயிருக்குமோ? ஆ ஆ! இப் போதன்றோ, நாம் குருகுலத்தைவிட்டு வெளியிற் புறப்பட்ட தன் பயன் விளங்குகின்றது! வீணாய்ப் புத்தியின்றி புத்திஸா கரரை வெறுத்துக் கொண்டேனே! இப்பொழுதன்றோ நமது ஆசிரியருடைய நல்லெண்ணமும், நெடுந்தூர யோஜனையும் தெரியவந்தது!

* "ஆபத்துக் குதவாப் பிள்ளை,
அரும்பசிக் குதவா வந்நம்
தாபத்தைத் தீராத் தண்ணீர்,
தரித்திர மறியாப் பெண்டீர்
கோபத்தை யடக்கா வேந்தன்
குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனில்லை யேழுந்தானே!"

ஐயோ! இக்காலையில் யான் புறப்பட்டவேளை என்ன வேளை யோ? ஒன்றின் மீதொன்றாய் ஸங்கடங்கள் வருகின்றனவே! இந்தஸமயத்தில் நாம் எப்படி யிக்கொடியவன் கையிலிருந்து தப்பித்துச் செல்வோம்? ஏ! கணேசா! என்னைக் கைவிட லாகாது! உன்னையே ஶரணமடைந்தேன்!

முன்னறியேன் பின்னறியேன் மாதுபாலென்
மூடமநமிழுத்தோட வோடிவாடி,
நன்னடையும் நற்குணமும் பொருந்துமென்றன்
நற்குருவை நம்மாது நாஶமானேன்!

* விவேக சிந்தாமணி

என்னறிவின் மடைமையை யான் யாதுரைப்பேன்?
ஹேரம்ப ! என்மீது கருணை செய்வாய்
என்னரசே ! என்னமுதே ! நின்பாலன்றி
எவர்க்கெடுத்தென் குறைதன்னை யியம்புவேனே!

ஏ ! ப்ராணதார்த்திஹர ! உமது அவ்யாஜமான கருணையை யான் என்னென்று சொல்லுவேன் ! அவ்விரண்டிடையர்கள் மாத்ரம் இரக்க மில்லாதவர்களா யிருப்பின் என்கதியென்ன வாகும் ? (செவிகொடுத்து) ஓ ஓ! இஃதென்ன ! பேச்சுக்குரல் தானே! வேறு யாவராயினுமிங்கே வருகின்றனரோ? (நோக்கி) ஸரி ! இடையர்கள் சொல்லியது உண்மையாகவே முடிந்துவிட்டது ! நமது சிற்றப்பன் தான் அதோ வருகின்றான் போலும் ! இப்போது நாமேன்னசெய்வோம் ? எங்கே புகுவோம் ?— எதற்கும் நம்மை இத்தனை ஸங்கடங்களினின்றும் காத்தருளின கருணாநிதியான கடவுள் இருக்கின்றார்! இங்கு நடக்கப்போகிற விசேஷத்தையும் மறைந்து நின்று கேட்போம் !

'வ( ந்யழைத்தாலும வாராத வாரா !
பொருந்துவன போமினென்றாற் போகா !''

(ஒருபுறமாய் ஒளிந்துநிற்றல்)

(ப்ரவேசித்து)

முஞ்ஜராஜன்:—(ஆத்மகதமாய்) ஆ ஆ ! இந்நாட்டை நம் கைவசஞ்செய்வதற்காக என்னென்ன கார்யங்களை யெல்லாம் செய்யலாயினேம் ! ஒன்றும் பயன்படாதுபோல் தோன்றுகின்றதே ! இத்தனைநாளாய் புத்திஸாகரனுடைய வீட்டிற் பூனை போல் அடங்கியிருந்த போஜன், இன்று வெளியிற் கிளம்பியதை யோஜித்திடில் ஏதோ விசேஷ மிருக்கவேண்டு மென்றே தோன்றுகிறது. இத்தனை நாளாய் விலாஸவதியினிடம் வாராதவன் இன்று அவளிடம் வந்ததன் கருத்தென்னே ? எல்லாம் ஆச்சர்யமாயிருக்கின்றது !—இந்நகரத்தாரிலும் சிலர்,

அவனை அரசனென்று மதித்து மர்யாதை செய்தனராம்! சிலர் இன்று அவனது தர்ஶநங்கிடைத்தற்சாகவே தத்தங்குல தேவதைகளுக்கு விஶேஷ ஆராதநம் புரிந்தனர்களாம்! இவற்றையெல்லாம் தீர விசாரித்திடில், ஶீக்ரத்திலேயே போஜன் நம்மை எதிர்க்கவும், ப்ரஜைகள் அவனுக்குதவி செய்யவும், இவ் ராஜ்யம் நம் கைவிட்டகலவும் நேரிடுவதன்றி, நம் தலைக்கும் நமது குடும்பத்திற்குமே நாஶம் வருமென்பதில் ஸந்தேஹமில்லை! ஆம்!

* 'பொன்னொடு மணியுண் டானாற்
புலையனுங் கிளைஞ னென்று
தன்னையும் புகழ்ந்து கொண்டு
ஜாதியின் மணமுஞ் செய்வார்;
மன்னரா யிருந்த பேர்கள்
வகைகெட்டுப் போவா ராயின்
பின்னையு மாரோ வென்று
பேசுவா ரேசு வாரே!'

ஆயினுமிப்பொழுது மென்ன? முயற்சியாலாகாதது மொன்றிருக்கின்றதோ! நமது ராஜாங்க நிர்வாஹகர்களை எல்லாம் நம் கைவஶம்செய்து விட்டோம்! அப்பாதகன் புத்திஸாகரன் ஒருவன் தான் நம் வலையிலகப்படவில்லை! அவனையும் மந்த்ரிப்பதவியினின்றும் நீக்கி தநஞ்ஜயரரையே நமது முதன் மந்த்ரியாகச்செய்து விட்டோம். எப்படியிருப்பினும் அவன் ஒருவன்தானே! அல்லது சிலர் போஜனுக்குதவியாகவே யிருக்கட்டும்! அவர்களால் என்ன செய்யக்கூடும்? ராஜ்யம் நம் கையிலிருக்கும்வரை நமக்கொருபயமுமில்லை! எவ்வித தந்த்ரத்தினாலாவது அவனை இன்றிரவுக்குள்கொன்றுவிடவேண்டும். அவனும் நகரத்திற்குள் இல்லை யென்பதாகத் தெரியவருகின்றது! புத்திஸாகரனும் தைவாதீநமாய் நகரில் இல்லை! அவ

* விவேகசிந்தாமணி

X

## SRI PRANATARTIHARA

OR

"THE WORSHIP OF GANESA, THE REMOVER OF ALL OBSTACLES"

——*Act III, Scene* 1, *page* 116

Facing page [illegible]

# ஸ்ரீ ப்ரணதார்த்திஹரர்

## அல்லது

### "ஸ்ரீ விக்நேஸ்வரர் தீபாராதனை"

---

**கைலா:**—(முன்போற் பிக்ஷேஸ்வரன் வேதமோத) "ராஜாதி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹிநே..........மஹாராஜாய நம:"—ஓம் ஸ்ரீ ப்ரணதார்த்திஹர ஸ்வாமிநே நம:, உத்தர நீராஜநம் தர்சயாமி; நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி. (கர்ப்பூர ஹாரத்தி செய்து விட்டு வில்வதளங்களேயும் விபூதி யையும் தட்டில் வைத்து யாவருக்கு மளித்தல்)

(அதே ஸமயத்தில் போஜன் ப்ரவேசித்தல்)

**போஜன்:**—(ஆத்மகதமாய்) ஆ ஆ! நாம் வருவதற்கும் ஸ்வாமிக்குக் கர்ப்பூர தீபாராதனை நடப்பதற்கும் ஸரியாயிருக் கின்றது.

**"லக்ஷ்மீந் தநோது நிதராம் இதராநபேக்ஷம்**
**அங்க்ரித்வயம் நிகமசாகிசிவா-ப்ரவாளம்;**
**ஹைரம்பம் அம்புருஹடம்பர சௌர்ய நிக்நம்**
**விக்நாத்ரி பேதசததார துரந்தரம் ந:!"**

இவ் விநாயகர் க்ருபையினுல் நமக்கொன்றும் குறைவு வாராதென்றே நம்புகின்றேன்.

—அங்கம். III, களம். 1, பக்கம். கககூ.

னை ஒருவருக்குந் தெரியாமல்தொலைத்து விடுவதற்கு இதுவே ஸமயம்! தாக்ஷிண்யம் பார்க்கிறவர்களும், அடிக்கடி ஶங்கை கொள்ளுகிறவர்களும், பிறர் சொல்லும் அபவாதத்துக்கஞ்சுகிற வர்களும் ஒருபோது முருப்படார்!

* "பகையினைத் தொடங்குங் காலே
பற்றறத் தொலைத்தல் வேண்டும்,
மிகையில்லை யென்ன வுன்னி
விட்டிடில் விபத்து நேரும்;
புகையுறு தீயுந் நோயும்
புலனழிகடனும் போலத்
தகையுற வளர்ந்து சாலத்
தனித்துயர் தருவ னன்றே!"

ஆகலின், நம்மாலான ப்ரயத்நங்களை எல்லாம் செய்தேவிடு வோம்! நமது ஸேனைத்தலைவன் வத்ஸராஜனையு மிங்கே வரச் சொல்லியிருக்கின்றேன்!—நல்லது! நாமெப்படியவனுக்குப் போஜனைக்கொல்லும்படி சொல்வது? ஒரு காரணமுமின்றி யவன் போஜனைக்கொல்ல ஸம்மதியானே! (யோஜித்து) நல் லது ஒரு உபாயம் முன்னரே தோன்றியது! அப்படியே செய் வோமாகில், இன்றிரவே போஜனைத்தெரியாமல் தொலைத்து விடலாம். தெரிந்தாலும் பயமில்லை! ஸரி இதோ வத்ஸராஜ னும் வருகின்றான்! இதை அவனிடத்தில் வெகு தந்த்ரமாய் வெளியிடல் வேண்டும்!

போஜ:—(ஆத்மகதமாய்) அடே! பாவி! நீயோ என் சிற் றப்பன்? என்னைக்கொல்லுவதற்கு என்னென்ன வழிகளெல் லாம் தேடுகின்றாயடா!

(ப்ரவேஶித்து)

**வத்ஸராஜன்:**—மஹாராஜா! வந்தநம்! தாங்கள் அடி யேனை இந்நேரத்தில் இங்கு வரும்படி ஆஜ்ஞாபித்ததன்காரண மென்னோ?

* உத்தமநீதி

முஞ்ஜ:—(வத்ஸராஜனுடன் கோயிலின் முன் சென்று) வத்ஸராஜ! யாமிப்பொழுது இங்கு உன்னை வரவழைத்ததன் காரணம் உனக்கே தெரிந்திருக்கலாம்! யாம் அவ்வளவு சொல்லியிருந்தும், போஜனை யிவ்வளவு ஆடம்பரத்துடன் வெளியிற் புறப்பட விட்டுவிட்டீர்களல்லவா?

வத்ஸ:—மஹாராஜா! தாங்கள் அடியேன் உரைக்கும் வசநங்களைச் சற்றுக் கவனித்தருளல் வேண்டும்! இரண்டு வர்ஷங்களுக்கு முன்னரே தாங்கள் இவ்ராஜ்யத்தைப் போஜனுக்கு ஒப்பிவித்திருக்கவேண்டும். ஆயினும், போஜன் தம்மை அதைக்கொடுக்கும்படி கேட்டவனல்லன்! அப்படியிருக்க, அவன் ஏதோ வேடிக்கையாய்வெளியிற் புறப்பட்டதனால், தமக்கென்ன அபாயம்? யோஜித்துப் பாருங்கள்.

வேலையிலன், தானையிலன், செல்வஞ்சிறிதேனுமிலன்,
ஆனையொரு பூனையுடன் அடர்த்திடுவதழகோ?
ஏனையவர் கேட்கிலுமை யென்னபகை யாரோ?
ஈனமில்லாப் பாவையென எண்ணிநகை யாரோ?

கந்தனொடு காமனொரு காளையுருவாகி
வந்ததெனநும் மடியில்வாழு மொருபாலன்
எந்தவிதமாக விடுக்கண்கள் விளைவித்தான்?
புந்திமிகு ஸூர! விது புகன்றிடுவ தேனோ?

முஞ்ஜ:—மூடா! எமக்கோ நீ புத்திகூறுகின்றாய்! இன்று நடந்த ஸமாசாரமுனக்குத் தெரியுமா?

வத்ஸ:—மஹாராஜா! தம்மிடத்திலுள்ள அன்பினால் ஏதோ சிறுதெடுத்துரைக்கலாயினேன்! அதைத்தாங்கள் பொறுத்துக் கேட்கவேண்டும்! தாங்கள் செங்கோல் செலுத்திவரும் பொழுது போஜனால் என்ன செய்யக்கூடும்! மஹீமண்டலத்துதித்த மஹேந்த்ரன்போலும், வடிவெடுத்துவந்த மந்மதன் போலும், உருவெடுத்துவந்த லோகமாதாபோலும் உள்ள வீரப

ராதியான அத்திவ்யஸுந்தர குமாரனைத் தாங்கள் ஒரு காரண முமின்றி கொல்லத்தலையிட்டுக்கொள்வது ந்யாயமோ? தங்களு டைய தர்மபரிபாலநத்திற்கழகோ?

தைலம் நிறைந்த தடாவின் ஜ்வாலை
மாலைக் காற்றில் மழுங்கு மாறே
நாலனைத்தினையும் நுகர்ந்தவ ராயினும்
பலமொன் றின்றேற் சிதைந்துபோவாரே!

மேலும், எதைச்செய்யப்புகினும், அதன் பலாபலத்தை நன்று அறிந்து செய்தல்வேண்டும்!

'வலியே கால மிடமிவற்றின்
மாற்றான் றனக்குந் தமக்குமுள
பலவா நிலையும் வினைதொடங்கும்
பண்பு மதற்கா மிடையூறும்
விலகா ததனை விலக்குவதும்
வெல்லு மாறும் வென்றதனால்
உலவாப் பயனு முதலனைத்து
மோர்ந்து தெளிந்தே வினைசெய்க!'*

ஆகலின் மஹாதயாளுவும் தர்மஜ்ஞருமான ஸ்ரீஸிந்துல மஹா ராஜருக்கு ஏகபுத்ரனை போஜனைக்கொன்றுவிடில் அவரிடத் தில் அதிகப்ரீதிவைத்திருந்த இந்நாடு நகரத்தார் யாவரும் தமது ராஜதானியை யல்லோலகல்லோலமாகச் செய்து விடுவரே! அன்றியும் "அஹிம்ஸா பரமோ தர்ம:" என்று தாங்கள் கேட்டதில்லையா?

* பிள்ளையார் புராணம்

* "தேங்குவிண் போகமுஞ் சிறந்த முக்தியு
மீங்குறு மாக்கமு மினிது நல்கலால்,
ஓங்கிய வறத்தினை யுளமுன் மூன்றிலும்
பாங்குற நித்தலும் பரிந்துசெய்தியால் !"

ஆகலின், அந்கிரபராதியான ஸிஸுவைப்பற்றித் தாங்கள் வீணுக் கவலைகொள்ளவேண்டாம்.

முஞ்ஜ:—அடே துஷ்டா! ப்ருத்யாதமா! நீயோ எமக்குத் தர்மோபதேஸஞ் செய்யத்துணிந்தனை? நீ யொருவன் தான் தர்மத்தை யறிந்தவன்போலும்! போஜன் இன்று காலையில் வெளியிற் புறப்பட்டதற்கோ ஒருவன் அவனைக்கொல்லச் சொல்லுவான்! ஸங்கதியறியாமலே அதிகப்ரஸங்கஞ்செய்ய ஆரம்பித்துவிடுகின்றனையே! இச்செம்பைப் பார்த்தாயா? இதில் தங்கியிருப்பது யாதென்றுனக்குத் தோன்றுகின்றது? (வத்ஸராஜனுக்கு நீட்டல்)

போஜன்:—(நோக்கி ஆத்மகதமாய்) ஆ ஆ! இஃதென்ன? இப்பாற்செம்பு விலாஸவதியின் அந்தப்புரத்திலல்லவோ யிருந்தது. அதை யிவன் இங்கே எடுத்துக்கொண்டு வந்ததற்குக் காரணம் யாதோ?

வத்ஸ:—(செம்பை உற்று நோக்கி) ஏதோ விஷத்தைச் சேர்ந்த வஸ்து போல் தோன்றுகின்றது! இப்பொழுதிதைப் பற்றி என்ன?

முஞ்ஜ:—(முகத்தைக் கோபத்தினுற் கடுத்துக்கொண்டு) நம் குழந்தை விலாஸவதி இன்று பிழைத்ததே ஆஸ்சர்யம்? போஜன் அவளுடைய அந்தப்புரத்திற்கு வந்து என்னென்னவெல்லாம் செய்தனன் அறிந்தாயோ?

வத்ஸ:—எல்லாம் புதுமையாயிருக்கின்றது! போஜனு விலாஸவதியின் அந்தப்புரத்திற்குச் சென்றனன்? என்ன விஸேஷம் நடந்தது?

* பிள்ளையார் புராணம்

முஞ்ஜ:—என்ன விசேஷமா! அதை வாயினாலும் எடுத்துரைக்கவேண்டுமோ? ஒரு குற்றமும் புரிந்திராத நம் விலாஸவதியை, எம் ஸஹோதரி சாருமதிகூட இல்லையென்றறிந்து, இவ்விஷத்தைப் பாலிற் கலந்துவைத்துக் கொல்லவல்லவோ பார்த்தனன்! இவளிடத்தில் தனக்கிஷ்டமில்லாதிருப்பின், வேறொருத்தியை ஸுகமாய் மணந்து கொள்ளட்டும்! அதில் எமக்குயாதோர் ஆக்ஷேபமு மில்லை! மணந்தமனைவியை நஞ்சு கொடுத்துக் கொல்லப்புகுவது கூட ந்யாயமோ? அரசன் ஒருவன் இருக்கின்றானென்று அவன் எண்ணியிருப்பானாகில், இப்படியொருபோதும் செய்யத்துணியானே?

போஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா! என்ன? என்ன? நானே இவ் விலாஸவதிக்கு விஷங்கொடுத்துக் கொல்லப்பார்த்தனன்? என்னஸாமர்த்யம்! என்ன ஸாமர்த்யம்! நம்மை இப்பாலைக்கொடுத்துக் கொல்லப்பார்த்ததுமன்றி, தன்னையே யான் கொல்லப் புகுந்ததாகச் சாற்றினளே! ஆஹா! என்ன மோஸம்! என்ன மோஸம்!! அஸ்வகமநத்தையும், மேககர்ஜனையையும், புருஷர்களின் பாக்யத்தையும், ஸ்த்ரீகளின் சித்தத்தையும், தேவர்களேயறியார்களாயின், மானிடர்கள் எப்படி யறியப் போகின்றனர்?

ஆல கால விஷத்தையு முண்ணலாம்,
　　ஆற்றி லோடுங்கராக்களைக் கொள்ளலாம்,
காலனோலை வருங்காலை செப்பலாம்,
　　கரடி வெம் புலி வாயை யடக்கலாம்,
நீல மாமுகி லண்ட வெளிக்குமேள
　　மிகழும் பட்சி கடம்மைப் பிடிக்கலாம்,
சேலை கட்டிய மாதர்களின்மனச்
　　செயலை யோர்ந்தவ ரெங்கணு மில்லையே!

**வத்ஸ:**—மஹாராஜா! தாங்கள் கூறியவிஷயம் வாஸ்தவமோ? இதைப்பற்றித் தாங்கள் போஜனை யழைத்து விசாரித்தீர்களா?

**முஞ்ஜ:**—குற்றவாளியுந் தான் குற்றஞ் செய்ததாக ஒத்துக்கொள்வனே! நம் குழந்தை விலாஸவதி கதறிக்கொண்டு தேஹம் நடுநடுங்க, நம்மிடம் ஓடிவந்து முறையிட்டழுதனள்! நம்மரண்மனைப் பெண் மதநமாலினியும் அதைப் பார்த்ததாக நேரிற் கூறுகின்றனள்! இன்னுமென்ன ஸாக்ஷ்யம் வேண்டும்?

**போஜ:**—அடே துஷ்டா! இப்படிப்பட்டப் பெண்ணை யாடா எனக்கு மணஞ் செய்துவைத்தனை? ஆஹா! இப்படிப்பட்ட ஸ்த்ரீயினிடத்திலல்லவா நம்மை உல்லாஸமாயிருக்கவிடுகிறதில்லை யென்று என் தந்தையின் ப்ராணநேசரும் எனது பரமாசார்யருமான புத்திஸாகரரைப் பழித்தேன்! என்ன புத்திஹீநம்! என்ன புத்திஹீநம்! நான் இன்றறிந்ததை புத்திஸாகரர் எத்தனை நாட்களுக்குமுன் அறிந்தனரோ? 'மூத்தோர் சொல்லும்வார்த்தை யமுத' மென்பதும் பொய்யோ? அஹோ! ஸ்த்ரீகள் மிகவுங் கொடியவர்கள்! அவர்கள் ஒருவரிடத்தில் அநுராக முள்ளவரென்பது வெறும் பொய்யே!

ஒருவனுடன் தேன்பொழிய வுரைப்பள், பின்னே
வொருவனுடன் ஜாடையா யுதட்டை யசைப்பள்!
ஒருவனைக்கண் ணோக்கத்தால் உருக்குவள், மற்
றொருவனை நினைந்து மநமுருகு வாளே.

எவன், இந்த ஸ்த்ரீ தன்னிடத்தில் ஆசையுள்ளவளென்று நினைக்கின்றனே, அவனிலும் பெரியமூடன் உலகலில்லை. ஸ்த்ரீகள் புண்யபாவங்களுக்குப் பயந்து நடந்தாலுண்டு; அன்றேல் அவர்களையடக்க வேறு உபாயமில்லை.

**வத்ஸ:**—மஹாராஜா! இவ்வித விஷயத்தில் தாங்கள் ஒன்றும் தீர விசாரிக்காமற் செய்யலாகாது! புத்திமான்கள்

ஸ்த்ரீகளின் வார்த்தையைமாத்ரம் நம்பி ஒரு கார்யமுஞ் செய்யத்துணியார்கள்.

* ‘ அத்தியின் மலரும், வெள்ளை
யாக்கைகொள் காக்கை தானும்,
பித்தர்தம் மநமும், நீரிற்
பிறந்தமீன் பாதந் தானும்,
அத்தன் மால் ப்ரஹ்ம தேவ
னலள விடப்பட் டாலும்,
சித்திர விழியார் நெஞ்சந்
தெரிந்தவ ரில்லை வேந்தே !’

மூஞ்ஜ:—(கோபத்துடன்) என்ன? நம் விலாஸவதியையும் ஒரு ஸாதாரண ஸ்த்ரீபோல் நினைத்துவிட்டனைபோலும்! ஊழியனென்பது கொஞ்சமேனு முன்மநதிலில்லை. இச்சொல் ஒன்றுக்கே முன்ன ருன்னைக்கொன்று மறுகார்யம் பார்க்க வேண்டும். ப்ரபு சொல்லுகிறபடி நடவாத ப்ருத்யனும் ப்ருத்யனோ? ஆட்டின் கழுத்தில்தொங்கும் குசம்போல் அவனது வாழ்க்கை வ்யர்த்தமே ! நல்லது! இதனுடைய பயனை விடியுமுன்னரே நீ யறிவாய் ! (வேகமாய் பரிக்ரமித்தல்)

வத்ஸ:—(ஆத்மகதமாய்) இக்காலம் எப்பொழுதும் முகஸ்துதி பண்ணுகிறவர்களுக்கே யடுத்தது! கெடுதியை யெடுத்துக்காட்டி நன்மையை யுரைப்பவற்கு இதுகாலமன்று !

\$ “அரவினை யாட்டு வாரும், அருங்களி றாட்டு வாரும்
இரவினிற் றனிப்போவாரும், வரிநீர் நீந்து வாரும்,
விரைசெறி குழலி யான வேசியை விரும்பு வாரும்,
அரசனைப்பகைத்திட்டாரும், ஆருயிரிழப்பர்தாமே!”

* விவேகசிந்தாமணி　　\$ விவேகசிந்தாமணி

நல்லது! காலத்திற்குத் தக்கப்படி நடப்போம். (ப்ரகாசமாய்) மஹாராஜா! இதற்குத் தாங்கள் என்ன செய்யவேண்டுமென்கி றீர்கள்?

முஞ்ஜ:—(முறுக்குடன் திருப்பி) வத்ஸராஜா! ஜாக்ரதை! நாளை ஸூர்யோதயத்திற்குமுன், போஜனைக் காளிகாபரமேச் வரி வநத்திற்குக் கொண்டுபோய், ஒருவருக்குந்தெரியாமற்கொ ன்றுவிட்டு, அவனது தலையை என்னிடங்கொண்டுவந்து ஒப்பி விக்கவேண்டும். தப்பினால் உன்தலை போய்விடும்! இதோ சாஸந பத்ரிகை! எடுத்துக்கொள். (பத்ரிகையைக் கொடுத்தல்)

போஜ:—ஈசா! இத்தனை ஸங்கடங்களி னின்று மென் னைக் காப்பாற்றினீர்! ஹே ப்ரணதார்த்திஹரா! அநாதனையிரு க்கு மென்னை இன்னும் க்ருபைகூர்ந்து காப்பாற்றுவது நின் பாரம்!

‡ "ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ? கொடிய
 வாலமமு தாகவிலையோ?
அக்கடலின் மீதுவடவனனிற்க வில்லையோ?
 அந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ? மேருவுந்
 தநுவாக வளையவிலையோ?
ஸப்தமேகங்களும் வஜ்ரதர னாணையில்
 ஸஞ்சரித் திடவில்லையோ?
வாழாது வாழவே ராமனடி யால் சிலையு
 மடமங்கை யாகவிலையோ?
மணிமந்த்ர மாதியால் வேண்டுஸித்திக ளுலக
 மார்கத்தில் வைக்கவிலையோ?

‡ தாயுமானவர் பாடல்

பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ ?
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணாநந்தமே !"

நல்லது ! இன்னுமென்ன நடக்கின்றதோ பார்ப்போம்.

வத்ஸ:—(வணங்கினபடியே பத்ரிகையை வாங்கிக்கொண்டு) மஹாராஜா ! இச்சிறிய குற்றத்திற்கு இவ்வளவு கொடிய தண்டனைவேண்டுமோ ? மேலும் போஜன் தம்முடைய தமையனருக்கு ஒரே குமாரனுயினனே! அவனாலன்றோ அவ் வம்ஸம் விளங்கவேண்டும் !

முஞ்ஜ:—யாவரா யிருப்பினும் நிர்தாக்ஷிண்யமாய் விசாரித்து ந்யாயப்படி பரிக்ஷித்தலன்றோ அரசர்களின் முறை.

*"கருவிநஞ் சாதி தம்மாற்
காமரா ருயிரைக் கொல்வோர்,
வெருவுறச் சூறை கொள்வோர்,
மேவியா றலைப்போர், கள்வர்,
உருவளர் பிறனில் வேட்போர்,
உவர்முத லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று,
பயிர்க்களைக் களைதல் போலாம் !"

இப்படிப்பட்ட கொடிய பாதகனைக் கொல்லாமல் விட்டு விட்டால், இன்னுமென்ன வெல்லாஞ் செய்யத் துணியான் ? ஆதலின், இவனை நீ யின்றிரவே நான் சொன்னபடிகொன்றுவிட்டு வரவேண்டியது.

வத்ஸ:—(ஒன்றுந்தோன்றாமல்) ஸரி மஹாராஜாவின் ஆஜ்ஞை.

*பிரமோத்தர புராணம்

**முஞ்ஜ:**—இந்தப்படி செய்வதாக யிப் பிள்ளையார் முன்னி லையிற் ப்ரமாணஞ்செய் !

**வத்ஸ:**—அப்படியே செய்கின்றேன். (செய்தல்)

**முஞ்ஜ:**—இனி பத்ரம் ! ப்ரமாணமுஞ் செய்துவிட்டனை ! உடனே போய் சொன்ன கார்யத்தை முடித்துவா ! போஜனும் நகரத்திற்குள்ளில்லை. நான் தண்டிப்பேனென்றுபயந்து வெளி யிற்றான் சென்றிருக்கவேண்டும். அவனை யொருவருமறியாமற் கொல்லுவதற்கு யிதுவே ஏற்றதருணம். ஜாக்ரதை! இந்தஸமா சாரம் ஒருவருக்காயினும் தெரியப்போகின்றது ! இக்கட்டளை யைச் செய்யத்தப்பினல் உன் பிரத்தைக் கொடுக்க வித்தமாயி ருக்கவேண்டும்.

**வத்ஸ**—ஆஜ்ஞை ! மஹாப்ரபு ! (கொஞ்சதூரம் பரிக்ர மித்து, ஆத்மகதமாய்) ஸரி! காலத்துக்குத் தக்ககோலம்! யான் எவ்வளவு நற்புத்தி கூறினும் கேட்கவில்லை.

*"தூம்பினிற் புதைத்த கல்லுந்
துகளன்றிச் சுடர் கொடாது,
பாம்புக்குப் பால்வார்த் தென்றும்
பழகினு நன்மை தாரா,
வேம்புக்குத் தேன்வார்த் தாலுங்
வேப்பிலை கசப்பு மாறா,
தாம்பல நூல்கற் றாலுந்
துர்ஜநர் தக்கோ ராகார்."

எல்லாம் கெட்டகாலத்திற்குத் தக்க புத்திதான் ! (நிஷ்க்ரமித் தல்)

**முஞ்ஜ:**—பயலே ! என்னை யாரென்று நினைத்தனை ? உன் ஆசையாலேயே நீ அழிந்தாய் ? புத்திஸாகரனே ! உன்தந்த்ர

* விவேகசிந்தாமணி

மெல்லாம் பயனற்றுப்போயினவே!!—நல்லது நேரமாயிற்று, விலாஸவதியினிடஞ் செல்வோம்! (நிஷ்க்ரமித்தல்)

**போஜ:**—(முன்னே வந்து) ஆஹா! விலாஸவதியைக்கையிற் போட்டுக்கொண்டு எவ்வளவு கார்யஞ் செய்யத்துணிந்தாய்! பாவீ! நீயோ வென் தந்தையாருடன் கூடப்பிறந்தவன்? சீ! உன்னைத் தூஷிப்பதிற் பயனென்னை? மணந்த மனைவியே மறலியாகும்போது, மற்றைப்பங்காளிகள் பாவத்துக்கஞ்சுவார்களா?

ராகம் - முகாரி : தாளம் - ரூபகம்

பல்லவி

நம்பவுங்கூடுமோ - நங்கையரைக்கூட
நம்பவுங் கூடுமோ!

அநுபல்லவி

அம்புலிபோன்மிக - வழகானமுகமுள்ள
அம்புஜதளநேத்ர - ஆரணங்கானாலும்— (நம்ப)

சரணங்கள்

ஜென்மத்திற் பிறந்தது - செருப்பாலடித்தாற்போமோ?
வன்மையேபொருந்திய - வனிதைக ளெழிலாரும்
மன்மதனைப்பழிக்கும் - மணவாளனையடைந்தும்
துன்மார்கர்களைக்கூடுந் - துஷ்டத்தனந்தானென்னே?—(நம்ப)

காமுறு மழகிலும் - கரையாயௌவனத்திலும்
ஏமமாய்ப் புருஷர்கள் - இச்சைவைப்பதுவீணே!
காமன்மநத்திலெதைக் - கருதுவானோசெய்ய
வாமமேகலைமாதர் - வழுவாததனைச்செய்வர்!— (நம்ப)

எதுவரையிற் புருஷர்கள் மாதர்களின் கடாக்ஷமாகிற பாணங்களுக்கு லக்ஷ்யமாகவில்லையோ, அதுவரையிலேதான் அவர்களுடைய புத்தியும் தைர்யமும்!

மாதரைப் புகழாமாந்தர்
மண்ணிடை யெவருமில்லை,
மாதரையிகழா மாந்தர்
மண்ணிடையெவரு மில்லை,
மாதரையின்றிவாழ்வு
மனையிடை யெவர்க்கு மில்லை,
மாதரையின்றித் தாழ்வு
வநத்திடைத் தானு மில்லை.

விவேகிகளைக்கூட வனிதைகள் மந்த்ரமின்றித் தந்த்ரமின்றி விநயமொன்றினாலேயே வஞ்சனைசெய்து விடுகின்றார்கள்! ஆ ஆ!

என்னே வனிதை! என்னே விவாஹம்!
பிறப்பதே புருஷனைப் பெருந்துயர்க் கிடமாம்!
உலகமோ அழியும், உடலமோ அழியும்,
விலகிநா மிருந்த வீடெலா மழியும்;
ஆகலின் வனிதைமேல் ஆசையை யொழித்துச்
சாகா திருக்கஜ் ஜகத்தினீங்குவமே!
சொற்பனம் போன்ற அற்பமாம் வாழ்வில்
ஒருவர் பெரியராம்! ஒருவர் சிறியராம்!
ஒருவ ரரசராம்! ஒருவ ரூழியராம்!
என்னே உலகம்! என்ன ஸம்ஸாரம்!
சலநமே நிறைந்த உலகம் யாவும்
தோற்றமே யன்றி வேற்றுமை யாது?
அவையெலா மென்ன? அநித்திய மலவோ?
மன்னவர் தமக்கும் மற்றையோர் கட்கும்
என்ன பேதம்? இராஜ னுக்கோ
எப்பொழு துந்துயர் இப்புவிதலத்தில்!

என்னவோ வெறும் பெயர் ! ஏந்திய செங்கோல்
பூணுமா பரணங் காணும் பரிசு !
எவரா யிருந்தென் ? எவர் துறந் தவரோ,
அவர்தா மின்பம் அடைவருண் மையிலே !

(நிஷ்க்ரமித்தல்).

## இரண்டாங் களம்

**இடம்—தாரைநகர்: புவநேஶ்வரி வநத்திற்குச்செல்லும் ஒரு கொடி வழி**

**(காளிதாஸன் யோகிபோற் காவியங்கி தரித்து, கையில் ஒரு தடி பிடித்துக்கொண்டு ப்ரவேஶித்தல்)**

**காளிதாஸன்:**—ஆ! ஆ! இன்று காலையில் நமது நண்பன் ப்ராணன் தப்பியதே ஆஶ்சர்யம் : அப்பாதகன் என்ன பெரு மோஸஞ்செய்ய எண்ணினன் ! அவனது புத்தியின் வல்லமை யே வல்லமை ! போஜன் இன்றுகாலையில் வெளியிற் புறப்படு வானென்று எப்படியோ அறிந்து, அவனுக்கு மர்யாதை செய்ய நிர்மித்ததுபோல், மேலுக்கு வெகு அழகான ஒருகோபுரத்தை யும் தோரணத்தையும் ஓர் இரவிற்குட் செய்வித்து, நமது நண் பனையும் நம்மையும் ஒரே நடவையிற் கொல்லப்பார்த்தனனே ! நாம் சிறிது ஒதுங்கி வந்திராவிடில் அக்கோபுரம் நம்மீது வீழ் ந்து இந்நேரம் நாம் பொடிப்பொடியாய்ச் சிதைந்து போயிருக் கவேண்டுமன்றோ ? ஆ ஆ ! அச்சிறிய க்ருத்திரிம கோபுரத்து க்குள் என்ன சூழ்ச்சிகளெல்லாம் செய்து வைத்திருந்தனன் ! ஒரு புறத்திற் கற்குவியல்களும், ஒரு புறத்திற் சாணிக்குடங்க ளும், ஒருபுறத்தில் ஆயுத ஸந்நத்தர்களான கொலைபாதகர்களும் இன்னு மென்ன வெல்லாம் அதில் மறைத்து வைத்திருந்தன ன் ! நாமின்று உயிர் பிழைத்தது இப்புவநேஶ்வரியின் க்ரு பையே யன்றி வேறென்ன ?

ராகம்-ஹிந்துஸ்தானி-தாளம் - ஏகதாளம்

பல்லவி

பாஹி ! ஜகஜ்ஜனனி - தாக்ஷாயணி
பாஹி ! ஜகஜ்ஜனனி !

அநுபல்லவி

ஏஹி நிரஞ்ஜனி - மோஹ விபஞ்ஜனி !
ஸுமனோரஞ்ஜனி-தாக்ஷாயணி!—(பாஹி)

சரணங்கள்

மாபுவனேஸ்வரி - மாமவ சங்கரி!
மஹிஷாஸுரமர்த்தனி ! - தாக்ஷாயணி !—(பாஹி)
வாசாமகோசரி வாஞ்சிததாயகி !
வாணி தமோஹரணி ! - தாக்ஷாயணி !—(பாஹி)

தேவி ! எல்லாம் நின் கருணை கடாக்ஷமே ! இன்னும் எனது நண்பன் போஜனைப் பட்டத்துக்குக்கொண்டுவருவது நின்பாரம் ! (கொஞ்சதூரம் பரிக்ரமித்துச் செவிகொடுத்து) ஆ ஆ ! இஃதென்ன ? ஏதோ ஓர் அவச்சொல் கேட்கின்றதே ! விலாஸவதியின் அரண்மனைக்குச் சென்ற நமது நண்பன் என்னவாயினனோ ? ஒருவேளை யப்பாவி முஞ்ஜன் அங்கும் நம்மிளவரசனுக்கு ஏதாயினுங்கேடு விளைக்கக்கூடும் ! இப்பொழுது நாமெப்படி ராஜ குமாரனைக் காண்பது ? இரவோ இரண்டு ஜாமமாய்விட்டது ! ஜனங்களுடைய சப்தமும் சாந்தமா யடங்கிவிட்டது ! புவனேஸ்வரி கோயிலும் இந்நேரஞ் சாத்தப்பட்டிருக்கும். இனி யானெங்கே போவது ? வீட்டிற்குத்தான் செல்லவேண்டும்.

(நேபத்யத்தில்)

ஹா ! தெய்வமே !

**காளி:**—(கேட்டு) ஆ ஆ ! நம் போஜனது குரலைப்போலவேயிருக்கின்றதே ! நம் நண்பன் இவ்வளவு தைந்யத்தையடை

வதற்குக் காரணமென்ன ? (நோக்கி) ஆம் போஜன் தான் வருகின்றான் !

(போஜன் வ்யஸநாக்ராந்தனாய் ப்ரவேசித்தல்)

போஜன்.—(பெருமூச்செறிய) ஹா ! தெய்வமே !

* "மருந்தறியேன் ! மணியறியேன் !
மந்திரமொன் றறியேன் !
மதியறியேன் ! விதியறியேன் !
வாழ்க்கைநிலை யறியேன் !
திருந்தறியேன் ! திருவருளின்
செயலறியேன் ! அறந்தான்
செய்தறியேன் ! மாமடங்குந்
திறத்தினிலோ ரிடத்தே
யிருந்தறியேன் ! அறிந்தோரை
யேத்திடவு மறியேன் !
எந்தைபிரான் மணிமன்ற
மெய்தவறிவேனோ ?
இருந்திசை சொலவறியேன் !
எங்ஙனநான் புகுவேன் ?
யார்க்குறைப்பே னென்னசெய்வேன் ?
ஏதுமறிந் திலனே !"

தாஸி :—(போஜனருகிற் சென்று) என்ன ! ராஜகுமாரா ! இந்நடுராத்ரியில் அரண்மனையைவிட்டுத் தனியாய் எங்குச் செல்கின்றனை? (போஜன் பேசாமலிருக்க) நண்ப! என்ன ஒன்றும் பேசாமலிருக்கின்றனையே ? (உற்றுநோக்கி) இஃதென்ன ? சந்த்ரஹாரத்தினின்றும் முத்துக்கள் அறுந்துசொரிவதுபோல்

* இராமலிங்கஸ்வாமிகள் திருவருட்பா

னின்னிருகண்களினின்றும் பாஷ்பபிந்துக்கள் தாரைதாரையா யப் பூமியில் வீழ்ந்து ஓடுகின்றனவே ! நின் மநத்தை யுறுக்கு மித்துயரத்தை நீ மறைக்க முயன்றும், நினது அதரநாஸாபுட ங்களே தாம் துடிப்பதனாற் பிறருக்சதை வெளிப்படுத்துகின்ற னவே ! என்ன ஸமாசாரம் ? நினக்கு நேர்ந்த துயரம் யாது ?

**போஜ:**—நண்ப ! ஒன்றுமில்லை ! நின் கார்யத்தைக் கருதிச்செல் !

**காளி:**—என்ன ? என்னிடத்திலும் மறைக்கின்றனையே ! இன்றுகாலையில் நடந்ததைநினைந்து வ்யஸநப்படுகின்றனையோ ?

**போஜ:**—அஃதொன்றுமில்லை ! (மிகவுந்தைந்யத்துடன்) ஹா ! தெய்வமே !

**காளி!**—நண்பா ! இப்பொழுது தெய்வத்தை நோவதற்குக் காரணமென்ன ? என்ன துன்பம் நேர்ந்தது ?

**போஜ:**—அந்தோ ! பாவியேன் மாள்கின்றேன் ! முடிவெய்துகின்றேன் !!

**காளி:**—என்னருமை நேசா ! நினக்கு வந்த அபாயத்தைச் சொல்லாயோ ?

**போஜ:**—ஸகே ! அதையேன் நீ அறியவிரும்புகின்றாய் ? ஹா ! விலாஸவதீ ! (மூர்ச்சித்து வீழ்தல்)

**காளி:**—(போஜனைக் கீழே விழவொட்டாமல் தாங்கிக்கொண்டு) ஐயோ ! இப்புது நோய் மிகவும் பயமா யிருக்கின்றதே ! நண்பா ! என்ன இப்படி வ்யஸநப்படுகின்றாய் ! கண்விழித்துப் பார் ! நான் உயிருடனிருக்கும்வரை, நீ யொன்றுக்கும் பயப்பட வேண்டாம் ! இப்பொழுது விலாஸவதியைப்பற்றி யென்ன ? நீ யவளது அரண்மனைக்குச் சென்றனையோ ?

**போஜ:**—ஸகே ! யான் என்ன சொல்வேன் ? புராதநமான என் குலத்தின் பெயர் அழிந்ததே ! இதுகாறும் பரிசுத்தமாயிருந்த எனது வம்சத்திற்கே இன்று ஒரு பெருங் களங்கம் நேர்ந்ததே !

XI

BEFORE GANESA'S TEMPLE

OR

"MUNJA PLOTTING WITH VATSARAJA AGAINST THE LIFE OF PRINCE BHOJA"

——*Act III, Scene 1, page* 132

Facing page ௧௪௫

# விநாயகர் கோயிலுக் கெதிரில்

## அல்லது

## "போஜகுமாரரைக் கொல்வதற்காக முஞ்ஜன் வத்ஸராஜருடன் ரஹஸ்யமாய் யோஜித்தல்"

முஞ்ஜ:—அடே துஷ்டா! ப்ருத்யாதமா! நீயோ எமக்குத் தர்மோபதேசமுஞ் செய்யத் துணிந்தனை. நீ யொருவன் தான் தர்மத்தை யறிந்தவன் போலும். போஜன் இன்று காலையில் வெளியிற் புறப்பட்டதற்கோ ஒருவன் அவனைக் கொல்லச் சொல்லுவான்! ஸங்கதி யறியாமலே அதிகப்ரஸங்கஞ் செய்ய ஆரம்பித்து விடுகின்றனையே! இச்செம்பைப் பார்த்தாயா? இதில் தங்கியிருப்பது யாதென்றுனக்குத் தோன்றுகின்றது? (வத்ஸராஜனுக்கு நீட்டல்)

போஜன்:—(நோக்கி, ஆத்மகதமாய்) ஆ ஆ! இஃதென்ன? இப்பாற் செம்பு விலாஸவதியின் அந்தப் புரத்திலல்லவோ யிருந்தது. அதை யிவன் இங்கே எடுத்துக்கொண்டு வந்ததற்குக் காரணம் யாதோ?

வத்ஸ:—(செம்பை உற்று நோக்கி) ஏதோ விஷத்தைச் சேர்ந்த வஸ்துபோல் தோன்றுகின்றது! இப்பொழுதிதைப் பற்றி என்ன?

முஞ்ஜ:—(முகத்தைக் கோபத்தினுற் கடுத்துக்கொண்டு) நம் குழந்தை விலாஸவதி இன்று பிழைத்ததே ஆஶ்சர்யம்! போஜன் அவளுடைய அந்தப்புரத்திற்கு வந்து, என்னென்னவெல்லாம் செய்தனன், அறிந்தாயோ?

—அங்கம். III, களம். 1, பக்கம். கரு௨

காளி:—அஃதெப்படி ? உன் தந்தையார் மஹாதர்மசீல ரென்பது உலகமெல்லாம் பரவி யிருக்கின்றதே !

போஜ:—அதுதான் என் வ்யஸநத்தைப்பெருக்குகின்றது.

காளி:—இஃது ஆஶ்சர்யத்தினு மாஶ்சர்யமே !

போஜ:—நண்ப ! இன்றிரவில் நடந்த விஷயங்களை யானென்னென்றுரைப்பேன் ! ஆஆ ! என்னை மணந்து எனக்கு மனைவியான பெண்ணைக்கொண்டே என் சிற்றப்பன்—ஹா ! இதைப்பார்க்கினும் என் வம்ஶத்திற்கு வேறு அவதூறும் வேண்டுமோ ?

காளி:—என்ன விந்தையாயிருக்கின்றது ! அந்நங்கையர் கரசியைப்பற்றியோ இவ்வாறெல்லாங் கூறுகின்றாய் ? ஸரி யன்று! ஸரியன்று ! !

போஜ:—நண்பா ! அவளது செய்கையை நீ சிறிதேனு மறிந்திலாய் ! அறிந்திருப்பின் அப்பாதகியையும் நீ இவ்வாறு புகழ்வையோ ?

காளி:—இளவரசே ! நீ யிவ்வாறு யோஜியாமல் மொழி வது தகுதியன்று ! அப்பெண்மணி ஸாக்ஷாத்தப்பேதை யாவளே ! அவளைப் பெண்கள் நாயகமென்று சொல்லவேண்டுமே ! வேண்டாம் ! வீணாய் அவஸரப்பட வேண்டாம் !

போஜ:—நண்ப ! உனக்கு விவாஹமாகாததனால், இன் னும் பெண்களின் ஸ்வபாவம் தெரியவில்லை ! ஸ்த்ரீகளை நம்ப லாகாது ! நம்பலாகாது ! !

* 'படியினைப்பொழு தேவதைத்திடு
　　　பச்சைநாவியை நம்பலாம்,
பழிநமெக்கென வழிமறித்திடு
　　　பழையநீலியை நம்பலாம்,

* விவேகசிந்தாமணி

கொடுமைதக்குவ டெனவளர்ந்திடு
குஞ்ஜரத்தையு நம்பலாம்,
குலுங்கப்பேசி நகைத்திடுஞ்சிறு
குமரர் தம்மையு நம்பலாம்,
கடைவிலக்கமு மெழுதிவிட்ட
கணக்கர்தம்மையு நம்பலாம்,
காக்கைபோல்விழி பார்த்திடுங்குடி
காணியாளரை நம்பலாம்,
நடைகுலுக்கியு முகமினுக்கியு
நகைநகைத்திடு மாதரை
நம்பொணாது மெய் நம்பொணாதுமெய்
நம்பொணாதுமெய் நண்பனே !'

**காளி:**—நண்ப! இவையெல்லாம் மேன்மேலும் விந்தை யாயிருக்கின்றன! நீ யுரைப்பது சிறிதேனும் என் மநத்திற்குப் புலப்படவில்லை! நீ இப்படிப் பழிக்கும்படியாய் அப்பெண்மணி புரிந்த செயல்தான் என்னே ? அவள் அந்யபுருஷர் முகத்தை யணுவேனும் நிமிர்ந்துபாராளே !

**போஜ:**—ஆஹா ! அச்சிறுக்கி செய்த கார்யத்தையும் யான் மறுபடியும் சொல்லி, என் வாக்கை அசுத்தப்படுத்த வேண்டுமோ ? என்னை விஷம் வைத்துக் கொல்லப்பார்த்தது மன்றி, அவளையே நான் விஷம் வைத்துக் கொல்லப்பார்த்த தாகவன்றோ வறைந்தனள் ! அப்படிப்பட்டவள் இன்னு மென்ன வெல்லாஞ் செய்யத்துணியாள் ? அப்பாதகிக்குப் புருஷனென்னும் சொல்லொன்று போதாதா ? இவையெலா மறிந்தும் நான் உயிர் வைத்திருக்க வேண்டுமோ ?

**காளி:**—(விஸ்மயத்துடன்) என்ன! என்ன! கற்பிற்சிறந்த அக்காரிகையோ இத்தகைய கார்யத்தைச் செய்யப் புகுந்த

னள்! ஆம்சர்யம்! ஆம்சர்யம்!! இதனில் எதோ மோஸ மிருக்கவேண்டும்! நல்லது நண்பா, நீ இவ்வாறு செய்ததாய் யாருடன் அவள் சொன்னாள்?

**போஜ:**—என் சிற்றப்பன் முஞ்ஜனிடத்திலேயே!

**காளி:**—ஸரி! ஸரி! விஷயம் விளங்கிவிட்டது. இப்படி மோஸம் நடக்குமென்று முன்னரே யூஹித்தன்றோ நமது ஆசிரியர் உன்னை அவளிடங்கொஞ்சகாலம் செல்லவேண்டா மென்று கூறினர்? ஸரிதான்! இதுவும் அப்பாதகன் முஞ்ஜனது வஞ்சனைச்செயலே! ஆஹா உன்னைக் கொல்வதற்கு என்னென்ன உபாயஞ் செய்கின்றனன்!

**போஜ:**—நண்ப! வாஸ்தவமாய் என் சிற்றப்பன் அப்படிப் பட்டவனாயினும், விலாஸவதியின் ப்ரோத்ஸாஹமின்றி யிவை யெல்லாஞ் செய்யத்துணிவானா?

**காளி:**—அவன் எதற்குத்தான் அஞ்சுவன்? அப்பெண் மணிக்கு அம்மாதிரியான போக்குக்காட்டி, உன்னையு மதனைக் காரணமாய்க் கொண்டு கொலைபுரிவனே! அவனது கொடுமையையும் வஞ்சனையும் நீ என்ன கண்டாய்!

**போஜ:**—ஆம்! நீ சொல்லுவது உண்மையே! ஆயினும் உலகத்தோர் என்னை என்ன சொல்வர்? இதுவுமன்றி, இப்பொழுது விநாயகர் கோவிலில் நடந்த விஷயத்தை யான் என்ன சொல்லப் போகின்றேன்!

அக்கோ வெனுங்கொடியோன்
　　அறைந்தகுற் றங்களெலாம்
ஒக்க நினைக்கிலெனக்
　　குள்ளமுரு குதையோ!
தேர்ந்த மநக்கொடியோன்
　　செப்பியவன் சொல்லையெல்லாம்
ஓர்ந்து நினைக்கிலெனக்
　　குள்ளநடு ங்குதையோ!

தோன்றி விரியுமநத்
துஷ்டனவன் வன்செயலை
ஊன்றி நினைக்கிலெனக்
குடலு நடுங்குதையோ !
பற்றி நினைத்தெழுமிப்
பாவிமநப் பேதைமையை
உற்று நினைக்கிலெனக்
குயிர்ப்பு மொடுங்குதையோ !

நண்ப ! யானினிப்பிழைத்திரேன் ! நீ உனது நன்மையை நாடிச்செல் !

**காளி:**—இளவரசே ! நீயு மிவ்வாறு மநோத்ஸாஹத்தை யிழக்கலாமோ ?

ஊக்கமுளோர்|கைப்பொருளை யொழிந்தா ரேனும்
ஆக்கமுளோ ரவரேயாம் ! அசைவி லாத
வூக்கமிலா ரேதுமிலர் ! உள்ள மில்லோர்க்
கேற்கும்புகழ் நற்பெயரி யாது முண்டோ ?

நின் மநத்திற்|ஏங்கிப்பதை யானறிந்தேன் !

**போஜ:**—ஸகே ! நீ இதை யெப்படி யறிந்தாய் ?

**காளி:**—கைப்புண்ணுக்குக் கண்ணுடியும்வேண்டுமோ ? (எதிரில் ஒரு வெளிச்சத்தைக் கண்டு) இஃதென்ன ஒரு வெளிச்சம் தோன்றுகின்றது ? நண்ப ! எவரோ இருவர் கையும் விளக்குமாய் இவ்வழியே விரைந்து வருகின்றனர் !

**போஜ:**—(நோக்கி) அவர் யாவராயிருக்கக்கூடும் ? இக் கொடிவழியில், இவ்வர்த்தராத்ரியில் இப்பயங்கரமான விடத்திற்கு இவர்கள் வருவதற்குக் காரண மென்ன ?

**காளி:**—ஒருகால் அத்துஷ்டன் அனுப்பிய கிங்கரர்களா யிருக்கக்கூடும் ! எதற்கும் நாமிங்கேயிருப்பது தகுதியன்று.

நாமிவ்விடம் விட்டு எங்கேயாகினுந் தனிமையான விடத்திற்குச் செல்வோம் வா! (இருவரும் கொஞ்சதூரம் பரிக்ரமித்தல்)

(மேற்கூறியபடி பீமன், பைரவன் என்னு மிரண்டு ராஜ கிங்கரர்கள் ப்ரவேசித்தல்)

**பைரவன்:**—வீமா! அதோயாரோ, இரண்டுபேரு இங்கே பேசிக்கொண்டிருந்திட்டு, நம்பளைப் பார்த்திட்டு அப்படி ஈ ஈ ஈ நழுவராங்கடா !

**பீமன்:**—ஆம்டா ! நான் ஓடிப்போயி அவங்களை மடக்கட்டா ?

**பைர:**—ஓட்ரா ! ஓட்ரா ! !

**பீம:**—(கொஞ்ச தூரம் ஓடி) அடேடே ? ஓடியாடா நம்ப ராசாமவன் போலத்தாண்டா யிருக்குது !

**பைர:**—ஆம்டா ! இன்னொருத்தன் யாருடா ?

**பீம:**—அவனுடா ! (நோக்கி) நம்பராசாமவனோடேகூட எப்பப்பார்த்தாலும் நச்சு நச்சுண்ணு படிச்சிகிட்டுருப்பானே, அந்த பாப்பாரப்பயலாத்தாண்டாயிருக்கணும்.

**பைர:**—(விளக்கைக் காளிதாஸனுடையமுகத்துக்குநேரே திருப்பிநோக்கி) ஆம்டா ! ஆம்டா ! ! அந்த ஐபன் தாண்டா !

**பீம:**—அவனைத்தாண்டா காளிதாசனென்கிறாங்க! அவன் மெத்த படிச்சுட்டானுமேடா ?

**பைர:**—அடேடேடே ! அவங்க எங்கையோ புறப்பட்டுப் போராங்கடா ! ஓடிப்போயி மடக்கடா ?

**பீம:**—ஆம்டா ! (ஓடிப்போய் அவர்களை மடக்கல்)

**போஜ:**—யாரடா நீ ? எங்கே வந்தாய் ? (பீமன் ஸமீபத்தில் வர) அடேடே ! விலகிசில்லடா !

**பீம:**—இல்லே மாராசா ! உங்களண்டே தாம் வந்தோம்.

**போஜ:**—எதற்காக வந்தீர்கள் ? யார் உங்களை யனுப்பியது ?

பைர:—(அருகிற் சென்று) ஆமாம் ! மாராசா ! சேநாதி பதியவங்க யிருக்கிறாங்களே, அவங்க உங்களைக் கூட்டிகிட்டு வரச்சொன்னாங்க ?

போஜ:—நாம் வருகிறதில்லையென்று சொல்லுபோ ?

பீம:—இல்லை மாராசா ! எங்களுக்கப்படியில்லை உத்தரவு ! பேசாமே வந்துடுங்கோ. (மெள்ளப் போஜன் கையைப் பிடித்தல்)

போஜ:—[கையை உதறிக்கொண்டு) சீ ! விடு !! உனக்கென்ன காலங்கிட்டிக்கொண்டதோ ? மூடா ! நீயோ என்னைப்பிடிக்க வல்லவன் ? (பீமனுடைய தவடையில் ஓரறையறைதல்)

பைர:—(முகத்தைக் கடுத்துக்கொண்டு) என்னா மாராசா! அவனைப்பூந்து அடிக்கிறீங்க ! சும்மா குரியா வந்துட்டா நல்லது. (போஜனுடைய தோள்களையும் மார்பினையுஞ் சேர்த்துக் கட்டுதல்)

போஜ:—(ஒரு விசிறு விசிறிப் பைரவனைத்தூக்கித்தள்ளிவிட்டு) சீ ! சீ ! மடையர்களே ! நம்மையாவது நீங்கள் கட்டுவதாவது ! ஏதோ சும்மா இருக்கின்றேனென்று பார்க்கின்றீர்களோ ?

பைர:—(அழுதுகொண்டே எழுந்து) மாரர்சா ! பொறுத்துக்கிறவேணும் ! நாங்க என்னசெய்வோம் ? உங்களைப்பிடிச்சுக்கிட்டுப் போகாவிட்டா எங்கதலை போய்விடும். இதோ பாருங்கோ ! சேநாதிபதியவங்க அப்படித்தான் உத்தரவுபண்ணியிருக்கிறாங்கோ ? (மடியிற் சொருகிவைத்திருந்த பத்திரிகையை எடுத்து நீட்டல்)

போஜ:—(பீமன் வெளிச்சங்காட்டப் பத்திரிகையை வாங்கிப் படித்துவிட்டு, ஆத்மகதமாய்) பாவம் ! இவர்கள் என்ன செய்வார்கள் ! வத்ஸராஜர் தாம் என்னசெய்வார் ? எய்கிறவன் எய்தால் அம்பு என்னசெய்யும் ? சொன்னதைச் செய்பவர்கள்

தாமே ஸேவகர்கள்? (ப்ரகாஶமாய்) ஸரி! இப்பொழுது என்ன செய்யவேண்டு மென்கிறீர்கள்?

கிங்கரர்கள்:—மாராசா! தாங்க எங்களை மன்னிக்சணும்; சேனாதிபதியவங்க உங்களைக்கூட்டிக்கிட்டு வரச்சொன்னுங்க! நீங்கதான் எங்க உயிரைக் காப்பாத்தணும்!

போஜ:—ஸரி! கூடவரவேண்டுமா? அப்படியே வருகின்றேன்! நீங்கள் விலகி நில்லுங்கள்! (அவர்கள் அப்படியே விலகிநிற்க, காளிதாஸனை நோக்கி) ஸகே! யான் வத்ஸராஜரிடம் அவஶ்யமாய்ச் செல்லவேண்டியிருக்கின்றது. உனக்கு நித்ரைக்ககாலமாகின்றது! நீ வீட்டிற்குச்செல்? யான்போய் வருகின்றேன்!

காளி:—ராஜகுமாரா! நீ தனியே செல்வதில் அபாயமிருக்கின்றது! நானு முன்னுடன் வருகின்றேன்!

போஜ:—நண்ப! நீ வருவது தகுதியன்று! வத்ஸராஜர் எதற்சாக என்னை யழைத்துக்கொண்டு வரச்சொன்னுரோ? தடைசொல்லவேண்டாம்!

காளி:—ராஜகுமார! வேறென்ன இந்த வேளையில் இருக்கப்போகின்றது? நிஶ்சயமாய் உன் தலைக்கே கேடுநேரிடுமென்று தோன்றுகின்றது.

போஜ:—எப்படியிருப்பினும் யான் போகவேண்டும். பாவம்! என்னிமித்தமிவர்களேன் உயிரிழக்கவேண்டும்? நான் ஶீக்க்ரத்தில் திரும்பிவருகின்றேன். நீபோ!

காளி:—என்னவோ! எனக்கொன்றும் யுக்தமாகத் தோன்றவில்லை!

போஜ:—ஸகே! நீயிதைப்பற்றிக்கவலைப்படவேண்டாம். யான் போய் வருகின்றேன்! (கிங்கரர்களை நோக்கி) வாருங்கள், போவோம்! (மூவரும் நிஷ்க்ரமித்தல்)

**காளி:**—ஸரி ! ஏதோ கேடு ஸம்பவிக்குமென்பதில் ஐயமில்லை. எதற்கும் நாமும் இவர்களுடன் மறைந்து செல்வோம். வத்ஸராஜர் போஜனுக்குத் தீங்கிழைப்பாரென்று யான்நினைக்கவில்லை. எதற்கும் ஈசனிருக்கின்றான்! யானும் இவர்களுக்குத் தெரியாமல் இவர்கள் பின்னேயே செல்கின்றேன் !

(நிஷ்க்ரமித்தல்)

## மூன்றாங் களம்

**இடம்—காளிகாபரமேஶ்வரி வநத்தில் ஒரு வத்யஸ்தலம்**

(**வத்ஸராஜர்** ஒருபுறம் நிற்க இரண்டு கிங்கரர்களால் நடத்தப்பட்டு **போஜன்** ப்ரவேஶித்தல்)

**பைரவன்:**—மாராச ! சேநாதிபதியங்க இதோ இருக்கிறாங்கோ !

**பீமன்:**— இப்படி வாங்க மாராச !

**போஜன்:**—(வத்ஸராஜன் அருகிற்சென்று) **வத்ஸராஜரே !** நீர் இவ்விருளில் இக்கிங்கரர்களை யனுப்பி இந் நிர்ஜநமான வநத்தில் என்னை வரழைத்துக்கொண்ட காரணம் யாது?

**வத்ஸராஜன்**—இளவரசே ! இதோ இச்சாஸந பத்ரிகையைப்பிரித்து வாசித்துப்பாரும் ! (ஶாஸநபத்ரிகையை நீட்டல்)

**போஜ:**—என்ன ! என்சிறிய தகப்பனார் எழுதியனுப்பியதோ ?

**வத்ஸ:**—ஆம் ! இளவரசே ! (தலையசைத்தல்)

**போஜ:**—அப்படியா ? அதை நீரே பிரித்து வாசியும் !

**வத்ஸ:** —(வ்யஸநத்துடன், ஆத்மகதமாய்) ஐயோ! என்ன கொடுஞ்செயல் புரியும்படி வாய்த்தது. (ஶாஸந பத்ரிகையை பிரித்து வாசித்தல்)

धारानगराधिपतेः
ஸ்ரீமுஞ்ஜராஜஸ்ய ஶாஸநபத்ரம்

ஜயதி ஜகதேகவீரஃ
ஸீராயுத துலித விபுல பலவிபவஃ;
அநவரத வித்த விதரண-
நிர்ஜித சம்பாதிபோ முஞ்ஜஃ.
ஸ ஜயதி வாக்பதிராஜஃ
ஸகலார்த்தி மநோரதைக கல்பதருஃ;
ப்ரத்யர்த்தி ஸுத பார்த்திவ-
லக்ஷ்மீஹடஹரண துர்லலிதஃ.

தாரை நகருக்கதிபதியாகிய
ஸ்ரீமுஞ்ஜராஜருடைய ஶாஸந பத்ரம்

ஜகதேக வீரரும், பலதேவருக்கு ஸமாநமாந விசேஷ புஜபல பராக்ரமத்தையுடையவரும், எப்பொழுதும் • யாசகருக்குக் கேட்டதைக் கொடுப்பதில் சம்பாதிபதியைக்கூட மிஞ்சினவருமாகிய ஸ்ரீமுஞ்ஜராஜர் வெற்றிகொண்டோங்குகின்றார் !

யாதொருவர் ஸமஸ்தமான யாசகர்களின் மநோரதத்தைப் பூர்த்திசெய்வதில் ஸாக்ஷாத் கல்ப வ்ருக்ஷம் போன்றவரோ, தனக்கு எதிரிகளாய் நிற்கும் அரசர்களின் ஸம்பத்தைப் பலாத்காரமாய் யுத்தஞ்செய்துப் பிடுங்கிக்கொள்வதில் ஆக்ரஹமுள்ளவரோ, அப்படிப்ப 'வாக்பதிராஜர் வெற்றிகொண்டோங்குகின்றார்!

பரமஹட்டாரக மஹாராஜாधிராஜ பரமார பரமேஶ்வர ஸ்ரீ க்ருஷ்ணராஜதேவ பாதாநுத்யாத-பரம ஹட்டாரக மஹா ராஜாधிராஜ பரமார பரமேஶ்வர வஜ்ர டஸ்வாம்யபராஹ்யாந ஸ்ரீவைரிஸிம்ஹதேவ பாதாநுத்யாத-பரமஹட்டாரகமஹாராஜாधிராஜபரமாரபரமேஶ்வர ஹர்ஷதேவாபராஹ்யாந ஸ்ரீஸீயகதேவ பாதாநுத்யாத-பரமஹட்டாரக மஹாராஜாधிராஜ பரமாரபரமேஶ்வர ஸிம்ஹஹட வீரருத்ரதேவாஹ்யாந ஸ்ரீ வாக்பதிராஜதேவ பாதாநுத்யாத-பரமஹட்டாரக மஹாராஜாधிராஜ பரமார பரமேஶ்வர குமாரநாராயண-நவஸாஹஸாங்க-விக்ரமாதித்யாபராஹ்யாந ஸ்ரீ ஸிந்துல ராஜதேவபாதாநுத்யாத-பரமஹட்டாரக மஹாராஜாधிராஜ பரமார பரமேஶ்வர ஸ்ரீ உதமோவர்ஷ வாக்பதி ராஜ

---

பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேஶ்வர ஸ்ரீக்ருஷ்ணராஜாதேவர் கால் வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேஶ்வர வஜ்ரட ஸ்வாமி என்று பிருதுபெயர் பூண்ட ஸ்ரீவைரிஸிம்ஹதேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேஶ்வர ஹர்ஷதேவரென்று பிருதுபெயர் பூண்ட ஸ்ரீஸீயகதேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேஶ்வர 'ஸிம்ஹபடர் என்று பிருதுபெயர் பூண்ட ஸ்ரீவாக்பதிராஜ தேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹாராஜாதிராஜ பரமாரபரமேஶ்வர வீரருத்ரதேவர்-குமார நாராயணர் - நவஸாஹஸாங்கர் - விக்ரமாதித்யர் என்று

தேவா பராஹியாந ஸ்ரீமுஞ்ஜராஜதேவ ப்ருத்வீ வல்லப ஸ்ரீவல்லப நரேந்த்ரதேவ:-குசலீ, ஸ்ரீமத் தாராயாம் ஸமுபஸ்திதம் யசோபடாபராஹ்வயஸ்ய ரமாங்கதஸ்ய ஜ்யேஷ்டபுத்ரம் ஸர்வசேநாத்யக்ஷம் வத்ஸராஜம் ஸமாஜ்ஞாபயதி—"அஸ்து ஸம்விதிதம், யதா அஸ்மாக மக்ரஜபாதாநாம் குமாரோ போஜ:, ஸ்வமேவஸ்யாவசந ப்ரோத்ஸாஹித:, ஸ்வதர்மபத்நீம் விலாஸவதீம் நிர்ஹேதுகம் விஷேண ஹந்தும் ப்ராயதத; அதச்ச, அஸ்மாபி: ஸாக்ஷி பூர்வகம் விசார்ய,

> " குருஞ் வா பால வ்ருத்தௌ வா
> ப்ராஹ்மணம் வா பஹுச்ருதம்;
> ஆததாயிந மாயாந்தம்
> ஹந்யா தேவாவிசாரயந்.

பிருதுபெயர்கள் பூண்ட ஸ்ரீஸிந்துலராஜ தேவரின் கால்வழியில் வந்தவரும், பரமபட்டாரக மஹா ராஜாதி ராஜ பரமாரபரமேச்வர ஸ்ரீமத் அமோகவர்ஷர் - வாக்பதி ராஜ தேவர் என்று பிருதுபெயர்கள் பூண்ட ஸ்ரீமுஞ்ஜராஜ தேவராகிய ப்ருத்வீவல்லப ஸ்ரீவல்லப நரேந்த்ர தேவர், உபயகுசலோபரி, ஸ்ரீதாரை நகரில் விஜயஞ்செய்திருக்கும் யசோபடர் என்று பிருது பெயர் பூண்ட ரமாங்கதருடைய மூத்த குமாரரும் ஸர்வசேநாத்யக்ஷருமான வத்ஸராஜருக்குக் கட்டளை யிடுவது யாதெனில்:—எமது தமையனார் குமாரன் போஜன், தனது வேசியினுடைய வார்த்தையைக் கேட்டுக் கொண்டு, தனது தர்ம பத்நியாகிய விலாஸவதியை ஒரு காரணமுமின்றி விஷங்கொடுத்துக்

அக்நிதோ கரதஸ்சைவ
 ஸஸ்த்ரபாணிர் தநாபஹ꞉;
க்ஷேத்ரதார ஹரஸ்சைவ
 ஷடேதே ஹ்யாததாயிந꞉.
உத்யதாஸி விஷாக்நிஸ்யாம்
 ஸாபோத்யதகரஸ் ததா;
ஆதர்வணேந ஹந்தா ச
 பிஸுநஸ்சாபி ராஜநி.
பார்யாதிக்ரமகாரீ ச
 ரந்த்ராந்வேஷண தத்பர꞉;
ஏவமாத்யாந் விஜாநீயாத்
 ஸர்வாநேவா ததாயிந꞉.

---

கொல்லமுயன்றனனென்பது நன்ருய்த் தெரிந்திருக் கிறோமே. ஆகலின் யாம் ஸாக்ஷிகளைக்கொண்டு விசாரணை செய்து,—

"ஆசார்யனையும், பாலனையும், வ்ருத்தனையும், ஸகல வேதங்களையும் அத்யயநஞ் செய்திருக்கும் பிராஹ்மணனையும், ஆததாயியாய் வருபவனை யோஜிக்காமலே கொல்லலாம்" என்றும், "நெருப்பு வைத்துக் கொளுத்துபவன், விஷம் வைத்துக் கொல்லுபவன், கையில்ஸஸ்திரங்கொண்டு எதிர்ப்பவன், பணத்தை பலாத்காரமாய்க் கொள்ளையடிப்பவன், க்ஷேத்ரத்தை யபஹரிப்பவன், பார்யையை யடித்துக்கொண்டு போகிறவன் இவ்வறுவரும் ஆததாயிகள்" என்றும்; அன்றியும், "கையில் கத்தி யேந்தியோ விஷம் வைத்தோ கொல்பவனும், ஸாபங் கொடுப்பதற்குக் கையெடுப்பவனும், அதர்வண மந்திரங்களினற் ஸூந்யம் வைப்பவனும், ராஜத்ரோஹஞ் செய்பவனும்,

ஙா ததாயி வயே ஷோஷோ
ஹந்தார் ஹவதி கஶ்சந;
ப்ரகாஶம் வா ऽப்ரகாஶம்வா
மந்யுஸ்தம் மந்யு ம்ருச்ஹதி."

ஏவம் யர்மஶாஸ்த்ரஸ்ய ப்ரமாணமப்யநுஸ்ருத்ய, ஶிரஶ்ஹேஷ்யஃ க்ருதோ ஹோஜ இதி. ததஸ் த்வயா ஸாவயாநேந ஹோஜம் ரஹஸி ஹுவநேஶ்வரீ விபிநம் நீத்வா தஸ்ய ஶிரஶ் ஹித்வா, ஶிரஶ்ச நிஶாயா மஸ்யா மேவ, அஸ்மதந்தஃபுரமாநேதவ்யமிதி". ஏவம் விக்ரம ஶகாப்தே ஏகோந ஸப்தத்யதிக ஸாஹஸ்ரிக ஸம்வத் ஸரே கார்திக ஶுக்ல சதுர்தஶ்யாம் ஸ்ரீமத்யாராநகர்

பார்யையை திக்காரஞ் செய்பவனும், எப்பொழுதும் பிறர்மீது கோழி சொல்பவனும், இன்னும் இவர்களைப் போன்றவரையும் ஆததாயிகள் என்றே அறிதல் வேண்டும்" என்றும், "வெளிப்படையாகவோ ரஹஸ்யமாகவோ ஆததாயியைக் கொல்லுவதில் கொல்பவனுக்கு யாதொரு தோஷமுமில்லை" என்றும்,—

ஸகல தர்மஶாஸ்த்ரங்களின் ப்ரமாணங்களையும் அநுஸரித்து, போஜனது தலையை வாங்கிவிடும்படி தீர்மாநஞ் செய்திருக்கின்றோம். ஆகலின், நீர் வெகு ஜாக்ரதையுடன், போஜனை ஒருவருக்குந் தெரியாமல் புவநேஶ்வரியின் வநத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அவனது தலையை வாங்கிவிட்டு, அத்தலையையும் இவ்விரவிற்குள்ளேயே எமது அந்தப்புரத்திற்குக் கொண்டுவந்து எம்மிடம் ஒப்புவிக்கவேண்டியது. இப்படிக்கு விக்ரமஶகாப்தம் ஆயிரத்தி அருபத்தொன்பதாவது வர்ஷத்தில் கார்த்திகைமாஸம் ஶுக்லபக்ஷ சதுர்தஶியில் ஸ்ரீ தாரைநகரில் விஜயங் கொண்டெழுந்தருளியிருக்கும் யாம் ஶாஸந பத்ர மூலமாய்த் தெரியப்

யாம் அவஸ்யிதை ரஸ்மாஹி: ஶாஸநபத்ரேண ப்ரதி பாத்யதே. ஸ்வஹஸ்தோயம் ஸ்ரீ முஞ்ஜராஜதேவஸ்ய.




படித்துவது. ஸ்ரீ முஞ்ஜராஜதேவருடைய ஸ்வஹஸ்த லிகிதம்.



போஜ:—(தைந்யத்துடன், ஆத்மகதமாய்) ஆ! தெய்வமே! இது யான் ஸிந்துலருக்குப்பிள்ளையாய்ப் பிறந்ததன் குற்றமோ? ஆ! என் சிற்றப்பா! உன் தந்த்ரமே தந்த்ரம்!! இவ்வற்ப ராஜ்யத்திற் காசைப்பட்டு என்னென்ன வெல்லாஞ் செய்யத்துணிந்தனை! யான் கொலையுண்டு இறப்பதற்காகச் சிந்திக்கின்றேனல்லேன்! விஷங்கொடுத்து விலால வநிலை யான்கொல்லமுயன்றதாக நீ என் மீது குற்றம்சாட்டினதற் கொன்றுக்கே வருந்துகின்றேன். ஐயோ! இவ்ராஜ்யத்தை நீயே ஆளவேண்டுமென்று ஒரு வார்த்தை வெளியிடில், இப் பரதகண்டம் முற்றும் உனது ஶாஸநத்துக்குள் அடங்கியதாகச் செய்வேனே! அப்படியிருக்க, இவ்வாறு அந்யாயமாய் பொய்க்குற்றஞ்சாட்டி என்னைக் கொல்லத்துணிந்ததே உன் மநம்! ஆ ஆ! என்னவன்மை! என்ன கொடுமை!

*"மன்னுபுகழ் பெற்றுமுதல் யுகத்தி லார்ந்த
　　மாந்தாதாவெங்கே? நீர்க் கடல டைத்துத்
தென்னிலங்கை மேவியிரா வணனைச் செற்ற
　　தேர்க்கதிரோன் குலத்திலக ராம னெங்கே?
இன்னுமிகப் பாண்டவரே முதல யாரு
　　மெய்தினரவ் விண்ணுலக மிறந்து, மன்ன!

*"மாந்தாதா ச மஹீபதி꞉ க்ருதயுகா-
　　லங்கார ஸூதோ கத꞉,
ஸேதுர் யேந மஹோததௌ விரசித꞉
　　க்வா ஸௌ தஶாஸ்யாந்தக꞉?
அந்யே சா(அ)பி யுதிஷ்டிர ப்ரப்ருதயோ
　　யாதா திவம் பூபதே!
நைகே நா(அ)பி ஸமம் கதா வஸுமதீ
　　நூநம் த்வயா யாஸ்யதி!

அன்னவரோ டிவ்வவநி சென்ற தில்லை
யாயினுமிஃ துன்னுடனே போகுமெய்யே !!"

வத்ஸ:—ராஜகுமாரா! இப் பத்ரிகையை முற்றுங்கேட்க வில்லையோ?

போஜ:—(வெறுப்புக்கொண்டு) இப்பத்ரிகையையா? (பெருமூச் செறிந்து) ஆ ஆ! கேட்டேன்! என் தலையைவெட்டி விடுவதற்காகத்தான் தாமென்னை இவ்விடத்திற் கழைத்து வரச் சொன்னீர்போலும்?

வத்ஸ:—ஆம்! அப்பத்ரிகையில் எழுதியிருக்கிறபடியே தான் யான் நடக்கவேண்டியிருக்கிறது.

போஜ:--வத்ஸராஜரே! என்னையோ ஒருவன் தலைவாங்கி விடத் துணிவன்? இவ்ராஜ்யத்திற்குரியவனும் ஸ்ரீஸிந்துலமஹாராஜருடைய ஏகபுத்ரனுமாகிய என்னை இந்நடுநிசியில் இக்கோரமான வநத்திற்குத் தனியாய்க்கொண்டு வருவதற்கும் ஒருவனுக்கு வல்லமையுண்டோ? (கோபத்துடன்) அஹஹ! என்னுடைய ப்ராணனை வாங்கத்தக்க ஸக்தியுள்ள வீரனும் இவ்வுலகிலிருக்கின்றனனோ?

* "கூடிய வேழத்தைக் கொன்றிழி சோரிபே
ழாய வாய்மடுத் தல்கந்திச் செம்மதிச்
சீய வாயிற் செறிபற் பிடுங்கிட
மேய சிந்தை விரும்புநன் யார்கொலோ?"

அஹோ! என்ன காலத்தின்மஹிமை! என்றுங் காணாதது காண்கின்றது! என்றுங் கேளாதது கேட்கின்றது!

* முத்ரா ராக்ஷஸம்

XII

AN INDIGNANT POPULACE

OR

" BUDDHISAGARA ROUSING THE CITIZENS TO REBEL AGAINST KING MUNJA"

——*Act III, Scene* 4, *page* 177

Facing page [illegible]

# பௌரர்களின் க்ரோதாவேசம்

## அல்லது

## "முஞ்ஜராஜனுக்கு விரோதமாய் எதிர்த்தெழும்படி புத்திஸாகரர் பௌரர்களைப் ப்ரோத்ஸாஹஞ் செய்தல்"

புத்தி:—அந்தோ! அவர் இறந்த விதத்தை நீங்கள் அறிவீர்களாயிற் சும்மா விரீர்கள்! கொலையுண்டன்றோ பரதேசியாய் இறந்தனர்!

பௌரர்:—ஹா! ஹா!! என்ன விந்தை! என்ன அநீதி!! நம்மிளவரசருக்குந் தீங்கிழைக்கத் துணிந்தவன் யாவன்? நாங்கள் இக்ஷணமே அவனைக் கொன்று பழிதீர்க்கின்றோம்! அன்றேல், எம்முயிர்களையும் மாய்த்துக்கொண்டு, அவருக்குப் பின்னே விண்ணுலகஞ் செல்கின்றோம்.

புத்தி:—அவஸரப்படுகின்றீர்களே! இது பற்றியே யான் தனியா யிருக்கவேண்டு மென்பது.

பௌரர்:—எதற்கும் நாங்கள் அஞ்சோம்! இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்த கொலைபாதகனை நாங்கள் கண்டந் துண்டமாய் வெட்டி விட்டுத்தான் வீட்டிற்குச் செல்வோம்.

புத்தி:—ஐயோ! பேதையர்காள்! ஏன் இந்த வீண் சபலம்? உங்களுடைய நன்மைக்காகவே சொல்கின்றேன். பொல்லாத ராஜாஜ்ஞைக்குள்ளாவீர்கள்! இது தர்மத்திற்குக் கால மன்று. பேசாமற் செல்லுங்கள்.

பௌரர்:—அப்படிப்பட்ட ஸ்ரீ ஸிந்துல மஹாராஜரின் புதல்வனை கொலையுண்டு சாகும்பொழுது, ராஜாஜ்ஞை எங்களை என்ன செய்யக்கூடும்?

—அங்கம். III, களம். 4, பக்கம். கஎஎ

* 'கோனந்த் ரன்குலக் காருங்கொளுத்துமென்
மான மார்சின வாளெரி யூடுபோய்த்
தானந் தம்முற்றுச் சாவுப ஸலபம்போ
லூன மெய்துமா றுள்விழை மூடன்யார் ?'

வத்ஸ:—இளவரசே ! யான் என்செய்வேன் ? ராஜா ஜ்ஞைக்கு இணங்கி நடக்கவேண்டியவரல்லரோ ஸேவகர்கள் ?

போஜ:—ஸர்வேஶ்வரனுடைய ஆஜ்ஞையாயிருப்பினும் நீரென்னைச்சொல்ல உடன்படுவது ந்யாயமோ ? உமக்கு யான் செய்த பேருதவியையும், என் பிதா ஸ்ரீ ஸிந்துலமஹாராஜர் பின்தந்தையார் யஶோபட ரமாங்கதருக்குச்செய்த நலத்தையும், நீர் மறந்துவிடுவீரென்று யான் கனவிலும் நினையேன் !

வத்ஸ:—இளவரசே ! உமது ஶிரத்தை இன்றிரவிற்குள் வாங்கிவிடுவதாக மஹாராஜாவினிடம் வாக்குக்கொடுத்துவிட்டேன். அதைத் தப்பாமற் செய்தே தீரவேண்டும் !

போஜ:—அடே ! மூடா! என்னைத் தொடுவதற்கும் உனக்கு ஶக்தியுண்டோ ? (வத்ஸராஜரைக் காலாலுதைத்தல்)

வத்ஸ:--(போஜனது காலை வணக்கமாய்ப்பிடித்துக்கொண்டு) இளவரசே ! என்னை மன்னிக்கவேண்டும் ! அப்படிச் செய்யாவிடில் என்தலை போய்விடும்.

போஜ:—எப்படியிருப்பினும், என்னைக் கொலைசெய்ய உமது மநமுந் துணியுமோ ?

வத்ஸ:—இளவரசே! ஸகல ந்யாயங்களையுமறிந்த தமக்கு யானென்ன சொல்லப்போகின்றேன் !

* முத்ரா ராக்ஷஸம்

* "ஸ்வாம்யுகதே யோ ந யததே
ஸ ஹ்ருத்யோ ஹ்ருத்ய பாமகஃ,
தஜ்ஜீவந மபி வ்யர்யும்
அஜா மளகுசாவிவ."

என்று தாங்கள் கேட்டதில்லையோ ?

போஜ:—ஆயின், என்ன செய்யவேண்டுமென்கின்றீர் ?

வத்ஸ:—இறப்பதற்கு ஸித்தப்படுத்திக் கொள்வீரென்று ப்ரார்த்திக்கின்றேன்.

போஜ:—(ஆத்மகதமாய்) ஹா ! ஹா ! வத்ஸராஜருமா என்னைக்சொல்லத் துணிந்துவிட்டனர் ! (பெருமூச்செறிந்து சற்றுயோஜித்து வைராக்யங்கொண்டு) ஹா தெய்வமே! நினது குடிலமான மக்தியை யானென் சொல்வேன் !

† கடல் நிலமாக, நிலங் கடலாக,
அணுமலையாக, மலையணுவாக,
திருணம் குலிமமா, குலிமந்திருணமா,
நெருப்புத் தண்ணிதாத் தண்பனிவெப்பமா,

---

* ப்ரபு சொன்னபடி எவன் செய்ய முயலவில்லையோ அவன் ஊழியர்களுக்குள் மிகவும் இழிவானவன். அவன் உயிர் தரித்திருப்பதும் கேவலம் ஆட்டின்கழுத்தில் முளைத்துத் தொங்கும் ஸ்தநம்போல் வீணே.

† " அம்ஹோயிஸ் ஸ்யலதாம், ஸ்யலம் ஜலயிதாம்,
ய-ளிலவஃ மைலதாம்,
மேருர் ம்ருத்கணதாம், த்ருணம் குலிமதாம்,
வஜ்ரம் த்ருண ப்ராயதாம்;

அன்பரைப் பகைஞரா வறவோரல்லரா,
ஆக்கு நின்குடில வற்புதலீலையால்
மாக்களிப் பெய்தும் வன்பரம் பொருளே
உன்வலி நினைத்தபே ருள்ளமு நடுங்குமே !

நல்லது ! எனது கெட்டகாலத்திற்கேற்றபடி, இவரது மநமு மென்னைக் கொல்லத்துணியும். (ப்ரகாஶமாய்) வத்ஸராஜரே ! உமக்கே என்னைக் கொல்லுவதற்கு மநம்வரும்பொழுது யான் கொலையுண்டிறப்பதற்கஞ்சேன். இதோ கற்பதுமைபோல் அசையாமல் நிற்கின்றேன். வெட்டிவிடும் ! இக்கிங்கரர்கள் மாத்ரம் என்னைத்தொடாமல் விலகி நிற்கட்டும்.

வத்ஸ:—அடே ! நீங்கள் அப்புறஞ்சென்று நில்லுங்கள் ! நானே இக்கார்யத்தை நடத்திவிட்டு வருகின்றேன் !

கிங்கரர்:—(மறைவாய்) இங்கே நடக்கப்போகிற கொடுங் கோரத்தை நேரே நின்று பாராமல் அப்புறம் போவதே நலம். (இருவரும் நிஷ்க்ரமித்தல்)

வத்ஸ:—ராஜகுமார ! நேரமாகின்றதே !

போஜ:—(மெதுவாய்) இதற்கு வேறு பரிஹாரமொன்று மில்லையோ ?

வத்ஸ:—என்தலையைப் பதிலாகக் கொடுப்பதைவிட வேறு பரிஹாரம் யாதுமில்லை.

போஜ:—ஈஶா! இதுவும் நின்கருணைவிலாஸமோ ?

வஹ்நிஃ ஶீதலதாம, ஹிமக்ஷ்ஹநதாம்,
ஆபாதி யஸ்யேச்சயா,
லீலாக்ஷ்ர்லலிதாக்ஷ்ஹத வ்யஸநிநே
தேவாய தஸ்மை நமஃ."

"லக்ஷ்மீ கௌஸ்துப பாரிஜாத ஸஹஜ:
ஸூநு : ஸுதாம்ஸோர்யே:,
தேவேந ப்ரணய ப்ரஸாத ஸுயிநா
மூர்த்நா த்ருத: ஸம்பூநா ;
அத்யாப்யுஜ்ஜதி நைவ தைவவிஹிதம்
கைக்ஷண்யம் க்ஷபாவல்லப :,
கேநாந்யேந விலங்க்யதே விதிமதி :
பாஷாணரேவாஸவீ ?"

(தைர்யத்துடன்) வத்ஸராஜரே! நடத்திவிடலாம் ராஜாஜ்ஞையை! உமக்காக இறப்பதற்கு யானிதோ ஸித்தமாகவே யிருக்கின்றேன்! (தலையைக்குனிந்து காட்டல்)

வத்ஸ:—(கத்தியை யுருவப்போய்ப்ரமித்து, அதனை நழுவவிட்டு) ஆ ஆ! ப்ராணத்யாகஞ் செய்யும்பொழுதுகூட வாடாத முககாந்தியும் ஓடாதவீர ஶக்தியுமுள்ள நயநாபிராமனை இப்போஜ குமாரனை யான் எப்படிக் கொல்வேன் ?

(ப்ரவேஶித்து)

காளிதாஸன்:—(பரபரப்புடன்) வத்ஸராஜரே! இஃதென்ன கார்யம்? கேவலம் அசேதநமான பொருள்கள்கூட இக்கொடுஞ்செயலைப் புரியத் துணியாமலிருக்க, ஸகல தர்மங்களையுமறிந்த தாமே இதைச் செய்யப்புகுதல் நன்றோ? கல்லினுங் கடிநமான இக்கட்கத்திற்கே உம்மைவிட இரக்கமதிகமாயிருக்கின்றதே! க்ஷத்ரிய வம்ஶத்தில் ஜநித்தும் தாமிப்படிக்கொலை செய்யப் புகுவது ஶரியன்று. நிரபராதியான ஸாதுவைக்கொல்வது தமது பராக்ரமத்துக்கும் ப்ரக்யாதிக்கும் தகுதியோ? தமது பரிஶுத்தமான வம்ஶத்திற்கடுக்குமோ? அபகாரம் புரிந்தவர்களுக்கும் உபகாரஞ்செய்வதன்றோ தம்மைப்போன்ற பெரியோர்களுக்கு லக்ஷணம். ஒரு குற்றமுஞ்செய்தறியாத இவ்ராஜகுமாரனைக்கொன்று விடுவதனால் தாம் அடையும் பயன்

மாது? ஆ ஆ! கபோதத்தின் வ்ருத்தாந்தத்தைத் தாம் கேட்டி லீரோ? அறிவில்லாத பறவைகள்கூடத் தமக்கபகாரியான ஶத்ருவையே, தம் ப்ராணனைக்கொடுத்தாயினுங், காப்பாற்றும் பொழுது, பகுத்தறிவுள்ளவர்களாயும், ராஜவம்ஶத்திற் பிறந்த வர்களாயும், புண்யபூமியில் வஸிப்பவர்களாயும், ஸகலதர்மங் களையு மறிந்தவர்களாயுமுள்ள தம்போன்றவர்கள் புத்ரன்போன் றும் நிரபராதியுமான இவ்ராஜகுமாரனைக் கொல்வதுதக்கதன்று?

* "கற்றவர் கடவுட்டாநஞ்
சேர்ந்தவர் களைகணில்லா
ரற்றவரந்க ணுள
ரன்றியு மவர்கள் போல்வார்க்
குற்றதோ ரிடுக்கண் வந்தா
லுதவுதற் குரித்தன் றுயிற்
பெற்றவிவ் வுடம்பு தன்றாற்
பெரும்பய னில்லை மன்னோ!"

ஆகலின், தாம் ஒருவேளை, இக்கொடுங்கோலரசனுக்குப்பய ந்து, மோஹத்தினாலாவது அவிவேகத்தினாலாவது, நிரபராதி யான இப்போஜகுமாரரைக் கொன்று விடுவீராயின், தமக்கு மஹா கோரமான பாதகங்கள் நேர்ந்துவிடும்.

"அநாஶ்ரஸம் து யே வ்நந்தி
ஸ்வேச்ஊயாஸிச்ஊயாபி வா;
தேஷாம் ஹி நரகே வாஸோ
யாவ ஊசந்த்ர தாரகம்."

என்று தர்ம ஶாஸ்த்ரங்களெல்லாம் முறையிடுகின்றனவல்ல வோ? இக்கொலைபுரிவதானது தம்மை யழிப்பதுமன்றித் தமதுகுலத்தையும், பலத்தையும், இஹத்தையும் பரத்தையுங் கூட நாஶஞ்செய்துவிடும்.

---

* விநாயகபுராணம்

ராகம் - ஸாவேரி - தாளம் - ஆதி

பல்லவி

விடும் விடும் கொடுமையை! வீணு யேனையா
படுநரகில்வீழப் - பார்க்கின்றீர் !

அநுபல்லவி

அடுக்குமோ தமக்கிந்த - அறியாத பாலகனைப்
பிடித்துவரச்செய்திப்-பெருங்கொலைபுரிவது? (விடும்)

சரணம்

இறந்தபின் நம்முடன்-எவைவரு மறமின்றி ?
அறத்தினும் மேலான-ஆப்தனுண்டோ சொல்லீர் !
தருமமொன்றே நம்மைத்-தாங்கித்தலை காக்கும்
அருமை நேசனைப்போல-அங்குமிங்குமெங்கும்!—(விடும்)

ஆகலின் தாம் எப்படியாவது இச்கொடிய கார்யத்தை நீக்கி இளவரசரைக் காப்பாற்றவேண்டும்.

போஜ:—ஸகே ! காளிதாஸா ! நீ என் இத்துக்கத்தைப் பார்க்கவந்தனை ? இது இவருடைய பிழையன்று ! எல்லாம் விதியின் செயல் !

“ராமே ப்ரவ்ரஜநம், பலேர் நியமநம்,
பாண்டோஸ் ஸுதாநாம் வநம்,
வ்ருஷ்ணீநாம் நிதநம், நளஸ்ய ந்ருபதே:
ராஜ்யாத் பரிப்ரம்சநம்;
காராகார நிஷேவணஞ் ச மரணம்
ஸஞ்சிந்த்ய லங்கேச்வரே,
ஸர்வ: காலவசேந நச்யதி நர:
கோவா பரித்ராயதே ?”

ராகம் - ப்யாகடை - தாளம் - ரூபகம்

பல்லவி

விதியின் செயலன்றோ - வீரர்களழிவது,
விதியைவெல்லவும் போமோ ?

அநுபல்லவி

பதியாம் கண்ணனைக்கொண்ட - பாண்டவர்நொந்ததும்,
மதியிற் சிறந்தபலி - பாலாற்கட்டுண்டதும்—　　(விதியின்)

சரணங்கள்

இராமன்கானகஞ்சென்று - இனியாளைப் பிரிந்ததும்,
இராவணனடியோடே - இலங்கையி லழிந்ததும்— (விதியின்)
நளமஹாராஜன்தன் - நாட்டை யிழந்ததும்,
களங்கமில்லாச் சந்த்ரன் - சட்டழிந்திருந்ததும்—　(விதியின்)

(வத்ஸராஜரை நோக்கி) வத்ஸராஜரே! என் இன்னுந்தாமஸம்? உமது கடமையை நடத்திவிடும். (திரும்பியுந் தலையைக்குனிந்து காட்டல்)

வத்ஸ:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! என்னகோரமான பாவத்தைச் செய்யத்துணிந்தேன். அதற்சென்றேகொண்டு வந்த இக் கட்கங்கூட, இக்கொடுஞ்செயலைப்புரியவஞ்சி, என் கரத்திலிருந்து என்னை வேண்டிக்கொள்வது போற் கீழே வீழ்ந்து வணங்கும்பொழுது, யான் எவ்விதக்கொடும் பாதகத்துக்குடன் பட்டேன். யுத்தத்தில் ஒருமுறை என் ப்ராணனையே காப்பாற்றின இம்மஹாநுபாவனையோ கொல்லத்துணிந்தேன்! என்னைச்சுட வேண்டும்! இனி என்னுயிர்போயினும், இந் நிரபராதியான ராஜகுமாரனைக்கொல்லேன்! (போஜனை நோக்கிப் ப்ரகாஶமாய்) இளவரசே! என்னை மன்னிக்கவேண்டும்! இதே கட்கத்தினால் உன்னைக்கொன்றுவிட்டு உன்தலையைக்கொண்டு

வந்து ஒப்புவிப்பதாக அச்சண்டாளன் முஞ்ஜனுக்கு யான் உறுதி மொழி கொடுத்துவந்தபோதிலும், அவன் தன தாஸ்தியெல்லா மெனக்கே கொடுக்கின்றேனென்று சொன்னபோதிலும், யானினி உன்னைக்கொல்லேன்! அபயந்தந்தேன்! எழுந்திரும்! எழுந்திரும் !!

காளி:—இப்பொழுது தான் உம்மைப்பார்த்தால் வத்ஸராஜரென்று தோன்றுகின்றது. இவ்வளவு நேரம்வரை, யாரோ ஒரு கொடிய கொலைபாதகன் போலிருந்தீர்!

போஜ:—வத்ஸராஜரே! இது ஸரியன்று! பேசாமல் ராஜாஜ்ஞையை நடத்திவிடும். இல்லாவிடில் உமது தலைக்கே கேடு ஸம்பவிக்கும். எனக்காக நீர் உயிரிழப்பது தகுதியன்று!

வத்ஸ:—இளவரசே! உனதுநற்குணத்தையான் எவ்வாறு புகழ்வேன்? நீ யொன்றுக்கும் பயப்படவேண்டாம். என்தலை போனபோதிலு முன்னைக்கொல்லேன். இது நிஶ்சயம். எழுந்திரும்! எழுந்திரும் !!

போஜ:—நீர் உயிரிழக்க, யான் உயிர்தாங்கியிரேன்! முடித்துவிடும் அரசனது கட்டளையை! வீணாய் ராஜதண்டனைக்காளாகாதீர்.

வத்ஸ:—ஐயோ! இத்தர்ம ஸங்கடத்திற் கென்ன செய்வேன்? ஒன்றுந் தோன்றவில்லையே!

காளி:—வத்ஸராஜரே! ஒரு ஸங்கடமுமில்லை. யான் சொல்லும்படி செய்வீர்களாயின், ஒருவருக்குங் கெடுதியுண்டாகாது!

வத்ஸ:—அஃதென்ன? அஃதென்ன?

காளி:—நீர் போஜகுமாரரைக் கொன்றுவிட்டதாகவே, ஒரு க்ருத்ரிமமான ஶிரஸைக்கொண்டு போய்க்காட்டி, அரசனிடத்தில் மெய்ப்பித்துவிடும். இளவரசரும் மாறுவேஷந்

கொண்டு சிலநாள் வெளியில் ஸஞ்சரிக்கட்டும். நாமதற்குள் போஜகுமாரரை ராஜ்யத்தில் ஸ்தாபிக்கத் தகுந்த யோஜனை செய்வோம்.

வத்ஸ:—காளிதாஸ! இது தகுந்த யோஜனையே! இப்படிச் சிலநாள் நம்மிளவரசர் மறைந்திருப்பாராயின், யானும் சீக்க்ரத்திலேயே அவரை இந்நாட்டில் நிலைநாட்டத் தக்க நன் முயற்சி செய்கின்றேன்.

காளி:—ராஜகுமார! நீ இவ்வாறு செய்வது நலமெனத் தோன்றுகின்றது. நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாம். நான் உயிருடனிருக்கும் வரையில் அப்பாதகன் முஞ்ஜனைத் தண்டிக்காமல் விடுவதில்லை.

வத்ஸ:—ராஜகுமார! உனது நண்பன் சொன்ன வாறே முடித்துவைக்காவிடில் யான் வத்ஸராஜனல்லேன்.

போஜ:—இத் துர்ப்பாக்யனை என்நிமித்தமாய் நீங்கள் வருத்தமடைவது ந்யாயமன்று. எனக்கிவ்ராஜ்யத்தைப் பெற வேண்டுமென்னுமவா எப்பொழுது மிருந்ததில்லை. என்சிற்றப்பனே இவ்ராஜ்யத்தை யாளட்டும், யான் எங்கேயாகினும் வேறு நாடு சென்று, என் வாழ்நாட்களைத் துறவியாய்க் கானகத்திற் கழிக்கின்றேன். என் சிறியதந்தையாருக்கொரு கெடுதியும் செய்யவேண்டாம்! யான் போய் வருகின்றேன்! உங்களிருவருக்கு மநேகவந்தநம்.

காளி:—ஸகே! யானுன்னை எப்படிப்பிரிந்திருப்பேன்? எங்கே சென்ற போதிலும் உன் செய்தியை மாத்ர மெனக் கடிக்கடி தெரிவித்துக் கொண்டிருக்கவேண்டும். நான் அதி சீக்க்ரத்திலேயே இவையெல்லாம் நமது ஆசிரியருடன் சொல்லி, உன்னை இவ்ராஜ்யத்தில் ஸ்தாபிக்கும்படி தக்க முயற்சி செய்கின்றேன். எதற்கும் நீ இவ்வேஷத்துடன் செல்வது தகுதியன்று. இதோ இக்காவியங்கியை மேலே தரித்துங்கொள். (தான் போர்த்திருந்த காவியங்கியைப் போஜனிடங் கொடுத்தல்)

போஜ:—நண்ப ! என்னை இம்முறையும் நீயே காப்பாற்றினாய் ! இப்பேருதவிக்கு யான் என்ன கைம்மாறு செய்யப் போகின்றேன். உனக்கு என்னுயிரையே அர்ப்பிதஞ் செய்தாலும் போதாது. யான் இந்நாட்டிற்குள் வாராமலேயே, வேறு எங்கேயாகினும் சென்று சிலநாள் கழிக்கின்றேன். (கண்களில் நீர் பெருக, காளிதாஸனைத் தழுவி) காளிதாஸா! ப்ராணநேசா! யான் போய்வருகின்றேன் ! வத்ஸராஜரே ! யான் போய் வருகின்றேன் !! (நிஷ்க்ரமித்தல்)

காளி:—(சிறிது நேரங்கண்ணீர் ததும்பபோஜன்போகும் வழியை நோக்கி) வத்ஸராஜரே ! போஜகுமாரரை இவ்ராஜ்யத்தில் நிலைநாட்டத் தாம் தக்க உதவிகள் புரியவேண்டும். யானும் புத்திஸாகரரிடஞ்சென்று இதைப்பற்றி யோஜிக்கின்றேன்.

வத்ஸ:—காளிதாஸா ! நம்மிளவரசருக்காக எவ்வித உதவிகளையுஞ்செய்ய யான் ஸித்தமாயிருக்கின்றேன் ! அதற்கத்தாட்சியாக இதோ என்கையடை கொடுத்தேன்.

(இருவரும் நிஷ்க்ரமித்தல்)

## நான்காங் களம்

இடம்—தாரைநகர்: ஸஸிப்ரபா தேவியாரின் அரண்மனை வாயில்

(ஸஸிப்ரபாதேவியார் தரங்கவதியுடன் பேசிக்கொண்டு மேன்மாடத்திலிருந்தபடி ப்ரவேஸித்தல்)

தரங்கவதி:—(தேவியாரை நோக்கி) அம்மணி ! தங்கள் அருமைப்புதல்வர் நேற்றிரவு விலாஸவதி தேவின் அந்தப் புரத்திற்குச் சென்றனராமே ? என்ன சேதியோ ?

ஶஶிப்ரபை:—(ஸந்தோஷத்துடன்) ஆமாமடி! நேற்றுத் தான் அவனுக்கு இந்நற்புத்தி தோன்றியது. இதுவரை அப் புத்திஸாகரர் பேச்சைக் கேட்டுக்கொண்டு என் கண்மணி விலாஸவதியைக் கொஞ்சமேனுங் கவனித்தானில்லை. அப்படி யிருந்தும் அப்பெண்மணி அவன் மீது விரோதமாய் ஒரு வார்த் தை சொன்னதுமில்லை. அவளைப்பொறுமையிற் பூமிதேவி யென்றே சொல்லவேண்டும்.

தரங்க:—ஆமாம் அம்மணீ! அவர்களைத் தர்மதேவதை யென்றே கொள்ளவேண்டும். கபட மென்பதே அவர்களுக் கின்னதென்று தெரியாது. ஆ ஆ! அப்புண்யவதிக்கு ஸமாந மாக யாரைச் சொல்லலாம்! கல்வியிற் கலைமாதே! அறநெறி யில் அருந்ததியே! கருணையிற் கௌரியே! எழிலில் இந் திராணியே! அப்பெண்மணியின் நன்னடக்கை மற்றவர்களுக் குத் தவஞ்செய்தாலும் அமையாது? அவர்கள் பத்தரை மாற் றுத்தங்கம்! பதிவ்ரதா ஶிரோமணீ! மஹாலக்ஷ்மிக்கும் இவர் களுக்கும் பேதமென்ன?

* "மண்மடந்தையர் தம்முளும்
வாஸவனுறையும்
விண்மடந்தையர் தம்முளு
நிகரிலா விறல்வேற்
கண்மடந்தையர் தங்குழ
லருந்ததி கற்பிற்
கெண்மடங்கு கற்புடைய
ளிந்திரையினு மெழிலாள்!"

ஶஶி:—அதற்கு ஐயமுமுண்டோ? என் செல்வ மரு மகளைப்போலத் தேடக்கிடைக்குமா? அம்மாதரசியை யான் மருமகளாய்ப் பெற்றது என்னுடைய பாக்யமே! அவளு டைய விநயத்தையும் ஸௌஜந்யத்தையும் யான் என் சொல்

* அரிச்சந்திரபுராணம்

வேன்? அவள் எங்களுக்கு மருமகளா? அன்று! எங்கள் குல தெய்வதமே இப்படி உருவெடுத்து வந்திருக்கின்றது!

தாரங்க:—ஆமாம் அம்மணீ! அவர்கள் தீண்டா நெருப்பு! அவர்கள் மீது ஈஷத்தாயினும் தோஷமுரைக்க முடியுமோ!

ஸஸி:—இவள் மீது தோஷஞ் சொன்னால் நாவழுகிப் போமே! இவள் மழையை நோக்கிப்பெய்யென்றாற் பெய்யும்! வெயிலை நோக்கிக் காயென்றாற் காயும்! இவளுடைய சௌன்னயத்தை யானென்ன வர்ணிப்பேன்!

* "பயிர்கரிந்தனவும் பட்டமாமரமும்
பண்டைநாளுக்க வெள்ளென்பு
முயிர்பெறற் பொருட்டுப் பனிதமும்பாலு
மொழுகிய தேனுமா ரமுதுங்
குயிலினிற் குரலுங் கிளியினின் மொழியுங்
குழலும்யா ழுங்குழைத் தழைத்து
மயிலியற் சாயல் வாணுத றனக்கு
மலரயன் வகுத்ததேன் மொழியாள்!"

இத்தனை நாளாய் இப்படிப்பட்ட வநிதாரத்நத்தை மணந்தும் பார்க்கக்கூடத் தோன்றாமற் போயிற்றே என் போஜனுக்கு!

தாரங்க:—அவர் என்ன செய்வார்? எல்லாம் நம் மந்த்ரியார் செய்யுங் கார்யம்!

ஸஸி:—ஆம்! அவர்தாம் இந்த ஸம்பந்தத்திற்கு ஆதி முதல் ஆக்ஷேபஞ் சொல்லிக்கொண்டு குறுக்கே நின்றார்! தெய்வாதீநம்!! என் மைத்துனரே இதனை முன்னின்று முடித்து வைத்தார்.

* அரிச்சந்திரபுராணம்

(நேபத்யத்திற்குட் கலகல ஶப்தம்)

தாங்க:—(செவிகொடுத்து) இருங்களம்மணீ ! நமது அரண்மனை வாயிலண்டையில் ஏதோ ஶப்தமொன்று கேட்கின்றது!

ஶஶி:—(செவிகொடுத்து) ஆமா மடி ! இதென்ன திடீரென்று பெருங்கூச்சலா யிருக்கின்றது ?

தாங்க:—(கீழே நோக்கி) அம்மணீ! இதோ ஒரு பெருஞ் ஜநக்கூட்டம் இரைச்சலிட்டுக்கொண்டு இவ்வழியே வருகின்றது பாருங்கள் !

ஶஶி:—(தரங்கவதியுடன் மேன்மாடத்தின் வெளித்தாழ்வாரத்திற்குச்சென்று உற்றுநோக்கி) இதென்னவோ பெருங் கோலாஹலமாயிருக்கின்றதே ! இப்பௌரர்களிற் சிலர் கட்கத்தையும், சிலர் பல்லத்தையும், சிலர் தோமரத்தையும், சிலர் ப்ராஸத்தையும், சிலர் குந்தத்தையும், சிலர் பரஶுவையும் கையிலெடுத்து, வருகின்றனரே ! என்னவோ அமர்க்களம் நேர்ந்ததுபோலத் தோன்றுகிறதே.

தாங்க:—ஆம் அம்மணீ ! இவர்களுக்கு இடையில் வஜ்ரத்தாலடியுண்டவர்போலும், பேய் பிடித்தவர்போலும், கண்ணீர் தளும்ப, தேஹம் வெயர்க்க, கண்டம் கலங்க, ஆழ்ந்த குரலுடன் என்னவோ பேசிக்கொண்டு நமது மந்த்ரியார் புத்திஸாகரர் பரபரப்புடன் இவ்வழியே வருகின்றார் பாருங்கள் !

ஶஶி:—என்ன செய்தியோ தெரியவில்லையே ! என்னருமைச் செல்வன் ராத்ரி விலாஸவதியின் அந்தப் புரத்திற்குச் சென்றவன், உதித்து ஜாமப் பொழுதாகியும் இன்னுமிங்குத் திரும்பிவரவில்லையே ! ஏனோ என் மநம் இவர்களைக் கண்டதுஞ் சஞ்சலப்படுகின்றதே !

(பின்னர் மேற்சொன்னவாறு அநேக பௌரர்கள் சுற்றித் தொடர்ந்துவர புத்திஸாகரர் பரபரப்புடன் ப்ரவேஶித்தல்)

புத்திஸாகரர்:—அந்தோ ! இவ்வந்யாயம் எங்கே அடுக்கும் ? ஐயோ நான் நகரில் ஒரு நாளிராமற் போய்விடில் எவ்வளவு கார்யம் நடந்து விடுகின்றது ! பாவி யான் இந்நகரை விட்டு என் சென்றேன் ? என் கண்மணி போஜனில்லாமல் இவ்வரண்மனை பழாய்க் காணப்படுகின்றதே !

* 'ஸுந்தரப் போஜனில்லாத்
தொல்லரண்மனையின் வாழ்வு,
சந்திரனில்லா வானம்
தாமரை யில்லாப் பொய்கை,
மந்திரி யில்லா வேந்தன்,
மதகரி யில்லாச் சேனை,
தந்திகளில்லா வீணை
தாயிலாக் குழவிபோலாம்'!

ஆ ஆ ! என்ன நேரிடினும் போஜனை ஒரு போதுங் கைவிடேனென்று ஸிந்துலமஹாராஜருக்கு வாக்களித்தேனே ! இப்போது யான் என்செய்வேன் ? என் வாக்குக்கு லோபம் வந்து விட்டதே ! ஸ்வாமித்ரோஹத்துக் காளாய் விட்டேனே ! ஐயோ அப்பொழுதே அவனை விலாஸவதியினிடஞ் செல்ல வேண்டாமென்று கட்டாயப்படுத்தாமற் போய் விட்டேனே. ஒரு வேளை போஜன் எங்கேயாகினுஞ் சென்றிருப்பனோ ? சீ! இதென்ன வீண் மயக்கம் ? அவன் செல்லத்தக்க இடமுமொன்றுண்டோ ? நிச்சயமாய் அப்பாதகன் அவனைக் கொன்றுதான் இருக்கவேண்டும். ஹே ஈசா ! போஜன் பட்டத்துக்கு வருவானென்று நம்பியிருந்த இப்பேதையை இப்படிப்பரிதவிக்கச் செய்வது நின் திருவருளுக்கழகோ? ஆபத்பாந்தவன் அநாதரக்ஷகன் என்னும் நினது ஸார்த்தகமான பெயர்கள் நிரர்த்தகங்களாக வாயினவோ ?

* விவேகசிந்தாமணி

பௌரர்:—ஐய! என்ன? என்ன?

புத்தி:—ஐயோ! தர்மமென்பதே போய்விட்டதே! இனி இருள் மூடிவிடும்! உலகம் அழிந்துவிடும்! ஹரி! ஹரீ! அப்படிப்பட்ட உத்தமனுக்கே அக்கதிநேரிடில்—ஹா! (பெருமூச்செறிதல்)

பௌரர்:—ஐய! என்ன செய்தியோ? நம் நகருக்கு ஏதாயினுங் கஷ்டகாலம் நேர்ந்ததோ?

புத்தி:—கஷ்டகாலமொன்று தானோ?! ராஜவதம்! ஸத்யவிநாசம்! அதர்மவிஜயம்!

சசி:—(கேட்டு) ஐயோ! இவரது வார்த்தை ஒவ்வொன்றும் என் மநத்திற் புதிதுபுதிதாய் ஸங்கடங்களை யுண்டுபண்ணுகின்றதே! என் செல்வன் க்ஷேமமாயிருப்பனோ?

பௌரர்:—அந்தணர்சிகாமணியே! தாம் உரைப்பது எங்களுக்கொன்றும் விளங்க வில்லையே! தம்முடைய முகத்தைக் காணும்பொழுதே ஏதோ பெரிய ப்ரமாதமொன்று நேரிட்டிருப்பதாய் விளங்குகின்றது!

புத்தி:—(கண்ணீர் சொரிய ஆழ்ந்த குரலுடன்) ஹா ராஜகுமாரா! உன்னை விட்டு மிந்நகரத்துளோர் உயிர் கொண்டிருப்பரோ?

சசி:—(வ்யஸநத்துடன்) அந்தோ! என் கண்மணி போஜனைப்பற்றித் தான் இவர் கூறுகின்றனரோ?

தூரங்க:—அம்மணீ! அமங்கள முரையாதீர்கள்!

பௌரர்:—நம்மிளவரசர் போஜகுமாரரா? அவருக்கு வந்த ஆபத்து என்னவோ?

புத்தி:—(துக்கத்தினாற் கத்கத ஸ்வரத்துடன்)

"அத்ய தாரா நிராதாரா
நிராலம்பா ஸரஸ்வதீ।

பண்டிதா: வண்டிதா: ஸர்வே
ஹோஜராஜே திவங் கதே !!! "

"இன்று தாரை யிழந்தது காப்பினை !
துன்றுநாமகள் சோர்வினளாயினள் !
ஒன்றுபாவலரி யாவரு மூன்றிலர் !
என்று போஜனவ் விண்ணினை யெய்தவே !

ஸஸி:—(கேட்டு ஸோகாக்ராந்தையாய்) ஹா ! பரமார ராஜ குலதிலகா ! நீயோ விண்ணுலகம் புக்கனை ? (மூர்ச்சித்துத் தரங்கவதிகையிற்றாங்கப்பட்டு வீழ்தல்)

தரங்க:—தேவீ ! ஆறுதலடைவீர் ! ஆறுதலடைவீர் ! !
(ஓடிச்சென்று விசிறிகொண்டு வீசுதல்)

முதற் பௌரன்:—ஹா ! ஹா ! ! ஹா ! ! !

இரண்டாம் பௌரன்:—என்ன! என்ன!! என்ன!!!

மூன்றும் பௌரன்:—என்னகொடுமை ! என்னகொடுமை!! என்னகொடுமை !!!

நான்காம் பௌரன்:—எப்படி! எப்படி!! எப்படி!!!

ஐந்தாம் பௌரன்:—சீ ! தெய்வத்திற்குக் கண்ணில்லை!!

தரங்க:—இதுவும் வாஸ்தவமாயிருக்குமோ ? நேற்றுக் கூட யான் அவரைப்பார்த்தேனே ! தேஹஅஸௌக்கியஞ்சிறிதுங் கெடவில்லையே ! இப்படித் திடீரென்று இறப்பதற்குக் காரண மென்ன? இதில் ஏதோ மோஸமிருக்கவேண்டும் !

பௌரர்:—அவர் எப்படி இறந்து விட்டனரோ ?

ஸஸி:—(ப்ரமை கொண்டவள் போல் எழுந்து) ஹா ! புத்ரகா ! புத்ரகா ! ! புத்ரகா ! ! ! நீ யிம்மாநிலம் முழுதும் ஆளுவாயென்று எண்ணி யிருந்தேனே !

புத்தி:—அந்தோ ! அவர் இறந்த விதத்தை நீங்கள் அறி வீர்களாயிற் சும்மா விரீர்கள் ! கொலையுண்டன்றோ பரதேசி யாய் இறந்தனர் !

பௌரர்:—ஹா! ஹா!! என்ன விந்தை ! என்ன அநீதி! நம்மிளவரசருக்குந் தீங்கிழைக்கத் துணிந்தவன் யாவன்? நாங் கள் இக்கணமே அவனைக் கொன்று பழி தீர்க்கின்றோம்! அன் றேல் எம்முயிர்களையும் மாய்த்துக்கொண்டு, அவருக்குப் பின்னே விண்ணுலகஞ் செல்கின்றோம் !

புத்தி:—அவஸரப்படுகின்றீர்களே ! இதுபற்றியே யான் தனியாயிருக்கவேண்டு மென்பது ?

பௌரர்:—எதற்கும் நாங்கள் அஞ்சோம்!இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்த கொலைபாதகனை நாங்கள் துண்டம் துண் டமாய் வெட்டிவிட்டுத் தான் வீட்டிற்குட் செல்வோம் !

புத்தி:—ஐயோ ! பேதையர்காள் ! ஏனிந்த வீண்சபலம்? உங்களுடைய நன்மைக்காகவே சொல்கின்றேன்! பொல்லாத ராஜாஜ்ஞைக்குள்ளாவீர்கள் ? இது தர்மத்திற்குக் காலமன்று ! பேசாமற் செல்லுங்கள் !

பௌரர்:—அப்படிப்பட்ட ஸ்ரீஸிந்துலமஹாராஜரின் புத ல்வரே கொலையுண்டு சாகும் பொழுது, ராஜாஜ்ஞை எங்களை என்ன செய்யக்கூடும் ?

புத்தி:—ஆனையைப் பூனைகள் வெல்லுமா ? வேலியே பயிரை மேயத்தொடங்கினாற்போலானதே. அரசனே அந்யா யஞ் செய்தால் அவனை யடக்க யாவராலாகும் ?

பௌரர்:—நல்லது! நம்மிளவரசரைக் கொலைசெய்தவன் எவனோ ?

புத்தி:—அவனது பெயரைச் சொல்வதற்குக்கூட அருவருப்பாயிருக்கின்றது! நமது மஹாராஜா அவர்களே இப்படிச் செய்தால்—

போஜர்:—ஹா! ஹா! ஹா! அட பாவீ? க்ஷத்ரியாதமா! எதற்காகவடா அவ்விளங்குமரனைக் கொன்றாய்?

புத்தி:—வேறெதற்கு? அவனது நாட்டைக்கைப்பற்றுவதற்கே!

ஸஸீ:—ஹா! வத்ஸா! சிற்றப்பனால் எக்கதியடைந்தனை? நின் பொருட்டு யான் அநுஷ்டித்து வந்த நியமங்களும் உபவாஸங்களும் நிஷ்பலமாய்ப் போயினவோ? இனி யாரை வேண்டி உயிர்வாழ்வேன்? ஹா! குமாரா! உனதுதிருமுகத்தை யானென்று காண்பது?

* "நல்லோர்வகுத்த முறையா மறங்க
ளொட்டி லொன்று குறையேம்;
இல்லோரையற்ப மிகழே மிறுக்கு
மிறையன்றி யேற வுகவேம்;
சொல்லோமறுத்து முரையோமுறைத்த
துறவோர்கள் புத்திகடவேம்;
எல்லோர்தமக்கு மினிதேவிளைப்ப
மேதாகவந்த திதுவே!"

* "மறைநீதி யுற்ற புறநாடழித்து
வருசேனை யாள்வதறியேம்,
அறைநீதி முற்று முணராவமைச்சை
யணிவாயில் வைத்து மறியேம்,

* அரிச்சந்திரபுராணம்

குறையேயிழைத்து வினையே விளைத்த
குடிவைத் திருந்து மறியேம்,
இறையே தவத்தின் விளைவே யெமக்கு
மிதுவோ விதித்த விதியே!'

அந்தோ! இன்னமும் மெனது தக்தஹ்ருதயம் பிளந்துபோகவில்லையே! ஹா ஆர்யபுத்ரகுலதிலகா! ஹா அரவிந்தாக்ஷா! ஹா அப்ரதிம ப்ரபாவா! ஹா அகிலஜநசரண்யா! மூடையாய்ப் போய்விட்டேன். மைத்துனனை நம்பி முழுமோசம் போய் விட்டேன்! ஆ குழந்தாய்! உன்னைவிட்டு யான் க்ஷணமேனும் பிரிந்திருப்பேனோ? இதோ உன்னுடன் கூடவே வந்து விட்டேன். (திடீரென்று மூர்ச்சித்து வீழ்தல்)

தா ங்க:—ஆ ஆ! என்னஸங்கடம்! என்ன ஸங்கடம்!! எப்படிஸஹிப்பதிதை! (விசிறியினால் தேவியாருக்குபசரித்துக்கொண்டே)

கண்ணிகள்

காட்சிக்கினிய கவினுடைய காவலனே!
மாட்சிநலஞ்சான்ற மாணவனோ மாணவனோ!
அன்பே வடிவாய் அமைந்தவெழிற் கோமானே!
தன்பேரழிப்பான் சதிக்கே நீ போனாயோ
எல்லாரு மேற்றவிருந் திங்ஙனுளாது
பொல்லான்மதப்படியே போயினையோ வானாள்!

பௌரர்:—ஹா! ஹா! என்னகாலம்! என்னகாலம்!! அவ்விளங்குமரனை இப்பாவி முஞ்ஜராஜனோ கொன்றனன்! இதையறிந்தும் நாம் சும்மாவிருக்கலாமா? இக்கொலைபாதகனை ஹதஞ்செய்து விட்டல்லவோ நாம் மறுகார்யம் செய்யவேண்டும்.

**புத்தி**;—நண்பர்காள்! இதுவே நம்முடைய முதற்கடமை. இப்படிச் செய்தாற்றான் நாம் ஸ்ரீ ஸிந்துல மஹாராஜருடைய ருணத்தைத் தீர்த்துக்கொள்ளலாம். அவர் உயிருடனிருக்கும் பொழுது நமக்குச்செய்த நன்மைகள் எண்ணிற் கடங்காதவை. இத் த்ரோஹி முஞ்ஜராஜன் ராஜ்யத்திற்கு வந்ததும், ந்யாய மே போய்விட்டது! களவும், கொலையும், கல்வியுமே எங்கும் நிறைந்தன! ராஜ்யத்திற் காசைப்பட்டு நமது தர்ம ப்ரபு ஸிந்துல மஹாராஜருடைய ஏகபுத்ரனும், தைர்யமும் தர்ம மூமே வடிவெடுத்து வந்தாற்போலிருந்தவனுமாகிய **போஜகு** மாரனையே கொன்றுவிட்டனன்! தர்மத்தை ரக்ஷிப்பதற்காக ஏற்பட்ட அரசரே இப்படிச் செய்யப்புகின் இனி உலகில் எது தான் நிலைபெறும்! ஆயினும் '**கெடுவான் கேடு நினைப்பான்**' என்பதுமாத்ரம் பொய்த்துப்போகாது! அதர்மம் இப்பொழுது வ்ருத்தி யடைந்தபோதிலும், அதற்கு ஒரு காலத்தில் க்ஷீண தசைவருவதுதிண்ணம்! விஷத்தை அபரிமிதமாய் உண்பவர் வாழ்வையிழப்பது நிஸ்சயமே யன்றோ? ஆயினும் பொறுமை யுடன் எதையுஞ் செய்யவேண்டும்.

*"வெறுப்ப வொருவன் காரணத்தான்
மிக்கமடத்தாற் புரி பிழையைப்
பொறுப்பி னதுவே பேரறமாம்
புகழு நிறையு மிக வளரும்,
கறுப்பொன் றறியா வறிவினர்கள்
கருத்தின் மகிழ்ச் சியுளவாகும்,
ஒறுப்பின் வருவ தொன்றில்லை
யதனாற் பொறுமை யுயிர்த்துணையாம்!"

**பௌரர்**:—இனிப்பொறோம்! பொறோம்!! பொறோம்!!! இப்பொழுதே அப்பாதகனைக் கொன்றுவருவோம்.

* விநாயகர் புராணம்

ராகம் - கருடத்வநி : தாளம் - ஆதி

பல்லவி

போதும் ! போதும் !! ஐயனே-
பொறோம் ! பொறோம் !! பொறோம் !!!

அநுபல்லவி

வாதுசெய்தவன்றனை-
வதைத்திடாமலே !

சரணங்கள்

என்னவென்னவாயினுங் - இரோம்! இரோம்!! இரோம் !!!
அன்னமன்னவன்றனை - அதஞ்செய்யாமலே ! (போ)

மோஸம் ! மோஸம் !! ஐயனே - மோநங்கொள்ளுதல்
தேஸ கண்டகன்றனைச் - சிதைத்திடாமலே ! (போ)

நன்று ! நன்று !! போவமோ - நாதன்போயுமே
கொன்று பாதகன்றனைக் - கொளுத்திடாமலே ! (போ)

வஞ்சம் ! வஞ்சம் !! ஆகும்நாம் - மநம் பொறுத்திடில்
நஞ்ச மன்னவன்றனை - நறுக்கிடாமலே ! (போ)

கால காலனாயினும் - கலங்கிடோம் ஐயே
ஜாலஞ் செய்தவன்றனைச் - சாய்த்திடாமலே ! (போ)

கண்ட தண்டனாயினும் - சளைத்திடோமினி
கண்டதுண்டஞ் செய்தவனைக் - கருக்கிடாமலே ! (போ)

புத்தி:—(ஆத்மகதமாய்) ஆஹா! நாம் அவஸரப்பட்டுவிட்டோம் ! ஆயினும் இவர்கள் பழிதீர்த்தே விடுவர்கள் என்று நம்புகின்றேன்.

முதற் பேளான்:—(கட்கத்தை யுருவிக்கொண்டு)இக்கட்கத்தினால் அப்பாவியை இக்கணமே கண்டதுண்டஞ் செய்து வருவேன் !

இரண்டாம் போரன்:—(பல்லத்தை நீட்டிக்கொண்டு) இப்பல்லத்தினலவனை இப்பொழுதே பரலோகமோட்டி வருவேன் !

மூன்றம் போரன்:—(தோமரத்தை எடுத்துக்கொண்டு) இத்தோ மரத்தினலவனைத் தொலைத்துவருவேன் !

நான்காம் போரன்:—(ப்ராஸத்தைக் கையிலேந்தி) இப்ப்ராஸத்தினலவனைப் பிளந்துவருவேன் !

ஐந்தாம் போரன்:—(குந்தத்தைக் கையிற்பிடித்து) இக்குந்தத்தினலவனைக் குத்திவருவேன் !

ஆறம் போரன்:—(பரஶுவைக் கையிலெடுத்து) இப்பரஶுவினலவனைப் பறச்சடித்து வருவேன் !

(ப்ரவேஶித்து)

காளிதாஸன்:—(பரபரப்புடன்) நண்பர்காள்! இது ஸரியன்று ! ஸரியன்று! வீணய் உங்களது ப்ராணனைத் துறக்கவேண்டிவரும் ! பொறுத்துச் செய்யுங்கள் ! பொறுத்துச் செய்யுங்கள் ! !

புத்தி:—காளிதாஸ ! எப்படி நாம்பொறுப்பது ? போஜகுமாரன் போயும் நாம் பிழைத்திருக்கவேண்டுமா ? இத்தர்மயுத்தத்தில் நம்முயிரை யிழந்தால் தானென்ன ?

காளி:—அடிகாள் ! அதைப்பற்றி யான் சிந்திக்கவில்லை ! என் ப்ரிய நண்பன் போஜனுக்காக என் ப்ராணனைக்கொடுக்க யான் ஸர்வஸித்தனயிருக்கின்றேன் ! ஆயினும், நாம் தக்கயோஜனை செய்து, பிறகு இப்படிப்பட்ட கார்யத்திற் ப்ரவேஶிக்கவேண்டும். திடீரென்று கை வைத்துக்கொண்டால் தடாலென்று விழவேண்டியதுதான் ! அப்படி யாவதிற் பலன் யாது ? "தூக்கிவினைசெய" என்றிருக்கவில்லையோ?

* "இடத்தொடு பொழுது நாடி
 யெவ்வினைக் கண்ணு மஞ்சார்
மடப்படலின் றிச்சூழு
 மதில்வல்லார்க் கரியதுண்டோ ?
கடத்திடைக் காக்கை யொன்றே
 யாயிரகோடி கூகை
யிடத்திடை யிரங்கச் சென்றாங்
 கின்னுயிர் செகுத்ததன்றோ !"

போளரர் :—ஆம்! ஆயினும் நாம் சும்மாவிருப்பதுதர்மமா? நமது ஸஸிப்ரபாதேவியார் இதைக்கேட்டால் என் செய்வள் ?

புத்தி :—அடடா ! பாபீ ! என்ன கொடுஞ்செயல் கூசாது புரிந்தாயடா ? இன்னுமுன்தலைமீது இடி விழவில்லையே ! அத்தர்மதேவதை ஸஸிப்ரபாதேவியார் இச்செய்தியைக் கேட்டால் எப்படி உயிர்தரிப்பள் ?

கண்ணிகள்

என்னகுற்றஞ் செய்தான் போஜனென்றவ னின்று
இன்ன விதமாகத் தண்டஞ் செய்தானென்று !
அன்னையவள் கேட்டா லுயிர்துடிப்பாளே
அழுது தீயின்மூழ்கி யுயிர்மடிப்பாளே !
இன்ன நகர்தன்னி லினி வாழ்வோமோ ?
மன்னனெனு மறலி பதம் தாழ்வோமோ !
அன்னவனைக் கொல்லாது புலைருந்தோம்யாம்
அரசன் தெய்வ மென்றே யிந்நாளிருந்தோம்யாம் !

---

* ஜீவக சிந்தாமணி

காளி:—நண்பர்காள் ! நீங்கள் செய்யப் புகுங்கார்யம் மிகவும் ச்லாக்க்யமானதே ! ஆயினும் இவ்விஷயத்தைத் தீரவிசாரித்தீர்களா ? போஜகுமாரர் கொலையுண்டு இறந்தா ரென்பது உங்களுக்கெப்படி நிஷ்கர்ஷையாய் தெரியும் ? அப்படித்தான் இறந்திருப்பினும், அவரைக் கொன்றவன் இன் னுனென்று நிச்சயித்தீர்களா ? அவஸரப்படுவதிற் பயனெ ன்னே ? இவையெல்லாம் முற்றுந் தெரிந்துகொண்டல்லவோ இவ்விதக் கார்யத்திற் ப்ரவேசிக்கவேண்டும். இவற்றையெல் லாம் கண்ணுற்கண்டவர் இங்குயாவராயினு முளரோ ? வெளி யிற் போகிறவர் பேச்சைக் கேட்டுக்கொண்டும் ஒரு வினைபுரிய லாமா ? ஆகலின், எல்லோரும் தத்தமிடத்திற்குச் செல்லுங் கள்.

புத்தி:—என்ன ஸாக்ஷ்யம் வேண்டும் ? நம்மிளவரசரைக் கொலை செய்யக்கொண்டுபோன ராஜஸேவகர்களே இவ்வந் யாயத்தைப் பார்த்ததாகச் சொல்லுகிறார்கள் ! வத்ஸராஜன் தான் அவனைக் கொலைசெய்தனனும் !

காளி:—அடிகாள்! தாமே இப்படி அவஸரப்பட்டால், மற் றையோர்களைப்பற்றிக் கேட்பானேன் ! வத்ஸராஜருடைய நட த்தை முற்றுந்தெரிந்திருந்தும், தாங்கள் இப்படிமொழிவதுதகு தி யன்றே !

பௌரர்:—அவனதுநடத்தைதெரிந்தேதானிருக்கின்றது! நம்மிளவரசரைக் கொலைசெய்யத் துணிந்தவன் எதற்குத்தான் அஞ்சுவான் ! எல்லாம் அரசனுக்குத் தகுந்த ஸேனைத்தலைவன் தானே ! இவ்விருவரையுமே செக்கிலிட்டாட்டவேண்டும்.

காளி:—நண்பர்காள் ! பின்பு நுங்களையே நொந்துகொ ள்வீர்கள் ? வத்ஸராஜர் அப்படிப்பட்டவரல்லர் ! இவ்விஷயம் முற்றும் ஸந்தேஹத்திற்கிடமா யிருக்கின்றது !

**ராகம் - மோஹநம்: தாளம் - ஏகதாளம்**

*அவஸரக் காரிய மாமோ ?*
*அவமதிக் கிடந் தரலாமோ ?*
*ஆவதும் போவதும் - ஆண்டவ னருளே !*
*தேவர்க ளாயினுந் - தேர்ந்திடேவிருளே !*
*மூவரும் வெல்லுவர் ! - மூடரும் வெல்லுவர் !*
*தேவையறிந்தால் - தேர்ந்துபுரிந்தால் !*

**புந்தி:**—ஆனுல், நீ என்ன செய்யவேண்டுமென்று சொல்கின்ருய் ?

*கூடுகையில் செய்தாலன்றே*
*ஸாபந்தரு மெதுவும் நன்றே !*
*மடியொன்றுளதேல் - மதியுங்கேடுறும் !*
*முடியும் வினையும் - முடியாதிடருறும் !*
*அடிமை புகுத்தும் ! - ஆண்மை யகத்தும் !*
*எடுத்ததை முடிப்போம் ! - இடமறிந்திடிப்போம் !*

**காளி:**—(*விநயத்துடன்*)
*நயமுடன் பொறுத்தே செய்வோம் !*

**புந்தி:**—(*பரபரப்புடன்*)
*நலம்பெற வுடனே செய்வோம் !*

**காளி:**—(*வணக்கத்துடன்*)
*பயனுறுவண்ணம் - பசர்ந்தேபுரிவோம் !*

**புந்தி:**—(*ஆக்ரோஶத்துடன்*)
*ஜயமுறுவண்ணம் - ஜடிதியே செய்வோம் !*

**காளி:**—(*அடக்கத்துடன்*)
*துயரங்கொள்வீர் ! - தோல்வியுங்கொள்வீர் !*

**புந்தி:**—(*ஆடம்பரத்துடன்*)
*உயிருந்துறப்போம் ! - உடலுந்துறப்போம் !*

காளி:—அடிகாள்! எதைச் செய்தாலும் விதாவித்துச் செய்யவேண்டும்! எதனை எவ்வழியிற் செய்தாற் பயன்படுமோ அதனையறிந்து செய்வதன்றோ புத்திக்குப் ப்ரயோஜநம்!

புத்தி:—உடனே செய்தாலன்றோ எதுவும் பயன்படும்?

காளி:—அடிகாள்! தாமுரைப்பது வாஸ்தவமே! ஆயினும், நாம் இவ்வளவு அவஸரப்பட்டுச் செய்வது தகுதியன்று! பொறுப்பதனால் ஒன்றும் மிஞ்சிப்போகாது? ஆகலின், தாமிவர்களைத் தத்தமிடங்களுக்குச் சத்தமிடாமல் இச்சமயம் அனுப்பிவிடுங்கள்! பிறகு வேண்டும்பொழுது இவர்கள் உதவிசெய்ய ஸித்தராகவே யிருப்பர்.

பௌரர்:—நாங்கள் உதவிசெய்ய எப்பொழுதும் ஸித்தராகவே யிருக்கின்றோம்.

காளி:—இதுதான் தங்களைப்போன்ற தர்மிஷ்டர்களுக்கழகு! இதுவே உங்கள் கார்யங் கைகூடுமென்பதைக் குறிப்பிக்கின்றது!

புத்தி:—நண்பர்காள்! அப்படியாயின் நீங்கள் இச்சமயம் செல்வீர்கள்! உங்களுடைய உதவியை வேண்டும்பொழுது யான் தெரியப்படுத்துகின்றேன்!

பௌரர்:—ஸரி. (நிஷ்க்ரமித்தல்)

காளி:—(புத்திஸாகரரை நோக்கி) அடிகாள்! இப்படிப்பட்ட கோலாஹலத்தையும் தாங்களே பார்த்துக்கொண்டிருக்கலாமா? இவ்வமர்க்களமெல்லாம் தேவியாருக்குத் தெரியவந்தால் அவர்களது ப்ராணனெவ்வாறாகும்? தேவியாரின் அரண்மனைவாயிலுக்கெதிரிலேயே இவ்வளவு கார்யத்தையுஞ்செய்து விட்டீர்களே. இவ்விஷயமெல்லாம் தேவியாருக்குத் தெரிந்து தானே இருக்கும்!

புத்தி:—ஆம் ! நாமொரு நிமிஷமுந் தாமஸிக்கலாகாது ! இக்கணமே தேவியாரிடஞ்சென்று அவர்களை ஸமாதானப்படுத்துவோம் வா ! (இருவரும் பரிக்ரமித்தல்)

தூரங்க:—ஐயோ ! அப்பொழுது சென்ற மூச்சு இன்னுந் திரும்பி வரவில்லையே ! என்செய்வது ? இத்தருணம் காளிதாஸரிடஞ் சென்றால்தான் இவர்களது ப்ராணனைக்காப்பாற்றத் தக்கவழிதேடலாம். (செவிகொடுத்து) இதென்ன காலோசை கேட்கின்றது ? யாவரிங்கே வரக்கூடும் ? (நோக்கி) தெய்வாதீனம் ! காளிதாஸரே நமது மந்த்ரியாருடன் இதோவருகின்றார் ! (காளிதாஸனும், புத்திஸாகரரும் மேன்மாடத்திற்குவர, அவர்களருகிற்சென்று காலில் வீழ்ந்து) ஐயா ! நீங்கள் தான் இத்தருணம் தேவியாரைக் காப்பாற்றவேண்டும்.

புத்தி:—ஆஹா! இஃதென்ன பரிதாபம்! நாம் நினைத்தது போலவே தேவியார் மூர்ச்சித்து வீழ்ந்திருக்கின்றனரே ! இவர்களுக்கு நாம் என்ன ஸமாதானஞ்சொல்வோம்.

தூரங்க:—(தேவியாரைப் பனிநீர்தெளித் தெழுப்பிக்கொண்டு) அம்மணீ ! இதோ நமது மந்த்ரியாரும் தங்கள் புதல்வரின் நண்பர் காளிதாஸரும் வந்திருக்கின்றனர் பாருங்கள் !

ஶஶி:—(கண்விழித்துக்கொண்டு) ஹா ! வத்ஸா ! நீயும் வந்தாயோ ? (நோக்கி) ஹா கஷ்டம் ! கஷ்டம் ! ! பாவியேன் ஏன் கண்விழித்துக்கொண்டேன் ? ஹா ! புத்ரா ! உன்னைப் பறிகொடுத்தும் யான் உயிருடனிருக்கின்றேனே !

காளி:—தாயே ! அமங்களமறையாதீர்கள் ? யான் சொல்வதை முற்றும் கவனித்துக் கேளுங்கள் !

ஶஶி:—காளிதாஸ ! என்ன ஸமாசாரம் ? நினது நண்பனெங்கே ?

காளி:—அம்மணீ! அவரைப்பற்றித்தான் சொல்வதற்குத் தங்களிடம் வந்தேன். நேற்றிரவு பதினைந்து நாழிகைக்கு முஞ்ஜராஜர் நமது ஸேனைத்தலைவர் வத்ஸராஜரை யழைத்துச் சென்று, அவர் வாயினின்றும், போஜனைக் கொன்றுவிடும்படியாய் ஓர் உறுதிமொழி வாங்கிக்கொண்டனராம்!

புத்தி:—ஹா ராஜகுமார! நீ இறப்பதற்காகத்தான் இவ்வளவு மேதாவியாய் இருந்தனையோ? ஐயோ! நான் கொடும் பாவியாகி விட்டேனே!

* "கரப்பவர்க்கெல்லா முறப்படுங்கொடிய
கடையனேன் விடையமே யுடையேன்!
இரப்பவர்க்கணுவு மீந்திலே னென்னை
என்செய்தாற் றீருமோ வறியேன்!
திரப்படுங்கருணைச் செல்வமே சிவமே
தெய்வமே தெய்வநாயகமே!
உரப்படுமன்பர் உள்ளொளிவிளக்கே
ஒளிக்குளாஞ் ஜ்யோதியே யொன்றே!"

காளி:—அடிகாள்! தாங்கள் இப்படி அவஸரப்படலாகாது!

புத்தி:—பிற்பாடு என்ன நடந்தது? வத்ஸராஜரும் இதற்குடன்பட்டனரோ?

காளி:—ஆம்! அப்படி யுடன்படும்படி நேரிட்டது. அதற்குள் நம்மிளவரசரும் ஏதோ யத்ருச்சையாய் விலாஸவதி தேவியாரின் அரண்மனைக்குச் சென்று, தம்மிடம் தான் செய்த ப்ரதிஜ்ஞையை நினைத்துக்கொண்டு, வெளியிற் சென்று, நகரத்தில்

---

* திருவருட்பா

நடக்கும் விசேஷங்களை யெல்லாம் அறிந்துகொள்வதற்காக நமது ப்ராணதார்த்திஹரர் கோவிலுக்குச்சென்றனராம்.

புத்தி:—அப்புறம் ! அப்புறம் !!

காளி:—அபபுறம், நம்மிளவரசர், அவர்கள் பேசிக்கொண்டிருந்ததை யெல்லாங் கேட்டு, மனம் பொறுக்கமாட்டாமல் தனியாய்த் தன்னுயிரை மாய்த்துக்கொள்வதற்காகப் புவனேஶ்வரியின் ஆலயத்திற்குப் போகுங் கொடிவழியே பைத்யம் பிடித்தவர்போற் போய்க்கொண்டிருந்தார். நான் அப்பொழுது கோவிலிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தபடியால் அவரை ஸந்திக்கலானேன்.

புத்தி:—மேலே என்ன நடந்தது? ராஜகுமாரன் இப்பொழுதெங்கேயிருக்கின்றனன் ?

காளி:—நான் அவரை ஸமாதானஞ் செய்துகொண்டிருக்கும்பொழுது வத்ஸராஜருடைய கிங்கரர்கள் இருவர் அவரது உத்தரவைக்காட்டி நம்மிளவரசரைப் பிடித்துக்கொண்டு சென்றார்கள் ! அவர்கள்போன இடத்திற்கு நானும் அவர்களுக்குத் தெரியாமலே பின்சென்றேன்.

ஶஶி:—என்ன ? என் செல்வனை அவ்விடத்திற்குக் கொண்டுபோய்க் கொன்றுவிட்டனரோ ?

காளி:—அம்மணீ ! ஏனிப்படி அமங்களமானமொழிகளை யடிக்கடி யுரைக்கின்றீர்கள் ! ராஜகுமாரர் க்ஷேமமாயிருக்கின்றனர் !

ஶஶி:—அப்பா ! என் வயிற்றிற் பாலை வார்த்தனை !

புத்தி:—(ஸந்தோஷத்துடன் குதித்துக்கொண்டு)

" அத்ய தாரா ஸதாதாரா
ஸதாலம்பா ஸரஸ்வதீ ।
பண்டிதா மண்டிதாஃ ஸர்வே
போஜராஜே ஸுவங் கதே ॥"

" இன்று தாரை யிசைந்தது காப்பினை
துன்று நாமகள் சோர்விலளாயினள் !
ஒன்று பாவல ரியாவரு மூன்றினர்
என்று போஜனிம் மண்ணினை யெய்தவே !"

ஆயினும் அவ்விடத்தில் என்ன விசேஷம் நடந்ததோ அதை யுரைப்பாய் !

காளி:—வத்ஸராஜரும் அவ்விடத்தில் முன்னதாகவே நம்மிளவரசரைக் கொன்றுவிடுவதென்றே நிச்சயித்துக்கொண்டு, உருவின கத்தியுடன், கரையாதசித்தத்துடன், வந்திருந்தனர் ! பிறகு எப்படியோ அவருக்கும் மனமிறங்கிற்று ! நானும் அச்சமயத்தில் அவ்விடஞ் சென்றேன். பிறகு நாங்கள் யோஜனை செய்து ராஜகுமாரரைச் சிலநாள் மாறுவேஷத்துடன் நகரத்திற்கு வெளியிலிருக்கும்படி சொல்லி யனுப்பினோம் !

சசி:—ஹா ! புத்ரா ! நீ இப் பரதகண்டம் முற்றும் ஆளுவாயென்று நினைத்திருந்தேனே ! நீ இப்படிப் பரதேசியாய் பரிதபிப்பதையறிந்து நான் எப்படி ஸஹிப்பேன் ?

ராகம் - பருஜ் : தாளம் - சாப்பு

பல்லவி

மைந்தா ! உனைக்காண்பேனோ - இனிநான்
மைந்தா ! உனைக்காண்பேனோ !

### அநுபல்லவி

மஹிமையாய் ராஜ்யத்தில் - வாழ்ந்ததெல்லாம் போச்சோ ?
மன்னர்வந்து பணிந்து-மகிழ்ந்ததெல்லாம் போச்சோ ?—(மை)

### சரணங்கள்

ராஜாதி ராஜனாய் - ரமித்திருந்த நாள்போய்
தாஸாநு தாஸனாய் - தவிப்பது மழகோ ?— (மை)

என்னென்று சொல்வேன்யான்-என்றன் கதியை யிப்போ
தேற்க வநந்தனில் - இருக்க விதியோ புத்ரா !— (மை)

ஐயோ ! இவையெல்லாம் எண்ணவும் ஆற்றலிலேன் ! எப்படிப் பொறுப்பேன்.

காளி:—அம்மணீ ! ஸகலமுமறிந்ததாமே இப்படித் துயர முறுதல் தக்கதன்று ! நமது அடிகள் இருக்குமளவும் தாங்கள் ஒன்றுக்கு மஞ்சவேண்டியதில்லை ! இனி ராஜகுமாரரைத் தங்களிடம் க்ஷேமமாய்க்கொண்டு ஒப்பிவிப்பது எங்கள் பாரம்.

புத்தி:—அம்மணீ ! இன்றுமுதல் இரண்டு மாதத்திற்குள் தங்கள் செல்வனை இவ் ராஜ்யஸிம்ஹாஸநத்தில் ஸ்தாபிக்கா விடில் யான் புத்திஸாகரனல்லன் !

ராணி:—அஃதேது ? அஸாத்யம் ! அஸாத்யம் ! ! நானும் என் செல்வனை அந்நிலையில் இவ்வுடலத்துடன் பார்க்கப் போகின்றேனோ ? வீண் மனோரதம் ! அந்தரத்தில் அரண்மனை யமைப்பதேயாம் ! இன்னும் எவ்வளவு துன்பங்கள் ஒன்றின் மீதொன்றாய் வரக் காத்துக்கொண்டிருக்கின்றனவோ ?

காளி:—தாயே ! ஏனிவ்வாறு வீணாய்ச் சஞ்சலப்படுகின்றீர்கள் ? ஈசனருள் இருப்பின் எதுதான் கிடையாது ?

ராகம் - மோஹநம் : தாளம் - ஆதி

பல்லவி

ஏனுங்கட் கிக்கவலை ? - ஏனிந்தப் பாமரமும் ?

அநுபல்லவி

ஆநந்த னருளிருப்பின் - ஆகாதது மொன்றுளதோ ?

சரணங்கள்

ஸித்தரடி நித்யமுமே - பக்தியாய்ப் பணிபவற்கு
ஸித்திக்குமே எவ்வினையும் - சித்தந் திடங் கொள்வீர்— (ஏ)

ஶிஷ்டர்பதந்தொட்டணைவோர்க்-கெட்டாததோ ரிஷ்டங்களும்
கட்டாயமாய்க் கிட்டிவரும் - த்ருஷ்டாந்தர மஷ்டாக்ஷரம்—(ஏ)

ஶஶி:—செல்வனே ! நீங்களே என் புத்ரனைக் காப்பாற்றவேண்டும் !

காளி:—அம்மணி ! அவருக்கு யாதொரு குறைவுமில்லை ! இனி கவலையை விட்டுவிடுங்கள் !

ஶஶி:—இப்பேருதவிக்கு யான் உங்களிருவருக்கும் என்ன கைம்மாறு செய்யப்போகின்றேனோ ?

புத்தி:—இது எங்களுடைய கடமை ! இனி அம்முஞ்ஜனைக்கொன்று போஜனை ராஜ்யத்தில் ஸ்தாபிப்பது எங்களுடைய கார்யம் ! தாங்க ளிதைப்பற்றி எள்ளளவும் ஏக்கங்கொண்டு கவலைப்படவேண்டியதில்லை.

ஶஶி:—எல்லா முங்களுடைய அநுக்ரஹமே ! (தூரங்கவதியுடன் நிஷ்க்ரமித்தல்)

புத்தி:—(காளிதாஸனை நோக்கி) அப்படித் தலையையிழக்கும்படியான குற்றம் யாது செய்தனன் நம் போஜன் ?

## XIII

## PRINCE BHOJA AND THE BHILL WARRIORS

OR

"JAYAPALA NOTICES WITH PLEASURE PRINCE BHOJA ENCOUNTERING SINGLE-HANDED WITH HIS STOUT WARRIORS"

——*Act IV, Scene* 1, *pages* 212-213

Facing page [illegible]

# போஜகுமாரரும் பில்லமல்லர்களும்

## அல்லது

### "தனது வலிய மல்லர்களோடு தனியாய் நின்று போர்புரியும் போஜகுமாரரை ஜயபாலன் கண்டு களித்தல்"

ஸோமா:—(எழுந்து அடியைத் துடைத்துக்கொண்டு) அகப்பட்டுக்கிணுண்டா துமிட்டிக்கா பட்டன். இத்தாண்டா சமயம்! எழுந்து ஒடியாங்கடா, கட்டியா பிடிச்சிக்கலாம். (நால்வரும் போஜனைப் பிடிக்கவர, போஜன் ஒருவரையுங் கிட்டே வரவொட்டாமல் அடித்தல்)

(கரவதனை, தண்டபாணி என்னும் இரண்டு பில்லஸ்த்ரீகளுடன் ஜயபாலன் ப்ரவேசித்தல்)

ஜயபாலன்:—(பரபரப்புடன்) கரவதநா! இதென்ன கூச்சல்? யார் இங்கே சண்டை செய்வது?

கரவதனை:—மஹா ப்ரபு! நம்மவருடைய குரல்தான் கேட்கின்றது.

தண்டபாணி:—(நோக்கி) யாரோ வேறொருவனுடைய குரல் கூட கேட்கின்றதே!

ஜய:—(விரைந்து அருகிற் சென்று) என்னடா, செய்தி? இதென்ன சண்டை?

ஸோமா:—யசமான்! இங்கே ஒரு மநுசன் அகப்பட்டுக் கொண்டான்.

ஜய:—எங்கே? எங்கே?

ஸோமா:—இதோ நிற்கின்ருன் பாருங்கோ!

ஜய:—இச்சிறுவனு?

—அங்கம். IV, களம். 1, பக்கம். உகஉ-உகரு

காளி:—எல்லாம் பொய்க்குற்றமே! அப்பாதகன், நம்மிள வரசரை விலாஸவதிக்கு விஷங்கொடுத்துக் கொல்லமுயன்ற தாகக் குற்றஞ்சாட்டினுன்.

புத்தி:—ஸரி! நான் நினைத்ததுபோலவே முடிந்துவிட்டது. அதற்சாகவல்லவோ ராஜகுமாரனைப் பட்டத்திற்கு வருவதற்குமுன் விலாஸவதியினிடஞ் செல்லவேண்டாமென்று சொன்னேன். யான் சொல்லித்தான் என்ன பயனுயிற்று. போஜன் அதை அலக்ஷ்யஞ்செய்து விட்டனனே!

காளி:—அடிசாள்! மற்றதையுங் கவனமாய்க் கேட்க வேண்டும்! பிற்பாடு வத்ஸராஜரும், தாம் முஞ்ஜராஜனுக்கு வாக்குக் கொடுத்தபடி ஒரு க்ருத்ரிமத் தலையைப் போஜனுடையதென்று சாட்டிவிட்டு, இளவரசரைக் கொன்றுவிட்டதாகவே ராஜனுக்கு மெய்ப்பித்துவிட்டனன்! முஞ்ஜனும் அதை மெய்யென்று நினைத்து, ராஜ்யந் தனக்கு நிஷ்கண்டகமாய்க் கிடைத்து விட்டதென்று பெருமைபாராட்டி வருகின்றனும்! ராஜகுமாரனென்னவோ க்ஷேமமாயிருக்கின்றார்! இதுதான் ஸமாசாரம்! இதற்குமேல் தங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை.

புத்தி:—(சற்றுயோஜித்து) நல்லது! இதுவும் நமக்கு ஹிதமாகவே முடிந்தது. இதைக்காரணமாய் வைத்துக்கொண்டே முஞ்ஜனை எதிர்க்கும்படி ப்ரஜைகளைத் தூண்டிவிடுகின்றேன்! காளிதாஸ! நீ யொரு உபகாரஞ்செய்யவேண்டும்.

காளி:—எது வேண்டுமாயினுஞ் செய்யக்காத்துக்கொண்டிருக்கின்றேன். ஒரு பூர்வபீடிகையுமில்லாமற் சொல்லுங்கள்!

புத்தி:—அப்படியாயின், நீ உடனே உஜ்ஜயிநீ நகரஞ்சென்று, அந்நகரத்தையாண்டுவரும் ஆதித்யவர்மமஹாராஜனிடத்தில் நானுரைத்ததாக இவையெல்லாம் தெரிவித்து, எப்

படியாயினும் அப்பாதகனுகிய முஞ்ஜன்மீது படையெடுத்து வரும்படி செய்யவேண்டும்! நானும் அதற்குள் இவ்விடத்தி லிருந்து தகுந்த ஏற்பாடுகள் செய்து, ப்ரஜைகளை யெல்லாம் முஞ்ஜனுக்கு விரோதமாய் எழுந்தெதிர்க்கச் செய்விக்கின் றேன்! நீ ஶீக்ரஞ் செல்லவேண்டும்

**காளி:**—இதுவே நம் ஸேனைத்தலைவர் வத்ஸராஜ ருடைய அபிப்ராயமும். அவரும் ஸமயத்தில் நம்முடன் சேர்ந்து கொள்வதாக வாக்களித்தனர்! எல்லாந் தெய்வாநுகூலத் தால் ஸுகமாகவே முடியுமென்று நினைக்கின்றேன்!

**புத்தி:**—வத்ஸராஜரே! இப்பொழுதுதான் உமது குண ங்களையுள்ளபடி அறிந்து மெய்ச்சுகின்றேன்! நல்லது! காளி தாஸ, நீ ஶீக்ரம் வீட்டுக்குச்சென்று, வேண்டியவற்றைச் சேகரப்படுத்திக்கொண்டு, விரைவாய் உஜ்ஜயினீநகரஞ் செல்! நானும் மேலேநடக்கவேண்டிய விஷயங்களை யாலோசித்து நடத்துகின்றேன்! இனியொரு நிமிஷமேனுந் தாமதித்திருக்க லாகாது.

(இருவரும் நிஷ்க்ரமித்தல்)

## முதற்பாகம்

முற்றிற்று.

# போஜ சரித்ரம்

## இரண்டாம் பாகம்

---

## நான்காம் அங்கம்

### முதற்களம்

---

இடம்—தாரைநாட்டுக்கும் உஜ்ஜயிநீ நாட்டுக்கும்
மத்தியில் ஒரு பயங்கரமான வநாந்தரம்

(போஜன் துயரப்பட்டுக்கொண்டே விநீதவேஷனாய்ப்
ப்ரவேஶித்தல்)

போஜன்:—(*கருணமாய்ப் பாடிக்கொண்டு*)

**ராகம் - பூர்வகல்யாணி : தாளம் - ரூபகம்**

**பல்லவி**

அபயம் ஶிவனே !
ஆபத்பாந்தவனே !

**அநுபல்லவி**

உபயப் ப்ரஷ்டனாகி - ஒன்றியாய்ப் போகின்றேன்,
அபயந்தந்தென்றனை - ஆபத்தி னீக்குவாய் !—(அபயம்)

**சரணங்கள்**

நாடுநகரும்விட்டு - நடக்கக் குதிரை யற்றுக்
காடுமலைகளின்று - காலாற் கடக்கலானேன் !—(அபயம்)
பதியும் ஸதியுமென்றன் - பங்காளி கைக்கொள்ளக்
கதியற்றுக் கசடன்போற் - கானகம் புகலானேன்!—(அ)
தீநஶரண்யனே - தேவாதிதேவனே !
தீநன்யான்படுந்துயர்-தெரியாதோ வுனக்கின்னும்?—(அ

ஹே ஈசா ! நான் இப்படி நாடிழந்து, நகரிழந்து, காட்டிலே வந்து, பனியால் நனைந்து, வெயிலாலுலர்ந்து, தனியாய்க்கிடந்து, மெய் சோர்ந்து மெலிந்துபோதல் நின் கருணைக்கழகோ? காலைமுதல் இதுவரையிலும் இக்கொடுங்காட்டிலலைந்து திரிகின்றேன் ! ஒரு மநுஷ்யப்ராணியையும் இப்பயங்கரமான ப்ரதேசத்திற் காண்கிலேனே ! இரவோ கொடியவர்களின் ஹ்ருதயம்போல் மிகவும் பயங்கரமான இருளுடன் வந்து விட்டது !" அப்படியே,

> செந்தழற் கதிரோன் சோர்ந்து
> சிந்துவி னலையின் மூழ்க,
> பந்தமென் றுடுக்கள் தோன்றப்
> பறவைக ளடங்கக் கூட்டில்,
> மந்தமா யடித்த காற்றும்
> மரங்களி லயர்ந்து நிற்க,
> அந்தர மிருளாற் சூழ
> வடங்கின வோசை யாவும் !

ஐயோ ! பசிதாஹம் மேலிடுகின்றதே ! எங்கேயாகிலுஞ் சென்று ஒரு கைத்தண்ணீர் குடித்துத் தாஹசாந்தியாயினுஞ் செய்யலாமென்றால், கண்ணுக்கெட்டியவரையில் ஒருபொருட்டுநீராயினுங் காணப்படவில்லையே ! அந்தோ ! இப்பயங்கரமான காட்டில் யாரைக் காண்பேன் ? எவ்விதம் பிழைத்திருப்பேன் ? இந்த ஸமயத்தில் யாரெனக்குதவி பண்ணுவார்கள் ? எல்லோரும் பலவானுக்குத்தானே அநுகூலஞ் செய்வார்கள் ! யாருக்கென்றன் குறைகளையுரைப்பேன் ! எப்படி நான் இக்கஷ்டங்களையெல்லாம் பொறுப்பேன்? யான் இன்னானென்று பிறருடன் சொல்வதற்குக்கூட வெட்கமாயிருக்கின்றதே ! ஆ சிற்றப்பா ! உனது தந்த்ரமே தந்த்ரம் ! இவ்வல்ப ராஜ்யத்திற்காசைப்பட்டு என்னை எவ்வித ஸ்திதிக்குக் கொண்டுவந்துவிட்டனை ?

யான் உனக்கு யாது தீங்கிழைத்தேன் ? ஆஹா ! நின் ஆசை யின் மயக்கமே மயக்கம் !

தாயென்றுந் தந்தை யென்றும்
தம்பிமார் தமைய ரென்றும்
சேயென்றுஞ் சுற்ற மென்றும்
சேர்ந்தவ ரென்று மெண்ணார் !
மாயாமா மாசையென்னும்
மாநுகை வலையிற் சிக்கிற்
தீயன யாவுஞ் செய்வர்
சிறிதுமஞ் சாரெ தற்கும் !

அடே த்ரோஹீ! நான் பதியைப் பறிகொடுத்ததற்காகத் துயர ப்படவில்லை! எனது ஆசை நாயகி விலாஸவதியைவிட்டுவந்த தற்காகவும் வ்யஸநப்படவில்லை ! இப்பரதகண்டம் முழுவதை யும் ஆள யான் ஏகசக்ராதிபதியாய் வருவேனென்று பெரி யோர்கள் சொல்லினரே, அதற்கும் யான் ஆசைகொள்ள வில்லை ! நிர்மலமாகிய யசோவர்மனுடைய வயிற்றிலுதித்து, என்னைப்பத்து மாதஞ் சுமந்து, நாளொருமேனியும் பொழு தொரு வண்ணமுமாய் வளர்த்த என் தாயைக்குறித்து மாத்ரம் வ்யஸநப்படுகின்றேன் ! ஹா ! அம்ப சசிப்ரபா ! இப்பாவி யேன் ஏன் உன் வயிற்றில் ஜநித்தேன் ? நீ என் கதியைக் கேள்விப்படுவாயாயின் உன்மநம் எவ்வாறு பரிதவிக்கும் ? ஐயோ உன்னை யார் ஸமாதாநஞ்சொல்லி ஆற்றுதலடைவிக்கப் போகின்றனர் ? ஹா ! ஹதவிதி ! ஹதவிதி !! என்னகாலம் நேர்ந்துவிட்டது ! ஐயோ ! நான் எதற்கென்றழுவேன் ? என் னையே பந்துவாக நினைத்திருந்து இப்பொழுது இக்கொடுங் கோல் மன்னனிடத்திலிருந்து கஷ்டப்படும் என் தந்தையார் ஆண்டுவந்த ப்ரஜைகளின் பொருட்டு அழுவேனோ ? என்னி டத்தில் உள்ளன்பு பாராட்டி மேலுக்கு மாத்ரம் கண்டிப்பா

யிருப்பவர்போல் காட்டிவந்த எனது பரமாசார்யரான புத்திஸா கரரை நினைத்து அழுவேனோ? எனக்குக் கண்ணுக்குக் கண்ணாய் என்னுடல்போல் என்றும் பிரியாதிருந்த எனது நண்டன் காளிதாஸனைக்குறித்து அழுவேனோ? ஒரு கஷ்டமுமறியாத எனதருமைத்தாய் இச்செய்தியைக் கேட்டுப் படப்போகின்ற வருத்தத்தை நினைந்து அழுவேனோ? அல்லது இவ்வளவு கஷ்டங்களையெல்லாமடைந்தும், கற்போலக் கரைந்துருகாத என்பொருட்டுத்தான் அழுவேனோ? அந்தோ! உயிரை மாய்த்துக்கொள்வோமென்றாலும் மஹா பாதகம் நேர்ந்துவிடுமே! ஆத்மஹத்தி செய்கிறவர்கள் அந்த தாமிஸ்ர நரகங்களில் விழுந்து இடைவிடாது தவிப்பரன்றோ?

"அஸூர்யா நாம தே லோகா
அந்தேந தமஸா வ்ருதா:!
யாம்ஸ்தே ப்ரேத்யா பிகச்சந்தி
யேகேசாத்மஹநோஜநா:"

'ஸூர்யவெளிச்சமென்பதே யாருமறிந்திராத காடாந்தகாரமான அந்ததாமிஸ்ர நரகமல்லவோ தற்கொலை புரிபவர்கள், உயிர் வெளிக்கிளம்பினதும், விரைந்து சென்று வேதனைப்படும் இடம்'

என்றல்லவோ மறைகளெல்லாம் முறையிடுகின்றன! ஐயோ யான் என்செய்வேன்? எவ்விடஞ் செல்வேன்? ஒன்றுந்தெரியவில்லையே! ஈசா! உன்னைத்தவிர எனக்குவேறு கதியுமுண்டோ? நீ தான் இவ்வேழையை இத்தருணமுங் காப்பாற்றவேண்டும்.

ராகம் - கமாஸ்: தாளம் - ரூபகம்

கண்ணிகள்

கருணைபுரிந்தென்றன் - கவலை தீராயோ
தரையிற்றவிக்குமெனைத் - திரும்பிப் பாராயோ?

அடவியிலழுமென்மீ - தன்புவைப்பாயோ
படமுடியாதென்றன் - பசியைத்தீர்ப்பாயோ !

ஐயோ ! என்னவோ பயச்சம் வருகின்றதே ! இதோ இம்மரத்தடியிற்சென்று சற்றுசயனித்துக்கொள்வோம் ! (அப்படியே மரத்தடியிற்சென்று) ஈசா ! நீதான் இவ்வேழையின் கஷ்டத்தை நீக்கிக் காத்தருளவேண்டும் ! (சயனித்துக்கொண்டு)

*"கடலழுதே ! தேனே ! என் கண்ணே ! கவலைப் பட முடியா தென்னைமுகம் பார் நீ பராபரமே!"

*"என்புருகிநெஞ்சம் இளகிக்கரைந்து கரைந் தன்புருவாய்நிற்க வலைந்தேன் பராபரமே!"

*"இன்று புதிதன்றே ? எளியேன் படுந்துயரம் ஒன்றுமறியாயோ வுரையாய் பராபரமே!"

(சோர்ந்து நித்ரைபோதல்)

(ஜயபாலனைச் சேர்ந்த வீரன், ஸூரன் என்னுமிரண்டு பில்லர்கள் பாடிக்கொண்டே ப்ரவேசித்தல்)

வீரன்:—(ஒரு கட்பாண்டத்தை கையிலெடுத்துக்கொண்டு)
ஓடிவுழன்றேன் காடெல்லாம் சுற்றி
வாடி வதங்கினேன் யான் !
நாடி யுன்னைக் கூடிக் குடிக்கத்
தேடித்திரிந்தேனே !

ஸூரன் :—(பெருமூச்சு விட்டுக்கொண்டு)
*போதுமென்னப்பனே போழ்தும் போச்சுது
வாது செய்கின்றாயே !
எதினி யில்லா தென்னுயிர் ஸுரையை
மாதிரி பாராமே !

* தாயுமானவர்

வீரன்:—அடா அப்பா ! இன்னிக்கிப்பட்ட பாடுபோதும் போதும் ! இனிமேலே ஆயுசுக்கும் வேண்டாம் !

ஸுதாரன்:—காலெல்லாம் சுத்தியடிச்சாண்டா அந்தப்பாவி! கை கால் எல்லாம் ஜிவ்ஜிவ்வென்று வலிக்குதுரு !

வீர:—போவுது ! எவனாவது ஆப்பட்டானா? இவ்வளவு கஷ்டப்பட்டத்துக்கு இப்போதென்ன வாயிலடிச்சிக்கிறது ?

ஸுதா:—ஸாமீ ! போரும் போரும் ! இன்னிக்கி எவன் மூஞ்சியிலே முழிச்சேனோ, காலமே முதல்கொண்டு ஒரு பருக்கைகூட கிடையாது !

வீர:—பின்னே என்னடா வயித்தெரிச்சல் ! (கையிலிருக்கும் கட்டாண்டத்தை நோக்கி) இது இராத பூட்டாக்கே நம்ப சத்துதாண்டா போகணும்.

ராகம் - பியாக் : தாளம் - சாப்பு

பல்லவி

ஸாரமிவ்வுலகில் மதிரா
ஸாராயம் ஸுரையே !

அநுபல்லவி

சோறுமே வேண்டோம், மற்ற
ஸுகங்களையும் வேண்டோம் !—(ஸா)

சரணம்

பனங்கள்ளும் பனஞ்சாறும்
பாநம் பண்ணியே,
தானங் காநம் வேறொன்றும்
சற்றும் வேண்டோம் !—(ஸா)

ஸுதா:—வயித்தெரிச்சலா? பின்னெயும் வயித்தெரிச்சலா! எங்கப்பன் அந்த சாணாரப்பய்யன் நல்லாயிருக்கணும்! (வீரனிடத்திலிருந்து கட்டாண்டத்தைக்கையில் வாங்கிக்கொள்ளுதல்)

வீர:—ஆம்டா! அவன் இருக்கானே மெத்த நல்லவண்டா? இன்னிக்கி நாம்ப பாடு பட்டுவந்ததைப் பார்த்துவிட்டு அவனே ரொம்ப கள்ளு ஊத்திக்கொடுத்தாண்டா!

மூ-ர:—(கட்பாண்டத்தை வாயண்டை கொண்டுபோய்) அடே மினுக்குதடா! (பூ என்று நுரையை ஊதி) கள்ளுக்கு ஸமானமென்னடா யிருக்குது. இதைத்தாண்டா அந்த பாப்பாருங்க, இப்படிக்கொத்த கஞ்ஜாவோடே கலந்திட்டு, அமுதம் அமுதமென்று பூரா அடிக்கிராங்கோ! (கஞ்சாவை கொஞ்ச முட்கொண்டு பாடுதல்)

பல்லவி

அஞ்ஜலி பிஞ்ஜிலி கஞ்ஜாவே
ஆநந்தமாகவே வளர்ந்தாயே!
பிஞ்ஜாணுவென்ன பூவாணுவென்ன
பெரியகடையில் கண்டேனே!

அநுபல்லவி

துட்டுகொடுத்துக் கொண்டேனே
துண்டு துண்டாக விடித்தேனே!
குட்டையிலே குளத்திலே தள்ளாதே
குருவுக்குப் புண்யம் கஞ்ஜாவே!

சரணம்

சிக்கினில் போட்டுச்
சிலும்பிலடைத்து, அதன்மேல்
அக்கினி பகவானைமூட்டி
அம்மானை நினைத்தோர் தம்மிழுத்தாக்கா

மூப்பத்துமுக்கோடி தேவர்களெல்லாம்
• முகத்தின்முன்னின்று நடனஞ்செய்வாரே!

தம்பீ! என்னப்போ? (பற்களைக் கடித்துக்கொண்டு) பிளிக்குதுடா! பிளிக்குது!!

வீர:—அண்ணே! இந்த பச்சைமுளகாயை கடிச்சிக்கிண்டையான நல்லாயிருச்கும். (மடியிலிருந்த மிளகாயை யெடுத்துக்கொடுத்தல்)

ஸுந்தர:—(மிளகாயை வாங்கிக் கடித்துக்கொண்டே மறுபடியும் கொஞ்சம் கள்ளருந்தி) ஆமாங் தம்பி! (தலையை யசைத்து ருசியை அபிநயித்து) என்னமாயிருக்குதான்றே? (ஆட்டம் ஆடிக்கொண்டு, வெகு ஜோகுஸா! (மறுபடியும் கொஞ்சம் கொட்டையிட்டுக்கொண்டே கள்ளருந்தி மயக்கங்கொண்டு). அண்ணே! நாம்ப எங்கே யிருக்கோம்?

வீர:—(சிரித்து) ஆம்டா! வானத்திலே யிருக்கோமடா!.

ஸுந்தர:—(பூராய்க்குடித்துவிட்டு) என்ன ஜெல்லரே!. ஏழ்ழ் (ஏப்பம் விட்டு) எங்கேரா? மா மா மானத்திலேயா? ஏழ்ழ்ழ் (திரும்பியும் ஏப்பம்விட்டு) மா மா மா மானத்திலே. குருருரூரியன் தம்பி.

வீர:—ஏண்டா ஜாஸ்தியா குடிச்சிட்டையோ? (கட்பாண்டத்தை கிமிர்ந்து பார்த்து) ஈம்ஹூ! ஸரிதான்! பூராவிட்டுட்டே!

ஸுந்தர:—யார்ர்ர்ராவன் நம்பளண்டே ஜாஸ்தியா பேஜரது! என்னும்மா! பபபபபத்திரம்! நம்பளேயாரென்னுபார்த்துக்கிணே! நாம்யவ்ஷயவ்ஷயவ்ஷயவ்ஷமான்! ஜேஷஜேஷஜேஷஜேஷவகன்!!

வீர:—என்னடா குடிச்சிட்டு உளர்ரே! ஏண்டா அல்லாத்தையும் குடிச்சிட்டையோ?

ஸுந்தர:—யார்ரா குடியன்? நீ குறியனுடா நான் குறி குறி குறியனுடா? (வீரனைப் பிடிக்கப்போய்க் கீழே விழுதல்)

வீர:—(ஸுந்தரனைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு) அடே! இந்த மொட்டைப்பசங்கத்தனத்தை நம்பளண்டே காட்டாதேன்னு எத்தனைவாட்டி சொல்லியிருக்கேன்.

ஸுந்தர:—(வீரனை ஒருமரம் என்று நினைத்துக்கொண்டு கையால் ஆட்டிக்கொண்டு) மரமா தம்பி! மர்ர்ர்மா யிது?

வீர:—என்னடா மொட்டைப்பயலே! ஒதைக்கிரேன் பார்! விடுடா!! (ஸாரனைத்துரே உதைத்துத் தள்ளுதல்)

ஸா:—(மெள்ள எழுந்து உட்கார்ந்து) அழே! மொழ்ழே கிழ்ழே எண்ணையோ பபபபப பல்லே தட்டிப்போழுவேன்! நநநநம்பளே என்னுன்னு பாபாபாபாழ்த்திண்டே! வொவொ வொவொருகுழ்த்து! (முன்னுக்குக் கை நீட்டுவது போல் வளைத்து பின்னுக்குப் போதல்)

வீர:—(ஆத்மகதமாய்) நமக்கு வவுரெல்லாம் ரொரையடசி யாயிருக்குது! இந்தப் பட்டி மவனோடே நமக்கென்ன வீம்பு? தண்ணி ஸொகுஸாதான் இருக்குதுபோலத் தோணுது! நம்ப ளுங் கொஞ்சங் குடிப்போம்? (கீழேயிருக்கும் சட்டானையை எடுத்துப்பார்த்தல்)

ஸா:—ஹ ஹ ஹ ஹ! அட்ராக்ஷக்கே!

வீர:—வடுவாப்பயல் அல்லாத்தையுங் குடிச்சிட்டாண்டா! அத்தான் தூக்கியடிக்குது படலே. (மிகுதி கள்ளை ஒரு பொட் டும் விடாமல் குடித்துக்கொண்டு) ஏண்டா? என்னடா! கனே! க்கிரே! மூக்குமட்டும் எத்திட்ட சொழுப்போடா? அவ் (மெள்ள ஏப்பம் விடுதல்)

ஸா:—ஆம்ம்பண்டா! ஹா! ஹா! ஹா! ஹா! பூழ்ச்சி யே குழிச்சேம்! (பாடிக்கொண்டு) அம்மாய்! அம்மாயீ!!

வீர:—பட்ட கஸ்டங்களுக்கெல்லாம் இது தாண்டா நல்ல மருந்து! ஆத்தாடி! கால் வவுருகூட ரொம்பலே! அதுக் குள்ளே பூமியெல்லாம் சக்கரம் உருளேட்போல சுத்துது!

ஸா:—ஹீ! ஹீ! ஹீ! ஹீ! ஹூ! ஹூ! ஹூ! ஹூ! (பாடிக்கொண்டு) அம்மாய்! அம்மாய்!! அம்மாயி அம் மாயி அம்மாயீ அம்மாயீ!

வீர:—என்னடா! அம்மாயீனைய நினைச்சிக்கிட்னடயோ! நேத்திராத்திரி ரொம்ப மலப்புதானோ?

ஸாமிர:—ஆட்ர்ரா! பூ! பூ! பூ! பூ! புசும்! (மூக்கால் வீர ன்பேரில் எச்சில் தெறிக்கத்தும்புதல்)

வீர:—என்னடா! மேலே எச்சிலே துப்பரயே! வேணு மோடா பூசை!

ஸாமிர:—தூ! தூ! தூ! தூ! (திரும்பியும் வாயாலெச்சி லேத் தெறித்தல்)

வீர:—ஏண்டா! சும்மாயிருக்கேன்னிட்டு மேலே மேலே ஏர்ரையோ? பார்த்துக்கோ! இதோ உன்னைக் காலேவாரி யிழுத் துப்போட்டுர்ரேன்! (ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு கைகலந்து புரளுதல்)

(காலபாஸன், விருபாக்ஷன் என்னும் ஜயபாலனைச் சேர்ந்த வேறிரண்டு பில்லர்கள் பரபரப்புடன் ப்ரவேஸித்தல்)

காலபாஸன்:—தம்பி! இவ்வளவு நேரமாச்சே! அவங்க வந்திட்டிருப்பாங்களோ? இன்னிக்கி ராசாமவன் பட்டணத் திலே யில்லேயாம்! அங்கே தான் போய்க் கொள்ளேயடிக்கவே ண்டுமாம்!

விருபாக்ஷன்:—ஆமாண்ணே! அந்தப் பயங்க இருக்காங் களே, வீரனும் ஸாமிரனும், நமக்கு முன்னே வந்தாங்களே! எங்கே போயிருப்பாங்க?

கால:—அந்தத் திருட்டுப் பயங்களா? சாணுங்கடைதான் ஒண்ணு இருக்குதோ இல்லேயோ? வேறே எங்கே போயிருப் பாங்க?

விரு:—ஆமாண்ணே! அங்கேதான் போயிருப்பாங்க! அதிலேயும் அந்தப்பய்யனிருக்குரானே ஸாமிரன்! அவன் மொடாக்குடியன் எங்கிரேன்!

கால:—போடா! போடா! மொடாக்குடியனு? பிப்பா குடியண்டா! அவன் ஸம்பாதிக்கிற துட்டெல்லாம் பின்னே

எங்கே போவுதுண்ணு பார்த்துக்கிட்டே ! அந்தத்தண்ணிக்குத் தான் எல்லாம் போவுது !

விரு:—(நோக்கி) இல்லாண்ணே இல்லு ! இங்கே எவங்களோ ஒத்தன் மேலே ஒத்தன் விழுந்து கட்டிக்கிட்டு சண்டை போர்ராங்க! (இருவரும் பார்த்தல்)

ஸோம:--ஏண்டா! போருமா! இனிமே நம்பளண்டே வாயாடினையோ மண்டையை ரண்டாய்ப் பொளந்துடுவேன்! (வீரனைக்கீழே தள்ளி யமுக்குதல்)

வீர:--அடே! உனக்கு ஏதோகிட்டிக்கிண்ட திண்ணிக்கி! என்னைக் குரியாய் விட்டுடு ! இல்லாட்டா—(எழுந்திருப்பதற் குப் ப்ரயத்நப்படுதல்)

ஸோம:—இல்லாட்டா என்னடா சேஞ்சிடுவே? இனிமே என் ஜோலிக்கி வராதே! வராதே!! வராதே!!! (முதுகில் தள்ளினபடி குத்துதல்)

வீர:—ஐயோ ! பூட்டேன் ! அம்மாடி பூட்டேன் !! எப்பாடா பூட்டேன் !!!

கால:—அடே! அந்தத் திருட்டுப் பசங்கதாண்டா இங்கே குடிச்சிட்டு சண்டை போர்ராங்கோ!

விரு:—அடே திருட்டுப்பயங்களா ! இங்கே என்னடா பண்றீங்க ? விடுங்கடா! நம்ப யசமான் மெத்த கோவித்துக் கொண்டிருக்கிறாரடா !

ஸோம:--(வீரனை விட்டுவிட்டு) அடே! நீ சத்தேகோவித்து கோடா பார்ப்போம்! என்னமோ பலே பேசரையே! வீரனுக்கு விழுந்த உண்டை உனக்கும் வேணுமோ ?

விரு:—அடே முட்டாள் ! என்னடா யசமான் கோவித்துக்கொள்ளுகிறாரென்றால் நீ கோவித்துக்கொள் பார்ப்போமென்கிறையே ?

ஶூர:-பின்னே என்னடா? நாங்கள் தான்சோறு தண்ணி கூடயில்லாமல் அப்போபிடிச்சு அலேஞ்சிட்டு இங்கே விழுந்து கிடக்கிறோமோ! அதுக்குள்ளே கோவமென்னுடா ?

கால:—போயிட்டு போவுது ! அவனரடா கீழே ! வீர னுடா ?

ஶூர:—ஆமாண்டா ? அந்த ஊளேப்பயல் நம்பளண்டை வாலாட்டப்பார்த்தாண்டா !

கால:—அல்லடா! அவனேப்பத்தி நான்சொல்லலேடா ? அதோ அந்த மரத்தின் கீழே யாரோ படுத்திக்கொண்டிருக் கிறாப்பலே யில்லே ?

வீர:—(எழுந்து உட்கார்ந்து, உடம்பைத் தடவிக்கொ ண்டு) ஆத்தாடி! இப்போதான் உயிர் வந்தது !

ஶூர:—இந்தக் காட்டிலே எவங்கடா யிருக்கப்போறாங் கோ ! ஏதானு புலி கரடி படுத்திருக்கும்! வேறெ என்ன இருக் கப்போவுது ?

கால:—இல்லேயடா ! நீ வேணுமானு எழுந்திருச்சுப்பா ரேன் ! அதோ என்னமோ செகப்பா தெரியலே ?

வீர:—(நோக்கி) என்னமோ மூச்சுக்குரல் கூட கேட்கு தடா !

விரூ:—இல்லேயடா ! இந்த மரத்தில் இரத்தக் காட்டேரி யிருக்கு மென்பாங்க! ஒருவேளே அதுவாதாண்டாயிருக்கும்.

ஶூர:-அம்மாடி!அதுவாயிருந்துச்சுனு நம்பளேப் பாற்து ட்டாக்கே சும்மாவிடுமா? அத்தோடே ஆள் மைசல்தானே !

வீர:—(நடுங்கிக்கொண்டு எழுந்து) என்னுழ்ழா ? ழ்ழ்ழ்ழ் ழ்ழத்தக்காட்டேரியா? ஐயோ நாநாநாநான் பத்திரம் (ஓடுதல்)

கால:—இல்லேயடா! இது என்னமோ வேறெதாண்டா படுத்து யிருக்குது! (அருகிற்சென்று நோக்கி, பாடுதல்)

ராகம்-நாதநாமக்ரியை: தாளம்-அடசாப்பு

நில்லுங்கள் வருமிங்கே காசு!—(பயந்து) அல்ல
கொல்லும் பருத்துக் கொழுத்த பிஶாசு !
அப்பப்பா ! இது என்ன ரூபம்—ஐயோ !
தப்பிப் பிழைப்பதே மெத்த ப்ரதாபம் !—　　(அப்ப !)

ஶூர:—(வெகு தைர்யத்துடன் அருகிற்சென்று)
அடியுங்கள்! பிடியுங்கள்! தாவி—(பயந்து) அம்மா!
குடியைக் கெடுக்கும் கொடியமூதேவி !—　　(அப்பப்பா)

வீர:—(கோபத்துடன் விரைந்து ஸமீபஞ்சென்று)
திருட்டுப் புரட்டுப் பஜாரி!—(பயந்து) ஸத்து
இருட்டில் விரட்டு மிரத்தக்காட்டேரி!—　　(அப்பப்பா!)

விரு.—(வெகு தைர்யமுள்ளவன் போல் முன்வந்து)
அடபோடா! இவளாரோ நீலி!—(பயந்து) பூதப்
படைசூழப் பவனிபோம் படபத்ர காளீ!— (அப்பப்பா)

எல்லோரும்—(பயந்து பக்தியுடன்)
அம்மா! அக்கா! ஆயே! தாயே!—(கைகூப்பி) எம்மைச்
சும்மா விட்டுச்செல்லும் வந்தனந் தாயே!—(அப்பப்பா!)

ஶூரன்:—(சற்று யோஜித்து) அடே! இல்லையடா! இது என்னமோ பேசாமெ படுத்துக்கினுயிருக்குது. அப்பா! நாம்ப கூசப்போட்டத்துக்கு பிஶாசு காட்டேரி காளி கீளியாயிருந்தாக்கா நம்மளே இந்நேரம் சும்மா விட்டிருக்குமா? அப்பவே எழுந்திருச்சு அல்லாரையு மொரேயறையா யறைஞ்சிட்டிராதா? இதுவேறே என்னமோடா ! (போஜனருகிற் சென்று நோக்கி) அடேடேய்! இது யாரோ ஒரு பொம்பளே தன்னாதெ படுத்திக்கிட்டுருக்கிறுப்போலே தோணுதடா !

வீர:—(தைர்யங்கொண்டு தூரத்திலிருந்தபடியே) என்னும்மா ! நானப்பவே சொல்லலே! அவதாண்டா நம்ப அம்

மாத்தாயி! உங்களைச் சும்மாங்காட்டிக்கும் பயங்காட்ட ஓடினேன்!

வீரு:—அம்டா! எவளோ அசந்து தூங்கிருப்போலெதாண்டா இருக்குது! (ஸமீபம் பரிக்ரமித்தல்)

மாரா:—அடே! எனக்குக்கெட்ட கோபம் வரும்! கிட்டே போகாதே! அவளை யாரென்னு பாத்துக்கிணே! எம் பெஞ்சாதிடா! (கிட்டே சென்று) அடியே! அடியே! அடி அம்மாயி!

கால:—அடே மொட்டைப்பசங்களா! என்னடா வெட்டிவார்த்தை பேசரைங்கோ! அந்த சோப்பு புடவையை பார்க்கச்சையே தெரியலே! இவ எம் பெஞ்சாதி அவுரூப மாச்சேடா? அடி அவுரூபம்! (ஸமீபஞ்சென்று பாடுதல்)

ராகம்-நவரோஸ்: தாளம்-ஆதி

எழுந்திருடி—நீ
பழந் தருகிறேன்,
விழுந்து கைகூப்பி—மருவுவோம்
மொழிந்து மநமொப்பி!
கெடாத அமுதே!
தொடாத அரும்பே!
விடாமலுனை வேண்டி—ஸொகுஸான
மிடாயி தருவேண்டி!

மாரா:—(தட்டிக் குதித்து காலபாரனைத் தள்ளிக்கொண்டு முன் வந்து)

பாவாய்! நானுன்னிடம்
ஆவல் மிகக்கொண்டேன்!
காவாய் நீ இத்தருணம்—பூஜிப்பேன்
பூவாலெ யுன் சரணம்!— (கெடாத)

வீர:—(இருவரையும் தள்ளிக்கொண்டு போஜன் முன்பாக வந்து)

மஹாதநவானெனே
ஸஹாயமாய்க்கொளில்
விஹாரம் ஙியடைவை—தருணீ!
மஹாதேவனைப் புகழ்வை!— (கொடாத)

விரு:—(இம்மூவரையுந் தூரே தள்ளிவிட்டுத் தான் முன் சென்று)

காடுமுழுதுஞ்சுற்றி
ஒடிவந்தேனிதோ
நாடியுனைப்பெண்ணே!—ஸுகம்பெறக்
கூடுவோம் நாம் கண்ணே!— (கொடாத)

நால்வரும்:—(ஒருவரை யொருவர் தளளிக்கொண்டு)
கொடாத அமுதே!
தொடாத அரும்பே!
விடாம லுனைவேண்டி-ஸொகுஸுள
„ பலேபலே
„ ருசியுள்ள
„ நல்லநல்ல
மிடாயி தருவேண்டி!

ஸூர:—(எல்லாரையுந் தள்ளிவிட்டு) அடே! நீங்கள் கிட்டெவந்தீங்களோ காலை ஒடிச்சிடுவேன். (ஸமீபஞ்சென்று போஜனைத்தட்டி எழுப்புதல்)

வீர:—அடே! உனக்கு மூஞ்சியிலே மீசை யிருந்தா லென்னேடேவில்லடா! (ஸூரனைப் போஜன்மீது தள்ளிக் கொண்டு கைகலத்தல்)

போஜ:—ஐயோ இஃதென்ன? (எழுந்து கண்களை விழித்துக்கொண்டு ஆத்மகதமாய்) யார் நம்மை இங்கே இத் தருணத்தில் தட்டி எழுப்பக்கூடும்? ஒருவேளை நம் சிற்றப்ப னுடைய வேலையாட்களோ? (சுற்றி நோக்கி) ஒகோ! இவர் கள் யாவரோ நம் நாட்டைச் சேர்ந்தவர் அல்லர்! இவர்கள்

உடையைப்பார்த்தாலே பயங்கரமாயிருக்கின்றது. இக்காட்டில் இவ்வேளையில் இவர்கள் இங்கு வந்ததென்னே? (ப்ரகாஶமாய்) ஐயா! யார் நீங்கள்? எங்கிருந்து வருகின்றீர்கள்? ஏனிப்படி மேலே விழுகின்றீர்கள்?

ஶூர:—ஏண்டி! இதுக்குள்ளேயே மறந்துட்டையோ? (போஜன் தோள்மீது கைப்போடல்)

போஜ:—(ஶூரன்கையை விசிறித் தள்ளிவிட்டு) என்ன குடித்தவன்போல் மேலேவிழுகின்றாய்! தூரத்தில் நில்லடா?

வீர:—ஆம்! போருமாடா மொட்டைப்பயலே! பார்த்துக்கிட்டையா? எம் பெஞ்சாதி அம்மத்தாயி என்னிட்டு நான் அப்பவே சொல்லலே? (போஜனைக் கட்டியணைதல்)

போஜ:—(வீரனையும் விசிறித்தள்ளிவிட்டு எழுந்துநின்று) யாரடா மூழு மக்கள்காள்! உங்களுக்கு மூளையிருக்கின்றதா யில்லையா? ஸ்த்ரீ புருஷனென்பதுகூடத் தெரியவில்லை போலும்? சீ! குடிகாரப்பயல்களே! விலகி நில்லுங்கள்! (இவ்விருவரையும் ஒவ்வோரறை கொடுத்து கீழேநீட்டல்)

கால:—ஆமாண்டா! குரலேப்பார்த்தால் புருசன்போல தாண்டா யிருக்குது?

விரு:—ஆம்! எவனோ கொழுத்த ஆசாமிதான்! இவனைப் பிடிச்சாக்கே என்னமானு கிடைக்கும்.

கால:—அடே! அப்படியானு, நீ மெள்ளப்போய் பிடிச்சுக்கோடா! நானுங் கூடவரேன்.

போஜ:—(ஆத்மகதமாய்) இவர்கள் கிராதர்கள் போலிருக்கின்றனர்! எதாயினும் கொள்ளையடிப்பதற்கு வந்திருக்கலாம். இவர்களிடத்திலிருந்து மெதுவாய்த் தப்பித்துக்கொண்டு செல்வதே நலம்! (எந்தப்பக்கமாப் போகலாமென்று பார்த்தல்)

கால:—(போஜனை மடக்கிக்கொண்டு) அப்பேன்! எங்கே போவலாமென்னு பாக்கரே? நம்மையுமந்த சொத்தைப் பசகனென்னு நினைச்சுட்டையோ?

போஜ:—அப்பா, நீ பெரிய மநுஷ்யந்தான்! உனக்கொரு நமஸ்காரம்! யான் அவஸரமாய்ப் போகவேண்டியிருக்கிறது. மறிக்காமல் வழியைவிட்டுச் செல்! (ஒரு புறமாய்ப்போகப் பார்த்தல்)

கால:—நானுந்தானப்பேன் அவஸரமாகப் போகவேண்டும்! சத்தே பொறுத்துக்கொள்! (மார்பில் கைகொடுத்துக் கட்டுதல்)

போஜ:—(அவனைத்தள்ளி கீழே நீட்டிவிட்டு) யான் யாரென்று நினைத்தாயடா? இனியாகிலும் புத்தியுடன் நடந்துகொள்! (திரும்பிப்போகும்பொழுது காலபாமன் போஜனது இடதுகாலைக் கட்டியாய்ப்பிடித்துக் கொள்ளல்)

விரு:—(பின்னேவந்து மடக்கிக்கொண்டு) அடே திருட்டுப்பயலே! இவ்விருளில் எங்கேடா போறே? நில்லடா நில்லு! போனயோ சிண்டியைக் கிழித்துவிடுவேன்! (போஜனுடைய இரண்டு கைகளையும் சேர்த்துக் கட்டுதல்)

போஜ:—(காலையுதறி வாங்கிக்கொண்டு பின்பக்கமாய்த் திரும்பி) அடே பேசாமல் இப்பொழுதே என்னை விட்டுவிட்டோடு! வீணாய் மடிவாய்! (ஒரு கையை வாங்கிக்கொண்டு)

கள்ளருந்தின கோலமோ விது
காட்டிலென்னை மடக்கினாய்?
கள்ளன்போலுமே பின்னர்வந்து நீ
காட்டிவல்லமை துள்ளினாய்!

விரு:—(போஜனதுவலதுகையைச் சட்டியாய்ப்பிடித்துக் கொண்டு)

தொல்லையா மெமதெல்லைவந்து நீ
தூர மேகுவதெங்கடா?

பில்லராஜனின் மல்லன் நானடா
பின்னெதிர்த்தெனை வெல்லடா!

போஜ:—(கோபத்துடன் வலதுகையையும் திமிறிக்கொண்டு)

விட்டுநில்லெனை வெட்டுவே னுனை
வெட்டிவார்த்தை யிதேதனடா?
மட்டிபே யெனை யாவரென்றுநீ
மதியிற்கொண்டனை கூறடா!

விந:—(கோபத்துடன் பற்களைக் கடித்துக்கொண்டு).

கெட்டதேளுங் கொடுக்கறுந்திடிற்
கிட்டுமோ விஷங்கொட்டுமோ?
கட்டியானுனைக் குட்டுவேனடா
கட்டடா அரைக்கச்சையை!

(போஜனுடைய அங்கியைப்பிடித்துக் கொள்ளுதல்).

மூ-ர:—(எழுந்து அடியைத் துடைத்துக்கொண்டு) அகப்பட்டுக்கிணண்டா துமிட்டிக்கா பட்டன்! இத்தாண்டா சமயம்! எழுந்து ஓடி யாங்கடா! கட்டியா பிடிச்சிக்கலாம்! (நால்வரும்போஜனைப்பிடிக்கவர போஜன் ஒருவரையுங்கிட்டே வரவொட்டாமலடித்தல்)

(காவதநை, தண்டபாணி என்னும் இரண்டு பில்ல ஸ்த்ரீகளுடன் ஜயபாலன் ப்ரவேசித்தல்)

ஜயபாலன்:—(பரபரப்புடன்) காவதநா! இதென்ன கூச்சல்? யாரிங்கே சண்டை செய்வது?

காவதநை:—மஹாப்ரபு! நம்மவருடைய குரல்தான் கேட்கின்றது.

தண்டபாணி:—(நோக்கி) யாரோ வேறொருவனுடைய குரல்கூட கேட்கிறதே!

ஜய:—(விரைந்து அருகிற்சென்று) என்னடா! செய்தி? இதென்ன சண்டை?

ஸூர:—யசமான்! இங்கே ஒரு மநுசன் அகப்பட்டுக் கொண்டான்?

ஜய:—எங்கே? எங்கே?

ஸூர:—இதோ நிற்கிறான் பாருங்கோ!

ஜய:—இச் சிறுவனே?

வீர:—சிறுவனே? அப்பாடி! அவன் கொடுக்கிற ஒவ்வோர றை ஒவ்வொரு லோகம் பொருமே! நல்ல சிறுவன்! நீங் களே அவனைக்கொஞ்சம் பிடிச்சுக்கொள்ளுங்கள் பார்ப்போம்!

ஜய:—(போஜனை உற்றுநோக்கி, ஆத்மகதமாய்) ஆம்! சிறு வனயிருப்பினும் மஹாபலஸாலிபோல் தோன்றுகின்றான்!

ஸர்வலோக பலத்தை யுந் த்ருண
　　மாய்க்கொளுந் திருநோக்கமும்,
பர்வதேந்திரன்போலுமே பெருந்
　　தன்மையும் மநஊக்கமும்,
ஸர்வனோவிவன்? ஸார்ங்கியோவிவன்?
　　சந்த்ரனே விவன்? இந்த்ரனே?
கர்வமேயுருக்கொண்டதோ? கந
　　வீரமே வடிவாயதோ?

அன்றேல், இந்நால்வருக்குமிவன் ஒருவனய் நின்று ஈடுகொடு ப்பனே? முகம்வாடியிருப்பினும் இவனது காம்பீர்யம் மாத்ரம் கொஞ்சமேனும் வாடவில்லை. இப்படிப்பட்டவன் ஒருவன் நமக்குக் கிடைப்பானயின் நமது தொழிலுக்கு யாதொரு குறையும் வாராது (ப்ரகாஸமாய்) அடே! அவரைவிட்டுத் தூரே நில்லுங்களடா! (அப்படியே நால்வரும் போஜனை விட்டுவிட்டு மர்யாதையுடன் தூரமாய் நிற்க) யாரப்பா நீ? எங்

கிருந்து வருகின்றாய்? நீ சிறுபிள்ளையாயிருந்து இம்மல்லர்களுடன் சண்டைபோடுகின்றாயே! நீ யிங்கு வரக் காரணமென்ன? நீ யிருக்குமிடம் யாது?

போஜ:—(ஆத்மகதமாய், ஐயபாலனை நோக்கி) ஸரி! இவன்தான் இப் பில்லர்களுக்கெல்லா மரசன்போலும்! இப்பொழுதிவனுக்கென்ன உத்தரந் தருவது? நம் நிலைமையை எவ்வாறு வெளியிடுவது? (சற்று யோஜித்து) எதற்குமிவ்வாறுரைப்போம். (ப்ரகாஶமாய்) ஐயா! யான் ஒரு பரதேஶி. தேஶஸஞ்சாரஞ்செய்யலாமென்று புறப்பட்டுவந்தேன். வழி தெரியாமல் இக்காட்டிலகப்பட்டுக்கொண்டு, பசிதாஹத்தினுற் களைத்து இம்மரத்தடியிற் படுத்திருந்தேன்: இவர்கள்வந்து என்மீது வீழ்ந்து இவ்வாறு யுபத்ரவம் செய்கிறார்கள்.

ஐய:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! பசிதாஹத்தினால் வருந்தியிருந்தும் இவனுடைய காம்பீர்யத்தையுந் தைர்யத்தையும் பார்க்குமளவில் மிகவும் ஆஶ்சர்யமாயிருக்கின்றது! இவனை எப்படியாயினும் ஸாமோபாயத்தினுல் நம்மல்லரில் ஒருவனாய்ச் செய்யவேண்டும். (ப்ரகாஶமாய்) அப்பா! மெத்தவும் பசிதாஹத்தினால் வருந்தினவன்போல் தோன்றுகின்றாய்? இதோ சிறந்த மது விருக்கின்றது! (கண்சாடைகாட்டக் கரவதனையுந் தண்டபாணியும் ஒரு தங்கத்தட்டில் பழவர்க்கங்களையும், இரண்டு வெள்ளிக்கலஶங்களில் மதுவையும் நிரப்பிக் கொண்டு வைக்க) இப்பழங்களை யருந்தி, இம்மதுவையுண்டு, தாஹஶாந்தி செய்து கொள்! (மதுகலஶங்களிலொன்றைப் போஜனிடம் நீட்டல்)

போஜ:—(பழங்களில் ஒன்றைமாத்ரம் மர்யாதைக்காக எடுத்துக்கொண்டு) ஐயா! இவ்வித உபகாரத்திற்காக யான் தங்களுக்கு மிகவும் வந்தநஞ் செலுத்தத் தக்கவனா யிருக்கின்றனன்! ஆயினும் எமதுகுலத்தில் மதுபாநஞ்செய்வது வழக்கமில்லை! தாஹமும் மதிகமாயில்லை. தங்களுக்கேன் இக் கஷ்டம்? (மதுகலஶத்தைத் திருப்பிவிடுதல்)

ஜய:—அப்பா! இதை யருந்துவதனால் ஒரு கெடுதியு மில்லை.

உலகினி லுயர்நல முடையது மதுவே
புலவரருந்திடும் புனலுமிம்மதுவே
கலைபுறுமறையவர் கடவுளும் மதுவே
பலவித ஸுகத்தையும் பயந்திடும் மதுவே!

இதைத்தான் அம்ருதமென்றும் ப்ரஹ்மாநந்தமென்றும் தேவர் களும் துறவிகளுங் கொண்டாடுவார்கள்! வேதங்களிற் கூட தெய்வங்களுக்குள் முதல் தெய்வம் மதுவென்று சொல்லப் பட்டிருக்கின்றது. மேலும், இம்மது ஸாதாரணமான மது வன்று! உயர்ந்ததேனுடன் சேர்க்கப்பட்ட த்ராக்ஷாரஸம்தவிர வேறொன்றுமிதிற் சேர்க்கப்படவில்லை. தேஹத்தில் ஶ்ரம முண்டாகும் பொழுது அதை நீக்கி யாநந்தத்தைக் கொடுப்பது மதுவல்லவோ? நீ சும்மா இதைச் சாப்பிட்டுப் பார்!

போஜ:—ஐயா! இது எம் ஜாதியாருக் கடுத்ததன்று. மேலும் யாவருக்குமே மதுபானஞ் செய்வதனால் விளையுங்கெடு திக ளநேகம்!

*"அறிவையழிக்குஞ் செயலழிக்கும்
அழியாமாநந் தனையழிக்கும்,
செறிவுமறிஞர் மதியாத
செருக்கைவிளைக்கு மீன்றாளும்,
முறியும் வெறுப்பு மிக விளைக்கும்,
முனிவுவிளைக்கும், பகையஞ்சாக்
குறிகள்விளைக்கும், நகைவிளைக்கும்,
கொள்ளேல் மதுவுண்டலைவேந்தே!"

* பிரபுலிங்கலீலை? பரானம்

ஜய:—நல்லது! உனக்கிஷ்டமில்லாதிருப்பதனுல் இப் பழங்களேயாயினு மருந்து! (இன்னுமிரண்டு பழங்களை எடுத் துக்கொடுத்தல்)

போஜ:—(பழங்களை வாங்கிக்கொண்டு) தங்கள் அன்புக்கு யான் என்ன ப்ரதி செய்யப்போகின்றேன்?

ஜய:—அப்பா! யானின்னுனென்றுனக்குத் தெரிந்த தோ! என்னைத் தான் இப்பில்லர்களுக்கெல்லா மரசனென்று சொல்லுவார்கள்.

போஜ:—ஐயா! யான் முன்னரே தெரிந்துகொண்டேன்.

ஜய:—எங்களுடைய தொழிலுனக்குத் தெரியுமோ? பிறர் பொருளைக்கொள்ளை யடிப்பதுதான்! (கூரவதனை வெள் ளிக்கலசத்தை ஜயபாலனிடம் நீட்ட, வாங்கியருந்துதல்)

போஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா! மிகவும் பரிசுத்த மான தொழிலே! (ப்ரகாசமாய்) யான் அப்பொழுதே அறி ந்து கொண்டேன்.

ஜய:—(மதுவின் ருசியை அபிநயித்துக்கொண்டு) ஆஆ! இதனுடைய ருசியை யானென்ன சொல்லப்போகிறேன்! நீ கொடுத்துவைக்கவில்லை! அது போகட்டும்! நானென்றுசொல் லுகின்றேன்: நீ யப்படி நடப்பாயாகில் உயிருள்ளளவும் உனக்கு யாதொரு கஷ்டமும் நேரிடாது.

போஜ:—ஆஆ! அப்படியே செய்யக் காத்துக்கொண் டிருக்கின்றேன்! சொல்லுங்கள் தங்கள் மநத்திலிருப்பதை.

ஜய:—அப்பா உன்னையே இப் பில்லர்களுக் கெல்லாம் ப்ரதானியாய் நியமிக்க விரும்புகின்றேன். உனக்கு ஸம்மத மா?

போஜ:—(ஆத்மகதமாய்) அ! இஃதென்ன விபரீதம் இத்தொழிலுக்கும் நாம் உட்படவேண்டுமோ? இச்சமயம் நாம் இவன் சொல்லுகிறபடி ஸம்மதிக்காவிடில் யாது நேரிடுமோ?

இதற்கென்செய்வோம்? (யோஜித்து) ஸரி! இப் பில்லர்களுடைய திருட்டுவழிகளை யறிவதும் க்ஷத்ரியர்களுக்குரியதன்மையே! (ப்ரகாஶமாய்) அப்படியே! தங்களிஷ்டப்படி!

ஜய:—அப்பா! மிகவும் ஸந்தோஷம்! நீ இது முதலெனக்குச் சிறந்த மித்ரனுகி விட்டனை! உன் பெயர் என்ன? நீ வஸிக்கும் நாடு யாது?

போஜ:—(ஆத்மகதமாய்) இவனுக்கென்ன விடைகூறுவது? எப்படி நமது வாஸ்தவப் பெயரை யுரைப்பது? நல்லது இவ்வாறுரைப்போம். (ப்ரகாஶமாய்) ஐயா! என்னை ஸைந்துலன் என்பார்கள்! யானிருப்பது மாளவநாடு!

ஜய:—ஆஹா! உன் பெயரைக் கேட்கும்பொழுதே ஸ்ரீ ஸிந்துல மஹாராஜருடைய ஞாபகம் வருகின்றது. உன் வீரத்தன்மைக்கு ஸரியான பெயரே! இதோ இந்தக்கட்கத்தைப் பரிசாகப் பெற்றுக்கொள்! இது முன்னெருகாலத்தில் மஹாவீரனுயிருந்த ஒருராஜனுடைய கரத்தை யலங்கரித்தது.

போஜ:—(வணங்கி) எல்லாம் தங்களநுக்ரஹம்! (வாங்கிக்கொள்ளல்)

ஜய:—நண்ப! இப்பொழுது வெளிச்ச முனக்கிங்கு நன்ருய்த் தெரிகின்றதா?

போஜ:—அவ்வளவு நன்ருகத் தெரியவில்லை.

ஜய:—(ஒருவித மையைப் போஜன் கண்ணிலிட்டு) நல்லது! இப்பொழுது பார்! என்னவாயிருக்கின்றது?

போஜ:—(ஆஶ்சர்யங் கொண்டு) ஆ ஆ! இஃதென்ன? பகல் போற் ப்ரகாஶமாயிருக்கின்றதே!

ஜய:—நண்ப! நீ என்னுடைய ப்ரதாநியாகி விட்டபடியால் உனக்கினி யாதொரு துன்பமும் நேரிடாது. நாங்கள் இன்றையதிநம் தாராநகரத்து ராஜகுமாரனுடைய அரண்மனையைக் கொள்ளையடிப்பதாகப் புறப்பட்டோம். அவ் ராஜகுமா

ரீனை அவனது சிற்றப்பன் கொன்றுவிட்டதாக நமது தூதர்கள் மூலமாய் இன்று கேள்விப்பட்டோம். இப்பொழுது அவ்விடம் செல்லுவதற்காகவே நாங்கள் இவ்விடத்தில் ஒன்று கூடினோம். நீயும் எங்களுடன் வரும் பக்ஷத்தில் வேண்டிய ரத்நங்களையும், ஆபரணங்களையுங் கொண்டுவரலாம். நாங்கள் அற்பமான பொன் வெள்ளி முதலானவற்றுக்கு ஆசைப்படுகிறவர்களல்ல. அற்பர்கள் வீட்டைக் கண்ணெடுத்தும் பாரோம்! அரசர்கள் அரண்மனையையே தேடிப் புகுவோம்! ரத்நாபரணங்களையே தொடுவோம்! இதுவரை என் ஸ்நேஹிதனுகிய அச்சிந்துல மஹாராஜரது புதல்வனுக் கஞ்சி அப்பட்டணத்திற் ப்ரவேசி த்ததில்லை. அவனது சிற்றப்பன் அவ்வாபரணங்களைக் கைப் பற்றுவதற்கு முன்னரே நாமங்குச் செல்லவேண்டும். ஆகலின் சீக்ரம்செல்லுவோம் வருகிறையா? (போஜனது நெற்றியில் ஒருபொட்டிட்டு) இப் பொட்டின் மஹிமையால் நீ யோருவர் கண்ணுக்கும் புலப்படாமலே எவ்விடத்திலும் ஸஞ்சரிக்கலாம்.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா! என்ன காலம்! நம்மைக் கொண்டே நம்மரண்மனையைக் கொள்ளையடிக்கப் பார்க் கின்றனரே! என்ன செய்வோம்? இதற்கு எவ்விதம் நாமுடன் படுவது? (சற்று ஆலோசித்து) காலம் இப்படி நேரிட்டு விட் டது. இனி நாம் பின் வாங்குவது ஸரியன்று. எதற்கும் நம்மரண்மனையைத்தானே கொள்ளை யடிக்கப்போகின்றனர் கள்! இதனுல் இதரருக்கு நாமொரு தீங்கு மிழைக்கப்போகிற தில்லை. இது நமக்குத் தெரிந்துநடந்தாற் பின்னொரு ஸமயத் தில் நமக்கே பயன்படும். இவர்களுடைய ரஹஸ்ய வ்யாபாரங் களையு மறியலாம். (ப்ரகாசமாய்) ஆஹா! அப்படியே வருகின் றேன்.

ஜய:—அப்படியாயின், சீக்ரம் போவோம் வாருங்கள்! (ஆத்மகதமாய்) இன்று நமக்கு வேண்டிய த்ரவ்யம் கிடைக்கு,

மென்பதில் ஸந்தேஹமில்லை. இதற்கத்தாட்சியாகவே கட வுள் நமக்கு இம்மஹாவீரனைக் கூட்டிவைத்தார்.

(யாவரும் நிஷ்க்ரமித்தல்).

## இரண்டாங் களம்

இடம்:—விலாஸவதியினரண்மனையில்
ஒரு மோகாகாரம்

(ஏகவேணீதரையாய்த் தலைமீது கைவைத்து வ்யஸநப்ப ட்டுக்கொண்டே தன்னந் தனியாய் வீற்றிருந்தபடி விலாஸவதி ப்ரவேசித்தல்)

**விலாஸவதி:**—(மெலிந்த குரலுடன்) ஹா! ப்ராணநாத! உம்மைக்கொன்றும் பாவியேன் ஜீவித்திருக்கின்றேனே! உல கத்தில் வநிதையருள் தன் புருஷனையே மருந்து கொடுத்துக் கொல்வாருண்டோ? ஐயோ என் அன்பர் நலம் பெறுவாரெ ன்று நம்பியன்றோ அம்மருந்தையான் அப்பாலிற் கலந்துவைத் தேன்! அதே எனக்குப் ப்ரதிகூலமாய் முடிந்ததே! இனி என்னிலும்மஹாபாதகிஇவ்வுலகில் ஜநிக்கப்போகின்றனளோ!

ராகம் - ப்யாகடை : தாளம் - நபகம்

பல்லவி

ஈசா! யான் என்செய்வேன்?-எவண் ஸஹிப்பே னிதை?
மோசம் போனே னையோ!

அநுபல்லவி

ஆசையுடன் வந்த-ஆருயிர் நேசரை
நேச மில்லாப்படு-நீலியான் கொன்றேனே! (ஈ)

சரணங்கள்

ஏக போகமாக-என் ப்ராணநாதரின்
தேஹஸுகத்தையான்-தேடி யிக் கொடுமையை
மோஹத்தாற் புரிந்தவிம்-மூடையி னுயி ரின்னும்
போக வில்லையே யந்தோ-பொல்லா வுடலைவிட்டு!—(ஏ)

மோசக்காரி இவள்-முகம் பார்க்கலாகாதென்று
ஓசைசெய்யாமலே-ஓடியிறந்தாரோ ?
காசினி யிலிவள் போற்-கடிநை வேறில்லை யென்று
கூசி மநம் நொந்து-குத்திக் கொண் டிறந்தாரோ ?— (ஏ)

ஹா ப்ராணநாத ! இப்பொழுதுதான் மலர்ந்து வருகிற செந் தாமரை யிதழ்போல் அகன்று நீண்டு கடைப்புறம் சிவந்து கரு விழிபொருந்தி கருணாரஸம் பொழிகின்ற நுமது திருக்கண் களினழகையும், மத்தகஜத்தைஹரித்துப் பர்வதாக்ரத்திலுலா வும் ஆண் ஸிம்ஹம்போல் நடக்கிற நுமது கம்பீரமான நடை யினழகையும், சந்த்ரிகைபோற்குளிர்ந்ததும் அம்ருதம்போல் மதுரமானதுமான நுமது ப்ரியவசநங்களின் ஆநந்தத்தையும், புண்யஶீலரான எந்த விண்ணுலகத்து மாதர்கள் பார்த்தும் கேட்டு மாநந்திக்கப் போகின்றனரோ ? ஹா ! ப்ராணேஶ்வர! என்னுடைய தௌர்ப்பாக்ய வஶத்தினால், யானே உம்மைக் கொன்று, காற்றினாலடிப்பட்டுக்கடலிலாழ்கிற நாவாய்போல் இதோ துக்கஸாகரத்தில் மூழ்கிநஶிக்கின்றேன்! ஹா ! ப்ராண நாயகா ! மூடையான யான் செய்த பிழைகளாலேயே லோ கோத்தமமான ஸௌந்தர்யமுள்ள நும்மைக் காணமல், அலை களால் மோதப்பட்டுக் கரைந்து க்ஷீணிக்கிற நதீதீரம்போல் வ்யஸநத்திற் கறைந்தழுகின்றேன் !

(ப்ரவேஶித்து)

**தரங்கவதி** :—(ஆத்மகதமாய்) இன்றாயினும்நம்மைக்காண விடைதருவளோ ? இத்தனைநாளாய் என்னுடன் ப்ரியமாய்ப் சிக்கொண்டிருந்தவள் என்னை இப்படிப் பார்க்கக்கூட

மாட்டேனென்பதற்குக் காரணம் யாது? (செவிகொடுத்து) ஏதோ மெலிந்தகுரல் ஒன்று கேட்கின்றது! (நோக்கி) அந்தோ! நம் விலாஸவதீதேவியாரின் குரலே! தைவாதீநம்! கதவுதிறந்திருக்கின்றது! நல்லது! ஒருபுறமாய் மறைந்து நின்று இவள் சொல்லிக் கொள்வதைக்கவனித்துக் கேட்போம். (அப்படியே மறைந்து நிற்றல்)

விலா:—ஹா! கஷ்டம்! கஷ்டம்!! அநந்த கல்யாணகுணங்களால் அலங்க்ருதரான அந்த ராஜீவாக்ஷரைப் பறிகொடுத்து இனி எப்படி யான் ஜீவிப்பேன்! ஆலாஹலவிஷத்தை யுண்ட வொருவன் ஜீவதாரணஞ்செய்வதரிதுபோல் இப்பர்த்ரு ஸோகமாகிற விஷத்தையுட்கொண்ட யான் இனி ஜீவிப்பதும் துர்லபமே! யான் மஹா கொடிய பாதகஞ் செய்தவள்! யானிப்படியே நஸிக்கவேண்டியவள் தான்! ஐயோ! என் செய்வேன்? துக்கத்தால் தபிக்கின்றேன்! ஆஸையாலழிகின்றேன்! பார்த்ரு ஸோகத்தால் வாடுகின்றேன்! ஹே ஈஸா! இப்பாவி ஈடேறுவதற்கு ஒருவழியுமில்லையோ?

*"கல்லேனும், ஐய! ஒரு காலத்தி லுருகும், என்
கன்னெஞ்ச முருகவிலையே!
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
கற்பிக்க வொருகடவுளோ?
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ?
வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை
வாழ்விப்ப துன்பரங் காண்!
பொல்லாத சேயெனில் தாய்தள்ள னீதமோ?
புகலிடம் பிறிதுமுண்டோ?

* தாயுமானவர்

பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட்கயனுமாய்ப்
புன்மையே ருவனக்கோ !
சொல்லான் முழக்கிலோ ஸாகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்கவருளாய்
ஶாந்தநிர்குணமான பரதைவமே பரஞ்
ஜ்யோதியே ஸாகவாரியே !" (கஉ)

(களைத்து அறையில் ஒருபுறத்தில் மூர்ச்சித்து வீழ்தல்)

**தரங்கவதி** :—(ஆத்மகதமாய்) ஆ ஆ ! என்ன மோஹம் ! என்ன மோஹம் ! அந்தோ ! இம்மாது ஶிரோமணி ஒருகபடமு மறியாது அப்பாதகன் முஞ்ஜராஜனது வார்த்தைகளை நம்பி ராஜகுமாரர் இறந்துவிட்டதாக நினைத்து துக்கஸாகரத்தில் மூழ்கி, பசிதாஹத்தைக்கூட கவனியாமல், இம்மூன்று நாளாய் இவ்வறைக்குள்ளேயே தன்னைத்தனியாய் அடக்கஞ் செய்துகொண்டு, ஒருவர் முகத்தையும் பாரேனென்று பிடிவாதங்கொண்டு கரைந்துருகுகின்றாளே !

**ராகம்-ப்யாக்: தாளம்-ஏகதாளம்**

**பல்லவி**

மாதுஶிரோமணி - மலிகின்றாளே !
நாதனை நினைந்து - நலிகின்றாளே !

**அநுபல்லவி**

வானதினீங்கிய - வனிதைபோலிவள்
தீனையாயிங்கே - தியங்குகின்றாளே !— (மா)

**சரணங்கள்**

ராஹுபீடித-ராகா சந்த்ரிகைபோல்
மோஹங்கொண்டிவள்-மூர்ச்சித்தாளே ?— (மா)
பனியில்வதங்கும்-பங்கஜப்பொய்கைபோல்
தனியாயிங்கிவள் - தவிக்கின்றாளே ?— (மா)

(நோக்கி) ஐயோ! இஃதென்ன ஸங்கடம்? இதுவரைக்கும் பேசிக்கொண்டிருந்தவள் ஏனேகீழே வீழ்ந்திருக்கின்றனள்? (செவிகொடுத்து) அந்தோ மூச்சுக்குரல்கூடக் கேட்கவில்லையே! இவள் மூர்ச்சித்தே விழுந்திருக்கிருளென்பதில் ஸந்தேஹமில்லை. நல்லது! இதனையே வ்யாஜமாக வைத்துக்கொண்டு இவளருகிற் செல்வோம். (அப்படியே சென்று ப்ரகாசமாய்) அம்மணீ! எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்! ஏனிப்படிக் காரணமின்றி வ்யஸநப்படுகின்றீர்கள்?

விலா:—(கண்விழித்து நோக்கி) ஹா! தரங்கவதியா? நீ ஏன் இங்கு வந்தனை? என்னைத் தனியாய் விட்டுவிட்டுச்செல்!

தரங்க:—அம்மணீ! தங்கள் மநத்திலிருக்கும் வ்யஸநத்தை என்னுடன் உரைக்கலாகாதா? தங்கள் மாமியார் ஸஸிப்ரபா தேவியார் தங்களைக் காணவேண்டுமென்று பன்முறை சொல்லியனுப்பியும் தாங்கள் பாரேனென்று சொல்லுவதழகோ?

விலா:—(எழுந்துட்கார்ந்து, தைந்யத்துடன்) ஸகீ தரங்கவதீ! நீ யொன்றுமறியாய்! யான் புரிந்த செயலை நினைக்க நினைக்க என் மநம் புண்ணுய்ப் பற்றி எரிகின்றது!

ராகம் - ப்யாக் : தாளம் - ஏகதாளம்

பல்லவி

ஓ ஸகி! யான் யாது செய்வேன்?
மோஸம் போயினேன்!

அநுபல்லவி

ஆசையினு லறிவிழந்தே
அழியலாயினேன்!— (ஓஸகி)

சரணங்கள்

காதலனைப்பறிகொடுத்துங்-கல்லுப்போலயான்
பூதலத்திற் பாரமாகிப்-புலம்பலாயினேன்!— (ஓஸகி)

இன்னவிதமென்கொழுநர் - இறந்தனரென்று
அன்னைகேட்கிலென்படுவாள்-என்னசொல்லாளோ!- (௯)

ஐயோ ! புத்ரனினும் பத்துமடங்கு அதிகமாயென்னைப் ப்ரேமையுடன் பார்த்துவந்த என் மாமியார் இச்செய்தியை யறிந்தால் என்ன நினைப்பாள்? அந்தோ! யான்யாவருக்குந் த்ரோஹியானேனே ! இந்தத்துக்கத்திற்கு இனி விமோசநமேது ?

தரங்க:—என்ன ! என்ன ! தாங்கள் சொல்வதெல்லாம் விந்தையாயிருக்கின்றது ! தேவியார் இனித் தங்களைக்காணுமல் ஒருக்ஷணமாயினு முயிர்த்திரார்கள். வாருங்கள், தேவியார் அரண்மனைக்குச் செல்வோம்.

விலா:—ஸகி ! நீ ஏன் என்னை வருத்துகின்றாய் ? நான் இவ்வறையிலேயே உபவாஸமிருந்து என்னுயிரைத்துறக்க நிச்சயங்கொண்டேன் ! நீ பேசாமற் செல்லுவாய். (தரங்கவதி முஞ்ஜன் வருவதைக்கண்டு கொஞ்சதூரஞ்சென்று மறைந்து நிற்றல்)

(ப்ரவேசித்து)

முஞ்ஜன்:—(காமாதுரனாய் விலாஸவதியைக்கண்டு ஆத்மகதமாய்) ஆ ஆ ! பர்த்ரு சோகத்தினால், வெள்ளம் வந்து வற்றிப்போன நதிபோலும், நீரினின்றும் பிடுங்கி யெறியப்பட்ட தாமரைக் கொடிபோலும், களிற்றினின்றும் பிரிக்கப்பட்ட பிடிபோலும், இளைத்துக் கறுத்து வாடி மலிந்திருந்த போதிலும், இவளுடைய அழகை யான் என் சொல்வேன் !

* "அன்னம் பழித்தநடை யாலம் பழித்தவிழி
யமுதம் பழித்த மொழிகள்
பொன்னம் பெருத்தமுலை கன்னங் கறுத்தகுழல்
சின்னஞ் சிறுத்தவிடையும்

---

* விவேகசிந்தாமணி

என்னெஞ் சுருக்குமிவள் தன்னெஞ்சு கற்றகலை
யென்னென் றுரைப்பதினிநான்?
சின்னஞ் சிறுக்கியிவள் வில்லங்க மிட்டபடி
தெய்வங்க ளுக்கபயமே!"

ஆஹா! இவளுடைய அபூர்வமான ஸௌந்தர்யத்தைக்கண்டு இவளை ஸ்ருஷ்டித்த ப்ரஹ்மதேவனே மோஹிப்பர்! அப்படியிருக்க வேறெந்தப் புருஷன் தான் யௌவநபரிபக்வத்தால் அதிமனோஹரமாய் விளங்கும் இவளுடைய அழகுக்குட்பட்டு மயங்கான்?

*"வண்டுமொய்த் தனைய கூந்தல்,
மதநப்பண் டார வல்லி,
கெண்டையோ டொத்த கண்ணாள்,
கிளிமொழி வாயி னூறல்,
கண்டுசர்க் கரையோ தேனோ
கனியொடு கலந்த பாலோ,
அண்டருங் கண்டா லிந்த
வணங்கினை வணங்கு வாரே!"

ஆகலின், இவளுடன் ஒரு நாளாயினுங்கூடி வாழாததேஹம் எதற்கு? யான் இவளுடைய ஸௌந்தரமான வடிவைக்கண்டு பால்யம் முதல் இவளை யெப்படியாயினும் மணம்புரியவேண்டுமென்று நினைத்திருந்ததனால், எனது கார்யத்தை ஸாதிப்பதற்காகவே இவளைப் போஜனுக்கு மணஞ்செய்வித்தேன்! இப்பொழுது நமது சூழ்ச்சியாற் போஜனும் ஸுலபமாகவே தொலைந்துவிட்டனன். . இவ்ராஜ்யமும் அகண்டகமாய் நம் கைவசமாய்விட்டது. இவளையு மெப்படியாயினும் மணஞ்செய்துகொ

* விவேகசிந்தாமணி

ண்டால், நமது இஷ்டத்தைப்பரிபூர்த்திசெய்வதுமன்றி மஹா ராஷ்ட்ரமாகிய பூபாள நாட்டிற்கும் நாம் அரசனாய்விடலாம். (சிறிதுதூரம் பரிச்ரமித்து) ஆயினும் இவளுடையமநத்தை எப்படித் திருப்புவது! எதற்கும் நம்மாலான முயற்சிகளைச் செய்துபார்ப்போம். இவ் ராஜ்யங் கிடைத்ததுபோலவே, இவளுங்கிடைக்கட்டுமே! நல்லது இதுவே தருணம்! இந்த ஸமாசாரம் இன்னும் போஜனது தாய்க்குத் தெரிந்திராதென்றே நம்புகிறேன்! தெரிந்திருப்பின் அப்பொழுதே, இவ் வந்யாயத்தை நம்மிடத்தில் முறையிட்டிருப்பள்! நல்லவேளையாய் நமதுஸஹோதரி சாருமதியும் பூபாளநாட்டிற்குச் சென்றனள்! அவளுக்கும் போஜன் இறந்துபோன ஸமாசாரம் தெரிவதற்கு முன்னரே இவளை நம்மிடத்தில் மோஹிக்கச்செய்து, எப்படியாயினும் மணந்துகொள்ளவேண்டும். பிறகு இவ்விரண்டு செய்கைகளைக் கேட்டாலே இவ்விருவர்களும் மநம் வெடித்து இறப்பார்கள்! இதுதான் அப் ப்ரதிபந்தங்கள் இரண்டனையும் ஒரே அடியாய் தொலைப்பதற்கு ஸரியான உபாயம். (விலாஸவதியினருகிற்சென்று ப்ரகாசமாய்) என் கண்மணீ! எழுந்திரு! எழுந்திரு! ஆ! நீ இந்த ஸ்திதியிலிருப்பதற்காகவோ நான் பட்ட கஷ்டமெல்லாம்?

விலா:—ஆ! தைவமே! (தைந்யங்கொள்ளல்).

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) அந்தோ! இவள் இவ்வாறு துயரப்படுவதைக்கண்டு என் மநமுங் கலங்குகின்றதே! இவளெப்படி ஆறுதலடைவள்? ஆயினும் இவளுடைய அழகையான் என் சொல்வேன்?

ராகம் - கல்யாணி : தாளம் - ரூபகம்

பல்லவி

பாக்யமே பாக்யம் - இம்மங்கையைப்
பார்ப்பதுவே ஸௌபாக்யம்!

அநுபல்லவி

பாக்யமே பாக்யம் - பாரினுள்ளிவள் ப்லாக்யம்
பால்வடியுமிவள் - பாலிகையே போக்யம் !— (பா)

சரணம்

இஹ பர மிரண்டிற்கும் - எனக் கிவளே யோக்யம்
என் றுமென்மநத்தினின் - விலகா திவள் வாக்யம் !
ஜகந்தனி லிவளுடன் - ஸுகிப்பதுவே ப்லாக்யம்
தாரித்ர்யதசையிலு-மிவளே பெரும்பாக்யம் !— (பா)

எப்படியிருப்பினு மிவளை மணந்து கொள்வதே ஸரி! (ப்ரகாஶமாய்) ஆ! விலாஸவதி! நீ இப்படித் துயரப்படுவதும் ஸரியோ? உன்னைக்கண்டு நின்பெரியோர்கள் படும் துயரத்தையாயினும் நீ யோஜிக்கவேண்டாமா ?

விலா:—ஆம் ! என்பெரியோர்கள் என்னைக்கண்டு துக்கிக்காமல் என்செய்வார்கள் ? என் அருமை மாமியார் இம் மூன்று நாளாய்க் கொடிய துயரத்தினல் வருந்தி என் முகத்தைக் கண்டாவது தமது ஶோகத்தைக் கொஞ்சம் போக்கிக் கொள்வதாய்ச் சொல்லியனுப்புகிருர்கள் ! ஆயினும் யான் இவ்விதக் கொடுஞ்செயலைப் புரிந்துவிட்டு என் மாமிமார்களை எப்படிக்காண்பது ? மாமா ! யானின்னும் இக்கொடிய உயிரை வைத்திருக்கின்றேனே ! என்னையும் அவருடன் அக்நியில் ஸம்ஸ்காரஞ் செய்து விட்டிருக்கலாகாதா ?

முஞ்ஜ:—என் கண்மணீ ! இது நீ செய்த பிழையன்று! நீ செய்ததெல்லாம் அவனுடைய நன்மைக்காகவே தான் ! விதியின் செயல் அவன் அப்படி இறக்கவேண்டியிருந்தது ! நீ இதையறிந்தும் இப்படி அந்தபாநமில்லாமல் வருந்துவது தகுதியன்று !

விலா:—மாமா ! பதியைக் கொன்றுவிட்டும் யான் இன்னும் ஜீவித்திருக்கவேண்டுமா ?

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) அந்தோ! இவளது துக்கத்திற்குக் கரைகரையில்லை போற்றோற்றுகின்றதே ! இவளுடைய

மகத்தை யான் எப்படித்திருப்புவது? எனதெண்ணம் ஸுலபமாய் நிறைவேறுமா? (விலாஸவதியை நோக்கி) ஆஆ! இவளுடைய ஸர்வஜ்ஞசர்மோஹநமான வடிவினழகைக்கண்டும் யான் சும்மா விருப்பேனோ? எப்படியாயினும் இவளை மணந்துகொள்வதே ஸரி! (ப்ரகாஶமாய்) ஹா! விலாஸவதி! நீ இவ்வாறு வ்யஸநப்படுவதனுலெனக்கொன்றுந் தோன்றவில்லையே! இதற்காகவோ யான் உன்னை இவ்வளவு அருமையாய் வளர்த்தேன்!

ஐயையோ வென்ன செய்வேன்?
அகத்திலும் நினைத்தே மல்லேம்
வெய்யவன் குலத்து தித்தோன்
வீழ்வனென் றெக்கா லத்தும்!
தையலே யுனக்கு வேண்டாம்
தரணிபன் ஸுதனை நீயும்
பையவே மறந்து வேறு
பாவனைக் கொள்ளு வாயே!

விலா:—என்னை அருமையாய் வளர்த்த மாமா! தங்களுக்கேனிந்த வீண்சபலம்! இனி வ்யர்த்தமன்றோ என்னுடைய வாழ்க்கையெல்லாம்! அப்படியிருக்க, இப்பாவியேனைப் பற்றித் தங்களுக்கேன் இவ்வீண்கவலை! இனி மடிப்பதொன்றே எனக்கு ஸுகந் தரும்!

முஞ்ஜ:—பேதாய்! இதென்ன இவ்வாறெல்லாம் சிந்தித்துக்கொண்டிருக்கின்றனை? புருஷரை இழந்த ஸ்த்ரீகளெல்லாம் பதியுடன் கூடவே இறந்துவிடுவார்களா? வைதவ்யத்தையடைந்தும் எத்தனை வனிதைகள் ஸுகமாய் வாழ்ந்திருக்கவில்லை! போனதைப் பற்றிச்சிந்திப்பதிற் பயனென்னை? இனி நடக்கவேண்டியதைப்பற்றி யோஜிப்பாய்!

"ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும்
மாண்டார் வருவாரோ மாநிலத்தில்?"

நான் உயிருடனிருக்கும்வரைக்கும் உனக்கு யாதொரு குறை யும் வாராது! வீணாய் இவ்வாறு தேஹத்தை க்லேசப்படுத்திக் கொண்டு வருந்துவதிற் பயனென்னே ? உத்தமநாயகர்களுடன் ஸுகித்திருந்த ஸத்ரீகள்கூட இப்படி வ்யஸநப்படார்களே. ஆ ! அவன் இந்நேரம் உயிருடனிருப்பானாயின், நீ அவ்வே சிக்கு அடிமையாகவல்லவோ போயிருக்கவேண்டும். உன்னு டன் கூடிவாழேனென்று சபதஞ்செய்த அப்பாவி இருந்தெ ன்ன ? இறந்தென்ன ?

விலா :—(காதிற் கைவைத்து) ஹா! சிவ ! சிவ ! ! இக் கொடிய பேச்சுகளையெல்லாம் கேட்கவோ யான் இன்னும் உயிர் தரித்திருக்கின்றேன் ? (வேறொரு பக்கம் திரும்பிக்கொள்ளல்)

முஞ்ஜ :—விலாஸவதி! நீ இப்பொழுது ஸகல போகங் களையுமநுபவிக்கத்தக்க தருணியாயிருக்கின்றனே ! இவ்வேஷ முனக்குத் தகுதியன்று ! என்னால் ரக்ஷிக்கப்பட்டுவருகிற நீ இம்மாதிரி வருந்துவது தகுதியன்று !

விலா :—(ஆத்மகதமாய்) ஹா என்ன கஷ்டம் ! என்ன கஷ்டம்! யாவரையுந் துக்கிக்கச்செய்வதற்காகவே இப்பாவியே னவி வஜ்ரம்போற் கடிநமாய் ஸ்ருஷ்டிக்கப்பட்டதோ? ஐயோ! என் மநத்திலிருப்பதை யறியாமல் எனக்கு நன்மையைச் செய் யவேண்டு மென்றல்லவோ எனது மாமன் இவ்வாறெல்லாம் கூறுகின்றனர் ! எங்கும் பரவி எரியும் நெருப்பை ஏராளமாய் நெய்யைக் கொட்டி யணைப்பதுபோலல்லவோ யிருக்கின்றது எனது நெஞ்சத்திலிருக்குந் துக்கத்தை தணிப்பதற்காக இவர் செய்யுமுபாயம் ! இவர் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் எரியும் புண்ணில் ஈட்டியைச் சொருகுவதுபோலிருக்கின் றதே ! (ப்ரகாசமாய்) ஹா ! மாமா ! இனி இத்தாருண்யத்தி னாற் ப்ரயோஜநம் யாது ? அவருடன் எனது தேஹஸௌபாக் யமும் பாழாய்ப்போய் விட்டதன்றோ ?

முஞ்ஜ :—ஹே ஸுந்தரீ ! ஏனிப்படி வருந்துகின்றாய் ? கடைத்தெடுத்த ஸ்வர்ண பிம்பம்போல் திவ்யகாந்தியோடு

விளங்குகிற உன்னுடைய தநுவினிணையில்லா வெழிலையும் பரிபூர்ணமான யௌவநபாக்யத்தையும் வீணன பிடிவாதத்தால் நீ யநுபவியாமற் கெடுத்துவிடாதே! ஸகல ஸாம்ராஜ்ய போகத்தையுந் தரத்தக்கவனாய் யானிருக்கும்பொழுது, நீ இந்நிலையிலிருக்கத் தகுமோ? லாவண்யஸமூஹமே உருவெடுத்து வந்தாற்போல் விளங்குமோர்யுவதி, திவ்யபரிமளத்தைலந் தடவி, மஞ்சள் நீராட்டி, அகிற்புகையூட்டி, ஆபரணங்கள் பூட்டி, அழகாகப் பின்னலிட்டுப் பூச்சூட்டி, கூந்தலை யலங்கரிக்காமல், உச்சிவகிடுமின்றி ஏரேஜடையாய்த் தன்னழகிய கேசபாசத்தைப் பாழடையச் செய்வதழகோ? நவரத்நமிழைத்த ராஜஸிம்ஹாஸநத்தி லுட்கார்ந்து, புஷ்பாலங்கார சோபிதமான திவ்யமஞ்சத்திற்படுத்து ஸுகித்திராமல், இவ்விதம் தாபஸிபோல் தரையிற் புரண்டழுவது நேர்த்தியோ? சிறந்த பொன்னுடையைத் தரியாமல் புழுதியாலுங் கண்ணீராலும் மலிநமடைந்த இவ்வழுக்கு வஸ்த்ரத்தை யுடுப்பது முறையோ? திவ்ய ரஸங்களமைந்த அந்நங்களும் பாநங்களும் யதேஷ்டமாகவிருக்கத் தீர்த்தாஹாரமின்றி இவ்வறைக்குள் உபவாஸமிருந்துவதங்குவது ஸரியோ?—

விலா:—அந்தோ! பதியையிழந்த பாவையர்கட்கு இப்பூஷணங்களாலு மாடைகளாலு முபசாரங்களாலும் என்ன ப்ரயோஜநம்? தந்தியில்லாத வீணையும், சக்ரமில்லாத ரதமும் போலுமன்றோ பதியில்லாத ஸ்த்ரீகளின் வாழ்க்கை?

தரங்கவதி:—(ஆத்மகதமாய்) ஐயோ! எல்லாம் அதி கருணமாயிருக்கின்றதே!

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா! இவளுடைய மநது மஹத்தான துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றது! இவளை நன்மொழிகளினாலேயே வசப்படுத்தவேண்டும்! (ப்ரகாசமாய்) ஹே திவ்யஸுந்தரி! உன் ஸுந்தரவடிவைக்கண்டு யார்தாம் மோஹங்கொள்ளார்?

கோமகளே ! நினதுதிரு வைப வத்தைக்
கொஞ்சமும் நீ யறிந்திட்டா யல்லை போலும் !
காமகளு நின்னுவின் சிறப்பைக் காணில்
நான்முகனின் நல்வாயி லொளிந்து கொள்வள் !
பூமகளு நின்புருவ வனப்பை நோக்கில்
பூவிடையிற் றலைவணங்கி மறைந்து நிற்பள் !
பாமகளு நின்பார்வை யழகைப் பார்க்கில்
பர்வதத்தின் குகைறயிடையே பதுங்கிச்செல்வள்!

அடிபேதாய்! இந்த்ராதி தேவர்களும் உன்னைக்காணில் வ்யா மோஹங்கொண்டு தத்தம் பத்நிகளைத் தள்ளிவிட்டு உன்னைப் பத்நியாயடைய நித்யமும் ஶிரவில் வைத்துப் பூஜிப்பார்களே! அம்ருத கலைகளா லகில லோகங்களையும் ஆநந்தப்பிக்கின்ற பூர்ணேந்துவை யொத்த வதநமுடைய ஹே ஸுமுகி ! உனது அங்கஸௌந்தர்யம் முற்றும் பார்க்கப் பதினுயிரங்கண்களிருப் பினும் போதா !

விலா:—(ஶோகாக்ராந்தையாய்) ஹா ! ப்ராணநாதா ! (மூர்ச்சித்து வீழ்தல்)

தூரங்க:—(மறைவாய்) ஆஹா ! என்னவஞ்சனை ! என்ன வஞ்சனை ! ராஜகுமாரரைக் கொல்லப்பார்த்தது மன்றி பாதி வ்ரத்யமே வடிவெடுத்து வந்தாற்போலிருக்கும் இப்பேதையை யுங் கெடுத்துவிட எண்ணங்கொண்டனனே இப்பாவி! பாவம்! இவள் என செய்வள்? இவ்வஞ்சகனது வலையிலகப்பட்டுக் கொண்டு இருளாற் ப்ரதிபாதிக்கப்படுகிற ப்ரகாஶம்போல் இம்மாது ஶிரோமணி கருத்து நொந்து களைத்துருகுகின்றாள்! நாம் உடனே தேவியாருக்கிதைத் தெரிவிக்கவேண்டும் ! இனி ஒரு க்ஷணமேனுந் தாமதிக்கலாகாது ! (நிஷ்க்ரமித்தல்)

முஞ்ஜ:—(விலாஸவதியைத் தட்டி எழுப்பி) ஆ ! என் கண்மணி ! எழுந்திரு ! எழுந்திரு !

* "ஈண்டு நாளு மிளமையு மீண்டில
மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய
வேண்டு நாள்வெறி தேவிளிந் தாலிணி
யாண்டு வாழ விடருழன் றாழ்தியே!"

ஹே ஸுந்தரீ ! ஸர்வலோக மோஹநமான னது ஶரீரத்தை இப்பொழுது யௌவந ஸம்பத்து அடுத்திருக்கின்றது! அதுநீர்க்குமிழிபோற் ஸ்வல்பகாலவாழ்வுள்ளது! அஃது உன்னை அதிக்ரமித்துப் போய்விடில், ப்ரவாஹத்தால் தள்ளுண்டு போன ஜலம்போலும், வெயிலில்வதங்கிப்போன ஜாஜிமலர் போலும் திரும்பிவாராது! ஆகலின் ஸகல ஸுகங்களையு மநுபவிப்பதற்கு யோக்யமான இவ்விளம்பருவத்தை வீணாக்கிவிடாதே ! திவ்யாபரணங்களைப்பூணு! திவ்யோபசாரங்களைப்பேணு! எனது அந்தப்புர ஸ்த்ரீகளுக்கெல்லாம் மேலான பதவியையடைந்து எனக்கிஷ்டமஹிஷியாய், இத்தாரா ராஜ்யத்திற்குப் பட்ட மஹிஷியாய் வாழ்ந்திரு !

விலா:—(மூர்ச்சைதெளிந்து கண்விழித்தெழுந்து) ஹா! இதென்ன ! கனவோ யான் காண்பதும் கேட்பதும் ? என்மாமாவும் இப்படிச்சொல்லுவரோ ? அல்லது நான் புரிந்த துஷ்க்ருத்யமே இவ்வடிவங்கொண்டுவந்து என்னை வருத்துகின்றதோ ? ஐயோ ! என் செய்வேன் ? என்ன கொடிய ஜந்மங்கொண்டேன் ! சீ ! சுடவேண்டு மிஜ்ஜந்மத்தை ! (முகத்தைத் திருப்பிக்கொள்ளல்)

முஞ்ஜ:—ஹே பீரு ! எனிப்படிச்சிந்தித்து தீயிலிட்ட வெண்ணெய் போல் ஆகின்றாய் ? ரூபத்திலும் பாக்யத்திலும் உனக்கு அநுரூபனான என்னைப் பர்த்தாவாக வடைந்து ஸகலபோகங்களையு மநுபவிப்பதைப்பார்.

விலா:—(ஸம்ப்ரமத்துடன்) என்ன சொன்னீர்கள் ? (கோபத்துடன் எழுந்திருத்தல்)

* கம்பராமாயணம்

முஞ்ஜ:—ஹேகோமளாங்கி ! இப்படியேன் வீணாய்க்கஷ்டப்படவேண்டும் ? இறந்துபோன கணவன் திரும்பியும் வருவனோ ? வேண்டாம் ! இவ்வீணான சிந்தனைகளெல்லாம் விட்டுவிட்டு, உயர்ந்த ஆபரணங்களாலும் ஆடைகளாலும் நின்னழகிய தேஹத்தை யலங்கரித்துக்கொண்டு, நாட்யஸங்கீதகேளிகள் நிறைந்த ராஜஸபையிற் சத்ரசாம்ராத்யுபசாரங்களுடன் ஸிம்ஹாஸநத்தின்மீது ராஜராஜேஶ்வரியாய் வீற்றிருந்து என்னைக் களிக்கச்செய்வாய் !

விலா:—(கோபத்துடன்) போதும் ! போதும் ! நிறுத்து மிந்த அநுசித பாஷணையை ! யாரிடத்தில் இவ்வசநங்களை மொழிவது ?

முஞ்ஜ:—ஏவிலாஸவதி ! நீ இம்மாதிரி கோபித்துக்கொள்வது மழகாயிருக்கின்றது ! இப்பொழுது தான் உன்னுடைய புருவக்கொடியானது கோபத்தினாற் குடிலமாகி மந்மதனுடைய வெற்றிக்கொடியின் ஶோபையை யதிக்ரமிக்கின்றது திடீரென்று துடிப்பதனால் நினது அதரபிம்பமும் மந்தமாருதத்தினாலசைக்கப்பட்டு மலர்ந்துவரும் பந்தூக புஷ்பம்போல் அதிக காந்தியோடு விளங்குகின்றது!

விலா:—(பெருமூச்செறிந்து அதிக கோபத்துடன்) அடே பாபீ! ஏனிப்படி வீணாய்க்குழறுகின்றாய் ? உன்னுடைய ராஜ்யத்தையும் ஸம்பத்தையும் இச்சித்து உனக்குடன்படும் ஸாமாந்ய ஸ்த்ரீ என்று என்னையுமெண்ணினையோ ? உன்னுடைய முக்க்யமஹிஷியாயிருந்து உன்னுடைய ஐஶ்வர்யத்தைப் புஜிப்பது எனக்கொரு த்ருணமடா ! மூடா ! இந்த விநயத்தாலும் ப்ரியவசநங்களாலும் என்பாதிவ்ரத்யத்தை உன்னாலசைக்கலாகாது ! அடே தூர்த்தா ! நான் ராஜஸ்த்ரீ என்பதையும் உனது மருமகள் என்பதையும் சற்றும் யோஜியாமல் என்ன அடாதவார்த்தைகளை யெல்லாம் தொடுத்தனை ? வேறொருவராயிருப்பின் உன்னுவை இக்கணமே கண்டித்திருப்பேன்

என்னையாரென்று நினைத்தனை? நான் அந்தப் புண்யபுருஷருக்கே யுரியபாதிவ்ரத்யவ்ரதம் பூண்ட தர்மபத்நீ! பரபுருஷனுன் உன்னையடைந்து இன்பமளிக்கத்தக்க ஸ்த்ரீயல்லேன். சீ! என்முன் நில்லாமல் விரைந்துசெல்! உன்னைக்காணவென்கண் கூசுகின்றது. (எழுந்து வேறொரு பக்கஞ்செல்லல்)

முஞ்ஜ:—அடி! சண்டி! நீ இப்பொழுதுரைக்கும் கர்ணகடோரமான ப்ரதிமொழிக்கு உன்னை இந்நேரம் சித்ரவதை செய்திருப்பேன். என்னுடைய அந்தஸ்தையும் கௌரவத்தையும் சிறிதேனும் யோஜியாமல் வரம்பின்றி மனம்போனவாறெல்லாம் க்ரூர வசனங்கள் மொழிந்தனை! கேவலம் ஸ்த்ரீ ஜாதியான நீ, மஹாராஜாவான வெனக்குச் செய்யும் இவ்வவமானத்தால் மிகுந்த கோபத்தை நான் அடைந்திருக்கின்றேன். நீ என் மனத்திற்கிசையு நிமித்தம் ஸர்வஸ்வத்தையு முனக்கர்ப்பணஞ் செய்வதாக வாய் மொழிதந்தும், என்னையொருபொருட்டாய் எண்ணுமல் திக்காரஞ் செய்கின்ருய்! ஆயினும் உன்மீதெனக்கிருக்கும் காமமானது எனக்குண்டாகும் கோபத்தை யடக்குகின்றது. ஹே முக்தே! ஸகலமநுஷ்யரும் காமத்திற் கீடுபடுகின்றனர்; காமத்திலேயே பரமஸுகத்தை யநுபவிக்கின்றனர். மனிதர்கள் எவ்விடத்திற் காமத்தாற் கட்டுப்படுகின்றனரோ, அவ்விடத்தில் தோஷங்களை விசாரிக்கின்றனர் அல்லர்; அபராதங்களையும் பார்க்கின்றனர் அல்லர்; இது தான் உன் விஷயத்தில் எனக்குண்டாயிருக்கும் க்ஷமைக்குக் காரணம். ராஜாதிராஜன், மஹாப் ப்ரதாபன் யான் உன்னைக் காமுற்றனன்! நீயோ என்னை அடையவிரும்பாது அறிவிழந்து போஜனையே நினைந்து வ்யாமோஹங் கொண்டிருக்கின்ருய்! அவ்வற்பப்பயல் கொலை யுண்டிறந்ததற்குக் காரணமுனக்குத் தெரியுமா? நீ பாற்செம்பில் மருந்து கலந்து வைத்தது மாத்ர மன்று. எனக்கு விரோதமாய் எதிர்த்தெழுந்ததே அவன் இறந்ததற்கு முதற்காரணமென்றறிவாய்! உனது ரதியை யிச்சிக்கின்ற வென்

னுடைய பலபௌருஷவிக்ரமங்களையும் பெருமையுமறியாத வினது கெட்டகாலமாதலால் என்னைத் தூஷித்தனை! என் முன் உன்னால் என்ன செய்யக்கூடுமென்று நினைக்கின்றாய்? உன்னைப்பலாத்காரமாய்த் தழுவுவது எனக்கொருவிஷயமா? மதனலீலையை யறிந்தவனானதனால் உன்னைப் ப்ரார்த்திக்கலாயினேன். காமுற்ற விடங்களிற் சீற்றங்கொள்ளாமை காமிகளின் குணமாதலின், நீசெய்த இத்தனை யபராதங்களையும் ப்ரணயலீலை யென்றே பொறுத்து உன்னை க்ஷமிக்கின்றேன்! ஶ்ருங்கார விலாஸ யோக்யையான மனோரமே! நீ இப்பொழுதாயினும் தீர்க்காலோசனை செய்து என் மடியிலேறிஸகல ஸுகங்களையுமநுபவிப்பாய்! அஹோராத்ரமென்னோடு கூடிக் க்ரீடிப்பாய்! ஸமஸ்த ராஜ்யத்தையும் உன் வஶப்படுத்திவிடுகின்றேன்! அவற்றை உன்மனப்படியநுபவி. எனக்கு ஶ்ருங்கார ரஸத்தை மாத்ரங் குறைவரக்கொடு. உன்னுடைய மன்மத லீலையாலெனக்குத் த்ருப்தியளி. இதுதானென்னுடைய ப்ரார்த்தனை; மற்ற விஷயங்களிலுன்னுடைய ஆஜ்ஞையே செல்லட்டும்!

(பரபரப்புடன் ஶஶிப்ரபா தேவியாரும், புத்திஸாகாரும், தரங்கவதியை முன்னிட்டுக்கொண்டு ப்ரவேஶித்தல்).

புத்திஸாகரர்:—யான் அப்பொழுதே சொல்லவில்லையா! அப்பாதகன் எதற்கு மஞ்சானே!

ஶஶிப்ரபை:—ஐயா! யானென்ன மோஸம்போனேன்! அவன் இப்படிப்பட்டவனென்று இதுவரையிலுந் தெரியாமற் போயிற்றே!

புத்தி:—ஏதோ ஸம்பாஷணை கேட்கின்றது! சற்றுமறைந்து நின்று கேட்போம். அதனாலேயே தங்களுடைய ஸம்ஶயம் நிவர்த்தியாகலாம்.

தரங்கவதி:—ஆம்! அம்மணீ! விலாஸவதீதேவியாரின் குரல் கேட்கின்றது. நாமிப்படி நின்று கேட்போம் வாருங்கள்! (அப்படியே மூவரும் மறைந்து நின்று கேட்டல்)

விலா:-(பெருமூச்செறிந்து கத்கதஸ்வரத்துடன்) அடே த்ரோஹீ! செய்யாத சதிகள் செய்து என்பதியைக் கொன்றதுமல்லாமல் என்னையும் பெண்டாளவாடா வினைத்தனை? அந்தோ! யான் என்ன மோஹம்போனேன்! என்னமோஹம் போனேன்!! அடே க்ஷத்ரியப்பதரே! கௌரவர்கள் அழிந்துபோவதற்கு ஶகுனிவாய்த்ததுபோல், நீ எனக்கு மாமனாக எங்கிருந்து வாய்த்தாயடா! ஆஹா! உனது வஞ்சநாவார்த்தைகளைக்கேட்டு யான் என்னவெல்லாம் செய்யலாயினேன்!

'கானலை நீரென் றெண்ணிக்
 கடுவெளித் திரியு மான்போல்,
வானுறு மிலவு காத்த
 மதியிலாக் கிள்ளை யேபோல்,
தேனினைக் கண்டு தும்பி
 தியங்கிய தகைமை யேபோல்,
நானுனை மாம னென்று
 நம்பியே நாஶமானேன்.'

ஐயோ! என்னகபடம்! என்னகபடம்!! தர்மமே உருவெடுத்து வந்தாற்போல், ஒருகுற்றமுமறியாத என் கணவனார்மீது இல்லாதபழிகளையெல்லாம் ஏற்றிச் சொல்லி, பேதையாகிய என்னைக் கொண்டே அவரைக்கொன்றதுமன்றி, என் கற்பிற்கும் கேடுபுரிய வந்தனையே! ஸ்த்ரீகளுக்கு ஸகல குணங்களிலும் பாதிவ்ரத்யமன்றோ முக்க்யமான ஆபரணமாயிருக்கின்றது! ஐயோ! பாதகா! என்னை இப்படிக்கெடுப்பதற்கோ வெகு அன்புள்ளவன்போற் பாதுகாத்து வந்தனை!

முஞ்ஜ:—அடிமூடே! நிறுத்துவாய் உன் அதிகப் ப்ரஸங்கத்தை! ஜாக்ரதை! நீ செய்யுமிப்பிடிவாதத்திற்கு உன்னைக் கண்டார்கண்டு சிரிக்கும்படி அவமானப்படுத்துவேன். நீ பெண்

ணென்பதையுமெண்ணுமல் உன்னைச் சித்ரவதை செய்வேன்! இப்பொழுதும் உன்னை க்ஷமிக்கின்றேன்; என் மனோரதத்தைப் பூர்த்திசெய்வாய்.

ஸஸி:—(மறைவாய்) ஆஹா! கேட்டீர்களோ? என்ன வஞ்சனை! என்ன வஞ்சனை!! பாபம்! இவள்மீது ஒரு குற்றமுமில்லை! எதற்கும் நாம் இனிச்சும்மாவிருப்பது தகுதியன்று!

புத்தி:—(மறைவாய்) அம்மணி! சற்றுப்பொறுங்கள்! இன்னுஞ் சிறிது கேட்போம்! (அப்படியே கவனித்துக் கொண்டிருத்தல்)

விலா:—(பயத்துடன் ஆத்மகதமாய்) அந்தோ! யான் என் செய்வேன்? எப்படி இக்கொடியோன் கையினின்றும் தப்பிப்பிழைப்பேன்? ஐயோ! என்ன புத்திஹீனையானேன்! எவ்வளவோ வேண்டின என் மாமியார் அவர்களின்பேச்சைக் கேளாமற் போனேனே! இக்கொலை பாதகனும் பழிபாவத்திற்கஞ்சுவனோ? பலாத்காரமாய் எனது கற்பைக்கெடுக்க முயன்றாலும் முயலுவானே! என்செய்வேன்? (சற்றுநேரம் மௌனமாய்க் கபோலத்திற் கரத்தைவைத்து) ஸரி! இப்படிச் செய்வதுதான் யுக்தம்! வேறுகதி என்னவிருக்கின்றது? (ப்ரகாஸமாய்) அரசே! தாம் இப்படிச்சொல்வது ஸரியன்று! பதி சென்றவிடத்திற்கு ஸ்த்ரீகள் செல்வார்கள் என்று, ஸாதுக்கள் உரைப்பார்களே! நிலவு சந்த்ரனைக் க்ஷணமேனும் பிரிந்திருக்குமா? மின்னற்கொடி மேகத்தைவிட்டு ஒரு நொடிப்பொழுதேனு மகன்றிருக்குமா? இப்படி அசேதநமான பதார்தங்களிற்கூட இவ்வித தர்மமிருக்கும் பொழுது, உத்தமமான மநுஷ்ய ஜன்மத்தையடைந்த யான் என் அன்பரைப் பறிகொடுத்தும் மற்றொருவனை மணப்பேனோ?

ராகம் - தந்யாஸி: தாளம் - ஆதி

பல்லவி

மணந்தபின்-மணக்கலாகுமோ?

அணங்கு நான்-யாது செய்வேன்!

**அநுபல்லவி**

கணவன்பின்-செல்லாவிட்டால்
வணங்க வொரு-தெய்வமுண்டோ?— (மணந்த)

**சரணங்கள்**

கல்லென்றாலுங்-கணவனென்பார் !
புல்லென்றாலும்-புருஷனென்பார் !
சொல்லொணாத-வார்த்தையெல்லாம்
சொல்லியென்னை-வருத்தவேண்டாம் !— (மணந்த)

ஒருவனுக்கு-மாலையிட்டு
மருவலாமோ-மற்றவரை ?
சிறுமையான-மங்கையரும்
சிரிப்பரன்றோ-இவளையென்றும் !— (மணந்த)

கற்புநிலை-கெட்டழிந்தால்
தற்பரனுந்-துணைசெய்வானோ ?
புற்புதமாம்-வாழ்க்கையிலே
அற்பருமித்-தொழில்புரியார் !— (மணந்த)

ஹா ! ஹா ! அந்தத்திவ்யஸுந்தர மன்மதனைக் கொன்றுவிட்டும் யான் மற்றொருவனை மணந்துகொள்ளவேண்டுமா ? வேண்டாம் ! ஸகல தர்மங்களையுமறிந்த தாமே இப்படி யுரைப்பது ஸரியன்று !

* "காமங் குறித்துப் பாவத்திற்
கலந்த பேதை யாருள்ளும்,
வாமங் கனிந்த பிறன்மனையை
மதிக்கும் பேதை யோர்பயத்தாற்
றாமங் கிழக்கு மறம்பொருள்போற்
சாற்று மின்ப மிருதகனாற்
றேமங் குதிப்பப் பிறன்மனைவி
தோள்கா முறுதல் சூழேலே !"

* பிள்ளையார் புராணம்

முஞ்ஜ:—அடிபேதாய்! பரதாரத்தை விரும்பலாகா தென்பது ஸரியே! ஸகல ஶாஸ்த்ரங்களையு மறிந்திருக்கின்றயானும் தர்மத்திற்கு விரோதமாய் ஒருபொழுதும் நடப்பேனென்று நினைக்காதே. யானுன்னை மணந்து கொள்வதாகச் சொன்னேனேயன்றி ராக்ஷஸர்களைப்போற் பலாத்காரமாகவாயினும், சோரநாயகனைப்போல் திருட்டுத்தனமாகவாயினும் உன்னைக்கூடுவதாகச் சொல்லவில்லையே!

விலா:—அரசே! இவ்வித கார்யத்திற்கு உலகத்தார் ஸம்மதியார்கள்! ஒருவனை மணந்த பிறகு மற்றொருவனை மணக்கக்கூடாதென்று வேதங்களும் ஶாஸ்த்ரங்களும் முறையிடுகின்றனவே! இதனால் எனக்குமாத்ரமன்று, உமக்கும் மஹாத்தான பாதகம் நேர்ந்துவிடும்! வேண்டாம்! இப்பாவியின்மீது வைத்திருக்கும் காதலை நீக்கும்!

* 'அந்தர முற்றா னகலிகைபொற்பா
லழிவுற்றான்
இந்திர னொப்பா ரெத்தனை யோர்தா
மிழிபுற்றார்!
செந்திரு வொப்பா ரெத்தனை யோர்பின்
றிருவுண்பார்
மந்திர மற்றா யுற்ற துரைத்தாய்
மதியற்றாய்!'

முஞ்ஜ:—பயஶீலே! ஒரு புருஷனை மணந்து விட்டால் அவனெப்பொழுதுமா பதியாய்விடுவான்? அவன் இறந்து போன பிறகுகூட அவனைப் பதியென்றுகொண்டு துர்கதியில் வீழ்வது அஸங்கதமாயிருக்கின்றதே! ஶாஸ்த்ரங்களிற்கூட ஸ்த்ரீகளுக்கு ஐந்து ஸந்தர்ப்பங்களில் புநர்விவாஹம் விதிக்கப்பட்டிருக்கின்றதே!

---

* கம்பராமாயணம்

* "நஷ்டே, ம்ருதே, ப்ரவ்ரஜிதே,
க்லீபேச, பதிதே, பதௌ ;
பஞ்சஸ்வாபத்ஸு நாரீணாம்
பதி ரந்யோ விதீயதே."

"தான் மணந்தபுருஷன் காணாமற்போனாலும், இறந்துவிட்டாலும், துறவியாய்ச் சென்றுவிட்டாலும், நபும்ஸகனாயிருந்தாலும், பதிதனாய்ப் போய்விட்டாலும், இவ்வைந்துவகை ஆபத்துகளிலும் ஸ்த்ரீகள் வேறுபுருஷனை விதிப்படி மணந்துகொள்ளலாம்" என்று நாரதர்முதலிய மஹர்ஷிகள் விளங்கச்சொல்லினர். அப்படியிருக்க நீ சஞ்சலப்படுவது அழகன்று. க்ஷணபங்குரமான காமோப ஶாந்திக்காக யானுன்னை யிச்சிக்கின்றேனென்று நீ நினைக்கவேண்டாம். ஹே விலாஸவதி! யான் உன்னுடைய திவ்யஸௌந்தரமான ஆக்ருதியைக் கண்டு, நீ குழந்தையாய் வளர்ந்துவந்ததுமுதல், உன்னையே மணந்து ஸுகித்திருக்க விருப்பங்கொண்டேன். உனது கடாக்ஷவீக்ஷணத்தில் யான் ஈடுபட்டேன். உன் லாவண்யவலையில் கட்டுண்டேன். ஹே கல்யாணீ! சிந்தையால் வேதனைப் பட்டுக் கண்ணீர் விடுகிற இந்நிலைமையை விட்டுவிடு! உன்னுடைய நவயௌவநம் ஸபலமாகும்வகையை நாடு! என்னைப் பார்த்தாவாகக் கொள்!

விலா:—ஹே பாபீ! உத்தமமான க்ஷத்ரியகுலத்திலுதித்து, உண்மையான ஶாஸ்த்ரங்களைக் கற்றுய்ந்தறிந்த நீயும் இப்படி மொழிவது ஸரியோ? போஜகுமாரருக்கே யுரியவளான என்னை நீ இச்சிப்பது தகுதியன்று! மஹாதார்மிகரும் புண்ய ஶீலருமான ஶூரஸேந மஹாராஜரது குலத்திலுதித்தேன். துஷ்டநிக்ரஹமும் ஶிஷ்டபரிபாலநம் என்னும் இருவகைத் தர்மத்தையும் நிலைநிறுத்தி ஸத்யத்தையே த்ருடவ்ரதமாகக்கொண்டு விளங்கும் ஸ்ரீஸிந்துல மஹாராஜருடைய குலத்தை யடைந்தேன், ஶௌத்தவீரரும் ஸத்யஸந்தருமான போஜ

XIV

THE TRIAL OF VILASAVATI'S CHASTITY

OR

"THE TRECHEROUS KING MUNJA FOUND OUT RED-HANDED IN HIS ABOMINABLE CRIME"

——*Act IV, Scene 2, pages* 247-248

Facing page ௨௪௮

## விலாஸவதியின் கற்புநிலையின் பரிசோதனை

### அல்லது

### "விலாஸவதியின் கற்பைக் கெடுக்க வந்த மூஞ்ஜன் திருடனைப்போல் கையும் பிடியுமாய் அகப்பட்டுக்கொண்டு செல்லுதல்"

புத்தி:—அடே துராத்மா ! என்னடா திருடனைப்போற் பதுங்கி யோடுகின்றாய் ?.........இவ்வற்பராஜ்யத்திற் காலைப் பட்டு நிரபராதியான போஜகுமாரனைக் கொல்லப் பார்த்தது மன்றி—

மூஞ்ஜ:—நடுக்கத்துடன்) என்ன ! என்ன ! என்ன சொல்கின்றீர் ? (மயக்கங் கொள்ளல்)

புத்தி:—(யோஜித்துத் தான் சொன்னதைத் திருத்திக் கொண்டு) ஆம் ராஜகுமாரனைக் கொன்றது மன்றி, அவனது தர்மபத்நியாகிய இப் பதிவ்ரதாஶிரோமணியையுங் காமாந் தனாய்க் கெடுக்க வந்தனையே !

மூஞ்ஜ:—(ஆத்மகதமாய்) அப்பா ! இப்பொழுது தான் என் ப்ராணன் வந்தது. (மறுபடியுந் தைர்யங் கொள்ளல்) என்ன சொல்கின்றீர் ?

புத்தி:—அடே பாபி! நீ செய்த இவ்வபராதங்கள் உன்னை லேஶில் விடுமென்று நினைக்காதே ! நீ செய்த இப்பெருங் குற்றத்தினால் அநேக கோடி ஜநங்கள் நிறைந்த இப்புராதந நகரே பாழடையப் போகின்றது. அதனுடன் நீயும் உன் னினத்தாரோடு நாஶமடையப் போகின்றாய். அந்நாள் வர வெகு நாளிருக்கின்றதென்று நினையாதே. இப்படிப்பட்ட அத்யுத்கடமான பாபங்களுக்கு ஶீக்கிரதண்ட மாதலால், அது ஸமீபத்திலேயே யிருக்கின்றதென்றறிவாய்.

—அங்கம். IV, களம். 2, பக்கம். உசஎ-உசஅ

குமாரருக்கு மாலையிட்டேன். அப்புருஷோத்தமரையடைந்து, உத்தமோத்தமமான பதிவ்ரதா தர்மமார்கத்தில் எந்நாளும் இருக்க விரும்பிய யான், ஸர்வலோக நிந்த்யமான இவ்வநார்ய மான கார்யத்தைச் செய்பத்துணிவேனோ? குலத்தையும் கீர்த்தியையும் குணத்தையும் என்னையும் அழிக்கத்தக்கதான இப் பாபக்ருத்யத்தையோ யான் செய்வேன்? வேண்டாம்! இவ் வேழையின் மீது உனக்குண்டாயிருக்கும் காமத்தை வளர்க்காதே, நிவர்த்திசெய்.

* "காமமே குலத்தினையும் நலத்தினையுங்
கெடுக்கவந்தக் களங்கம், அன்றிக்
காமமே தரித்திரங்க ளனைத்தினையும்
புகட்டிவைக்குங் கடாரம், மற்றுங்
காமமே பரகதிக்குச் செல்லாமல்
வழியடைக்குங் கபாடம், இன்னுங்
காமமே யனைவரையும் பகையாக்கிக்
கழுத்தரியுங் கத்தி காண்பாய்."

அரசே! உலகத்தில் பாணிக்ரஹணகாலத்தில் அக்நி ஸாக்ஷியாய்ப் பிறர் முகத்தைப்பார்ப்பதில்லையென்று பாவையர் ப்ரமாணஞ் செய்துகொடுப்பதை நீர் அறியீரோ? இப்படிப்பட்ட ப்ரமாணத்தை உல்லங்கநஞ்செய்பவர்கள் சந்த்ரஸூர்யர்களுள்ளளவும் அவியாத அக்நியில் வீழ்ந்து பரிதவிப்பர்களென்று வேதசாஸ்த்ரங்கள் முறையிடுகின்றதைக் கற்கவில்லையோ? விவாஹமென்பது கேவலம் ஐஹிகமான ஓர் ஒப்பந்தத்தை போல் நினைத்தபொழுது நீக்கக்கூடியதன்றே! அஃதெதனாலும் அழியாததும், ஸதிபதிகளைப் பந்திப்பதுமாகிய பெரும் நிபந்தநமன்றோ! அப்படியிருக்க, உத்தமமான மநுஷ்ய ஜந்மத்தையடைந்து, உயர்ந்த குலத்திற்பிறந்து, உத்தமனுக்கு

* விவேகசிந்தாமணி

வாழ்க்கைப்பட்டு, உறுதியான வழியைக்கைக்கொண்ட உத்தமி களும் முன் ஒருவனை மணந்து அவனொழிந்தால் பின் மற் றொருவனையும் மணப்பரோ?

* "ஸக்ரு ஹம்ஶோ நிபததி
ஸக்ருத் கந்யா ப்ரதீயதே?
ஸக்ரு தாஹ ததாநீதி
த்ரீண்யேதாநி ஸக்ருத் ஸக்ருத்"

என்றல்லவோ தர்மஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன!

முஞ்ஜ:—அடிபேதாய்! ஏனிப்படி வீண்கவலைப்படுகின் ருய்! என்னுடைய காதலின் பெருமையை நீயறியாய்! உன் னைக்காட்டிலும் மேலானதெனக் கொன்றுமில்லை!

செந்நீர்ப்பவளச் செவ்விதழ்வாய்!
அந்நீர்ப்பத்ம முகத்தாள் நீ
முந்நீர்ப்புணரி மஹியுமென்றன்
வெந்நீர்க்கடமா விருகொம்பாம்!

ஆகலின், இவ்வழுமைக் கோலம் நினக்குவேண்டாம்! என்னுட னிப்பொழுதே மணக்கோலத்தையடை! என் கண்மணி, ஏன் பலபல யோஜிக்கின்ருய்?

விலா:— வேண்டாம்! என்மீதுமக் குண்டாயிருக்கும் ஆஶையை யொழித்து, ஸாதுக்களாற் காண்பிக்கப்பட்ட மார்க் கத்தைக் கைப்பற்றும்! உம்மையே த்ருஷ்டாந்தமாக வெடுத் துக்கொள்ளும்! உமக்கு மநேக பத்நிகளிருக்கவில்லையா? அவர்களெல்லோரையும் பரபுருஷர் தர்ஶிக்கவும் துர்லபமாய்ப்

யாதுகாத்து வருகின்றீரன்றோ? அவ்வண்ணமே மற்றவர்களுடைய ஸ்த்ரீகளையுங் காக்கவேண்டாமா? பார்க்கவேண்டாமா?

முஞ்ஜ:—(திருட்டுச் சிரிப்புடன் ஸரஸமாடிக்கொண்டு) அடி! என் காமக்கிழத்தி! இன்னுமெவனடி யிருக்கின்றான் என்னிலுஞ் சிறந்தவன் உன்மநத்தைக் கவர்ந்துகொள்ள? நானே உன்மீது ஆசைகொண்டேனடி!

‘நானே கரும்படி நீயே யதன்ரஸம்
நாயகியே!
தேனேயுன் வாயிதழ் தந்தென்னை மெல்லவுஞ்
சேர்த்தணைவாய்!

தானே புணர டநமிள காதெனைத்
தள்ளுவையோ
மானே விடேனுனை நீ போவ தெங்கினி
மாமயிலே!’

விலா:—(பயஸம்ப்ரமத்துடன்)

* “முன்னாக மணந்த முனைக்குரிசி
றன்னாயு விறந்திடி னுந்தகைநா
டொன்னார்கொளி னும்மவ னுற்றிடினு
மென்னாயக னேயவ னென்றறிவீர்!”

முஞ்ஜ:—(பரிஹாஸத்துடன்) அவ்வந்நாடி போஜனோ?

விலா:—அவர் எப்படியிருக்கட்டும் ஸரியே! அவரையன்றி வேறொருவரையுங் கண்ணுற்றுப்பாரேன்!

மநதுடன் மணந்த போதே
மன்னவன் றநயன் போஜன்
எனதுயிர் நாத னானான்!
என்னதான் வந்தாலென்ன?

* பாரதம்

இனியவ ரடியைச் சேர்வான்
இறப்பதா லென்ன போகும் ?
கனவிலு மவரை யன்றிக்
கருதிடே னெவனை யேனும் !

மூஞ்ஜ:—அடி வஞ்சகி ! இத்தர்மோபதேசமெல்லாம் யாருக்குச் செய்கின்றனை ! யான் இவற்றிலெல்லாம் த்ருப்தியாய் விடுவேனென்று நினைக்கவேண்டாம். நீ செய்யுங் கார்யம் தானேவரும் ஸ்ரீதேவியைக் காலாலுதைத்துத்தள்ளிப் போட்டு மூதேவியை விலைகொடுத்துக்கொள்ளுதல் போலிருக்கின்றது! இப்பொழுதே குறியாய் என் அபிப்ராயத்தைப் பூர்த்திசெய். வீணாய் மடியவேண்டாம் !

விலா:—(கோபத்துடன் மூஞ்ஜனை திக்கரித்துக்கொண்டு) அடே பாபீ ! ஏன் வீணாய் அழிந்துவிழுகின்றாய் ! வழிபறித்துக்கொல்லும் கொடிய கள்ளரும் இத்தகைய செயலைப்புரியார்களே! வேண்டாம்! உன்மநத்தை என்னிடத்தினின்றும் விலக்கிக்கொள் !

பழிசெயுங் கொடிய கள்வா !
பாதகா ! உனக்கு நல்ல
வழிபெறவோ நீ யிந்த
வார்த்தைகள் சொன்ன தென்னை ?
இழிதகை யாளா ! தீய
எண்ணமொன் றேனுங் கொள்ளாய்
அழிவினை விளைக்கு மிந்த
வாஞ்சையை யொழித்து வாழ்வாய் !

மூஞ்ஜ:—நான் நல்லதனமாய்க் கேட்டால் நீ உடன்படமாட்டாய் ! கள்ளரைப்போலவே உன்னைக் கட்டாயப்படுத்துகின்றேன் (காமாந்தனாய் விலாஸவதியைத் தீண்டுமாறு மடக்கிக்கொண்டு பாடுதல்)

ராகம்-ப்யாக்: தாளம்-ஏகதாளம்

கண்ணிகள்

மாயனது மாயையைபோல்—கிளியே !
　　மானிடரை மயக்கும்

மாயமின்னொளியே—கிளியே !
　　மார நிகேதநமே !

சந்திரபிம்பமோடி—கிளியே !
　　ஸரஸ ஸரோருஹமோ ?

சிந்மயவின்பமோடி—கிளியே
　　சீர்பெறு முன்வதநம் !

முல்லை முகுளங்களோ—கிளியே
　　முத்துவரிசைகளோ !

முக்தர்கள் ஆநந்தமோ—கிளியே
　　முகத்திலுன் பல்லணிகள் !

விலா:—(கண்ணீர் சொரிந்து பயஸம்ப்ரமத்துடன்) ஹா கஷ்டம்! இனியான் என்செய்வேன்? யாரென்னை இத்தருணம் காப்பாற்றுவர்? ஹே ஈசா! நீதான் என்னை இக்கொடியவன் கையினின்றும் காப்பாற்றவேண்டும்!

ஹே கௌரீச்வர! ஹே புராந்தக! விபோ!
ஹே சர்வ! ஹே சங்கர!
ஹே கோவிந்த! முகுந்த! மாதவ! ஹரே!
ஹே க்ருஷ்ண! ஹே கேசவ!

ஹே மாயத்ர்யபிநாய! ஹே ஸாரபீத !

ஹே வேதவாராம் நிமேய !

ஹே முப்தாஹிலலோகஸஞ்சய ! நமோ

ஹே தீநஸம்ரக்ஷக !

அந்தோ! அபலை யான் மாள்கின்றேன் ! மாள்கின்றேன் !!
(மூர்ச்சித்து வீழ்தல்)

ஸஸி:—(தூங்கவதியுடன் புத்திஸாகரரை முன்னிட்டுக் கொண்டு பரப்பரப்புடன் முஞ்ஜனருகிற் சென்று) அடே பாபீ! பாபீ ! என்னகார்யஞ் செய்கின்றாயடா ! இப்பேதையை வஞ்சித்துக்கெடுக்க முயலுவதோ ஆண்மை ? ஐயோ ! மநத்திற் கொள்ளாது வெளிநகைப்பாய்ப்பேசினும், நனவிலன்றிக் கனவில் நினைத்தாலும் பரதாரவிச்சையானது யாவர்க்கும் பகை, பழி, பாவம் அச்சங்களையுண்டு பண்ணிப் பெருமையைக் கெடுக்குமே! அடே த்ரோஹீ ! நற்குலத்திற்பிறந்து இப்படிப் பட்ட புத்தி ஏனடா ? அடே விஷப்புழுவே ! உனது தீச் செயல்களால் யாது பயனையடைந்தனை ? நெஞ்சத்தில் ஓயாத பயமும் நடுக்கமும் துன்பமும் உற்றதன்றி, வேறு இன்பத்தையும் நீ காணப்போகிறதுண்டோ ? சீ ! சுடவேண்டுமுனது நாய் வாழ்வை !

முஞ்ஜ:—(நோக்கி, அச்சங்கொண்டு, தைர்யமுள்ளவன் போல் நடித்துக்கொண்டு) என்ன ! அதிகமாய்க்குழறுகிறாய் ? நினது அந்தஸ்தைக் கவனித்துப்பேசு ! உன் புத்ரன் போன வழிக்கு நீயும் செல்வாய் ! (ஸஸிப்ரபாதேவியாரைத் தள்ளிக் கொண்டு வெளியிற் செல்ல யத்னித்தல்)

புத்தி:—அடே துராத்மா! என்னடா திருடனைப்போற் பதுங்கியோடுகின்றாய்! நீ செய்த வஞ்சனைகளெல்லாமெங்களுக்குத் தெரியாவென்று நினைத்திருக்கின்றையோ! மற்றத் தோஷங்களுக்கெல்லாம் ஒவ்வொரு ப்ராயச்சித்தமுண்டு! ஆதரவற்ற அபலைகளைப் பலாத்காரஞ்செய்து, அவர்களது பாதிவ்ரத்யத்திற்குப் பங்கத்தைச்செய்ய முயலுவோர்க்கு யாதொரு ப்ராயச்சித்தமும் கிடையாது! அடே நீச! நீ செய்யத்துணிந்த கார்யமானது, மதங்கொண்ட யானைபின்னே துரத்த, முன்னே பதினாறடி வேங்கை ஒன்று வந்து பாய, இந்த ஆபத்திற்குப் பயந்து இருகரை புரள வெள்ளங்கொண்டு எதிரில் வருமாற்றில் குதிக்க, அஃது அடித்துக்கொண்டு போகும்பொழுது ஒரு பயங்கரமான முதலை யவனது காலைப்பிடித்து விழுங்க, அதற்குள் அவன் தாஹசாந்திசெய்வதற்காக அங்குள்ள நீரைக் கொஞ்சம் அள்ளிக்குடித்து ஸந்தோஷிப்பதுபோலல்லவோ இருக்கின்றது! அடே மந்தமதி! இவ்வற்பஸுகத்திற்காக எவ்வளவு பாவங்களையும் பழிகளையும் உன் தலையின்மீது தாங்கத்துணிவு கொண்டனை? இவ்வற்ப ராஜ்யத்திற்காசை கொண்டு நிரபராதியான போஜகுமாரனைக் கொல்லப்பார்த்ததுமன்றி—

முஞ்ஜ:—(நடுக்கத்துடன்) என்ன! என்ன! என்ன சொல்கின்றீர்? (மயக்கங் கொள்ளல்)

புத்தி:—(யோஜித்துத் தான் சொன்னதைத் திருத்திக் கொண்டு) ஆம்! இராஜகுமாரனைக் கொன்றதுமன்றி, அவனது தர்மபத்னியாகிய இப்பதிவ்ரதா சிரோமணியையும் காமாந்தனாய் கெடுக்க வந்தனையே!

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) அப்பா! இப்பொழுது தான் என் ப்ராணன் வந்தது! (மறுபடியுந் தைர்யங்கொள்ளல்) என்ன?

புத்தி:—அடே பாபீ! நீ செய்த விவ்வபராதங்கள் உன்னை லேசில்விடு மென்று நினைக்காதே! நீ செய்த இப்பெருங் குற்

றத்தினல் அநேக கோடி ஜநங்கள் நிறைந்த இப் புராதநமான நகரே பாழடையப்போகின்றது! அதனுடன் நீயும் உன்னினத்தாரோடு நாசமடையப் போகின்றாய். அந்நாள்வர வெகு நாளிருக்கிறதென்று நினைக்காதே. இப்படிப்பட்ட அத்புத கடமான பாபங்களுக்குச் சீக்க்ரதண்டமாதலால், அது ஸமீபத்திலேயே யிருக்கின்றதென்றறிவாய்.

முஞ்ஜ:—(விரைந்து பரிக்ரமித்துக்கொண்டே) அதையுந் தானறிகின்றேன்! (நிஷ்க்ரமித்தல்)

சசி:-(விலாஸவதியினருகிற்சென்று நோக்கி) அந்தோ! இஃதென்ன பரிதாபம்! ஸர்வாலங்கார யோக்யையான என் கண்மணி, பூஷணங்களற்றுப் புழுதிபடிந்து உடலும் மலிந்து பெருங்காற்றி லடிப்பட்டுக் கீழே வீழ்ந்து வாடின புஷ்பமும் வதங்கின பல்லவமுமாய் கிடக்கிற வ்ருக்ஷத்தின் சாகைபோற் கட்டாந்தரையில் வீழ்ந்து கிடக்கின்றனளே! (உற்று நோக்கி) ஐயோ! அணைந்துபோன அக்னிபோல் இவளது ஆவியும்விளங்கக்காணேமே! அந்தோ! என் கண்மணி உயிருடனிருப்பளா? (அருகிற்சென்று விலாஸவதியின் மார்பைத்தடவிக்கொண்டு) தைவாதீநம் இப்பொழுதுதான் ஒரு மூச்சு வருகிறது போலிருக்கிறது! (தரங்கவதியை நோக்கி) தரங்கவதி சீக்க்ரம் ஒரு விசிறியை எடுத்துக்கொண்டுவா!

விலா:—(கண்விழித்துக்கொண்டே) ஹா! ப்ராணநாதா! நீ இப்பாவியின் குற்றங்களையெல்லாம் பொறுத்தருளவேண்டும்! உம்மால் க்ஷமிக்கப்படுகிற வரையிலும் யான் நற்கதியையடையேன்!

ராகம்-காம்போதி ; தாளம்-ரூபகம்

பல்லவி

நாதா! நாதா!—நான் செய்தபிழைகளைப்
பேதை யிவளென்று-பொறுப்பீர்!

அநுபல்லவி

பூதலம்போன்மிகப் பொறுமையுள்ளவென்றன்
காதலனே க்ஷமிப்பீர்!—　　(நாதா)

சரணம்

இப்பெரும் பாவத்தை-இயற்றியபின் யானும்
இப்புவியிலுயிர்-இனித்தரிப்பேனோ!
இப்பொழுதே மூட்டி-எரியனலின் வீழ்ந்து
எப்பிறப்பிலேனும்-இணைபிரியேனும்மை!—　　(நாதா)

ஐயோ! நானிப்படி என் மாமனால் மோசம்போனதை அவர் எப்படி அறியப்போகின்றனர்! வேறு லோகத்திலாயினும் அவரையான் அடைவேனோ! (யோஜித்துப் பயத்துடன்) அந்தோ! கஷ்டம்! யான் ஏன் கண்விழித்தேன்! என்னையார் இத்தருணம் இக்கொடியோன் கையினின்றுங் காப்பாற்றப் போகின்றனர்! ஐயோ! போகின்றேன்! போகின்றேன் (மறுபடியும் மூர்ச்சைகொள்ளல்)

ஶஶி:—(தரங்கவதி விசிறிகொண்டு விலாஸவதிக்கு வீச) ஆ! என் கண்மணீ! என்னைக்கண்ணுற்றுப் பாராயோ? ஆ! என்செல்வி! எழுந்திரு! எழுந்திரு!!

விலா:—(கண்விழித்துக்கொண்டு நோக்கி) ஆ! இஃதென்ன விந்தை! என் மாமியாரா? (விரைந்தெழுந்து) அம்மணீ! என்னை மன்னிக்கவேண்டும்! (காலில்வீழ்தல்)

ஶஶி:—(தாங்கியெடுத்து) அடிபேதாய்! நீ என்ன குற்றஞ்செய்தனை நான் மன்னிப்பதற்கு?

விலா:—(கண்ணீர்சொரிய) அம்மணீ! யான் புரிந்தது குற்றமன்று, படுகொலையம்மா!

வாழாத வண்ணம்யான் வாது செய்யும்
வஞ்சகரை நம்பியே யழிய லானேன்!
பாழான மாமனது சொன்ம தித்துப்
பதிஹத்தி யான்செய்து பதிதை யானேன்!
ஏழையான் செய்தவிப் பாத கத்தை
எண்ணாம லென்மீது கருணை செய்வீர்!
தாழாத தாரைநகர்த் தேவியே! யென்
தாபத்தை நீக்குவீர் பிழைபொறுத்தே!

ஶஶி:—(விலாஸவதியின் கண்களைத் துடைத்துக்கொண்டு) ஹா! புத்ரீ, ஏனிவ்வாறெல்லாம் வீணாய்ச் சஞ்சலப்படுகின்றாய்?

கண்ணினுண் மணியே யுன்றன்
கருத்தினில் வ்யஸநம் வேண்டாம்!
எண்ணுமுன் னெண்ண மெல்லாம்
எளிதினி லறிந்து கொண்டேம்;
அண்ணலாற் றநயன் போஜன்
அடலுட னுயிர்த்து நிற்க
எண்ணமேன்? கவலை நீங்கி
யேகுவோ மினிது நாமே!

அடிபேதாய்! நாமிங்கிருப்பது தகுதியன்று! அண்ணலாரரண்மனைக்குச் செல்லுவோம் வா!

விலா:—(ஆஶ்சர்யத்துடன்) என் ப்ராணநாதரும் உயிருடனிருக்கின்றனரா? இதையான் நம்பேன்! நம்பேன்!!

ஶஶி:—ஆ! என் கண்மணீ! உன்னிடத்தில் யான் பொய்யுரைக்கவேண்டுமோ? என் செல்வன் போஜன் க்ஷேமமாயிருக்கின்றனன். அவனுக்கு யாதொரு தீங்குமில்லை.

விலா:—ஆஹா! இஃதென்ன ஸ்வப்நமோ யான் காண்பது? ஐயோ! பாவியேன் நானே அன்றோ, ஆசையுடன் வந்த என்னன்பரைப் பாலில் மருந்து கலந்து வைத்துக்கொன்றேன்! அவர் இறந்து இன்றோடு மூன்று நாட்களாயினவே! நானல்லவோ அவருக்கு அக்நி ஸம்ஸ்காரமுஞ்செய்தேன்! ஐயோ எல்லாம் ப்ரமையாயிருக்கின்றனவே!

புத்தி:—ஏ ராஜபுத்ரீ! இவையெல்லாம் அப்பாதகன் உன்மாமன் புரிந்த வஞ்சனைகளே! உன்கணவனூர் நீ வைத்த பாலைக்குடிக்கவும் இல்லை, இறக்கவும் இல்லை! அப்பாதகன் முஞ்ஜன், 'போஜன் உன்னை விஷம் வைத்துக் கொல்ல முயன்றா' னென்று அவன்மீது குற்றஞ்சாட்டி, அவனைத் தனியாய்க் காளிகாபரமேஶ்வரி வநத்திற்குக் கொண்டுபோய் ஶிரச்சேதஞ் செய்விக்கப் பார்த்தனன்!

விலா:—ஆஹா! என்ன வஞ்சனை! என்ன வஞ்சனை! என்னிடத்திற் சொல்வதொன்று! மற்றவரிடத்திற் சொல்வதொன்று! ஐயோ! என்னுதனென்னை க்ஷமிக்காவிடில் யான் எஜ்ஜந்மத்திலு மழிந்துபோவேனே! என்னைக்கொடியவளென்று என் கொழுநர் கொள்ளில், எனக்கு நரகத்தினின்றும் ஒரு காலத்திலும் விமோசந முண்டாகாதே. அந்தோ! இனியான் உயிர்தரித்திரேன்! அக்நியில் வீழ்ந்து இறப்பதே எனக்குத் தகுந்த ப்ராயஶ்சித்தம்!

புத்தி:—அடிபேதாய்! உன்மநத்தின் தூய்மையை நாங்களறியோமா? நின் கணவன் தான் அறியானா? ஏனிப்படி வீணாய் வ்யஸநப்படுகின்றாய்? இவையெல்லாம் நின்மாமனது வஞ்சனைச்செயல்களென்பது உன்னைத்தவிர மற்றயாவருக்குந் தெரிந்தேயிருக்கின்றது. உன்பால் யாதொரு தோஷமுமில்லை.

விலா:—ஆயினும், அத்தே! உலகத்தார் என்னை என்ன நினைப்பர்? அவர்தாம் என்ன நினைப்பர்?

ஸுஸ:—அடிபேதாய்! ஒருவரும் ஒன்றும் வ்யத்யாஸமாய் நினைக்கமாட்டார்கள்! உன்னுடைய நெறியை இப்பொழுது நாங்களே பார்த்துக்கொண்டிருந்தோமே. நீ ஏன் அதைப் பற்றி வ்யஸநப்படவேண்டும்? அப்பாதகன் வஞ்சநா வார்த்தைகளை நம்பி, உன்கணவனது நன்மைக்காகவே நீ யேதோ ஒரு கார்யத்தையுஞ் செய்திருப்பாய்.

விலா:—அவ்வுண்மை யாருக்குத் தெரியப்போகின்றது?

தாங்க:—அம்மணீ! அதுதான் கண்ணாடிபோல் விளங்குகின்றதே! நீங்கள் சொல்வானேன்?

விலா:—ஆயினும், என் பர்த்தா என்னை என்ன நினைப்பர்? உலகத்தில் கொலைபாதகிகள்கூட இப்படிப்பட்ட கார்யஞ் செய்யார்களே!

ஸுஸ:—அவன் ஒன்றும் நினையான்! நாம் அரண்மனைக்குச் செல்வோம் வா! நாமிங்கிருப்பது தகுதியன்று. இங்கிருப்பின், அப்பாதகன் மூஞ்ஜன் வேறு ஏதாயினுஞ் சதிசெய்து கெடுதி செய்யப்பார்ப்பன்!

விலா:—ஐயோ! அப்பாதகன் செயல்களை நினைக்க இன்னுமென் உள்ள மெரிகின்றதே! உடல் நடுநடுங்குகின்றதே! கடவுளன்றோ உங்களைத் தைவாதீநமிங்குக் கொணர்ந்துவிட்டனர்!

ஸுஸ:—எதற்கும், நாமிங்குத் தாமஸிப்பது தகுதியன்று: போவோம் வா!

(யாவரும் நிஷ்க்ரமித்தல்)

# மூன்றாங் களம்

இடம்—ஜயபாலன் வஸிக்கும் துறைக்கருகில் ஒரு வெளி மண்டபம்

(காவந்நையும், தண்டபாணியும் இரண்டு தட்டுக்களில் ரத்நங்களையும் ஆபரணங்களையும் நிரப்பி எடுத்துவர, லீலாவதியும், ஜயபாலனும் ப்ரவேஶித்தல்)

லீலாவதி:—எந்தாய்! இவ்வளவு ரத்நங்களு மாபரணங்களும் திடீரென்று தமக்கு எவ்வாறு கிடைத்தன?

ஜயபாலன்:—குழந்தாய்! அதைப்பற்றி என்ன? இவை எல்லா முனக்காகத்தான் கொண்டுவந்தேன்.

லீலா:—இப்படிப்பட்ட விலையுயர்ந்த பூஷணங்களைத் தரித்திருந்த மஹாபுருஷன் யாவனோ? இன்று தாங்கள் கொண்டு வந்திருக்கும் ரத்நங்களே, இப்பூமி எல்லாம் விற்பினும், பெறுவதற்கரியவெனத் தோன்றுகின்றனவே!

ஜய:—என்னருமைச் செல்வி! நீ சொல்வது வாஸ்தவமே! இப்பொழுதெனக்கு இருக்கு மாஸ்தி இப்பூமியிலாண்டு வரு மோரரசனிடத்தினுமில்லை. இவற்றையெல்லாம் ஒரு ராஜகுமாரனுடைய அரண்மனையினின்று கொண்டுவந்தோம்!

லீலா:—(ஆத்மகதமாய்) இப்பாவிகள் எந்த இராஜகுமாரனைக்கொன்று இவ்வணிகளையும், பணிகளையுங் கொள்ளையடித்து வந்தனரோ? ஐயோ! இவர்களுடைய தொழிலெனக்குச் சிறிதேனும் பிடிக்கவில்லையே! இப்பாவிகள் வயிற்றில் யான் ஏன் பிறந்தேன்? (ப்ரகாஶமாய்) எந்தாய்! அவ் ராஜகுமாரர் உயிருடனிருக்கின்றனரோ?

ஜய:—உயிருடனிருப்பின், நாங்கள் அவரது நகரத்திற் கருகிலாவது சென்றிருக்கமுடியுமா? அவருடைய பராக்ரமத்தையு

மௌதார்யத்தையும் வெகு அற்புதமாய்ச் சொல்வார்களே! அவ் ராஜகுமாரரைத் த்ரோஹஞ்செய்து, அவரது சிற்றப்பன் முஞ்ஜ னென்பவன் அவரைக்கொன்றுவிட்டனனும். அதனாலன்றோ நாங்கள் அவ்விடஞ்சென்று இவைகளை யெல்லாங் கொள்ளை யடித்து வந்தோம்.

லீலா:—ஆ! ஆ! இப்படிப்பட்ட கொடிய செயலைப்புரி பவர்கள் நாடுநகரங்களிற்கூட இருக்கின்றனரோ? அவர்களது தொழிலைக் கேட்கில் நம்மவரே நல்லவரெனத் தோன்றுகின் றனரே!

ஜய:—குழந்தாய்! இதுமாத்ரமன்று; இன்னுமெவ்வ ளவோ, தநங்களும் நாணயங்களுங் கொண்டுவந்தேன். அவை களையெல்லாம் நமது மல்லர்களுக்கு வேண்டியவரைக்குங் கொடுத்தேன்.

லீல:—அதனாலேதா னவர்கள் களித்துக் குதித்துக் கொண்டிருந்தனர்!

ஜய:—இவையெல்லா மிருக்கட்டும்! இன்னுமொரு விசேஷந்தெரியுமா? நாங்கள் அன்று கொள்ளையடித்து வரப் போகும்பொழுது, வழியில் ஒரு மஹாவீரன் கிடைத்தனன். அவனது பராக்ரமத்தை யான் என்ன சொல்வேன்! நம்ம வர் எல்லாரும் சேரினும், போரில் அவன் ஒருவன்முன் நிற்க வல்லரல்லர். அவனது உதவியினாலேதான் நமக்கு இந்த ரத் நங்களு மாபரணங்களும் கிடைத்தன.

லீலா:—(குதூஹலங்கொண்டு) அவர் என்ன, நமது ஜாதியைச்சேர்ந்தவரா?

ஜய:—அல்ல! அவன், தான் ஒரு 'பரதேசி' என்று சொல்கின்றான். ஆயினும் அவனது ஆகாரத்தையுங் காம்பீர் யத்தையும் பார்த்தால், எவனோ ராஜகுலத்திற் பிறந்தவன் என்றே எண்ணவேண்டும்.

ஸுந்தரி ! யாதுரைப் பேனச்
சுந்தரன் வடிவை யுனக்கு !
இந்திரன் பிரம னுபேந்த்ரன்
ஈசனு மவன்நிக ரல்லர் !
சந்திர னுமவன் முகத்தை
ஸந்ததங் கண்டுக ளிப்பான் !
அந்தரத் தில்லெவ ருமவ்
வழகனுக் கிணைபா காரே !

லீலா :—(மிகவு மாவலுடன்) அவருடைய திருநாம மென்னவோ ?

ஜய :—அவன் பெயர் ஸைந்துலனும் !

லீலா :—(ஆத்மகதமாய்) ஆஹா ! அம்மஹாபுருஷனுடைய குணதிசயங்களைக் கேட்கும்பொழுதே எனக்கொரு விதமான குதூஹலமுண்டாகின்றதே ! இவரை நேரே பார்த்தாலெப்படி யாவேனோ ? (ப்ரகாசமாய்) என் அருமைத் தந்தையே ! அவர் இப்பொழுதெங்கே யிருக்கின்றார் ? இதற்கு முன் அவர் எங்கே யிருந்தனராம் ?

ஜய :—குழந்தாய் ! நீ உன் மநத்தில் நினைப்பதை யானறிகின்றேன். ஆஹா ! அம்மஹாவீரனுடைய அழகுக்கு நீயே தக்கவள் ! அவனை நம்முடைய மல்லர்களுக்கெல்லாம் ப்ரதானியாய்ச் செய்திருக்கின்றேன். அவனை மர்யாதைகள் செய்து இங்கு அழைத்துவரும்படி நமதாட்களையுமனுப்பியிருக்கின்றேன். அவன் இதற்கு முன்னரெங்கே வஸித்தானோ அது தெரியவில்லை.

லீலா :—ஆனால், அவர் இப்பொழுதிங்கே வருவாரோ ?

ஜய :—ஆம் ! குழந்தாய் ! அதற்காகத்தான் யானுன்னுடன் இவ்விடம் வந்து காத்துக்கொண்டிருக்கின்றேன்.

லீலா:—(ஆத்மகதமாய்) அவ்வித ஸௌந்தரமான ஆகாரத்தை யுடையவர் இவ்விதத்தொழிலையுஞ் செய்ய ஸம்மதிப்பாரோ? இஃதென்னவோ ஆஶ்சர்யமாகத்தானிருக்கின்றது!

(நேபத்த்யத்தில் தூர்யவாத்யம் முழங்குதல்)

ஜய:—அவர்களுமிங்கே வருகிறார்கள்போலிருக்கின்றது!

(வாத்ய கோஷத்துடன் போஜனை முன்னிட்டுக்கொண்டு ஶூரன், வீரன், காலபாஶன், விரூபாக்ஷன் என்னும் நான்கு மல்லர்கள் ப்ரவேஶித்தல்)

மல்லர்:—பராக்! பராக்!!

ஜய:—(லீலாவதி ஒருபுறமாய் நிற்க, தான் முன்வந்து) வாராய் வீரஸிம்ஹமே! வாராய்! இவ்வாஸநத்தில் விஜயம் புரிவாய்! (ஓராஸநத்தைக் காட்டித் தானுமுட்காருதல்)

போஜன்:—மஹாப் ப்ரபு, வந்தநம். (உட்காருதல்)

மல்லர்:—ஜயஜய! வீரஸிம்ஹ! ஜய!!

லீலா:—(பிதாவின்பின்னர்ஒருபுறமாய்நின்று, போஜனை ஆவலுடன் நோக்கி, ஆத்மகதமாய்)இவர்தாமோ அம்மஹாவீரர்? இவருடைய வடிவைக் காணும்பொழுதே என் தேஹம் முழுதும் புளகாங்கிதமடைகின்றதே! ஆஹா! உடை பரதேஶியைப் போலிருப்பினும் உடல் பெருந்தன்மைவடிவாயிருக்கின்றது.

போஜ:—(ஜயபாலனை நோக்கி) அரசே! அடியேனை இங்கு இவ்வளவு மர்யாதையுடன் வரவழைத்த காரணம் யாது?

லீலா:—(ஆத்மகதமாய்) ஆஹா! இவருடைய அழகேயழகு!

மதனைப் பழிக்கு முருவம்
வதநம் மதிபோல மிக்க கமநீயம்!
ரதியைப் பயக்கும்ஹ்ருதயம்
ரதநம் முகைபொக்கு மென்னு ரமணீயம்!

XV

BHOJA WELCOMED TO JAYAPALA'S PALACE

OR

"BHOJA AND LILAVATI ARE STRUCK AT THE BEAUTY OF EACH OTHER ON THEIR VERY FIRST INTERVIEW"

——*Act IV*, *Scene* 3, *pages* 260-261

Facing page உகூ

## ஜயபாலன் வைந்துருக்கு நல்வரவு கூறி மர்யாதை செய்தல்

### அல்லது

### "போஜனும் லீலாவதியும் முதன் முதல் ஒருவரை யொருவர் கண்டு மநமுவந்து வியந்து காதலுறுதல்"

போஜன்:—(அதே ஸமயத்தில் லீலாவதியைக் கண்டு ஆத்மகதமாய்) ஆ ஆ! இஃதென்ன காந்தி! இந்த ஸபை யெங்கும் நிறைந்து ப்ரகாசிக்கின்றதே! மின்னற் கொடியோ? மேகத்தைக் காணேமே! அம்ருதகலைகள் நிறைந்த சந்த்ரிகையோ? அனல் போல் தஹிக்கும் பகலாயிற்றே! ஸுந்தரமாய் ஒளிவீசும் ஸூர்ய ப்ரபையோ? அதற்கு இவ்வளவு குளிர்ச்சியேது? இஃது என்னவோ அபூர்வமான தேஜோ விசேஷமாயல்லவோ யிருக்கின்றது!

நையாத தீங்கனியோ? கயக்காத வமுதோ?

..............................

தெவிட்டாத செந்தேனோ? தேவர் புகழ் திருவோ? இவள் இவ் வநதேவதையோ? இக் க்ருஹலக்ஷ்மியோ? இப்பெண்ணரசி யாரோ விளங்க வில்லையே!

லீலா:—(போஜன் தன்னைப் பார்க்கத் தலைவணங்கி நின்று, கடைக்கண்ணால் நோக்கி, ஆத்மகதமாய்) ஆஹா! இவரது

"நிரந்தர வபிராமமிராகை நீலமும் வயிறு மார்பும்
புரந்தர சாபமொத்த புருவமு நுதலும், பட்ட
மரந்தழைத்திட நகைக்கு முறுவலு மாயன்றன்பாற்
கரந்தலா ரமுதச்சொல்லுங் கந்தற்குமில்லையன்றோ!"

—அங்கம். IV, களம். 3, பக்கம். உகo-உகக

ஜய:—ஸைந்துலரே! நீர் செய்த பேருதவிக்கு யான் என்ன ப்ரதி செய்யப்போகின்றேன்? ஆயினும், இப்பொழுது இந்தரத்நங்களையு மாபரணங்களையும் பெற்றுக்கொள்ளவேண்டும். (இறு தட்டுக்களில் நிரப்பியுள்ள ரத்நங்களையும் ஆபரணங்களையுந் தொட்டுக் கொடுத்தல்)

போஜ:—மஹாப் ப்ரபு! இவ்வளவு மாயாதைக்கு யான் அர்ஹனல்லேன்! (தட்டுக்களைத் திருப்பிவிடுதல்)

லீலா:—(ஆத்மகதமாய்) ஆ! இஃதென்னவோ? என் உடல்முழுவது மூடுருவிச்சென்று என்னைப் பரவசப்படுத்துகின்றதே!

ராகம்-நாதநாமக்ரியை : தாளம்-ஏகதாளம்

பல்லவி

ஆ, இதென்ன-ஆச்சர்யமோ!

அநுபல்லவி

என்றுமிராதவோ-ரெண்ணம் மநத்திற்றோன்றி
இன்றென்னைவிவரிட-மிழுத்துச்செல்கின்றதே!—(ஆ)

சரணங்கள்

இந்தநாள் வரையிலும்-இவரைப்போற் கண்டிலேன்!
அந்த மிகுந்தவிச்-சுந்தரனிவனையாரோ?— (ஆ)
பருவச்சந்திரன்போலிப்-பரமபுருஷன் முகம்
பரவசமாக்கியென்னைப்-பந்தஞ்செய்கின்றதே!— (ஆ)

ஜய:—ஹே வீரசிகாமணி! நீர் இப்படி யோஜிப்பது தகுதியன்று! யான் வேறு நீர் வேறென்று நினைக்கவேண்டாம்! இவ்வணிகளையும் மணிகளையும் பெற்றுக்கொண்டு என்னைக் கௌரவிப்பீர்!

போஜ:—யான் உங்களுக்குப் பவ்யனாயிருக்கின்றேன்! ஆயினுமிவையெல்லா மெனக்கேன்? இவ்வுலகத்திலிருக்கும் எப்பொருளிலும் எனக்கு ஆசையில்லை. தமது ஊழியர்க

ளான இவ்வீரர்களுக்குக் கொடுப்பிற் ப்ரயோஜநமுண்டாகும்.

லீலா:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! என்ன விநயம்! என்ன சொன்னயம்! இவர் சொல்லுஞ் சொல் ஒவ்வொன்றும் என் மநத்தை உருக்குகின்றதே! ஆ ஆ! கானகத்திலேயே யிருந்து கொடிய தவஞ் செய்யும் துறவிகளுக்குக்கூட இப்படிப் பட்ட மநவுறுதிகிடையாதே! இவர் நம் தந்தையார் நினைத்தபடி நற்குலத்திற் பிறந்தவர் என்பதில் எள்ளளவும் ஸந்தேஹமில்லை.

* "திருக்கிளர் முகமும், வேர்வும்
சிறந்தசெம் பவள வாயும்,
மருக்கிளர் மாலை மார்பும்,
மகரகுண் டலமுங் காதும்,
சுருக்கிய மருங்குங் கண்டாற்
றுடிபிடை மடவா ராவி
இருக்கினு மிருக்கு, மில்லா
திறக்கினு மிறக்கு மன்றே!"

ஜய:—ஸைந்துலரே! உமது குணத்தைக்கண்டு மிகவும் மெச்சுகின்றேன். உம்மிஷ்டப்படியே இம்மல்லர்களுக்கே இந்த ரத்நாபரணங்களைக் கொடுக்கின்றேன். (ஹமீரன் முதலியோருக்கவற்றைப்பகுத்துக் கொடுத்தல்)

மல்லர்:—(ஒவ்வொருவரும் வணங்கி வாங்கிக் கொண்டு) ஜய ஜய! ப்ரதான்! விஜயீபவ!! (போஜனை வணங்கித் தத்தம் இடத்திற்சென்று நிற்றல்)

லீலா:—ஆஹா! இவருடைய ஔதார்யமே ஔதார்யம்!

* அரிச்சந்திர புராணம்

* "இதையழு டுருக்கு மின்பத்
திறைவனை யுற்று நோக்கி,
வதைபுரி பில்லர் தம்மை
மநந்தனி லுற்று நோக்கில்,
புதையிருள் கடிந்து வேலைப்
புவியினை விளக்குஞ் ஜ்யோதி
உதயனைக் கண்ட கண்கட்
குடுக்களைக் கண்ட தாமே!"

ஜய:—மல்லர்களே ! இம்மஹாவீரரைக் களிப்பிக்கும்படி ஒரு பாட்டுப்பாடி நர்த்தநஞ் செய்யுங்கள் !

மல்லர்:—சித்தம் ! யஜமான் ! (ஒருவிதமாய் நர்த்தநஞ் செய்துகொண்டு கரதாளத்துடன் பாடுதல்)

ராகம் — நாதநாமக்ரியை : தாளம் - ஏகதாளம்

பல்லவி

தில்லேலோ தில்லேலோ-தில்லாலேலோ தில்லேலோ !

அநுபல்லவி

மல்லர்ஸேனைத்தலைவரெம்மை-மறவாதென்றும் வாழ்ந்திருக்க!
பில்லர்யாவரும் பல்லாண்டு-பெருகிப்பாரிற்பிழைத்திருக்க!(தி)

சரணங்கள்

உடுக்கக் கம்பளி தானிருக்க-உண்ணச் சம்பாச் சோறிருக்க !
குடிக்கக் கள்ளுக்குடமிருக்க-குத்தக் கன்னக் கோலிருக்க!-(தி)
நம்பதெய்வம் நாமிருக்க-நகரேநமக்குக் காடிருக்க !
செம்பொன்பிடிபிடியாயிருக்க-ஜெயபாலப் ப்ரபுதானிருக்க!(தி)

போஜ:—(அதேஸமயத்தில் லீலாவதியைக்கண்டு, ஆத்மகதமாய்) ஆ ஆ ! இஃதென்ன காந்தி ! இந்த ஸபையெங்கும் நிறைந்து ப்ரகாசிக்கின்றதே ! மின்னற்கோடியோ ! மேகத்

* அரிச்சந்திரபுராணம்

தைக் காணேமே ! அம்ருதகலைகள் நிறைந்த சந்த்ரிகையோ ? அனல்போல் தஹிக்கும் பகலாயிற்றே! ஸுந்தரமாய் ஒளிவீசும் ஸூர்யப்ரபையோ? அதற்கிவ்வளவு குளிர்ச்சியேது ? இஃது என்னவோ அபூர்வமான தேஜோவிசேஷமாயல்லவோ யிருக்கின்றது !

கையாத தீங்கனியோ ?
கயக்காத வமுதோ ?
கரையாத கற்கண்டோ ?
கறியாத கரும்போ ?
கொய்யாத நறுமலரோ ?
கோவாதமணியோ ?
குளியாத பெருமுத்தோ ?
குலையாத வொளியோ ?
மெய்யான பெருவாழ்வோ ?
விலையறியாப் பொன்னோ ?
விடங்காத தீபிகையோ ?
விந்தை மரகதமோ ?
தீயாத வெண்சுடரோ ?
தியங்கலில் வாரிஜமோ ?
தெவிட்டாத செந்தேனோ ?
தேவர்புகழ் திருவோ ?

இவள் இவ் வநதேவதையோ? இச் சிருஹலக்ஷ்மியோ? இப்பெண்ணரசி யாரோ ? விளங்கவில்லையே !

லீலா:—(போஜன் தன்னைப்பார்க்கத் தலைவணங்கி நின்று கடைக்கண்ணால் நோக்கி ஆத்மகதமாய்) ஆஹா ! இவரது,

* "நிரந்தரவுரோமரேகை
நீலமும் வயிறுமார்பும்
புரந்தர சாப மொத்த
புருவமு நுதலும் பட்ட

* அரிச்சந்திரபுராணம்

மரந்தழைத் திட நகைக்கு
முறுவலு மாயன் றன்பாற்
கரந்தவா ரமுதச் சொல்லும்
கந்தற்கு மில்லை யன்றோ ?"

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ ஆ ! இப்பெண் கொடியின் கடாக்ஷமாலைகள் என்மநதைப் பலாத்காரமாய்க் கட்டி இம்மா தரசியினிடமிழுத்துச் செல்கின்றனவே ! ஆஹா ! இவளது முகத்தினழகை என்னென்று சொல்லுவேன் ? திருமாலையும் மயங்கச் செய்வதான வசீகரத்தையுடைய ஸ்ரீதேவி வாஸம் பண்ணுகின்ற சிவந்த இதழ்களையுடைய செந்தாமரை மலரும், விரிவான பெருமையையுடைய வேதசாஸ்த்ரங்களைச்சொன்ன சதுர்முகப் ப்ரஹ்மதேவன் உற்பத்தியான வெண்டாமரை மலரும் இவளது வதநத்திற்கு முன் எங்கே ?

ஜய:—(போஜனும் லீலாவதியும் ஒருவரை யொருவர் நோக்கும் விலாஸத்தைக்கண்டு ஸந்தோஷத்துடன் ஆத்மகதமாய்) ஆஹா ! இவளுக்கு அவனே தக்கவன் ! அவனுக்கு இவளே தக்கவள்! இவ்விருவரையும் ஈசனார் சேர்த்துவைப் பாராயின் அதனினும் ப்ரியமானதெனக்கு வேறொன்றுமில்லை. (ப்ரகாசமாய்) ப்ரதான் ! போஜநம் ஸித்தமாயிருக்கின்றது ! ஸ்நாநத்திற் கெழுந்திரும் ! (லீலாவதியை நோக்கி) குழந்தாய் ! எழுந்திரு, போவோம். (எழுந்து பரிக்ரமித்தல்)

லீலா:—(நான்கடிவைத்து) எந்தாய், காலில் ஒரு முள் தைத்துவிட்டது. நில்லுங்கள், சற்று இதை வாங்கி எறிந்து விட்டு வருகின்றேன் ! (வெகு உத்கண்டையுடன் போஜனைப் பார்த்தபடி குனிந்து முள்வாங்குவதுபோல் நடித்தல்)

ஜய:—(திரும்பி) என் கண்மணீ ! உன் காலில் முள் தைக்கவில்லை ! உன் ஹ்ருதயத்தில் மலர்முட்கள் தைத்திருக் கின்றன. உனது எண்ணத்தைக் கருணாநிதியான கடவுள் நிறைவேற்றுவர் ! இப்பொழுது அரண்மனைக்குப் போவோம் வா ! (இருவரும் பரிவாரத்துடன் நிஷ்க்ரமித்தல்)

போஜ:—ஈசா ! உன் செயலை என்னவென்று சொல்வேன் ! அப்பெண்மணியைப் பெற்றவனோ வொரு பில்லன்! யானோ ஒரு க்ஷத்த்ரியன் ! எனக்கோ அவளுடைய தர்சநம் பண்ணுதிருப்பதைவிடப் ப்ராணத்யாகம் செய்வதே மேலாகத் தோற்றுகின்றதே ! ஆ மாதர்க்கரசீ !

* "மைதிகழ் வாரி சூழு
மாநிலத் தோர்கட் கெல்லாம்
பெய்தவம் பழி பிறங்காப்
பிள்ளையைப் பெறுத லென்பார் !
செய்தவ மன்றுன் றனை
ஜென்மங்க டோறுஞ் செய்த
கைதவ மாவி கொள்ளும்
களவினிற் பயந்த தெல்லாம் !"

(நிஷ்க்ரமித்தல்)

## நான்காம் அங்கம்

முற்றிற்று



* அரிச்சந்திரபுராணம்

# ஐந்தாம் அங்கம்

## முதற் களம்

இடம்—தாரைநகர்: முஞ்ஜராஜனது அஸ்தாந மண்டபம்
(வத்ஸராஜர், பத்ரநாராயணர், தநஞ்ஜயர் முதலிய சில
ராஜஸபாஸதர்களுடன் முஞ்ஜராஜர் ஸிம்ஹாஸநத்தில்
வீற்றிருந்தபடி தக்க பரிவாரத்துடன் ப்ரவேசித்தல்)

முஞ்ஜன்:—பத்ரநாராயணரே! என்ன விசேஷம்? யாரவன் தூதனொருவன் வந்து எம்மை நேரிற்காணவேண்டுமென்று அரண்மனை வெளிவாயலில்நின்றுகொண்டு அவஸரப்படுகின்றனனாமே! ஸாமாந்யனான ஒரு தூதனுக்கு இவ்வளவு தைர்யமும் பிடிவாதமுமிருப்பது விந்தையாயிருக்கின்றதே. இவன் எவனோ நம்முள்ளுளவு தெரிந்தவனாயிருக்கவேண்டும். (காதுடன் மெதுவாய்ப் பத்ரநாராயணருக்கேதோ உரைத்தல்)

பத்ரநாராயணர்:—(காதோடு பதிலுரைத்து) மஹாராஜா! ஆயினும் நமக்கென்ன பயம்! வத்ஸராஜருடைய தயையிருக்கும் வரையிலும் நாமொன்றுக்கும் அச்சப்படவேண்டியதில்லை.

வத்ஸராஜர்:—என்னுடைய தயையினாலாவதென்ன? இவையெல்லாம் அடியேன் மஹாராஜா அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளே.

**தநஞ்ஜயர்:**—அது மஹாராஜா அவர்களுக்குத்தெரிந்தே யிருக்கின்றது.

**முஞ்ஜ:**—யாம் அநுபவித்துவரும் இச்செல்வமெல்லாம் உங்களுடைய அநுக்ரஹத்தைப் பெற்றதின் பலனே ! நம் வத்ஸராஜருடைய உதவியிருப்பின் எதுதான் எமக்கு அஸாத்த்யம் ? ஆகலின், யாம் பயப்படவேண்டியதொன்றுமில்லை. அத்தூதனை இங்கு வரவழைத்தே விசாரிப்போம். பத்ரநாராயணரே ! நீரே சென்று அத்தூதனை இங்கு அழைத்துவாரும்.

**பத்ர:**—அப்படியே ! (நிஷ்க்ரமித்தல்)

**முஞ்ஜ:**—வத்ஸராஜரே ! உஜ்ஜயிநீ தேசாதரசனு அத்தூதனை யனுப்பினன் ?

**வத்ஸ:**—ஆம் ! மஹாராஜ ! அங்ஙனம் அவன் சொல்கின்றனனும்.

**முஞ்ஜ:**—உஜ்ஜயிநீ தேசாதரசன் ஆதித்யவர்மன் எனக்கு வேண்டியவனே! அவன் தூதனையனுப்பிய விஷயம் உமக்கேதாயினுந் தெரியுமோ ?

**வத்ஸ:**—அஃதொன்று மெனக்குத் தெரியவில்லை. நானும் இப்பொழுதுதான் ஒரு தூதன் வந்திருப்பதாகக் கேள்வியுற்று இங்குவந்தனன்.

**முஞ்ஜ:**—நல்லது ! புத்திஸாகரரும் மிருகாங்கதத்தரும் நேற்றிரவு பூபாளநாட்டிற்குச் சென்றனர்களாமே ! அஃதுண்மைதானோ ?

**வத்ஸ:**—(ஆத்மகதமாய்) இவன் எப்பொழுதும் என் வாயிலிருந்தே நகரில்நடக்கும் ஸங்கதிகளையெல்லாம் அறியப் பார்க்கின்றனன்! நாமும் இவனிடத்தில் கவனத்துடனே ஸம்பாஷிக்கவேண்டும். (ப்ரகாசமாய்) ஆம்! மஹாராஜா ! அவர்களெங்கேயோ சென்றதாகத்தான் தெரியவருகின்றது. ஒருவேளை பூபாளநாட்டிற்குச் சென்றிருக்கலாம்.

முஞ்ஜ:—அங்குச்சென்று எம் ஸஹோதரி சாருமதியுடன் கலஹஞ்செய்து ஒருவேளை நம்மை எதிர்க்கப்பார்த்தாலும் பார்ப்பார்கள்.

வத்ஸ:—(சிரித்துக்கொண்டே) ஆ ! அவர்களால் என்ன செய்யக்கூடும் ? இந்நகரிலேயே அவர்களது ப்ரயத்நம் சாய வில்லையே ! வேறெங்கே அவர்களது ஸாமர்த்யம் பலிக்கப் போகின்றது ?

(பத்ரநாராயணருடன் காளிதாஸன் ப்ரவேசித்தல்)

முஞ்ஜ:—(நோக்கி ஆத்மகதமாய்) இவன் யாரோ நமது நகரைச் சேர்ந்தவனே ! இவனை நாம் இதற்குமுன் பன்முறை பார்த்திருக்கின்றோம்.

காளிதாஸன்:—(அருகிற் சென்று, கைகூப்பி) போற்றி ! போற்றி ! ! தாரேச்வர ! போற்றி ! ! !

முஞ்ஜ:—பத்ரநாராயணரே ! இவன்தானோ அத்தூதன் ?

காளி:—ஆம் ! பூபதியே !

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) குரலும் அவனதுபோலவே யிருக்கின்றது. அம் மிருகாங்கதத்தருடைய புத்ரனல்லவா இவன் ? (ப்ரகாசமாய்) பத்ரநாராயணரே! யாதுகாரணம் பற்றி இவன் இங்கு வந்தனனோ விசாரியும். (காளிதாஸனை நோக்கி) ஏனப்பா ! நிற்கின்றாய் ? உட்கார்ந்துகொள்.

காளி:—மஹாப்ரபோ ! தாங்கள் எனக்குச்செய்யும் இம் மர்யாதைக்கு யான் விசேஷமான வந்தநஞ் செலுத்தவேண் டியவனாயிருக்கின்றேன். யான் ஏதோ கபடமாய் வந்திருப்ப தாகத் தாங்கள் நினைக்கின்றீர்கள். அப்படிப்பட்ட சங்கை யா தொன்றும் வேண்டாம். ஒருராஜகார்யார்த்தமாகத் தங்களு டைய ஸமுகத்தைத் தேடிவந்தேன். ஜகதேகவீரரும், துஷ்டஜந நிக்ரஹஞ்செய்பவரும், அக்நிகுலத்திற் பிறந்தவருமானஸ்ரீ விக்ர

மார்க்க மஹாராஜரது வம்ஶத்திலுதித்தவரும்,உஜ்ஜயிநீ தேஶத்தையாண்டு வருபவருமாகிய ஸ்ரீ ஆதித்யவர்ம மஹாராஜ ரால் அனுப்பப்பட்ட தூதன் யான். அம்மஹாப் ப்ரபுவின் கட்டளைகொண்டு யான் இங்குவந்தனன். தங்களுடைய க்ஷேமத்தை யபிவ்ருத்தி செய்யத்தக்க சில பத்ய வசநங்களையுரைக்கின்றனன். அவை தம்மாற்கேட்கப்படட்டும்: நன்றாகமாலிக்கப்படட்டும். ஒரு ஸாமாந்ய மனிதனுரைத்ததெனவிகழவேண்டாம். தூதன் சொல்லியதெனத் தூரத்தள்ளவேண்டாம்.

முஞ்ஜ:—போதும் அப்பா! அறிந்தேன் உனது ப்ரஜ்ஞையை! நிறுத்து இதனுடன் இப்பீடிகையை. நீ வந்தகாரணம் யாதோ அதனையுடனே கூறிச்செல். ஆதித்யவர்மனு உன்னை எம்மிடத்திற் கனுப்பினன்?

காளி:—ஆம்! மஹாப்ரபோ! அவரது ஆணையின்மீது தான், யான் தங்களிடம் வரலாயினேன். ப்ராதாவென வெண்ணும்படி தங்களிடத்தில் அவ்வளவு ப்ரேமைவைத்திருந்த ஆதித்யவர்ம மஹாராஜர் தாம், தமது க்ஷேமத்தை விரும்பினவராய், தமக்கு அநாமயங்கூறி, தர்மார்த்தங்களுக் குசிதமான இவ்வசநங்களைத் தம்மிடத்தில் என் வாயிலாக விஜ்ஞாபிக்கும்படி ஆஜ்ஞாபித்தனர்.

முஞ்ஜ:—அவை யென்னவாம்? ஶீக்ரம் யுரைத்துச்செல்.

காளி:—மஹாப்ரபோ! ஸகல தர்மங்களையுமறிந்த தாங்கள் இப்படி அவஸரப்படலாமோ? இஹ பர ஸாதகமாயிருக்கும் அவரது வசநங்களைக் கூறுகின்றேன்: கவனமாகச் செவிக்கொண்டருளும். "மாளவநாட்டிற்கு மகுடமணிபோல் விளங்கிவந்த இத்தாரைமாநகரில், விண்ணுலகாளும் வாஸவன் போல், மிகப்பெருமையோடு, ஸகலப்ப்ரஜைகளும் தன்னைப் பிதாவெனும்படி வாத்ஸல்யத்தோடு பார்த்துவர, நுமது தமையனார் ஸ்ரீநவஸாஹஸாங்க விக்ரமாதித்யரென்னும் ஸிந்துல மஹாராஜர் வெகுகாலம் தர்மபரிபாலநஞ்செய்து வந்தனரன்றோ? அந்நரபதிக்கு ஏகபுத்ரனும், இத்தாரா ராஜ்யத்

திற்குரியவனும், ஸத்யஸந்தனும், தர்மஜ்ஞனுமான போஜ னென்போன் இதுகாறும் நுமது ஸம்ரக்ஷணையிலிருந்து வந்த னனன்றே ? அம்மஹா புருஷனைத் தாம் யாது காரணம் பற் றியோ பிடித்து, ஒருவருக்குந் தெரியாதவிடத்திற் கடுங்காவ லில் வைத்திருப்பதாகக் கேள்வியுற்றேன். அன்றியும், அவ் வாறு செய்து அவனது ராஜ்யத்தைத் துராக்ரமமாய்க் கைப் பற்றிக் கொண்டதுமன்றி, அவனது தர்மபத்நியான விலாஸ வதிதேவியாரையும், அவனது தாயார் தர்மதேவதைபோன்ற ஶஶிப்ரபா தேவியாரையும், ஏதோ கெட்ட எண்ணங்கொண்டு நீர் நிஷ்காரணமாய்க் கடுஞ்சிறையில் வைத்திருப்பதாகவுந் தெரியவருகின்றது. அப்படிப்பட்ட தீத்தொழில்களைப் புரி வது உம்மைப்போன்ற புத்திமான்களுக்குத் தக்கதன்று. உமது பெருமையையும் நலத்தையும் நாடுவீராயின், நிரபராதியான அப்போஜகுமாரனிடம் இந்தராஜ்யத்தை யுடனே ஒப்பிவித்து விட்டு விலாஸவதி தேவியாரையும், ஶஶிப்ரபா தேவியாரை யும் அவனிடங்கொண்டு சேர்த்து, நீர்செய்த இம்மஹாபரா தத்தைத் தீர்த்துக்கொள்ளும்.''

முஞ்ஜ:—(கோபத்துடன்) இவை செய்யாவிடிலோ? (புரு வத்தைநெரித்துக் கொள்ளுதல்)

காளி:—வீணாய் அழியவேண்டியது தான் !

முஞ்ஜ:—(அட்டஹாஸத்துடன்) அடே ! அற்ப ! என் னடா குழறுகிறாய் ? எம்மை யாரென்று நினைத்துவிட்டனை ?

காளி:—அரசே ! யான் உம்மை முன்னரே அறிவேன் ! இனிப்புதிதாய்த் தம்மைப்பற்றி யான் நினைக்கவேண்டியதொ ன்றுமில்லை. இந்தராஜ்யம் தற்காலத்தில் உம்முடைய வஶத்தி லிருக்கிறதென்று தைர்யங்கொள்ளவேண்டாம். நீர் தாம் ஶூரத்தவீரரென இறுமாப்படையவேண்டாம். பத்ரமாயிருக் கின்றோமென்று நினைத்துக்கொண்டிருக்கும் மரம்போன்ற உம்-

மையேவர்பறித்து வாரிக்கொண்டுபோக மஹத்தான ஆபத்வள்ளம் வந்து சூழ்ந்துக்கொண்டிருக்கின்றதை நீர் அறியீர்.

"யாந்தி ந்யாய ப்ரவ்ருத்தஸ்ய
திர்யஞ்சோபி ஸஹாயதாம்;
அபந்யாநந்து மச்ஊந்தம்
ஸோதரோபி விமுஞ்சதி"

"ந்யாயமார்கத்தில் செல்பவனுக்கு ம்ருகங்கள் பறவைகள் கூடத்துணைவரும்;

அதர்மமான வழியில் செல்பவனைக் கூடப் பிறந்தவன்கூடக் கை விடுவான்"

என்று சொல்லுகிறபடி, நீர் மித்ரர்களென்று நினைத்திருப்பவர்களும் உமது கெட்ட காலத்தினால் உமக்கு ஶத்ருக்களாய் நிற்பார்கள். உமது ஸைந்யபலமே உமக்கு ஸங்கடம் விளைவிக்கும். ஏதோ ஸாமாந்யன் யான் பிதற்றுவதாகப் பரிஹஸித்து மோஸம் போகாதீர். நீர் இத்தீவினைகளுக்குப் பயன் வருவதற்கு முன்னரே, போஜகுமாரரை இத்தாராராஜ்ய ஸிம்ஹாஸநத்தில் ஸ்தாபித்து, விலாஸவதியை அவரது மடியிலும், ஶஶிப்ரபா தேவியாரை அவரது இடையிலும், உமது முடியை அவரது திருவடியிலும் ஸமர்ப்பித்து, இப்படியே கொஞ்சகாலமாயினும் உமது பந்து மித்ர களத்ர வர்கத்துடன் பிழைத்திரும்.

முஞ்ஜ:—(க்ரோதாட்ட ஹாஸத்துடன்) தூதாதம! நீ ம்ருகாங்கதத்தனுடைய புத்ரனல்லையடா?

காளி:—யான் எந்தத் தேவதத்தனாயிருந்தால் உமக்கென்ன? இப்பொழுது ஆதித்யவர்ம மஹாராஜருக்கு என்ன விடை கூறுகின்றீர்?

முஞ்ஜ:—விடை வேறென்ன? அவனாலானதையவன் பார்த்துக்கொள்ளட்டும். என்னிடத்திலேயா இவனது நயவஞ் சகமெல்லாம்?

காளி:—நயத்தால் வாராததை ஸாம்பராயத்தில் ஸாதிப் போம். தர்மோபதேசத்தாற் கிடையாததைக் கோரமானயுத் தாவேசத்தால் ஸம்பாதிப்போம்! ஆசையாலும் காமத்தாலும் மதிமயங்கினுமது நாசத்தை நீரே தேடிக்கொள்ளாதீர்! தேஹ மிருப்பின் என்றேனும் ஸுகத்தை யநுபவிக்கலாம். அதனை வீணாய்ப்போக்கிக் கொள்ளாதீர்! கூட்டங்கூட்டமாய் மேற்கு திசையிலிருந்துவந்த ம்லேச்சர்களது ஸைந்யமெல்லாவற்றை யும் சண்டமாருதம் பஞ்சுப்பொதியைப்போல ஒருக்ஷணத்திற் பறக்கடித்த மஹாவீரரான அவ்வாதித்யவர்ம மஹாராஜாவுக்கு முன் நீர் எம்மாத்ரம்? உமது ஸேனைதான் அவரது ஸேனாஸ முத்ரத்திற்கு முன் எவ்வளவு? அவர் சொல்லியபடி செய்தால் பிழைப்பீர்: இல்லையேல், இதற்காக அவர்தொடங்கப் போகி ன்ற தர்மயுத்தத்தில் நீர் வேரோடு மாண்டுபோவீர்! அவரது பாணத்தாலடிபட்டு யமதர்மராஜபுரத்திற்கு முக்ய அதிதியாய் ஏகவேண்டியவர்தாம்.

முஞ்ஜ:—(கண்கள் சிவக்க, பற்களை நறநறவென்று கடி த்து வெகு கோபத்துடன்) அடே! மூடா! சூரருக்குள் இனி இவருக்கு ஒப்புயர்வில்லை என்னும்படி உலகமெல்லாம் ப்ரக்க்யாதிபெற்ற எமக்கோ இப்பூச்சி மருட்டல்கள்? நன்று! நன்று!! யுத்தத்தில் எம்முன் நிற்கவல்லான் எவனடா? இப்படிக் கொஞ்சமேனும் எனதுநிலைமையையும் பெருமையை யுமறியாது, வாய்க்கு வந்தவாறெல்லாம் பிதற்றின உன்னை இக்கணமே தக்கபடி தண்டிப்பேன். ஆதித்யவர்மனுடைய தூதனென்று சொல்லியதனால் உன்னைக்கொல்லாது நிற்கின் றேம். ஆதித்யவர்மன் சொல்லட்டும், அவனது ப்ரபிதாம ஹன் விக்ரமார்க்கனே யுரைக்கட்டும்: யாம் இவர்களைவிடேம்!

யாம் இம்மூவரையும் முன்னரே நமபுரத்திற்கனுப்பிவிட்டதாக உன் னரசனிடத்திற்சொல். அவரால் ஆனதை அவரும் பார்க்கட்டும், யாமும் யுத்தத்திற்கு ஸர்வஸந்நத்தராகவே யிருப்பதாய்ப்போய் உரை. யாம் யுத்தத்திற்கு வருகின்றோமென்னுமிக்கோர ஸமாசாரமாகிற பேரிடியின் முழக்கத்தை உன் வாயிலாக ஆதித்யவர்மன் கேட்டு நடுங்குமுன்னரே, எமது சதுரங்கபல ஸைந்யத்தின் வீரப்ரதாபமாகிற மின்னலொளி உஜ்ஜயிநியிற்பற்றி எரியும். இதுதான் பதில். போ! இந்நகரை விட்டு உடனே தப்பித்துச்செல். (தநஞ்ஜயரை நோக்கி) ஐயா! தநஞ்ஜயரே! தூதனுக்குச் செய்யவேண்டியவைகளைச்செய்து இவனை வழியனுப்பிவிட்டு வாரும்.

காளி:—காலத்திற்குத் தக்கமஹிமை (தநஞ்ஜயருடன் நிஷ்க்ரமித்தல்)

முஞ்ஜ:—வத்ஸராஜரே! இத்தூதன் நமது ஸபாஸதனாயிருந்த மிருகாங்கதத்தனுடைய புத்ரன்போலில்லையா?

வத்ஸ:—அதற்கென்ன ஸந்தேஹம்! இவன் அவரது புத்ரன் காளிதாஸனே!

முஞ்ஜ:—(முகத்தைச் சிடுத்துக்கொண்டு) ஆ! அப்பொழுதே நினைத்தேன்! இவனது நூதனமான உடையைக்கண்டு மயங்கினேன்! இவன் போஜனுக்குப் ப்ராணநேசனன்றோ?

பத்ர:—ஆம்! அவ்விருவரையும் பற்றி நான் முன்னரே தங்களுக்குச் சொல்லியிருக்கின்றேனே! அவன்தான் இவ்வாதித்யவர்மனைத் தூண்டித் தங்கண்மீது படையெடுத்துவரச் செய்திருக்கவேண்டும்.

முஞ்ஜ:—அப்படித்தான் இருக்கவேண்டும். ஆ ஆ! அப்பொழுதே அவன் இன்னனென்று தெரிந்திருந்தால், அவனை இவ்வளவு ஸுலபமாய்விட்டிரோம். (கோபத்துடன்) இப்பொழுதுமென்ன? அவனைப் பிடித்துவரச்செய்து போஜனது துணைவ

ளுகிய இவனை இணைபிரியாதிருக்கத் துணையாயனுப்புவோம். அவனை உயிருடன் விட்டுவிடில், நமக்குப் பெருங்கெடுதிகள் விளைப்பான் ?

வத்ஸ:—(சிரித்துக்கொண்டு) ஆ ! இச்சிறுவனால் என்ன முடியும் ? அவனைக்கொல்வது நலமன்று ! மேலும், அவன் ஓரரசனது தூதனாக வந்திருக்கின்றனன். ஶத்ருவாயிருப்பினும் தூதனுக்கு மர்யாதை செய்தனுப்புவதே ராஜநீதியையறிந்த தம்போன்ற வரசர்களுக்கழகு. அற்பரன்றோ நீர் சொல்லும் அகார்யத்தைச் செய்வர்.

முஞ்ஜ:—வத்ஸராஜரே ! அப்படியாயின், நாம் இனி ஒரு க்ஷணமும் தாமதிக்கலாகாது. இன்று மாலையே யுத்தத்திற்குப் புறப்படும்படி ஸர்வஸைந்யத்தையும் நீர் ஆயத்தப்படுத்தவேண்டும்.

வத்ஸ:—ஸகல ஸைந்யங்களும் ஸித்தமாகவேயிருக்கின்றன ! நெடுநாளாய் யுத்தமில்லாது கொழுத்திருக்கும் நமது ஸேநாவீரர்கள் எப்பொழுது யுத்தம் கிடைக்கும், எவரோடு போர்ப்புரிவோம் என்றல்லவோ காத்துக்கொண்டிருக்கின்றனர்.

முஞ்ஜ:—ப்ரபலயுத்தம் நேரிடுமென்று தோன்றுகின்றது.

வத்ஸ:—ஆயினும், நமக்கென்ன ? பலத்திற்குறைவா ? வீர்யத்திற்றாழ்வா ? ஜயத்திற்கு ஸம்ஶயமா ? நீரோ மஹாஶூரர் ! ஸர்வஶத்ருஹந்தா ! இவ்வைம்பத்தைந்து தேஶத்தரசர்கள் ஒன்றுகூடி வந்தெதிர்த்தபோதிலும், ஒருவராய் நின்று நீர் யுத்தஞ் செய்யவல்லவரே. தமக்கேன் இவ்வாதித்ய வர்மனைப்பற்றிய கவலை ? உஜ்ஜயிநீ நகரத்திலும் நமது ஜயத்வஜத்தை நாட்டுவோம். இது நமது நற்காலமென்றே கொள்ளுங்கள். இக்கால் எல்லாம் மஹாஹிதமாகவே தமக்கு முடியும்.

முஞ்ஜ:—எல்லாம் உம்முடைய க்ருபைதான் ! யாம் வேறென்ன சொல்லவேண்டியது? ஸகல ஸைநிகர்களையும் யுத்தத்திற்கு ஸித்தப்படுத்தவேண்டியது தான்.

**வத்ஸ:**—அப்படியே ! (நிஷ்க்ரமித்தல்)

**முஞ்ஜ:**—பத்ரநாராயணரே ! யாமே நேரில் யுத்தத்திற்குப் போகவேண்டியிருக்கின்றது. ஆகலின், யாம் திரும்பிவருமளவும் நீரே இவ்ராஜ்யத்தைப் பாதுகாத்து வரவேண்டும். விலாஸவதியும் ஸஸிப்ரபாதேவியும் இருக்குமிடமே ஒருவருக்குந் தெரியாதபடி அவ்வளவு ஜாக்ரதையாக அவர்களைச் சிறைச்சாலையிற் கடுங்காவல் வைத்துக் காக்கவேண்டும். இது தான் யாம் உம்மைப் ப்ரார்த்திப்பது. மற்றவிஷயங்கள் உமக்கே தெரிந்திருக்கின்றன. யாமும் வெகு ஸீக்ரமாய் யுத்தத்திற்குச்சென்று, அவ்வுஜ்ஜயிநீ தேஸத்தரசனது தர்ப்பத்தை தகர்த்துக் கொட்டியவாயில் மட்டந்தட்டி வருகின்றோம்.

(யாவரும் நிஷ்க்ரமித்தல்)

---

## இரண்டாங் களம்

---

இடம்:—ஜயபாலன் வஸிக்குந்துறையில் ஓரறை

(ஜயபாலன் மனைவி சண்டிகை பரபரப்புடன் ப்ரவேஸித்தல்)

**சண்டிகை:**—என்னம்மாடீ! என்ன அநீதம்! என்ன அவந்தை ! இது வரைக்கும் நம்ப யிருந்தவிடமே யாருக்குந்தெரியாமலிருந்ததே. நாம்பளும் சொகமா காட்டிலே மறைவா தங்கியிருந்தோம்: அப்படியிருக்க, நேத்து ராத்திரி யாரோ ஒரு பரிதேசி யகப்பட்டானும்; அவனை குகைக்குள்ளே கூட்டிக்கிட்டு வந்திட்டாங்களே ! நல்லா யிருக்குது ! பரிதேசியுமாச்சுது! கிரிதேசியுமாச்சுது. ஆத்தாடி! அவனைப் பார்த்தாக்கே பரிதேசியாட்டமாயிருக்கான்? எவனோ ராசாவீட்டு மகன்போலே மொக்காணி திம்மனுட்டம் யிருக்கானே ! அவன் பெருமனையும் மழமழப்பையும் பார்த்துட்டுத்தானே அந்தப் படுநீலிப் பெண் லீலாவதியு மவனண்டை ஆசைகொண்டிருக்காள் ! அவன் இங்கே எதுக்கு வந்தானோ அது நல்லா வட்டவெளியா தெரி

யுதே ! நம்பளே வேவு பார்க்கத்தான் வந்திருக்கிறுன் ! இது அந்தப் பொணத்துக்குத்தெரியலேயே ! போருக்குறைக்கி அவ னைப் பட்டணத்துக்கும் கூட்டிகிட்டுபோய் இந்த நகைகளேயெ ல்லா மெடுத்துக்கிட்டு வந்தாங்களாமே! ஐயோ ! இவங்க போரவிடத்துக்கு அவனே யிட்டுகிட்டுப் போகலாமா ? நாம்ப ளிருக்கிறவிடந்தான் அவனுக்குத் தெரியலாமா ? இதுவும் போருதின்னிட்டு நம்பளேச் சேர்ந்தவங்களுக்கெல்லாம் பதா னியாம். ஆண் பிள்ளேங்க வெளிமினுக்கிலே மயங்குவாங்க ளென்னு சொல்லுவாங்களே அது சரியா முடிஞ்சிது ! குட்டிச் சொவருக்கு வயது பூந்தாப்பலே பூந்துதே தவிர நம்பளவங் களுக்குப் பின்னே வரப்போரது கொஞ்சங்கூடத் தெரிய லேயே ! அவனேப் பார்த்தா நம்பளண்டை வேலேக்காரனுட்டா யிருக்கான் ? ஐயோ அடிச்சிக்கிணும் ! அவனண்டே நாம்பள ன்ளு கூலிவேலே செய்யவேணும். இப்படிக் கண்ணே மூடிக் கிட்டு நடந்தா அப்படித் தான் ஆகப்போகுது. கொஞ்சத்து க்கா வந்திருக்குது வம்பு?—இவனே எப்படியாவது கொண் ணூட்டாதான் நாம்ப கொறை நாளும் பெழைச்சிருக்கலாம். இவனே உயிரோடே விட்டுட்டா நம்ப குடி கெட்டுப்போச்சு ! நல்லது நம்பளாலே ஆனத்தே பாத்துக்குவோம். இவனே யென்னமோ திரிம்பிப்போக விடரதில்லே.—(செவிகொடுத்து) யாரோ வராங்கபோலிருக்குது ! (நோக்கி) சரி ! நம்ப புருசன் தான் வராங்க! அவங்க நான் சொல்றபடி சேக்காத போனுக்கா பாத்துக்குவோம் ! எதுக்கும் நாம்ப தலே நோவு வந்ததுபோ லப் பாசாங்குபண்ணி முக்காடு போட்டுக்கிட்டு இந்த மூலே யிலே படுத்துக்கிட்டு அமக்களம் பண்ணுவோம் ! அப்படி சேஞ்சாதான் அவனேக் கொல்லலாம். (சொன்னவாறுபடுத்துக் கொள்ளல்)

**ஜயபாலன்:**—(ஆத்மகதமாய்) நம்முடையகுழந்தை லீலா வதியும் அம்மஹாவீரன்மீது காதல் கொண்டிருக்கின்றுள். அவனே அவளுக்குத் தக்கக் கணவன். அவனது தைர்யத்தை

யும் தேஜஹகாந்தியையும் கண்டால் யார்தான் அவனை அணைய விரும்பங்கொள்ளார்கள் !

* "உடுக்குநீ ருலக மேழு
மொன்றின் மேலொன்றைவைத்தே
அடுக்குநீள் புயமுஞ் செப்பா
ளாவியு மகமுந் தாவிப்
படுக்கும்வாள் விழியு மார்பும்
பரிசிலர் மகிழ நாளும்
கொடுக்கும்வார் கரமு மாத
ருளமெலாங் கொள்ளை கொள்ளும் !"

அவனைப் பார்க்கப் பார்க்க ஆணுகிய எனக்கே அதிகமான அநுராகமுண்டாகிறதே ! பெண்ணும் உயர்ந்த ராஜவம்சத்தில் ஜனித்தவளுமான நம் புதல்வி அச்சுந்தர புருஷனைக்கண்டு காதல்கொள்ளாதிருக்க முடியுமா ? எப்படியாயினுமவனுக்கே நமது குழந்தையை மணஞ்செய்விக்கவேண்டும். அவனும் நமது குழந்தையின்மீது காதல் கொண்டவன்போலவே தோன்றுகின்றான். ஈசனது க்ருபையிருந்தால் இவ்வெண்ணம் முடியும். நமது ஆஸ்தியையெல்லாமவர்களுக்கே கொடுத்து நாம் அவர்களைக்கண்டு களித்திருக்கலாம். எதற்கும் நாம் இந்த ஸந்தோஷஸமாசாரத்தை நமது சண்டிகைக்கு சீக்ரத்தில் தெரியப் படுத்தவேண்டும்! அவளது அநுமதியின்றி என்னலொரு கார்யமுஞ் செய்யமுடியாது ! நேரே அவளிடத்திற்குச் செல்வோம். (நான்கடிபரிக்ரமித்து) கரவதனை நம் காதலி இங்கு வந்ததாகச் சொல்லினளே ! எங்கே காணோம் ! (சுற்றி நோக்கி) ஆ ! இதென்ன? யார் இங்கே படுத்திருப்பது ? (உற்றுநோக்கி) என்ன! நமது சண்டிகையா? ஏனிப்படிப் படுத்திருக்கின்றாள் ? இன்னும் விளக்குவைக்க நான்கு நாழிகையிருக்கின்றதே ! இப்பொழுதே ஏன் படுத்துறங்குகிறாள்? (ஸமீபஞ்செ

* அரிச்சந்திரபுராணம்.

ன்று செவிகொடுத்து) சீ சீ! தூக்கமன்று! ஏதோ உடம்பு அசௌக்யம்போற்றோற்றுகிறது. (அருகிற்சென்று முகத்திற் போர்த்திருக்கும் சீலையைச்சற்றுவிலக்கி நோக்கல்)

சண்டி:—ஆ! அம்மாடி! (பற்களைக் கடித்துக்கொண்டு முகத்தை நன்றாய் மூடிக்கொண்டு ஒருபுறமாய்ப் படுத்தல்)

ஜய:—ஆம்! அப்படித்தானிருக்கவேண்டும்! இதோ இவளுடைய தேஹமே அதைக்குறிப்பிக்கின்றதே.

கால்களை நீட்டிக் கைகளைக் கட்டி
மூலையிற் படுத்து முக்காடு போர்த்துக்
கருநிச மலர்போற் கறுமுகம் சிவக்க
உருண்டு வெளிவரு முதடுகள் துடிக்க
துங்கக் குசங்கள் தொங்கிக் குலுங்க
அங்க முழுது மயர்ந்து நடுங்க
முன்வரு புருவம் முட்போல் நிற்க
வெந்நீ ராடி வெயர்த்ததோ வென்னக்
கண்கள் சிவக்கக் கண்ணீர் ததும்பப்
பெண்ணிவளேனோ பெருமூச் செறிகிறாள்?

நல்லது தட்டி எழுப்பி விசாரிப்போம்! (மெள்ளத்தட்டி) என் காமக் கிழத்தி! சண்டி! என்னடி உடம்புனக்கு?

சண்டி:—(பதிலொன்றும் பேசாமற் பெருமூச்சுவிட்டுத் தலையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு மற்றொரு பக்கந் திரும்பிப் படுத்துக்கொள்ளல்)

ஜய:—(சண்டிகையின் காலைப் பிடித்துக்கொண்டு) அடி என் காதற் கடலே! நானென்னடி செய்தேன்? என்மீது கோபமென்னடி?

சண்டி:—(மூச்சாலொரு பெருமூச்செறிந்து) ஆமா? நானிருந்தாலென்ன? செத்தாலென்ன? நான் தொலைஞ்சிபோகணுன்னுட்டு உங்களுக் கிருக்குதோல்லையோ?

ஜய:—(ஒன்றுந்தோன்றாமல், ஆத்மகதமாய்) ஆ! நான் என் செய்வேன்? இப்படி ஒருநாளுமிவள் என்மீதுகோபித்துக் கொண்டதில்லையே! இன்றிவள் வருந்துவதற்குக் காரணம் யாதோ? நேற்றிராத்திரி எல்லாம் ஸந்தோஷமாயிருந்தாளே! இப்பொழுதிவ்வாறு நொந்துகொள்வதேனோ? யான் இன்னகுற்றஞ்செய்தேனென்று எனக்கே தெரியவில்லையே! (ப்ரகாசமாய்) அடி இப்படிப்பாரேன்? ஏனிப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாய்? உனக்காகத்தானே நான் அன்று அவ்வளவு ரத்நங்களையும் ஆபரணங்களையுங் கொண்டு வந்தேன். பார்த்தையோ அவைகளை யெல்லாம்!

சண்டி:—அதையெல்லா மொங்க தலையிலே கட்டிக்குங்கோ!—ஐயோ! இங்கே என்னுவி கலங்குதே! அதை யெல்லாம் நீங்களே வெச்சிகிட்டு அழுங்களேன்! என்னையேன் தொந்தரை செய்றீங்க!—ஆ! ஆவி போவுதே! போவுதே!

ஜய:—(திகில் கொண்டு) என்னடி உடம்புக்கு? வைத்யனை யழைத்துக்கொண்டு வரட்டுமா? என்ன உடம்பு? சொல்லேண்டி!

சண்டி:—வைத்யனும் வேண்டாம் பயித்யனும் வேண்டாம். என்னைத் தொந்தரை பண்ணாமல் ஒங்ககாரியத்தைப்பாத்துக்கிட்டு போங்களேன்.—ஐயோ! சாவுறேனே! சாவுறேனே.

ஜய:—ஐயோ! என்ன செய்யச்சொல்லுகிறாயடி? உடம்பைப் பிடிக்கட்டுமா? உன்னை இப்படிப் பார்க்கும்பொழுது எனக்கு வ்யஸநமாயிருக்கிறதேடி! சொல்லேன்! என்ன சொன்னாலுங் கேட்கின்றேன்.

சண்டி:—ஆ ஆ! சொல்லி ஒரு கூடை! சொல்லாமல் ஒன்பது கூடை! (மறுபுறம் திரும்பிக்கொண்டு, தலையை யடித்

துக்கொண்டு) ஐயோ! போயிட்டேன்! போயிட்டேன்!! போயிட்டேன்!!!

ஐய:—இல்லையடி! நீ என்ன கட்டளையிட்டாலும் செய்கிறேனடி! ஸத்யம்! ஸத்யம்! இப்பொழுதாவது என்னை வருத்தாமல் சொல்லேன்!

சண்டி:—உங்களுக்குச் சத்தியம் ஒருகேடு! அதிலே குறைச்சலில்லை!

ஐய:—இல்லையடி!தெய்வஸாக்ஷியாய்ச் சொல்லுகிறேன்! என்னவேண்டுமானாலுஞ் செய்கிறேன்! சொல்லேண்டி!

சண்டி:—நிசந்தானா? தவறமாட்டீங்களே! தப்பினா எம் மேலே ஆணையிருக்குது!

ஐய:—ஆம்! நிஶ்சயந்தான்! சொல்லு!

சண்டி:—பின்ன தவறமாட்டீங்களே?

ஐய:—ஒருபோதுந் தவறேன்! சொல்லு, சொல்லு.

சண்டி:—அப்படியானா, நீங்க கூட்டி வந்திருக்கைங்களே, அந்த ஆளை யிங்கே பிங்கட்டமொறையா கட்டிக்கிட்டு வந்து, அவனைக்கொண்ணு, அவன் கொடலிலிருக்கிற ரத்தத்தை யெடுத்து, என்தலைக்குப் பத்துப்போடவேணும்! என்ன? செய்றீங்களா? உயிரை இப்பவே ஒங்க முன்னே விடட்டுமா?

ஐய:—ஐயோ! பாவம்! அந்தப் பரதேஶியின் ரத்தமென்னத்துக்கடி? ஆ! அவனையா கொல்லுகிறது? அவனுக்கு நமதுகுழந்தையைக்கூட மணஞ்செய்து கொடுக்கலாமென்று உன்னிடஞ் சொல்ல வந்தேனடி!

சண்டி:—(ஆத்மகதமாய்) சரி! இவரு மந்தப் படுநீலிக்கு ஒடன்பட்டாரா! நல்லவேலைசெய்ஞ்சா! இனி அவனைக் கட்டாயமாய்க் கொல்லத்தான்வேணும்! (ப்ரகாஶமாய்) இப்போ என்னுயிர்வேணுமா? அவனுயிர்வேணுமா? ஐயோ செத்தேன்! செத்தேன்! தலையை இடிச்சிகிட்டுப்போகுதே! பட்டணத்து

மனிசன் யாராஞ இங்கேவந்தா என்தலே சுக்கச் சுக்கலாய் உடைச்சிக்கிட்டுப்போகுமென்னு அந்த ஜோசியன் அப்பவே சொன்னுனே! ஐயோ ! அது சரியாப்போச்சே ! அடா பாவீ ! நீ என்னைக்கொல்லுதற்காகவாடா காத்துக் கொண்டிருந்தாய் ? ஐயோ ! பூட்டேன் ! பூட்டேன் !

ஜய:--போகாயடி, போகாயடி! பொறுத்துக்கொள்! வேண்டுமாயின் அவனே எங்கேயாகிலுந் துரத்திவிட்டு வருகிறேன்!

சண்டி:—ஐயோ ! அப்படி சேஞ்சா போதாதே ! அவன் குடலின் ரத்தம் வந்தாத்தானே பெழைப்பேன். என் உயிர் வேணுமாஞ, அவன் ரெத்தத்தைக் கொண்டுவாங்க ! ஆ ! ஆ ! போயிட்டுது ! போயிட்டுது ! (புரளல்)

ஜய:—என்னடி பிடிவாதஞ் செய்கின்றையே! அவ்வேழையைக் கொன்ஞல் நமக்கென்ன வரும் ?

சண்டி:—ஐயையோ! போயிட்டேன்! போயிட்டேன்!

ஜய:—வருந்தாதே யடி ! இதோ கொண்டுவந்து விட்டேன் ! சற்றுப் பொறுத்துக்கொள்ளடி நான் கொண்டுவருகிறேன். (நான்கடி பரிக்ரமித்துத் திரும்பித் பேசவாயெடுத்தல்)

சண்டி:—ஐயோ ! போங்க ! சீக்கிரம்போய்க் கொண்டு வாங்க !

ஜய:—(ஆத்மகதமாய் நடந்துகொண்டே) ஐயோ ! கிணறு வெட்டப்போகப் பூதம் புறப்பட்டதுபோலாயிற்றே ! நாம் அவ்வீரனுக்கு லீலாவதியை மணஞ்செய்து கொடுக்க ஸம்மதம் கேட்கப்போஞல், அவள், அவன் உயிரையே எடுக்கவேண்டுமென்கிருளே ! இதற்கென்ன செய்வேன் ? அவளோ நான் சொல்லுகிற பேச்சைக் கேளாமல் ஒரே பிடிவாதமாயிருக்கின்ருள் ! அவனே வெகு ஸாதுவாயிருக்கிருன், கண்ணுங் கருத்தும் நாடுமந்தக் காளையை எப்படி நான் கொல்லத் துணிவேன்? ஐயோ நம்மிடத்திலிருக்கும் ஸொத்துக்கள் இன்னும் நாறு தலைமுறைக்குப்போதுமே ! அவையெல்லாம் லீலாவதிக்கும்

அம்மஹா வீரனுக்குக்கொடுத்து அவர்கள் கூடி ஸுகித்திருப்ப தைப் பார்த்து, நானும் ஸந்தோஷித்திருக்கலாமென்றிருந்தால் இவள் ஒருத்தி அவனுக்கு நடுவில் நமனாய் வாய்த்தாளே !

மென்மல ருடலப் பெண்கண்
மேவிட விதயங் கல்லாய்
முன்மல ரயன் செய்திட்ட
மூடத்தின் பயனா லந்தோ !
தந்மய மாக்கி யென்னைத்
தகையழி வழிசேர்க் கின்றாள்
புன்மொழி வினைவு செய்கை
பூண்டவிச் சண்டி யந்தோ !

அடி சண்டீ ! உனது குணத்தை இளமையிலேயே முன்னரே யறிந்துதானோ உன்னைச் சண்டியென்றனர் ? ஐயோ ! நான் புருஷனாயும் இப்பேல்லர்களுக்கெல்லா மரசனாயுமிருந்தென்ன? இச்சண்டிக்கு நான் அடிமையா யிருக்கின்றேனே ! ஐயோ அம்மஹாவீரனை எப்படி நான் கொல்வது ? ஸரி அப்புறம் போய் யோஜிப்போம் ! (நிஷ்க்ரமித்தல்)

சண்டி:—(ஜயபாலன் தூரே போகிறவரைக்கும் பேசாதிருந்து, பின்பு போர்வையெல்லாந் தள்ளிவிட்டு ஒருப் பெரு நகை நகைத்து எழுந்து) நான் பிடித்த பிடியுந்தோற்றுப்போவுதா! அவனைக் கொண்ணு ரத்தத்தை கொண்டாராதே போகட்டும் பார்த்துக்கிறேன் ! அந்தத் திரிச்சோழில் யென்னு சேராளோ போய்ப் பார்ப்போம் !

(நிஷ்க்ரமித்தல்)

## மூன்றாங் களம்

இடம்—ஜயபாலன் தலைஹக்கருகில் ஒரு பூந்தோட்டம்
(போஜன் காமாவஸ்தையுடன் தனியாய்ப் ப்ரவேசித்தல்)

போஜன்:—ஆ ஆ! மின்னற் கொடிபோன்ற அப்பெண் மணியை யான் கண்டது முதல் என்மநது அவள் பின்னே ஓடி, அவளுக்குள் மறைந்து விட்டதே! ஆ பெண்ணரசே!

வல்லியலுடையளாய
    வனிதையைச் சான்றோ ரந்தோ!
மெல்லியன்னநங்கையென்ன
    மிகவுமே புகழ்ந்து வைத்தார்;
வல்லிய மதன் பாலுற்ற
    வனப்பினைக்கண்டேயஂது
நல்லியலுடைய தென்ன
    நவின்றதைப் போலுமம்ம!

ஆ சாருலோசநே! உன் ஸௌந்தரமான பார்வை யின்னுமென் மநத்தினின்றும் நீங்கவில்லையே! ஆ என் மநோரஞ்ஜிதமே! உனது மாசற்றவடிவைக்கண்டு தான் இச்சந்த்ரன் நாணமுற்றுத் தன் கிரணங்களையெல்லாம் மறைத்து நாளுக்குநாள் தேய்ந்து குறைந்து நலிந்திடுகின்றனனோ? ஆ ம்ருது மதுரபாஷிணீ! உனது வசநாம்ருதத்தையுண்டுதான் இக்குயில்கள் அச்சங் கொள்ளுகின்றனவோ? ஆ மந்தகமநா! உன் நடையைக் கண்டு தான் இவ்வன்னமும் மயிலும் அயர்ச்சி கொள்ளுகின்றனவோ! ஆ தந்வங்கீ! உன்னை மணப்பவன் ஸௌக்ருதமே ஸௌக்ருதம்!

"* அறந்திகழ் தவமினி யகிலமு மிதனு
    லழியுமென் றபன்படைத் திலனோ?
சிறந்தவேல் விழியை முன்படைத் தயர்ந்து
    செங்கரஞ் சோர்ந்ததோ? திகைத்து
மறந்ததோ? கரந்து வைத்ததோ? களப
    வனமுலைப் பொறைசுமந் துருகி
இறந்ததோ? உளதோ? இல்லையோ? இனிமே
    லெய்துமோ வன்னவ ளிடைதான்!"

* அரிச்சந்திரபுராணம்

(வலதுபுஜந்துடிக்க) ஆ! இஃதென்ன? இருந்தாற் போலிருந்து எனது வலதுகை துடிக்கின்றது? இம்மந்தபாக்யனுக்கு மம்மாதரசி கிடைப்பளோ? ஆ ஆ! அப்பெண்மணியை இன்னொருதரங் காண்பேனோ! இப்பொழுதெரிக்கும் காமாக்கினியை யான் எப்படித் தணிப்பேன்? ஹே மதந!

* "உன்னைக்கொன் றன் றுருவிலி யாக்கினோன்
றன்னைக் கொல்லுவ தாண்மைத் தனமலால்
பின்னை கொல்வதென்? பேதைய னாகிய
என்னைக் கொல்லுவ தேழ்மைப் பாலதே!"

ஹா! இதென்ன என் தேஹத்தை யெல்லாஞ் செந்தழலில் வைத்துக் கொளுத்துவது போலிருக்கின்றதே!(மேல் நோக்கி) ஹே சந்த்ரா! நீயு மரூபியாகிய அப்பாதகனுக்கு உறவாகினையோ?

† "சுடர்கான் றெழுந்த வெண்டிங்காள்!
என்னை சுடுதி? ஆரமுதத்
துடனீ பிறந்த பாற்கடலின்
தன்மை புணரா யாஞலும்,
மடலார் கமலப் பொகுட்டுறையும்
புத்தேள் காண மறைக்கொழுந்தின்
படர்வார் சடையில் வீற்றிருக்கும்
பான்மை யேனு மறிந்திலையே!"

ஈசா! இத்தனை நாள்வரையிலுங் காமநோய்க்குட்படாமற் கடிநமாயிருந்த என் சித்தத்தை இன்றிப்படிக் கருகி யுருகிக் கரையும்படி செய்வது நின் கருணைவிலாஸமோ? ஐயோ! மூன்றுநாளாய் நித்ரையில்லாமையினால் தடுக்கக்கூடாத துயிலென்னைப் பீடிக்கின்றதே! இதோ இவ்வசோக மரத்தடியிற் படுப்போம்! (அவ்விடஞ்சென்று படுத்துக்கொண்டு) ஓ மாத

* அரிச்சந்திரபுராணம் † நைடதம்

ரசே! யான் இங்கு தனியாய்ப் பரிதாபப்படுவதை நீ யறியா யோ?

ராகம் - கீரவாணி : தாளம் - ரூபகம்

பல்லவி

ஸுரலோகமோஹந - ஸுந்தரகாத்ரீ
விரஹதாபமாகி - வெந்தேன் நான் ஐயோ!

சரணங்கள்

மாதர்க்கரசியே - மையல் கொண்டுன்மீது
மதிநானிழந்தேனே!— (விரஹதாபமாகி)
தந்தை எனக்கில்லை - தாயுமெனக்கில்லை
ஸுந்தரியுனைவிட்டால்!— (விரஹதாபமாகி)

(பாடிக்கொண்டே நித்ரைபோதல்)

(காமயமாநாவஸ்தையுடன் பரபரப்பாய் லீலாவதி ப்ரவேசித்தல்)

லீலாவதி:—(ஆத்மகதமாய்) ஆஹா! அம்மஹாபுருஷனு டைய ஸௌந்தர்யலஹரியானது என்னையடித்துக்கொண்டு அவரிட மிழுத்துச் செல்கின்றதே!

ராகம் - காபி : தாளம் - ஏகதாளம்

கண்ணிகள்

சந்திரனோ இவன்? இந்திரனோ? புகழ்
ஸுந்தரனிவன் யாரோ?
தந்திரமின்றியென் னந்தரங்கத்தினை
வந்திவன் கொள்ளை கொண்டான்!
மந்மதனோ? மயில்வாஹநனோ இவன்?
மன்னவனோ அறியேன்!
கண்டது மென்மநங் காதலிவன்மீது
கொண்டதே என்செய்வேன்?

(யோஜித்து) ஐயோ! அவன் சொல்லியவார்த்தை பஞ்சமலை மேல் நெருப்பிடி விழுந்தது போலிருக்கின்றதே! என்னுடைய

தொலேந்த தன்றியு மென் ப்ராணுதாரணுகிய அம்மஹாபுருஷ-னுடைய உயிர்க்கே ஹானி வந்துவிட்டதே !

அன்னையில்லையாம் ; அத்தனுமில்லையாம் ;
பின்னையிப்படும் பில்லருமில்லையாம்;
இன்னுமென்னுயி ரெய்தினுமில்லையாம் ;
உன்னி நாடிய உத்தமன் மாய்ந்திடில் !

ஐயோ ! அவர் ப்ராணனுக்கு அபாயம் நேரிடில் ஒட்டைக் குடத்து ஜலம்போல் என் ப்ராணனும் போய்விடுமன்றோ ? என்செய்வேன் ? எப்படி யவரை இத்தருணம் இப்பாவிகள் கையினின்றும் ரக்ஷிப்பேன் ? என் தந்தையே அவரை எனக்குப் பதியாய் உத்தேசித்ததுமன்றி என் மநமு மவருடன் சென்றுவிட்டபடியால், அவரே எனக்குப் பர்த்தாவாகி விட்டனர் ! இனி அவருடைய ஸுகதுக்கங்களெல்லா மென்னுடையவன்றோ ? ஆ ! என்னன்பர் யாரோ ? யானே அவர் மீது காதல்கொண்டிருக்கின்றேன் ! அவர் என்மீது காதல் கொள்வாரோ கொள்ளாரோ அறியேன். எதற்கும் இப்பொழுது அவரது ப்ராணனை இக்கொடியவர்கள் கையினின்றும் காப்பாற்றவேண்டியது என் கடமை! பிறகு ப்ராப்தமிருந்தால் அவரை மணம்புரிவேன் ! நல்லது, நாம் கொடுத்த பஹுமதியை அவர் அங்கீகரியாததற்குக் காரணம் யாதோ ? எதற்கும் அவர் இருக்குமிடத்திற்குச் செல்வோம். என்னன்பர் எங்குச் சென்றனரோ ? (நான்கடி பரிக்ரமித்து) என்னாசையை நிறைவேற்றுமல் என்னைக் கைவிடுவரோ ? சீ ! அப்படித் தோன்றவில்லை. அவர் ஒருபொழுதுமப்படிச் செய்யார் ! எப்படியிருப்பினும் முன்னர் அவரைக்காப்பாற்றுவதே எனக்கு முக்யமான கடமை. (சிறிது தூரஞ் சென்று) அவர் இத் தோட்டத்திற்குட் சென்றதாகவல்லவோ நம் கரவதனைசொல்லினள். எங்கே காணேமே! (நோக்கி) இதோ யாரோவொருவர் இவ்வசோக மரத்தடியிற் படுத்துறங்குவதுபோற் றோற்றுகின்றது. (ஸமீபத்திற்சென்று உற்றுநோக்கி)

ராகம் - ப்யாக் : தாளம் - ஆதி

பல்லவி

அஹஹோ ! இவர்தாம் - அந்தப் ப்ரதானியோ ?
ஆஹ்லாத கரனான - பார்வண பூர்ணமதியோ ?
அல்லதோ - ரவஜபதியோ ?— (அஹஹோ)

அநுபல்லவி

மந்மத - மாரகனே
மஹிளாஜந - மநோரஞ்ஜந
மர்மபஞ்ஜந - மதனே ! (அஹஹோ)

சரணம்

தேவாதி - தேவனே !
தீநசரண்ய - தீராக்ரகண்ய
தேவேந் - திரனே !— (அஹஹோ)

ஆகா ! என்னன்பரே இங்குப் படுத்துறங்குகின்றார். அம்மா ! இவருடைய் ஸௌந்தரமான ரூபமே ரூபம் ! இவரை மணப் பவளின் பாக்யமே பாக்யம் !

ராகம் - கமாஸ் : தாளம் - ஏகதாளம்

பல்லவி

மந்மதனே - வடிவங்கொண்டிங்கு
வன்மையாலெனை - மயக்குகின்றானே !

அநுபல்லவி

அன்பனே யுன்மீது - ஆசைகொண்டேனே
இன்பந்தந்திப்போ - தெழுந்தெனைப்பாரீர்— (மந்ம)

சரணம்

நாதா ! நாமிருவரும் - நாரணி நாபர்போல்
மாதவந்தன்னில் - மகிழ்வோம் வாரீர் !— (மந்ம)
ரதியும் மதனும் - ரமித்திருப்பதுபோல்
ஸதியும் பதியுமாய்த் - தழுவுவோம் வாரீர் !— (மந்ம)

போஜன்:—(தூக்கத்திலிருந்து கானத்தைக்கேட்டு விழித்துக்கொண்டு) ஆ ஆ! இஃதென்ன கானம்! என் காதலியின் இனியகுரல் போல் என் மனத்தைப் பரவசப்படுத்துகின்றதே! என் காதர்கிளி லீலாவதிதான் இங்கு வந்தனளோ? (நோக்கி) ஆ மாதர்க்கரசே! இஃது உன் குரல்போலவே இன்பந் தந்ததே! உன் திருமுகத்தை எங்கும் காண்கிலேனே!

ராகம் - மத்யமாவதி : தாளம் - அடதாளசாப்பு

பல்லவி

வாராயோ? வாராயோ?—வரானே!
வாராயோ? வாராயோ?

அநுபல்லவி

வாராயோ இங்கே நீ - வந்தெனேக்காவாயோ?
பாராயோ என்முகம் - பார்த்தின்பந்தாராயோ? (வாரா)

சரணம்

நாயகி! மெய்மறந்தேன் - உன்னைக்கண்டு
மையலான் மிக்க நொந்தேன்,
பேயனைப் போற்றவிக்கப் - பெருங்காட்டில்
யானிதற்கோ பிறந்தேன்!
மாயின் மன்மதன் விடும் - மலரம்பாலடிபட்டு
சாயும்படவுபோலும் - தழலின்மெழுகுபோலும்
காயும் புழுப்போலும் - கலங்குங் காளைபோலும்
தீயும் பயிர்போலுந் - தியங்குகின்றேனந்தோ! (வாரா)

ஹா லீலாவதி! உன்னையும் யான் காணப்பெறுவேனோ? நின்கழுத்திலும் யான் மாங்கல்யம் பூண்பேனோ? நின் இனிய சொற்களையும் யான் கேட்பேனோ? எவ்விதத்தில் என் காதல் நிறைவேறப்போகின்றது?

லீலா:—(மறைந்துகொண்டு ஆத்மகதமாய்) நான் இவர் மீது காதல்கொண்டிருப்பது போலவே, இவரும் என்மீது

காதல்கொண்டிருக்கின்றனர்! இனி யான் கொண்ட ஸம்கை யுந் தொலைந்தது!

போஜ:—ஹா! ப்ரியே! லீலாவதீ! லீலாவதி!! (எழுந்து முற்றிலுந் தேடப்புகுதல்)

லீலா:—(ஆத்மகதமாய்) ஐயோ! என் காதலனுக்கு எவ்வளவு கஷ்டத்தை யுண்டுபண்ணுகின்றேன்! மஹாபாகா, யான் கிடைப்பனோ இல்லையோவென்று உமது மநமெப்படிச் சஞ்சலப்படுகின்றதோ, அப்படியே என் மநமு மிதுகாறுஞ் சஞ்சலப்பட்டது. உம்முடைய திருநாமத்தைக் கேட்டதும் பேதையான என் மநத்தில் ஒருவிதப் ப்ரேமாங்குரந் தோன்றியது. அது நேராய் உமது திருமுகத்தைக் கண்டதும் ஸூர்ய பிம்பத்தைக் கண்டசெடிபோல் தழைதழைத்து, உமது பரம ஸோபநமான குணங்களாகிய தோஹதத்தையுட்கொண்டு காதல் என்னும் ஒரு பெரிய வ்ருக்ஷமாய் ஓங்கி வளர்ந்திருக்கின்றது! நாதா! நம்மிருவருடைய காதலின் பெருமையை நம்மிருவருடைய ஹ்ருதயமே அறியவல்லது!

போஜ:—ஆ ஆ! இஃதென்ன கனவோ? மயக்கமோ? ஐயோ! என் காதலியின் இனியகுரல் போலவே யிருந்ததே! என்ன ஆஶ்சர்யம்! இங்கே ஒருவரையுங் காணோமே! ஹா ப்ரியே!

மூர்த்தி யெடுத்த ப்ரஸாதம்போலே யுன்றன்
முகிலிசையொத்த மதுரஸங்கீதம்
ஆர்த்தியைப்போக்கியிங் காநந்தங்கொடுத்ததே
ஆரணங்கே யுன்னைக்காண்கிலேனே யந்தோ!

ஓ! இவையெலாம் என் சித்தப்ப்ரமையே! அப்பெண்ணரசி இங்கு வருவதெங்ஙனம்? அவள் யாரிடத்திற் காதல்கொண்டிருக்கின்றனளோ? மந்தபாக்யனான எனக்கும் அம்மாது ஶிரோமணி கிடைப்பளோ?—ஆ மநமே! ஏன் வீணெண்ணங் கொண்டனை? முடவன் கொம்புத்தேனுக் காசைப்படு

வதுபோற் கிடைப்பதற்கரிய விடத்திற் காதல் கொண்டாய்! துர்லபம்! துர்லபம்!!—ஆ ஆ! அவ்வதிதாரத்தையோ யான் இச்சித்தேன்! என்னுசைக்கோரளவில்லை. அத்திவ்ய ஸௌந்தரியோ இவ்வேழையை மணப்பள்? அஸாத்யம்! அஸாத்யம்!! அப்பெண்மணியும் இவ்வெளியவன்மீது காதல் கொள்வளோ?—அப்படிக் கொள்ளினும், யான் இவ் வேழ்மையான நிலைமையிலிருக்கும்பொழுது, அம்மாதரசியை மணந்து கொள்ளவிச்சிப்பது ந்யாயமோ? ஒருவித கஷ்டமு மறியாத அப்பெண்மணியையும் யான்படும் இக்கஷ்டங்களுக் கெல்லாம் உட்படுத்துவது தர்மமோ? பாபம்! பாபம்! எனி ந்த வீண்யோஜனை?—அந்தோ! எவ்வளவுத்ருடஞ்செய்து கொண்டாலும் என் மநம், அவளது திவ்யஸௌந்தரமூர்த்தியை விட்டு அகலவில்லையே! அவள் அன்று போகும்பொழுது சொன்ன சொற்களும், பார்த்த பார்வையும், என்றும் நீங்காத வண்ணம் என்னை அவளிடத்தில் பரவசப்படும்படி செய்து விட்டனவே! அந்தோ! இம்மநம் இனி அம்மாதரசியைவிட்டு ஒரு க்ஷணமேனும் பிரிந்து நில்லாதுபோற் றோற்றுகின்றதே! இத்தர்மஸங்கடத்திற்கு யான் என்செய்வேன்? விடவோ மந மில்லை: தொடவோ திறமில்லை! ஐயோ! இதற்கு யான் என்செய்வேன்? மரணபாதையினும் மதநபாதை மிகக்கொடிய தென்பரீர்களே: அதை இன்றுதான் யான் அநுபவத்திற் கண் டறிந்தேன். எவ்விதத்தில் என் காதல் நிறைவேறப் போகின் றது:!—ஹா லீலாவதி! லீலாவதி!! (மூர்ச்சித்து வீழ்தல்)

லீலா:—ஹா திக்! ஹாதிக்!! மந்தபாக்யையான என் பெயரையே சொல்லிக்கொண்டு கஞ்சமலர்போன்ற கமநீய மான கண்களைமூடிக்கொண்டு களைத்து வீழ்ந்தனரோ என் காதலர்? (அருகிற்சென்று நோக்கி) ஐயோ! என் நாதர் என்ன உறங்குகின்றரோ? அப்பாவிகள் வந்துவிட்டால் என்செய் வேன்? என் அன்பர் பிழைப்பதே அரிதாய்விடுமே. (இன்னு

மூற்று நோக்கி) ஐயோ மூச்சையுங்காணேமே! என்செய்வேன்?' அப்பாதகர்கள் கொல்ல வருவதற்கு முன்னரே நானே இவரைக் கொன்றுவிட்டேனே ! இச்சமயத்தில் அவர்களும் வந்துவிட்டால் என்ன செய்வென் ?

போஜன் :—(பூமியில் ஒருபுரள் புரண்டு) ஹா லீலாவதி! (மறுபடியும் களைத்துறங்கல்)

லீலா :—தைவாதீநம் ! என் அன்பர் பிழைத்திருக்கின்றனர். ஆயினும் களைத்து நித்ரை செய்பவர்போலிருக்கின்றனர். இவரை ஸீக்க்ரத்தில் இவ்விடத்தினின்றும் வெளியிற்செல்லும்படி செய்யவேண்டுமே! என்னசெய்யலாம்? இவரைத் தட்டி எழுப்புவோமா? என்ன நினைப்பரோ? ஆயினும் அவர்கள் வந்துவிட்டால் என் செய்கிறது ? எப்படி நினைத்தாலும் நினைக்கட்டும் ! (மருதுவாய்ப் போஜனைத்தட்டி எழுப்பிக்கொண்டு) என் நாதருடைய ப்ராணன் இப்பொழுது தான் வருகின்றது !

போஜ :—(ஆநந்தத்துடன் லீலாவதியின் கரத்தைக் கட்டியாய்ப் பிடித்துக்கொண்டு) என் கண்மணீ ! லீலாவதி !!

ராகம் - காபி : தாளம் - ஏகதாளம்

பல்லவி

உந்தன் ஹஸ்த ஸ்பர் ஸத்திற்கு
உவமையு முண்டோ !

அநுபல்லவி

ஸௌந்தராங்கி ! சந்திரவதநே
ஸௌகமடைந்தேனே நான் !— (உந்தன்)

சரணம்

சந்தநரஸமோ - ஸஞ்ஜீவியோ !
சந்திரகலையில் - ஜனிக்குமமுதோ !
வெந்த வென்ஹ்ருதய - வ்ருக்ஷஸேகமோ
எந்தன் மநமும்-இன்பங்கொள்கின்றதே!— (உந்தன்)

XVI

BHOJA AND LILAVATI

OR

"THEIR WONDERFUL LOVE AND SUDDEN SEPARATION"

——*Act V, Scene 3, papes* 293-294

Facing page ௨௯௩

# போஜனும் லீலாவதியும்

அல்லது

"அவர்களின் அத்புதமான காதலின் பெருமையும் அத்யவஸரமாய் பிரிய நேரிட்டதின் கொடுமையும்"

போஜன்:—(பயஸந்தோஷ ஸம்ப்ரமத்துடன்) ப்ராணப் ப்ரியே! உன்னையும் மறப்பேனோ! என் ஜீவிதாதாரமே, வெகு ஶீக்ரத்திலேயே கருணாநிதியான கடவுள் நம்மைச் சேர்த்து வைப்பார்! (ஒரு முத்தங்கொடுத்து) என் கண்மணீ! இம் மோதிரம், மெல்லிய மாந்தளிர் போன்ற உன் கரத்தில், ஞாபகக் குறியா யிருக்கட்டும். (தன் கரத்திலிருந்த மோதிரத்தை லீலா வதியின் விரலி லணிந்து) ப்ரியே! யான் போய் வருகின்றேன்.

லீலா:—(கண்ணீர் சொரிய) ப்ராணேஶ்வரா! உம்மை விட்டு யான் எப்படிப் பிரிந்திருப்பேன்? ஐயோ! என்ன ஈர இரக்கமில்லாத நெஞ்சுடையவளாயினேன். (மூர்ச்சித்து வீழப் போஜன் பிடித்துக்கொள்ளல்) நாத! இவ்வேழையைத் தாம் கைவிடலாகாது.

.................................

போஜ:—என் இன்னுயிர்க் காதலி? உன்னை மறந்து விட்டும், யான் பிழைத்திருப்பேனோ?

கண்மணியே! ஆணிப் பொன்மணியே! என்றன்
கண்ணுளிருக்குங் கருமணியே,
பெண்மணியே! என்றன் நவமணியே! உனக்
கெம்மணியும் நிகராகுமோடி!

—அங்கம். V, களம். 3, பக்கம். ௨௧௩-௨௧௪



XVI] போஜனும் லீலாவதியும் [உ-அ-சு

லீலா:—(லஜ்ஜையுடன்) மஹாபாக! யான் யாரென்றறி வீரோ? இவ்விடத்திற் ருங்கள் இன்னும் சற்றுநேரமிருப்பின் ப்ராணனுக்கே அபாயம் நேரிடும். தாமதஞ் செய்யாமல் இக்ஷணமே எழுந்து எங்கேயாயினுஞ்சென்று உயிரைக்காப்பாற்றிக் கொள்ளும்.

ராகம் - கமாஸ் : தாளம் - ஏகதாளம்

பல்லவி

சிறந்தோய்! சென்றிடுஞ் சென்றிடும்!
செவ்வேளே! சென்றிடுஞ் சென்றிடும்!
ஶீக்கிரமாய்ச் சென்றிடுஞ் சென்றிடும்!
ஜகந்-மோஹந-மாரா! ஸு-குமாரா!

அநுபல்லவி

தருணி - ஹ்ருதய - நளிந - தபந!
தாமதஞ் செய்யாதீர்!

சரணம்

கொடியகொலையும் புரிவ ரிவர்கள்
கோரமாங் கிராதர்கள்!
நொடியிலுமது மெலியவுயிரை
நோசவே நொடிப்பர்கள்!—　　(சி)

போஜ:—ப்ரியே! இஃதென்ன விர்தை? இதற்கோ என்னை மூர்ச்சையினின்றும் விழிக்கச்செய்தனை? ஆ ஆ! உனது ஹஸ்தம் தாமரைமலரினும் ம்ருதுவாயிருக்க, உன் ஹ்ருதயம் மாத்ரமேனோ வஜ்ரத்தினுங் கடிநமாயிருக்கின்றதே!

லீலா:—மஹாபாக! என் தாய் தந்தையர் உம்மை இப்பொழுது கொல்லத்தேடிவருகின்றனர்! ஶீக்க்ரம் தப்பித்துக் கொண்டு செல்லும்!

போஜ:—ஸுந்தரீ ! உண்மையோ ? என்மநத்தை மோா இக்கின்றனையோ ? எனக்கு அவ்வளவு மர்யாதை செய்த உன் தாய்தந்தையரோ என்னைக்கொல்லுவர் ? யானிதை ஒரு போதும் நம்பேன் !

லீலா:—மஹாபாக ! நீர் இவர்களது ஸ்வபாவத்தை யறிந்தவரல்லர் ! இப்பில்லர்கள் பாபபுண்யங்களுக் கஞ்சார்கள்! யான் உமது நன்மையை நாடி, எப்படியாயினுமும்மை இப்பாவிகள் கையினின்றும் காப்பாற்ற வேண்டுமென்று ஓடிவந்தேன். என் தந்தையார் மிகவும் நல்லவரே ! ஆயினும் மிக்க கொடியவளான என் தாயின் சொல்லிற்கட்டுண்டு உம்மைக் கொல்லுவதாக ஒத்துக்கொண்டனர். அதை யறிந்து யானிங்கு ஓடிவந்தேன். ஆகலின் தாங்கள் இதைவிட்டு ஶீக்ரஞ் சென்றால் தான் உம்முயிர் காண்பீர்.

போஜ:—என் மநோரஞ்ஜிதமே ! உன்னைவிட்டு யான் எப்படிப் பிரிவேன் ? உன்னைக்காணாதிருப்பதைவிட இப்படிக் கொலையுண்டிறப்பதே எனக்கு நலமாம்.

லீலா:—நாத ! தாங்கள் என் மநத்தையறியாமல் இப்பபடிச் சொல்லுவதும் ந்யாயமோ ? (பாடுதல்)

ராகம் - ஸுருட்டி : தாளம் - ஏகதாளம்

கனவிலுமுனைவிட்டுக் - காதலனே
க்ஷணமும் பிரிவேனோ ?

போஜ:—ப்ரியே ! என்னுயிர் போவதற்குமுன் யானுனைப்பிரியவல்லனோ ? (பாடுதல்)

கனவிலுமுனைவிட்டுக் - காதலியே !
க்ஷணமும் பிரிவேனோ ?

லீலா:—ப்ராணேஶ்வர ! (பாடுதல்)

நாம் பிழைத்திருந்தால் தான் - தங்குமென் ப்ராணனும்
காம்பறுந்தமலர் - கருகாதிருக்குமோ ?
ஆம்பல்முகத்தோனே ! - அழியாதிருக்குமோ ?— (கன)

போஜ:—ப்ராணேஸ்வரி ! (பாடுதல்)
பாம்பு கடித்துமே-பலர் பிழைத்ததுண்டே
ஸாம்பனருளிருப்பின் - சாகேனொருபோதும்,
தாம்பை யரவென்று - தயங்கேனொருபோதும்— (கண)

லீலா:—ஸுந்தராங்க ! (பாடுதல்)
இந்துவைக்குவலயம் - ரவியைச் சக்ரவாகம்
தந்தியை வீணையும் - தனித்திருக்குமோசொல்வீர்?
ஸுந்தர ! நினையன்றி-ஸுகித்திருப்பேனோ சொல்வீர்?

போஜ:—ஸுந்தராங்கி ! (பாடுதல்)
ஸுந்தரியே ! நீ சொல் - ஸோபன வார்த்தையை
அந்தரங்கத்தில் யான்-அறிந்தவனாயினும்
உந்தன் தர்ஸனமின்றேல்-உயிர்த்திருப்பனோவினும்?(கண)

லீலா:—ஆர்யபுத்ர !(பாடுதல்)
ஆருயிர் நேசனே - ஆஸைமணாளனே !
மாரஸுந்தரனே ! என் - மனத்தையறிந்திடும்
வீரனே இதைவிட்டு - வேறிடஞ்சென்றிடும் ! (கண)

போஜ:—ஹ்ருதயேஸ்வரி ! (பாடுதல்)
ஆரணங்கே ! யுன்றன் - ஆநநங்கண்டு யான்
மாரனம்பு பட்டு - மரிப்பது ந்யாயமோ !
ஸாரஸலோசநா - சாற்றுவாய் மாயமோ ! (கண)

லீலா:—ஹா ! ப்ராணநாத ! நீர் என் மனத்தையறிந்தும் இப்படித் தாமதஞ்செய்வது அழகோ ? ஸீக்ரம் வந்தவழியை விட்டு வேறுமார்க்கமாய்ச் செல்லுவீர்.

போஜ:—ப்ரியே ! இதற்கு வேறுபரிஹாரமில்லையோ ?

லீலா:—ப்ராணநாத ! அவர்கள் படுங்கொலைக்கஞ்சாப் பாதகர்கள். தாமதஞ்செய்யவேண்டாம் ! ஸீக்ரம் இவ்விடத்தை விட்டுச் செல்வீர்.

**போஜ:**—ஆ! என்னுயிர்த்தலைவி! உன்னைக்காணாத என் மனம், மழை காணப்பயிர்போல், ஒவ்வொருக்ஷணமும் வதங்கி வாடுமே!

மயங்கினேன், வருந்தினேன்யான்,
வாடினேன் மதந னம்பால்,
தியங்கினேன், வளர்ந்த காதற்
றீயினாற், செயலற் றாவி
தயங்கினேன், தீரா மோஹத்
தாபத்தாற் றளர்ந்து மேன்மேல்
தியங்கினே னுருகி யுன்றன்
திருவழ கதனைக் கண்டே!

இவ்விடத்தினின்றுஞ் சென்று எப்படி யான் உன் ஸௌந்தரமான வதநத்தைப் பாராமல் ஜீவித்திருப்பேன்?

**லீலா:**—ப்ராணநாத! தாமிப்படி யெல்லா மெண்ணி வருந்தித் தாமதஞ் செய்து கொண்டிருந்தால், நம்மிருவரது உயிர்களுக்கும் நாசம் நேரிடுமே! தாமெப்படியாயினும் இக் கொடியவர் கையினின்றும் இக்ஷணம் தப்பிப்பிழைப்பீராயின், ஒருவேளை நாம் தைவாநுகூலத்தாற் சேரலாமே! இனிப் பேதையான யான் தமக்கென்ன சொல்லப்போகின்றேன்?

**போஜ:**—(தீநனாய்) என் ப்ராணநாயகி! நீ உரைப்பதெல்லாம் வாஸ்தவமே! நீ செய்யும் இப்பேருதவிக்கு யானென்ன ப்ரதி செய்யப்போகின்றேன்!

**லீலா:**—(கண்ணீர் சொரிய) ப்ராணநாத! எப்போதுமென்னை மறவாதிருப்பீராயின், அதைக்காட்டினும் சிறந்த உபகாரம் வேறொன்றுமில்லை. அபலையான யான் இனித் தமக்குச் சொல்லவேண்டியதென்ன இருக்கின்றது?

ராகம் - ப்யாக் : தாளம் - ஆதிதாளம்

பல்லவி

ஹரனே ! - மறவாதேயும் - மநோ

அநுபல்லவி

வீரனே யுனைநான் - விட்டிருப்பின்,
மாரனென் ப்ராணனை - மாய்த்திடுவன் !— (ஹரனே)

சரணம்

ஏழையை மறவாதீர் - எப்போதும் !
வாழச்செய்வீ ரென்னை - மநோஹரனே !— (ஹரனே)

போஜ:—(பயஸந்தோஷ ஸம்ப்ரமத்துடன்) ப்ராணப் ப்ரியே ! உன்னையும் மறப்பேனோ ! என் ஜீவிதாதாரமே ! வெகு ஶீக்க்ரத்திலேயே கருணாநிதியான கடவுள் நம்மைச் சேர்த்து வைப்பார் ! (ஒரு முத்தங்கொடுத்து) என் கண்மணீ! இம்மோதிரம் மெல்லியமாந்தளிர்போன்ற உன்கரத்தில் ஞாபகக்குறியா யிருக்கட்டும். (தன்கரத்திலிருந்த மோதிரத்தை லீலாவதியின் விரலிலணிந்து) ப்ரியே ! யான் போய்வருகின்றேன்.

லீலா:—(கண்ணீர்சொரிய) ப்ராணேஶ்வர ! உம்மை விட்டு யான் எப்படிப்பிரிந்திருப்பேன்? ஐயோ ! என்ன ஈசா இரக்கமில்லாத நெஞ்சுடையவளாயினேன்! (மூர்ச்சித்து வீழப் போஜன் பிடித்துக்கொள்ளல்) நாத ! இவ்வேழையைத் தாம் கைவிடலாகாது.

ராகம் - தோடி : தாளம் - ரூபகம்

பல்லவி

சேரவென்னைத் திரும்பவும் வீரா !
திருவுளஞ் செயும் தீரா !

அநுபல்லவி

உருகியுருகி யும்மைக் கண்டுக்
கரையலாகினேன்
அருகி யன்புடன் - அடையவென்னைக்
கருணைசெய்குவீர் !— (சேர)

சரணம்

உனதுவதந கமலந்தன்னை
மநதில் வைத்தே நான்
திநமூர் திநமுந் தேடியுன்னைக்
கனவுகாண்பனே !—. (சேர).

போஜ:—என் இன்னுயிர்க்காதலீ! உன்னை மறந்து விட்டும் யான் பிழைத்திருப்பேனோ?

கண்மணியே ! ஆணிப்பொன்மணியே ! என்றன்
கண்ணுளிருக்குங் கருமணியே !
பெண்மணியே ! என்றன்நவமணியே ! உனக்
கெம்மணியும் நிகராகுமோடி !

(லீலாவதியையணைந்துகொண்டு) ஆ! என் மனோநாயகி! ஸகல ஸாம்ராஜ்யங்கிடைப்பதாயிருப்பினும், அவையெல்லாம் உனது திருமுகத்தின் தர்ஶநம் இல்லாவிடில் எனக்கொரு பெருமையாகா !

ராகம் - செஞ்சுருட்டி : தாளம் - ஆதி

பல்லவி

தருணியே ! யுனை நான்-தர்ஶிக்காமல்
தரிப்பேனோ வென்றன் - தநுவை யிவ்வுலகில் !

அநுபல்லவி

புத்தியும் மநமும் - பொருந்தின துன்னிடம்
ஸத்தியஞ்சொன்னேன்-சடலந்தானென்னிடம்!— (தரு)

சரணங்கள்

மூவ்வுலகத்தையும்-முழுதுமளித்தாலும்
இவ்விடம்விட்டென்றும்-இருக்காதென்றன்மநம்!—(தரு)

பண்ணவன் கருணையால்-பஹு ஶீக்ரத்திலே
உன்னை மணந்துயான்-உயர்நலம் பெறுவேன் !— (தரு)

என் கண்மணீ ! நீ வ்யஸநப்படாதே ! யான் போய்வர விடை யளிப்பாய் ! (லீலாவதிக்கு ஒரு முத்தங்கொடுத்து நிஷ்க்ரமித்தல்)

லீலா :—(கண்ணுக்குத் தெரிந்தமட்டும் போஜன் போவதைப் பார்த்துக்கொண்டிருந்து) ஆ ! இனி எப்பொழுதென்னன்பனைக் காண்பேன் ? அந்தோ ! எனது தௌர்ப்பாக்யத்திற்கும் புத்தியில்லாமைக்கு மளவேது ? பௌர்ணமி சந்த்ரனைக் கார்மேகங்கள் மறைத்தாற்போல் என் கண்கள் முன் தோன்றிய அத்திவ்யஸுந்தரமுகத்தோனை எனது துஷ்கர்மங்களே க்ஷணத்தில் பிரியும்படி செய்தனவே ! ஹா ! ஹா !

ராகம்-ஆநந்தபைரவி : தாளம்-ஏகதாளம்

பல்லவி

எங்கே யாகிலும் முண்டோ-என்னிலுங்கொடியவள் ?

அநுபல்லவி

ஶ்ருங்காரனான வென்றன்-ஶ்ரீமானைப் பிரிந் தின்னும்
மங்கை நான் தரணியில்-மரிக்காம லிருப்பேனோ!—(எங்கே)

சரணங்கள்

அப்போதே யென்னன்பன்-ஆரென்றுங் கேட்டிலேன் !
எப்படியா னிங்கே-இருப்பேனோ வினிமேல் !—(எங்கே)
பாவி நான் பேசிய-பருஷ வார்த்தையைக் கேட்டு
ஆவி கலங்கி யென்றன்-அன்ப னெங்குற்றானோ?-(எங்கே)

ஆஹா! இப்படி என்னைப்போல் இரக்கமில்லாதவள் இப்பூத லத்தில் வேறொருத்தி யிருப்பாளென்று யான் நினைக்கிலேன். ஐயோ! தனது அங்கஸௌந்தர்யத்தினால் மந்மதனையுமநங்க னாக்கி என்மநத்தையுங் கொள்ளைகொண்ட என்னுடைய நாய கனை விட்டுப்பிரியும்படி நேர்ந்த துக்கத்தையான் எவ்வாறு ஸஹிப்பேன்? அவரது அழகைக் கண்குளிரப்பாராமலும், அவ ரது வாக்யாம்ருதத்தைக் கர்ணபுடத்தாலருந்தி ஆநந்திக்காம லும், எப்படி யான் உயிர்த்திருப்பேன்? ஐயோ! நான் சொல் லிய கடுஞ்சொற்களைக் கேட்டு அவர்மநம் எவ்வளவு பரிதபித்த தோ? கையிற்கிடைத்த அம்ருதத்தைப் பாநம்பண்ணாமல்கானலை யருந்தவரும் மூடர்போல் அத்திவ்ய ஸௌந்தர மந்மதனைப் பின் தொடர்ந்து ஸௌகத்தையநுபவியாத என்னைப்போன்ற பேதை யரும் இவ்வுலகிலிருப்பரோ? அவருடன்கூடவே செல்லாமலி ருந்த என்புத்திஹீநத்தை யானென்னவென்று சொல்லுவேன்? அம்மஹாநுபாவன் எந்தப்பட்டணத்தைஅலங்கரிக்கப்போகின் றனனோ? எந்தப் பெண்மணியின் பாக்யம் அவரைப்பதியா ய்ப்பெறச்சேய்யுமோ? ஐயோ! அவர் இன்னாரென்றும் யான் தெரிந்துகொள்ளாமற் போனேனே! பெண்புத்தி பின்புத்தி என்பது உண்மையே!—(சுற்றி நோக்கி) அந்தோ இவ்வுத் யாந வநத்தில் என்னாற்போஷிக்கப்பட்டு இது வரையிலுமென க்கு உல்லாஸத்தைக்கொடுத்த இம் ம்ருகங்களும் பறவைகளுமே என் ப்ராணனை வதைக்கத் தலைப்பட்டனவே!

ராகம்-செஞ்சுருட்டி : தாளம்-ரூபகம்

பல்லவி

என்னவிந்தையோ? அறியேன்
முன்னவனே நான்!

அநுபல்லவி

என்ன விந்தையோ இது?
மன்னவன் மறைந்ததும்
நன்னிலம் நரகாயிற்றே!— (முன்னவனே நான்

சரணங்கள்

மல்லியும் முல்லையும்
ஸல்லிய மாயிற்றே
அல்லியு மரவாயிற்றே !— (முன்னவனே நான்)

வீரணம் மாரணம்
ஸாரஸம் கோரஸம்
ஹாரம்பாரமுமாயிற்றே !— (முன்னவனே நான்)

அந்தோ ! என்றும் காணாத ஒரு தாபம் மநத்திற்றோற்றுகின்றதே ! இதை எப்படியான் தணிப்பேன்? என்னுயிர் அவரிடத்தே சென்று விட்டதே ! இன்னுமிக்கட்டை ஏன் பற்றி எரிகின்றது? (மேல் நோக்கி) ஏ சந்த்ரா ! நீயும் என்னைவதைக்கத் தலைப்பட்டனையோ ?

* "உருவக் காமன் றுணித்த வுடறனைச்
செருவிற் கொல்ல வெழுந்தவெண்டிங்களே !
ஒருவர் சீவநிந் நோருபி ரன்றியெற்
கிருவர்க் கீய விரண்டுயி ரில்லையே !"

அந்தோ ! இஃதென்ன ! இவ்வழகிய தாமரைத் தடத்தருகிற் கூட அனற்காற்று வீசுகின்றதே? (ஸ்பர்ஸ துக்கத்தை அபிநயித்து) ஆ ! இளந்தென்றலே ! நீயோ இப்படி என்னைக்கொளுத்துகின்றாய் ?

† "கொல்லா நோன்பு முநிமலையிற்
றோன்றி யென்னைக் கொல்கின்றாய் ;
பொல்லா மந்த மாருதமே
யென்னோ கருணை பூண்டிலாய் ;
சொல்லார் திருப்பாற் கடலினிடைத்
தோன்றுங் கடுவிற் றன்குணமே ;
யல்லா லமுத குணமுண்டோ
நின்னை வெறுப்ப தறிவன்றே !"

* அரிச்சந்த்ர புராணம்　　† பிரபுலிங்கலீலை

ஈசா! என் வ்யஸநத்தை யான் எவரிடஞ் சொல்வேன்! நான் வஸிப்பதோ அரண்யம்! என் தோழிமார்களோ கொலைக்கஞ் சாதவர்கள்! என் தந்தையாரோ சோராக்ரகண்யர்! என் தாயின் குணதிஸயங்களையோ யான் வர்ணிக்கவேண்டியதில்லை. தாடகை ஸூர்ப்பணகைகளுக்கு இவள் தாயோ,அல்லது அவர்கள் இவளுக்குத் தாய்மார்களோ அறியேன்! இந்நிலையில் என் தாபம் நிவாரணமாகி, என் கோரிக்கை யெப்படி நிறைவேறப் போகின்றது?—ஆஹா மறந்தேன் லங்கையில் ஸீதாதேவிக்கு மோதிரம் கிடைத்ததுபோல், இக்காட்டில் விரஹதாபத்தினால் வருந்துமெனக்குக்கொடுத்த என்னுயிரை மணவாளர்தம் கணையாழியை! (நோக்கி) ஆ ஆ! இது ஸாதாரணமானவர் போட்டுக்கொள்ளும் மோதிரமன்று. இஃது ஏதோ ராஜர்கள் தரிக்கத்தகுந்த கணையாழியே! (உற்று நோக்கி) ஆ ஆ! இஃதென்ன! இதிலென்னவோ எழுதியிருக்கின்றதே. "போஜன்" என்ன! நம்பிதா சொல்லிய ஸ்ரீதாரா ராஜ்யத்துக்குரியவரான அந்தராஜகுமாரரா? ஆ ஆ! அவரை அவனது சிற்றப்பன் கொன்றுவிட்டதாகச் சொன்னாரே! இவரது கையில் அவரது மோதிரம் எப்படி வந்திருக்கும்? ஒருவேளை இவர்தாம் அந்தராஜ குமாரரோ? ஆம்! இல்லாவிடில் இவருக்கு இவ்வளவு தைர்யமும் தைந்யமுமிருப்பானேன்! ஒருவேளை கொலையுண்டிறவாமல் இவ்வேஷத்துடன் தப்பித்து வந்திருக்கலாம். ஆயினுமினி நாம் அவரை எப்படி அடைவது? ஐயோ! அவர் எங்குற்றனரோ? எதற்கும் இவ்விசேஷத்தை நம் தந்தையாருக்குத் தெரிவிப்போம். அவரும் அந்தராஜ குமாரரிடத்தில் அன்புள்ளவர்போலவே தோன்றினர்! தைவாநுகூலமிருக்கின்றதென்றே யான் நம்புகிறேன்! அநாதரக்ஷணமே ஈஸ்வரனுடைய குணமன்றோ? எவ்வளவோ விலையுயர்ந்த ரத்நங்களையெல்லாம் கொண்டுவந்து கொடுத்த என் பிதாவுக்கு இப்புருஷ ரத்நத்தை எனக்களிப்பது அஸாத்யமோ? ஆகையால் அவரிடமே செல்வோம்! (நோக்கி) நம்பிதாவும்

இவரை யாரோ வென்றெண்ணிக் கையிற் கத்தி எடுத்துக் கொல்ல வருகின்றனர். இப்பொழுதே இதை இவருக்குத் தெரிவித்து, இக்கொடுந்தொழிலை விட்டுவிடக் கேட்போம்! என்னவோ சொல்லிக்கொண்டு வருகின்றனர். அதையும் மறைந்து நின்று கேட்போம். (மறைந்து நிற்றல்)

(மேற்கூறியபடி ஜயபாலன் ப்ரவேசித்தல்)

ஜய:—(ஆத்மகதமாய்) ஆ ஆ! இன்று நம்முடன்வந்த மஹாவீரன் அதிஸுந்தரனாயும் அதிபராக்ரமசாலியாயும் காணப்பட்டனனே! ஐயோ! அவனைக்கொல்லும்படி நேர்ந்ததே? நான் எவ்வளவு சொல்லியும் அச்சண்டாளி கேட்கவில்லையே. வழக்கப்படியே கொலைசெய்யவேண்டுமென்று கட்டாயப்படுத்துகின்றனளே. இல்லை என்றால் உடனே உயிரை மாய்த்துக் கொள்ளுவள்! அந்தோ! அவளுடைய வார்த்தைக்கு விரோதமாய் நடக்க யான் அசக்தனாயிருக்கின்றேனே! என் செய்வேன்? அவனை எப்படிக்கொல்வேன்? எதற்கும் அவ்வீரன் எங்கேயுங் காணேம். (தேடிப்பார்த்து நோக்கி) குழந்தாய் லீலாவதி! இவ்விடத்தில் இவ்வேளையிற் றனியாய் என்ன செய்துக்கொண்டிருக்கிறாய்?

லீலா:—(சிரித்துக்கொண்டு) ஒன்றுமில்லை! உங்களுக்கு உதவியாகவந்து அந்தராஜ குமாரனைக் கொல்லலாமென்று வந்தேன்.

ஜய:—ஏன்! சிரிக்கின்றாய்! எந்த ராஜகுமாரனை?

லீலா:—தாரா நகரத்துக்குரிய அந்த ராஜகுமாரனைத் தான்.

ஜய:—என்ன! அப்போஜ குமாரனையா? அவன் இறந்து விட்டு எத்தனை நாட்களாயின? என்ன உனக்குப் பைத்யம் பிடித்ததோ?

லீலா:—நீங்கள் ஒருபோதும் அவரைக் கொல்லமாட்டீர்களோ?

ஜய:—ஆ! புத்ரீ! என்ன அப்படிச்சொல்லுகின்றாய்? அப்போஜ குமாரனையும் யான் கொல்வேனோ? அவன் மாத்ரம் உயிருடனிருப்பானாயின், அப்பாவி முஞ்ஜனைக்கொன்று விட்டு, அவனை இப்பொழுதே தாராராஜ்ய ஸிம்ஹாஸநத்தில் ஸ்தாபிப்பேனே! அவையெல்லாமிருக்கட்டும்! இங்கொரு வீரனிருந்தனனே, அவனை நீ யெங்கேயாகினும் பார்த்தனையோ?

லீலா:—என் அருமைத் தந்தையே! அவ்வீரனைக்கொல்வது ந்யாயமோ? அவர் நமக்கென்ன அபராதஞ்செய்தனர்?

* "கலையெலா முணர்ந்தா ரேனும்,
கரிசறத் தெளிந்தா ரேனும்,
மலையென வுயர்ந்தா ரேனும்,
மநமய லகன்றா ரேனும்,
உலகெலாம் புகழப் பல்லோர்க்
குதவிய கைய ரேனும்,
இலகிய விரக்க மின்றே
லெழுநர கடைவரன்றே!"

ஜய:—குழந்தாய்! நீ சொல்வது வாஸ்தவமே! ஆயினும் அவனைக் கொல்லாவிடின் நின் தாய் உயிரைமாய்த்துக்கொள்ளுவளே! அதற்கென்ன சொல்லுகிறாய்?

லீலா:—அதற்காக ஒருவருடைய உயிரை அந்யாயமாய் மாய்த்துவிடலாமா? பிறகு கடவுளும் நம்மை அப்படித்தானே தண்டிப்பார்! இப்பாவத்தொழிலைத் தாமேன் இன்னும் அநுஸரிக்கவேண்டும்?

† "மங்கைகைகை சொற்கேட்டு மன்னர்புகழ் தசரதனு
மரண மானான்:
செங்கமலச் சீதைசொல்லை ஸ்ரீராமன் கேட்டவுடன்
சென்றான் மான்பின்:

* பதிபசுபாசவிளக்கம் † விவேகசிந்தாமணி

தங்கையவள் சொல்லைக்கேட் டிராவணனுங் கிளையோடு
தானு மாண்டான்:
நங்கையர்சொற் கேட்பதெல்லாங் கேடுதரும் பேருலகோர்
நகைப்பர் தாமே."

ஜய:—குழந்தாய்! நீ சொல்வதெல்லாம் உண்மையே! ஆயினும் என் அருமைக்காதலி இறந்துவிட்டால் நான் என்ன செய்வேன்!

லீலா:—ஆனால் அவ்வீரனைத்தாம் யாரென்று எண்ணினீரோ?

ஜய:—அவன், தான் ஒரு பரதேசியென்று சொன்ன போதிலும், நான் அவனை ஏதோவொரு ராஜவம்சத்திற் பிறந்த வீரனென்றே நினைக்கின்றேன்.

லீலா:—என் தந்தையே! என்னை மன்னிக்கவேண்டும்! யான் அவ்வீரரைப்பார்த்தது முதல் அவரிடத்திலேயே என் மனம் சென்றுவிட்டது. நான் அவரையே என் மனத்தில் என் பதியாக வரித்துவிட்டேன். நீங்கள் கூறிவந்த கோரமான சபதத்தைக்கேட்டு, நான் இங்கே ஓடிவந்து, அவரை ஓடிப்போகும்படியுஞ்செய்து விட்டேன்.

ஜய:—குழந்தாய்! இதை நான் முன்னரே அறிவேன். அவனைப்பார்த்ததும் அவனே உனக்குத் தக்கவனென்று மனத்திலெண்ணினேன். ஆயினும் எனது தௌர்ப்பாக்யம் அவனை நீ அடையாத வண்ணம் தடுத்தது.

லீலா:—இதோ இந்தக் கணையாழியைப் பாருங்கள். என்ன செதுக்கியிருக்கிறது படியுங்கள்.

ஜய:—(வாங்கி உற்று நோக்கி) என் கண்மணி? இஃது உனக்கெப்படிக் கிடைத்தது? இம்மோதிரம் தாரா நகரத்துக் குரியவனாயிருந்த போஜனுடைய தாயிற்றே?

லீலா:—எந்தாய் ! தாங்கள் இப்பொழுது கொல்லத் தீர் மானித்துவந்த அம்மஹாவீரனே இம்மோதிரத்திற்குரியராஜ குமாரன்.

ஜய:—என்ன ! என்ன !! ஆச்சர்யமாயிருக்கின்றதே!!! தன் பெயர் ஸைந்துலனென்று கூறினனே அவ்வீரன் !—ஆ ஆ! அறிந்தேன்! அம்மஹாவீரன் போஜனே! ஸைந்துலனென்றால் ஸிந்துலருடைய புத்ரனென்றல்லவோகொள்ளவேண்டும். மேலும் தன்னுடு மாளவதேசமென்றனன்.—ஐயோ அம்மஹா வீரனையோ யான் கொல்லவந்தேன் ! பாபம் ! பாபம்! இன்று முதல் இக்கொடுந் தொழிலை விட்டுவிட்டேன்! குழந்தாய், அவரெங்கேபோயினர் தெரியுமா? உனக்கு இம்மோதிரம் எப்படிக் கிடைத்தது ?

லீலா:—எந்தாய் ! அவர்போன இடம் எனக்குத்தெரியாது. ஆயினும் அவர் என்னைப்பிரிந்துபோகும்பொழுது இம்மோதிரத்தை என் விரலிலிட்டுத், தன் ஞாபகத்திற் கிருக்கட்டுமென்று சொல்லிப்போயினர். இம்மோதிரத்தின் தர்ஶநந் தான் என்னுயிரை யிதுகாறுங் காக்கின்றது.

ஜய:—என் கண்மணி ! நீ வ்யஸநனப்பட வேண்டாம் ! நான் உன்னை அவருக்கே மணம் புரிவிக்கின்றேன். அவரையும் அத்தாரா ராஜ்யத்தில் நிலைநாட்டுகின்றேன்.

லீலா:—ஐயோ அவர் எங்குற்றனரோ? ஒருவேளை நான் சொல்லிய கொடிய வார்த்தைகளைக் கேட்டுத் தற்கொலை புரிந்து கொண்டனரோ ?

ஜய:—என் செல்வி ! அவருக்கொரு கெடுதியும் நேரிடாது. அவர்தனது நகரத்திற்கே சென்றிருப்பர். நீ வீட்டிற்குட் செல். நான் அவ்விடம் போய்வருகின்றேன்.

லீலா:—எந்தாய் ! யான் அவரைக்காணுமல் ஒரு நிமிஷமேனும் உயிர்த்திரேன் ! தாமுஞ் சென்றுவிடில் என் ப்ராணன் போனது போலவே ! ஆகலின் தங்களுடன் கூடவே வருகின்றேன்.

ஜய:—என் கண்ணே! ஒரு வேளை அவ்விடத்தில் முஞ்ஜனை எதிர்த்து யுத்தஞ்செய்யவேண்டிவரும். நீ பெண்ணுதலாற் பயப்படுவாய்! நீ இங்கேயே யிருப்பாய்! நான் அவ்விடஞ்சென்று அவரையே இவ்விடத்திற்கு ஶீக்ர மழைத்துவருகின்றேன்.

லீலா:—அவர் ஒருபோதுமிங்கே இனி வாரார்! யுத்தம் நேரிட்டால் தானென்ன? எனக்கொரு பயமுமில்லை! என் தாயைப்பார்க்கினும் வேறு பயங்கரமான பதார்த்தமு மினியுண்டோ? நானுமங்கே வந்து தங்களுக்கு ஸஹாயமாய் யுத்தஞ்செய்கின்றேன்.

ஜய:—குழந்தாய்! அப்படியே செய்வோம்! ஆயினுமிவ்வுடையோடு செல்வது தகுதியன்று! குஹைக்குட் சென்று யுத்தவீரர்களைப்போல் உடைதரித்துச் செல்வோம்.

(இருவரும் நிஷ்க்ரமித்தல்)

## ஐந்தாம் அங்கம்

முற்றிற்று.



# ஆறும் அங்கம்

## முதற்களம்

**இடம்:—உஜ்ஜயிநீ நகருக்குச் செல்லும் பாதையில் ஓரிடிந்த மண்டபம்**

(போஜன் விரஹாவஸ்தையுடன் ப்ரவேஶித்தல்)

போஜன்:—ஆ ஆ! ஈஶனது செயலை யான் என் சொல்வேன்! ஸகலத்தையுந்துறந்து, வைராக்யம் பூண்டு, தனியாய்க்காலத்தைக் கழிக்கலாமென்று நினைத்திருந்தவெனக்கும் காதல் என்னும் ஒரு பாஶத்தை யுண்டுபண்ணிப் பிணித்துவிட்டனரே! அந்தோ! அம்மாதரசியைக்காணாமல் யான் எப்படி உயிர்த்திருப்பேன்? ஆஹா! அப்பெண்மணியின் மாசற்ற வடிவம் என் பார்வையைவிட்டு இன்னுமகலவில்லையே! அவளது ப்ரியமான வசநங்கள் இன்னுமென் செவிகளுக்கு ஆநந்தத்தைக் கொடுக்கின்றனவே! ஆ ஆ! அப்பெண்மணியின் சிறப்பை யான் என்னென்றுரைப்பேன்!

* "வில்லொக்கும் நுதலென்றும்,
வேலொக்கும் விழியென்றும்,
பல்லொக்கும் முத்தென்றும்,
பவளத்தை யிதழென்றும்,

* [illegible]

சொல்லொக்கும் பொருளொவ்வாவாற்
சொல்லலா முவமை யுண்டோ?
நெல்லொக்கும் புல்லென் றாலும்
நேருரைத் தாக வற்றே!"

ஆஹா! அவ்வதிதாரத்நத்தைக் கண்டால், ஸகல ஜகன்மோஹ னனை மன்மதனுக்குகந்த ரதிதேவியும் நாணங்கொண்டோடுவ ளே!

ராகம்-ஆபோகி: தாளம்-ரூபகம்

பல்லவி

தராதலத்தில் வேறுமாதும்
ஸமாநமாவளோ?—இந்த

அநுபல்லவி

வராங்கனை இவள் பூவில்
வடிவெய்த லக்ஷ்மியே!— (தரா)

சரணம்

ஒருதரமிவள் முக கமலத்தை
ஓர்ந்தாலும் போதும் போதும்!
தருணீமணீ! இவளை என்று
தர்சிப்பேனோ வறியேனே?— (தரா)

கருமேகத்தைப் பழிக்கும் கசமும், கநககும்பத்தைத் திக்கரிக் கும் குசமும், வஞ்சிக்கொடியை யொத்த இடையும், வாழை ஸ்தம்பத்தையுற்ற தொடையும், ஆஹா! இன்னுமம்மாதரசி யின் உருவம் என்முன் எய்தி நிற்கின்றதே!

* "குழவிக்கோட் டிளம்பிறையுங்
குளிர்மதியுங் கூடினபோ
லழகுகொள் சிறுநுதலும்,
மணிவட்ட மதிமுகமுங்

---

* ஜீவகசிந்தாமணி

தொழுதார்க்கு வரங்கொடுக்குந்
 தொண்டைவாய்த் தூமுறுவ
லொழுகுபொற் கொடிமூக்கும்
 உருப்பசியை யுருக்குமே!"

அந்தோ! அவளது பெருமையில் யான் ஏகதேசமாயினு மறிந்தவனாக வெண்ணிலேன். யான் அம்மாதரசியைவிட்டுப் பிரியும்பொழுது அவளெனக்கெடுத்துரைத்த ஒவ்வொரு சொல்லும் என்னை யவளுக்கு அடிமையாக்கிவிட்டதே! ஹா! லீலாவதி! உன்னை யான் என்று காண்பேன்? எப்படி உன்னையடைவேன்? எவ்வாறுன்றன் பிரிவை ஸஹிப்பேன்?

ராகம் - பூர்வகல்யாணி : தாளம் - ஆதி

பல்லவி

யாருடன் சொல்வேனந்தோ!
 யான் படும் வேதனையை?

அநுபல்லவி

தேறிடுமோ வென்றன் - திருவுளத்துள்ளானே!
மீறிடுங்காமநோய் - மீண்டு முன்னைவிட்டால்!— (யா)

சரணம்

மந்தமாருதம் வீசும் - அந்தப் பூஞ்சோலையில்
வந்தவென் றனைக்கூடித் - தந்திடாயோ வின்பம்?
ஸந்ததமுன்னையே - சிந்தையினிற் கொண்டேன்
அந்தமா முன்முகம் - எந்த நாள் காண்பேனோ?— (யா)

(நேபத்யத்தில்)

ஐயோ! இன்னிக்கூட ஒன்னுங் கிடைக்கலையா?

போஜ:—(செவிகொடுத்து, நோக்கி) யாரோ ஒரு ஸ்த்ரீயும் புருஷனும் பேசிக்கொண்டு இவ்வழியே வருகின்றனர். (உற்றுநோக்கி) என்ன! நம் நாட்டைச்சேர்ந்தவர்கள் போ

விருக்கின்றனரே! இவர் நாம் அன்றிரவிற்கண்ட ப்ராஹ்மணோத்தமரன்றோ? நல்லது என்ன ஸமாசாரமோ இவர்களைக் கேட்டாலறிந்து கொள்ளலாம்.

(கோவிந்தபண்டிதரும், அவரது பத்நி ஸௌந்தரியும் மண்டபத்தின் வெளிப்படியில் நின்று பேசிக்கொண்டபடி ப்ரவேஶித்தல்)

கோவிந்தபண்டிதர்:—அடிபேதாய்! ராமேஶ்வரம் போனாலும் ஶநீஶ்வரன் விடுவனோ?

ஸௌந்தரி:—அதென்ன அப்படிச் சொல்லுகிறைகளே! இந்ததேஶத்து ராஜா மிகவும் நல்லவராமே! நான் சொன்னபடி அவரிடஞ் சென்றீர்களோ?

கோவிந்த:—எங்கே சென்றாலென்ன? நம்முடைய தாரித்ர்யத்திற்கு ஒரு குறையும் வராது.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆம்! அப்ப்ராஹ்மணோத்தமரே இவர்! இந்த மாதுஶிரோமணியும் அவரது தர்மபத்நியே! பாவம்! இக்கொடிய வெயிலில் என்ன கஷ்டப்படுகின்றனர்! இவர்களுடைய வறுமை இன்னும் நீங்கவில்லையோ! நல்லது! இன்னுமென்ன விஶேஷமோ இங்கேயே மறைந்து நின்று கேட்போம். (அப்படியே மறைந்து நிற்றல்)

ஸௌந்தரி:—என்ன! இந்த தேஶத்து ராஜாகூட நமது முஞ்ஜராஜனைப்போல் ப்ராஹ்மணத்வேஷியா என்ன?

கோவிந்த:—பாவம்! இவர் மிகவும் நல்லவரே! குபேரனாயிருப்பினும் நாம் கொடுத்துவைக்க அத்ருஷ்டமிருக்க வேண்டாமா? நம்மாலாகக்கூடியது மொன்றுளதோ?

* "தீங்குவந் தடையு மாறும்,
நன்மைதான் சேரு மாறும்,
தாங்கள்செய் வினையி னாலே
தத்தமக் காய வல்லால்,

* கந்தபுராணம்

ஆங்கவை பிறரால் வாரா
வழுந்தநஞ் சிரண்டி னுக்கும்
ஓங்கிய சுவையின் பேத
முதவினுர் சிலரு முண்டோ !"

ஸுந்தரி:—என்ன ! நீங்கள் சொல்வது விந்தையாயிருக்கிறதே ! அவரைப்போய்ப் பார்த்தீர்களோ ?

கோவிந்த:—அவரது தர்சனம் அவ்வளவு ஸுலபமாய்க் கிடைத்துவிடுகிறதா ? ஏதோ யுத்தம் நேரிடப்போகின்றதாம். அதற்காக இந்த தேசத்திய ராஜன் முதலானோர் யாவரும் மிகவும் பரபரப்புள்ளவர்களா யிருக்கின்றார்கள் ! இந்தத்தடபுடலில் அவரை நான் காண்பது எப்படி ?

ஸுந்தரி:—எதைப்பற்றி யுத்தமாம் ? யாருக்கும் யாருக்குமாம் ?

போஜ:—(ஆத்மகதமாய்) இவ்விஷயம் எனக்குங் குதூஹலத்தை யுண்டுபண்ணுகின்றது. நாம் அறியவேண்டுமென்றிருந்த விஷயத்தை இம்மாது ரமிரோமணியே கேட்டனள் ! நல்லது ! ஸாவதாநமாய் மறைந்து நின்றே மற்றதையுங் கேட்போம்.

கோவிந்த:—ஆஹா ! அவ்விஷயத்தைப்பற்றி யான் என் சொல்வேன்? நாம் என்றையிரவு தாரை நகரைவிட்டுப் புறப்பட்டோமோ, அன்றையிரவே அப்பாதகன் முஞ்ஜராஜன், நமது தர்மப்ப்ரபு ஸ்ரீஸிந்துல மஹாராஜருடைய புத்ரனுகிய அவ்விளங்குமரன் போஜனை கொலைசெய்யப்பார்த்தனனும்.

ஸுந்தரி:—அதன் பிறகு? அதன் பிறகு ?

கோவிந்த:—ஏதோ தைவ வசத்தால், அவனைக்கொலை செய்யக்கொண்டுபோன வத்ஸராஜர் இரக்கங்கொண்டு கொல்லாமல் அவனை நகரத்தைவிட்டு ஓடிப்போகும்படிச் செய்தனராம்.

ஸுந்தரி:—நல்ல காலம் ! ப்ராணன் தப்பியதே !

கோவிந்த:—பிறகு நமது ஸிந்துல மஹாராஜருக்கு முக்ய மந்த்ரியாயிருந்த புத்திஸாகரர் இதனைக்கேள்வியுற்றுத் தமது ஶிஷ்யனுகிய காளிதாஸனை ஆதித்யவர்ம மஹாராஜ ரிடம் அனுப்பினராம்.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆஹா! இவர்களுடைய நன்றி யறிவையும் விஶ்வாஸத்தையும் யான் என்ன சொல்வேன்?

ஸுந்தரி:—மேலே என்ன நடந்ததோ?

கோவிந்த:—இதுமாத்ரமன்று! அக்கொலைப்பாதகன் முஞ்ஜன் பின்னும் செய்த வஞ்சனைச்செயல்களை யான் என்ன சொல்வேன்! அவைகளைக் காதாற் கேட்பவர்களுக்குமே மநம் வ்யஸநத்தினுல் வெடித்துவிடும். அவற்றை யெல்லாம் நேரே யநுபவித்த அவ்வுத்தமிகளுடைய மநம் எப்படியிருக்குமோ?

போஜ:—(ஆத்மகதமாய்) ஹா! இஃதென்ன? அவ்வுத் தமிகள் யாவராயிருக்கக்கூடும்? ஒருவேளை என் அருமைத் தாயா யிருக்குமோ? ஹா! அம்மா! நீ எனக்காக என்ன கஷ்டங்களை யடைந்தனையோ? அப்பாவி என் சிற்றப்பன் உன்னையும் என்ன கஷ்டப்படுத்தினனே? நல்லது! 'உத்தமிகள்' என் றனரே! இன்னும் யாருக்குத் தீங்கிழைத்தனனே அப்பாத கன்? தெரியவில்லையே!

ஸுந்தரி:—(திடுக்கிட்டுச் சற்றுநேரம் பேசாதிருந்து, மூக்கிற் கைவைத்து ஒருபெருமூச்சுடன்) என்ன! ராஜகுமா ரனைக் கொல்லப்பார்த்ததுமன்றி இன்னுமெந்தப் பேதைகளுக் குத் தீங்கிழைத்தானே அத்துஷ்டன்?

கோவிந்த:—அதைச்சொல்ல என் நெஞ்சந் துணிய வில்லை; நாவும் எழவில்லையே!

என்ன வென்று சொல்லுவேன் யான் - இந்த
நன்னடையில்லா முஞ்ஜன் நடத்தை யெல்லாம்:
அந்யாய மந்யாயம் - அவனியில்

இனியிதைப் பார்க்கினு மவஸ்தை யிரா
தன்பே யுருவங்கொண்டு - அனைவர்க்கும்
இன்பமளிக்க விங்கே ஈஶ்வரனே
வந்தனனோ வென்ன - வளர்ந்தெழுந்
ஸௌந்தர காத்ரன் ஸுகுமாரனும்
போஜனைத் தொலைத்த தன்றிப் - புகழ்பெறும்
ரேசமேவடிவா யெடுத்திருக்கு மவ
னைஶக் கண்ணுட்டியையும் - அழித்திடு
மாஶை யென்னும் பெரும் பாஶத்தினற்
காமக் காட்டேரியினற் - கட்டுண்டு
தூமகேதுவைப்போலத் தூர்த்தனவன்
ஒரு சூதுமறியாத - உத்தமி
உருவங்கொண்ட உமாதேவியென
உயர்குலத்திலுதித்து - உந்தப்
பயனைத்தரும் பல நூல் பயந்த
விலாஸவதியைப்பெற - விரும்பி
பலாத்துக்காரமாய்ப் பாவியவன்
இழிவெனவெண்ணமலே - இவள் கற்பை
யழிப்பதற்கெண்ணங்கொண் டந்தனைப்போற்
பழிகொலைக் கஞ்சாமலே - பாதகன்
எழிலிற் கமலையையு மிகழச் செய்யுஞ்
ஸௌந்தரத் தநவுடையாள் - மோகத்தால்
அந்தமிகுந்த வென்னுருயிராம்
பதியே தைவமெனப் - பகர்ந்து
மதிபோலிருந்த மணாளன்போய்த்
தரணியிற் றரிப்பேனே - தநவை
மரிப்பதே யெனக்கினி வரனுகும்

என்று த்ருடங்கொண்டு - ஏகாந்தமாய்த்
துன்றுவிலாஸவதி சோர்ந்திருக்க:-

போஜ:—(பரபரப்புடன் ஆத்மகதமாய்) ஆஹா! என்ன! என்ன! என்னருமைக்காதலி விலாஸவதியையா இப்பாதகன் கெடுக்க முயன்றனன்! அடே பாவீ! என் பதியைக் கைப்பற்றிக்கொண்டது மன்றி என் ஸதியையுமாடா பெண்டாள வினைத்தனை?

* 'பூமரமா யூர்வனவாய் ம்ருகமாய்ப்
புட்குலமாய் மனித ராகிப்
பாமரமாய்ப் பண்டிதரா யொழுக்கத்தா
லுயர்ந்தேணிப் பழுப்போ லேறித்
பூமன்ன ஞயினைமேல்ஸ்வர்க்கபதத்
துனதுபதம் புகுத்தற் பாலாய்
காமமெனு மந்தரத்தே தாவியினிக்
கீழ்வீழக் கடவையோ பாவிநீதான்.'

ஸுந்தரி:—ஆ கஷ்டம்! கஷ்டம்! பதிவ்ரதாஶிரோமணியான அம்பெண்மணிக்கோ இவ்வித துன்பம் நேரிட்டது! அதற்கப்புறம்!

கோவிந்த:—அதற்கப்புறமா?

ஆகா! யானென் சொல்வேன்!—அன்னவள்
மோஹாகாரஞ் சென்று சோர்ந்திருக்க,
காமாந்தனு மந்தக் - கடோரன்
ஸாமாந்யயைப்போற் றனக்கிணங்கி
இவள்தனக் குடன்படுவள்—என்று
அவள்நெறியறியா தவனைத்துணிக்

* திருக்குற்றாலஸ்தலபுராணம்

கட்டாயமாயவளைத் - தொட்டு
இஷ்டாபிபூர்த்தியை யியற்றவெண்ண,
கொடுந்துயரினில் மூழ்கிக் - கூவென்று
நடுங்கித்தரைபட்ட நாவாய்போற்
கரைகாணாதவளாய்க் - களைத்துத்
தரையிற் றடாலெனச் சாய்ந்தனளாம்.

போஜ:—அடே த்ரோஹீ! காமுறக்கூடிய ஸாமாந்ய ஸ்த்ரீ என்று விலாஸவதியையுமெண்ணினையோ? தொட்டமாத்ரத்தில் உன் உயிரைத் தொலைக்குங் காலகூடவிஷமென அவளை நினைத்தாயில்லை! அடே க்ஷத்ரியாதமா! அவளை நீ கண்களாற் பார்க்கவும் தகுமோ? அவளை மநத்திலேனும் இச்சிக்கலாகுமோ? அப்பதிவ்ரதோத்தமை எனக்கே உரியாளென்று நீ யறிந்திலையோ! ஓர் ஆண்ஸிம்ஹத்திற்கென்று வைத்திருக்கப்பட்ட பலியை ஒரு நரியும் இழுத்துச் செல்லக்கூடுமோ? அடே! நீசா! ஏனிப்படி வீணாயழிகின்றாய்!

பிறர்மனை நயப்பா ரிங்கும்
பெறுவது துன்ப மாகும்,
பிறர்மனை நயப்பா ரங்கும்
பெறுவது நரக மாகும்;
பிறர்மனை நயப்பார் தம்மைப்
பித்தரென் றுரைக்க லாகும்,
பிறர்மனை நயப்பா ரந்தோ
பெறுவர்பே ரிடர்க ளெல்லாம்.

ஸுந்தரி:—(கண்ணீர்ததும்ப) ஐயோ! அம்மஹாபதிவ்ரதையைக் காப்பாற்ற ஒருவருமங்கிருக்கவில்லையோ! என்ன செய்வள், பாவம்! அப்பேதை?

கோவிந்த:—அப்படியிருக்க,

தற்செயலா யங்குவந்த - தரங்கவதி
நற்செயல் வடிவா மந்த நங்கையைக்கண்டு
ஓட்டமா யோடிச்சென்று - உரைக்கவே
நாட்டுப்பெண்ணைக்காண நாடுபுகழ்
ஸுப்ரபா தேவியாரும் - ஸகியுடன்
ஸசிவோத்தமர் புத்தி ஸாகரரைத்
துணையாயழைத்துக்கொண்டு - துடித்துக்
க்ஷணத்திலங்கேசென்று கடிந்துரைக்க
மாந்திற் சொல்லம்புபட்டு - மன்னவன்
சினந்துகைப்பிடிப்பட்டத் திருடனைப்போல்
சற்றுப் பேசாதிருந்து-சமேரலென்று
உற்றவர்களைநோக்கி யுக்ரமாகத்
தள்ளிக்கொண்டு ஸுப்ரபையைத் - தராதிபன்
துள்ளிக்குதித்துக்கொண்டு ஜ்வலித்தனனும் !

போஜ :—(ஆத்மகதமாய் கோபத்தினுற் சிவந்தகண்களுடன்) அடே பாபீ ! நராதமா ! உன்னுடைய சூதும்வாது மிப்பொழுது தானடா செம்மையாய்ப் புலப்படுகின்றன! உன் துஷ்ட நடத்தையை யறியாமல் விலாஸவதியை வீணுய்ப்பழித்தேனே ! இப்பொழுதன்றோ தெரியவருகின்றது அவளுடைய தூய்மை ! அவள் ஒருபோது மெனக்கு விஷம் வைத்திரான் ! அவள் ஒருபோதும் என்மீதில் பழிசொல்லியிருள் ! இவையெல்லாம் உன்னுடைய கற்பனையே ! உன்சதியே ! உன் துர்மதியே !

ஸுந்தரி :—அதன் பிறகு ? அதன் பிறகு?

கோவிந்த :—ஆஹா ! அதன் பிறகா ?

பின்பு நடந்ததை யான் - பெருக்கில்
துன்பக்கடல் மூழ்கித் தொய்ந்திடுவாய் !

சுருக்கிச் சொல்லுவே னாயினுஞ் - தோகையே !
கருத்திற்றான் கொண்டவெண்ணங் கைகூடா
தென்றவனறிந்து கொண்டு - இவர்களைக்
கொன்றுபழி தீர்க்கவெண்ணிக் கொலைபாதகன்
பிடித்துவரச் செய்து - பெரியோர்கள்
நடுநடுக்கங் கொண்டு நகரைவிட்டு
அகன்றிடும்படியாக - அரணுள்ளே
புகுதற்கரியபுல் சிறைப்படுத்தி
கடுங்கா வலில்வைத்துக் - கடோரனவன்
படுத்தி வைக்கின்றனனும் பல்விதத்தே !
புத்திஸாகரருமதைப் - பொறுக்காமல்
மித்ரர்களுடன் வெளிச் சென்றனராம் !

போஜ:—(ஆத்மகதமாய் ஸோகாக்ராந்தனாய்) ஆ! அம்ப ! ஸஸிப்ரபா ! உனக்சோ இப்படிப்பட்ட சஷ்டம் நேர்ந்தது ! நீ அப்பாதகன் கையிலசப்பட்டுக்கொண்டு எவ்வாறெல்லாம் பரிதவித்தனையோ? ஐயோ ! உன்னைக்காப்பாற்றுபவர் ஒருவரு மில்லையோ ?

ஸுந்தரி:—ஆ ஆ ! ஸாதுகளுக்கு என்னென்ன கஷ்டங் களை யுண்டு பண்ணுகிறார் பகவான் ! அதற்குமேலே என்ன நடந்ததோ ?

கோவிந்த:—பிறகு புத்திஸாகரருடைய வேண்டுகோளி ன்பேரில், இந்நாட்டிற்கரசராகிய ஆதித்யவர்ம மஹாராஜர், அந்தராஜ குமாரனுக்காக முஞ்ஜனிடம் ஒரு தூதனை யனுப்பி னராம்.

ஸுந்தரி:—எதற்காகவோ ?

கோவிந்த:—ஸமாதானமாய், ராஜ்யத்திற்குரியவனான போஜனுக்குத் தாராராஜ்யத்தை ஒப்பிவித்து, அவனிடத்தில் இந்த உத்தமிகள் இருவரையுஞ் சேர்ப்பித்து, 'மன்னிப்புக்கேட்

க்கொண்டால் நலமாயிருக்கும், இல்லையேல் முஞ்ஜனுக்குந் தமக்கும் வீண்சண்டைக்கு ஹேதுவாகுமென்று தெரிவிப்பதற்காம்.

ஸுந்தரி:-அதற்கு நமது முஞ்ஜமஹாராஜர் பதில் என்ன சொன்னாராம் ?

கோவிந்த:—அதற்கவன், "நான் கைப்பற்றிக்கொண்ட பொருளை யொருபோதுந் திரும்பிக்கொடேன். என்னைக்கேட்பதற்கு இவன் யார் ? விலாஸவதியையும் ஸுப்ரபா தேவியையும் அப்பொழுதே எமபுரத்திற்கதிதியாய் அனுப்பிவிட்டேன் ? வேண்டுமாயின் அப்பயலுக்கு உதவியாய் வந்த இவ் வாதித்யவர்மனுடன் போர்புரிய யான் ஸித்தமாயிருக்கின்றேன்" என்று சொல்லியனுப்பினனும். இது தான் யுத்தத்திற்குக் காரணமாம்.

போஜ:—(சோகாக்ராந்தனாய்) ஹா ! என் அருமைத் தாயே ! என்னுருயிர் விலாஸவதி ! உங்கள் கதி இதுவோ ? (மூர்ச்சைகொண்டு கீழேவீழ்தல்)

ஸுந்தரி:—அதன் பிறகு என்ன ஸமாசாரமாம் ?

கோவிந்த:—அதன் பிறகு இருபுறத்தாரும் ஸேனைகளைச் சேகரஞ்செய்தனர்களாம் ! முஞ்ஜனும் ஸைந்யத்துடன் இந்நகருக்கருகில் வந்திறங்கியிருக்கின்றனனும். ஸிப்ராநதிக்கரையில் ஒரு பெரிய யுத்தம் நடக்கப் போகின்றதாம். அதற்காகவே இன்று காலையில் புத்திஸாகரர் காளிதாஸர் முதலானவர்களெல்லோரும் ஒரு கூட்டங்கூடினார்கள் ! பட்டணமெல்லாம் ப்ரமாதப்படுகின்றது ! இந்தப் பெருந்தடபுடலில் நம்மைக்கவனிப்பவர் யார் ?

போஜ:—(மூர்ச்சை தெளிந்து, செவியுற்று, தீநமாய்) ஆ ஆ ! நமக்காக எத்தனை பெயர் கஷ்டப்படுகின்றனர்கள் !

ஸுந்தரி:—ஐயோ ! வெயில் பட படைக்கிறதே ! கால் பொரிந்துபோகிறதே! இனிமேலெங்கே வெளியிற்போகிறது?

இத்தீர்த்தத்தையாயினுங் குடித்து இன்றைக்கி காலக்ஷேபஞ் செய்துவிடுவோம் வாருங்கள்.

கோவிந்த:—அப்படி என்ன நாழிகை ஆய்விட்டது ! (வானத்தை நோக்கி) ஆ ஆ! இதென்ன! ஸூர்யன் உருமழுங் கியுங் கொளுத்துகின்றானே. இஃதென்ன உத்பாதம் ? இதன் காரணமென்னோ ?—(யோஜித்து) ஐயோ ! இப்பொழுது இத்தனைபெயர்கள் செய்த ப்ரயத்நங்களெல்லாம் வீணாய்ப் போய்விடுகின்றனவே ! சுவரை வைத்துக்கொண்டல்லவோ சித்ரமெழுதவேண்டும் ! என்ன கஷ்டகாலம் ! என்ன கஷ்ட காலம் !!

ஸுந்தரி:—(ஆத்மகதமாய்) இதென்ன ! இருந்தாப்போ லிருந்து வானத்தைப் பார்த்துவிட்டு வ்யஸநப்படுகிறார் ! (ப்ர காசமாய்) ஐயோ! இதென்ன இப்படி வ்யஸநப்படுகிறீர்களே! நமக்கென்ன புதுஸங்கடம் வரப்போகிறது ? நமது வறுமை தான் குறைவில்லாமலிருக்கிறதே ! இன்னுமென்ன கஷ்ட மிருக்கப்போகிறது.

கோவிந்த:—ஐயோ ! இந்தச் சண்டையின் தீர்மானத் தினாலாயினும் போஜன் பட்டத்திற்கு வருவனென்று நினைத் தேன் ! நம்முடையவறுமைக்குமொரு விமோசநகாலம் வரு மென்றெண்ணினேன் ! அவ்வெண்ணமெல்லாம் வீணாய்ப் போயினவே ! ஐயோ ! யாரைப்பற்றி இந்த யுத்தம் நடக்கப் போகிறதோ, அந்தராஜகுமாரனே இன்னுமொரு முஹூர்த் தத்திற்குள் ஸர்ப்பத்தினாற்றீண்டப்பட்டு மரிக்கப்போகின்ற னனே !

ஸுந்தரி:—அதெப்படி ! அதெப்படி ! அந்த தாய்தகப்ப னற்ற பிள்ளை பட்டத்துக்கு வராமற்போனாலும், ஆயுஸ்ஸுட னாவது கொஞ்சகாலம் இருக்கக்கூடாதா ?

கோவிந்த:—இவ்விதமான உத்பாதம் நேரிட்டால் போஜன் ஸர்ப்பந்தீண்டி இறப்பனென்றன்றோ மறையோர் கள் அவனது ஜாதகத்தை நோக்கியுரைத்தனர்.

போஜ:—(மறைந்திருந்த விடத்தைவிட்டு ஓடிவந்து கோவிந்த பண்டிதருடைய காலில் வீழ்ந்து) ஸ்வாமி! அந்த போஜனைத் தாங்கள்தாம் இத்தருணங் காப்பாற்றவேண்டும். வ்யாதியை யறிந்தவர்களுக்கு, அதைசமநஞ்செய்யத் தகுந்த ஔஷதமுந் தெரிந்திருக்குமன்றோ!

கோவிந்த:—அப்பா! நீ யார்? அப்போஜன் உனக்குத் தெரியுமோ? அவனெங்கேயிருக்கின்றனனும்?

போஜ:—அடிகாள்! அவன் இருக்குமிடத்தை யானறியேன்! ஆயினும், அவன் எனக்கு நன்றாய்த்தெரியும். அவன் என் ப்ராணநேசனானதனால் என் மநம் கலங்கி மிகவும் கஷ்டப் படுகின்றது. கருணைகூர்ந்து, இதற்கு ப்ரதிக்ரியையாக சாந்தி ஏதாயினுஞ்செய்து, அப்போஜனை ஸர்ப்பத்தினின்றும் இத்தருணம் காப்பாற்றுவீரென்று தம்மை சரணமாயடைகின்றேன்.

கோவிந்த:—அப்பா! நீ சொல்வதெல்லாம் வாஸ்தவமே! அந்தராஜகுமாரனுடைய குணாதிசயங்களைக் கண்டவர்கள் எவர்கள்தாம் அவனுக்காகப் பரிதாபப்படமாட்டார்கள்? ஆயினும், ஸர்வதரித்ரனாகிய யான் என்ன செய்யக்கூடும்? வேதங்களை; என்னவோ ஸாங்கோபாங்கமாய் அத்யயநஞ் செய்திருக்கின்றேன்! இதற்குப் ப்ரதிவிதாநம் வேதோக்த ப்ரகாரமாய் ஸர்ப்பஹோமஞ் செய்தாற்றான் அவன் பிழைத்திருப்பான்! அதற்குச் சில ஸாமக்ரிகள் வேண்டுமே.

போஜ:—என்ன வேண்டுமோ?

கோவிந்த:—கொஞ்சம் ஸமித்து, கொஞ்சம் க்ருதம், கொஞ்சம் த்ரவ்யம் வேண்டும். மேலும் ஒரு ப்ராஹ்மணர் கூடவிருந்து சில மந்த்ரங்களை ஜபிக்கவேண்டும். இவற்றில் ஒன்றுமென்னிடத்திலில்லையே! யானென் செய்வேன்?

போஜ:—அந்தோ! நானும் இப்பொழுது இவற்றை ஸம்பாதிக்க அசக்தனாயிருக்கின்றேன்! மேலும் யான் இவ்வூருக்குப் புதியவன்.

(நேபத்யத்தில்)

"அநித்யாநி ஶரீராணி !
விபவோ நைவ ஶாஶ்வத:!
நித்யம் ஸந்நிஹிதோ ம்ருத்யு:,
கர்த்தவ்யோ தர்மஸங்க்ரஹ: !!"

"ஶ்லோகார்த்தேந ப்ரவக்ஷ்யாமி
யதுக்தம் க்ரந்தகோடிபி:;
பரோபகார: புண்யாய,
பாபாய பரபீடநம்."

ஸுந்தரி:—(செவிகொடுத்து, நோக்கி யாரோ ஒரு ப்ராஹ்மணர் இவ்வழியே பாராயணம் பண்ணிக்கொண்டு வருகிறார் ! அவரையாவது கேளுங்களேன் ! நாழிகையாய் விட்டால் என்னசெய்கிறது ?

கோவிந்த:—(நோக்கி) ஆம் ! யாரோ மஹாதர்மிஷ்டரான ப்ராஹ்மணர் போலிருக்கின்றார். தைவாதீநம் ஒரு கையில் தர்ப்பை ஸமித்துக்கள் எடுத்து வருகின்றார் ! க்ருதம் கூட மற்றொருகையில் எடுத்துக்கொண்டு வருகின்றார்போலும் ! ஏதோ தலையில் மூட்டையும் பலமாகத் தானிருக்கின்றது. இவரைக் கேட்டால் நமக்கு வேண்டிய ஸாமாக்ரிகள் கிடைக்குமென்பதில் ஸந்தேஹமில்லை.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆம்! ஸாக்ஷாத் பரமேஶ்வரனைப் போல் விபூதிருத்ராக்ஷதாரியாய்த் தேஜோமயமாய் விளங்குகின்றார் ! கருணைக் கடவுளே நம்மைக்காப்பாற்றுவதற்கு இம் மஹாநுபாவரைக் கொண்டுவிட்டனர் போலும்.

(ப்ரவேஶித்து)

ப்ராஹ்மணன்:—(பரபரப்புடன் ஒருவரையும் பாராமற் பாராயணம் பண்ணிக்கொண்டு)

*" ஆத்மவத் ஸர்வபூதேஷு
யஸ் சரேத் நியதஸ் ஶுசி: !
அமானீ நிரபிமாந:
ஸர்வதோ முக்த ஏவ ஸ: !!"

"ஆத்மௌபம்யேந ஸர்வத்ர
ஸமம் பஶ்யதியோ ऽர்ஜுந ;
ஸுகம் வா யதிவா து:கம்
ஸ யோகீ பரமோ மத:."

கோவிந்த:—(அருகிற் சென்று) ஶாஸ்த்ரிகளே! ஶாஸ்த்ரிகளே!

ப்ராஹ்மணன்:—(திரும்பிப்பார்த்து) யாருங்கணம்! போகச்சே அபிஷ்டுவோட்டங் கூப்பிடறது?

கோவிந்த:—நான் தான் ஶாஸ்த்ரிகளே! அசலூர் இருப்பது.

ப்ராஹ்மணன்:—ஆ! எங்கே வந்தீர்? என்னோடுகூடப் ப்ராஹ்மணார்த்தத்துக்குப் போகலாமென்று பார்க்கிறீரோ? உள்ளூரிலிருப்பவருக்கே ஒன்றுங் கிடைக்கலேயாம். போதாக் குறைக்கு நீர் வெளியூரிலிருந்தும் வந்துவிட்டீரோ?

கோவிந்த:—அதற்கன்று, ஶாஸ்த்ரிகளே! அநாதனாயிருக்கும் ஒரு சிறுவனை ஸர்ப்பமொன்று இன்னும் முஹூர்த்தத்திற்குள் தீண்டப்போகின்றது. அவனைக்காப்பாற்றுவதற்காக ஒரு ஹோமஞ் செய்யவேண்டியிருக்கின்றது. தாங்கள் அதற்குச் சற்று ஒத்தாசை செய்யவேண்டும்.

ப்ராஹ்மணன்:—(ஸந்தோஷத்துடன்) அதற்கென்ன? இப்படிப்பட்ட தர்மகார்யத்தைச் செய்விப்பதில் எனக்கு ரொம்பவும் ஸந்தோஷம்! ஆனால் அதற்குவேண்டிய ஸாமக்ரிகள் தவிர, ஆசார்யதக்ஷிணை விஶேஷமாய்த் தரவேண்டுமே.

கோவிந்த:—அதற்காகத் தான் தங்களைப் ப்ரார்த்திப்பதும்! நாங்கள் மஹத்த ஏழைகள் பாருங்கள்! கொஞ்சம் ஸமித்து, கொஞ்சம் க்ருதம், கொஞ்சம் த்ரவ்யம் ஒத்தாசை செய்வீர்களானால் யதேஷ்டம். இவ்வளவு உபகாரஞ் செய்வீர்களானால் தங்களுக்கு இஹத்தில் ப்ரக்க்யாதியும், பரத்தில் புண்யமும் ஶாஶ்வதமாயிருக்கும்.

ப்ராஹ்மணன்:—போம், ஐயா, போம்! ப்ரக்க்யாதியுமாச்சுது! புண்யமுமாச்சுது!! ஸிறகாம், க்ருதமாம், த்ரவ்யமாம்!—ஏன் ஐயா! ஒரே தடவையாய், இந்நகரையே தங்களுக்குக் கொடுத்துவிடும்படி கேட்கிறது தானே?

கோவிந்த:—அப்படித் தாங்கள் சொல்லக்கூடாது!

* "கொடையே யெவர்க்கு மெப்பேறுங்
கொடுக்கும், நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியி
னொழுகச் செய்யும், குறைதீர்ந்த
கொடையே பகையை யுறவாக்குங்
குலவும் பூத மனைத்தினையுங்
கொடையே புரக்கு மென்றுள்ளங்
கொள்ளப் புகன்றான் கௌதமனே!"

ப்ராஹ்மணன்:—ஆமாம்! இந்த தர்மோபதேசமெல்லா மென்னிடத்தில் வேண்டாம்! இந்த வேதாந்தமெல்லாம் நானுமறிவேன்! போம்! ஐயா! போம்! இந்த ஐம்பத்துக்குத்தானா ஹோமம்பண்ணப் போகிறேனென்று சொன்னீர்! ஆஹா! பண்ணிவிட்டாப்போலேதான்! அந்த அநாதப் பிள்ளையைப் பாம்புகடிச்சாலென்ன பாளைக்கட்டினாலென்ன? வெறுங்கையை வைத்துக்கொண்டு முழம்போடப் பார்க்கிறீரோ? போம்! போம்!! (வேகமாய் நிஷ்க்ரமித்தல்)

* சூளாமணி

ஸுந்தரி:—ஏது? இவரைக்கேட்பதிற் ப்ரயோஜநமில்லை. நேற்று நீங்கள்கொண்டுவந்த விறகில் கொஞ்சம் மிகுதியிருந்தது. அதாயினுமிருக்கிறதாவென்று பார்க்கிறேன்! (மண்டபத்திற் குள் நிஷ்க்ரமித்தல்)

கோவிந்த:—அப்பா! இவ்விடத்திலேயே இரு! இதோ ஸமீபத்தில் ஒரு ப்ராஹ்மணர் இருந்தார்! அவரை யாயினும் போய்ப் பார்த்து வருகின்றேன்! (நிஷ்க்ரமித்தல்)

போஜ:—ஆஹா! இந்த ஸங்கடத்திற்கு யான் என்செய்வேன்? என் அருமைத்தாய் ஸாவித்ரயை படுங்கஷ்டங்களை நினைந்து அழுவேனு? என் ப்ராணப் ப்ரியை விலாஸவதிக்கு நேர்ந்த துன்பங்களுக்காக வருந்துவேனு? என் ஆசைநாயகி லீலாவதியை எண்ணி யெண்ணி யுருகுவேனு? அல்லது எனக்கு இப்பொழுது வந்திருக்கும் மஹத்தான இந்த ஆபத்திற்காகத் துக்கிப்பேனு? ஐயோ! எத்தனை ஆபத்துக்களினின்றும் தப்பித்துக்கொள்வது? கெட்டகாலம் வந்தால் துன்பங்கள் ஒன்றின் மீதொன்றாய்வந்துகொண்டே யிருக்கும்போலும். "பட்டகாலிலேயேபடும், கெட்டகுடியே கெடும்" என்னும் பழமொழி வாஸ்தவமே. அந்தோ! எங்கே போனுலும் நமது ப்ராணனுக்கே ஹாநிவருகின்றதே! அப்பாவி முஞ்ஜனே ராஜ்யத்திற் காசைப்பட்டு என்னைக்கொல்லப்பார்த்தனன்! அதனின்றுந் தப்பித்துக்கொண்டேன்! தனது ரஹஸ்யங்கள் வெளிவந்து விடுமோவென்று அப்பில்லராஜன் மனைவி என்னைக்கொல்லப் பார்த்தனள்! அதனின்றுந் தப்பித்துக்கொண்டேன்! இப்பொழுது தைவமே என்னைக்கொல்லப்பார்க்கின்றதே! இதனின்றும் எப்படித் தப்பிப்பிழைப்பேன்? ஈச்வரன் தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். ஹே ஈசா!

ராகம் - கமாஸ்: தாளம் - ஏகதாளம்

பல்லவி

காவாய்! காவாய்!! - கருணுஜலதே!

அநுபல்லவி

தேவா! தேவா!!-இயங்கிடு மென்னை!

சரணங்கள்

ஆநந்தக் கொடியே-அற்புதத் தேனே!
தீநதயா நிதே-தீருமென் குறையை!— (காவா)
ப்ராணனுட் ப்ராணனே-ப்ரஹ்லாத ரக்ஷகனே!
த்ராணஞ் செய்வா யென்னைத்-த்ரைலோக்யநாதனே!--(காவா)
ஹரஹர ஶிவஶிவ-அநக வுமாபதே!
அருளமுதந்தந்து-அவநஞ்செய்வா யென்னை!— (காவா)

(திரும்பியும் ப்ரவேஶித்து)

கோவிந்த பண்டிதர்:—(பரபரப்புடன்) அப்பா! எங்கெங்கேயோ சென்றேன். மஹா அக்நிஹோத்ரியான ஒரு ப்ராஹ்மணோத்தமர் மாத்ரங் கிடைத்தனர். மற்றதொன்றும் கிடைக்கவில்லையே!

(ப்ரவேஶித்துப் பரபரப்புடன்)

ஸுந்தரி:—இதோ கொஞ்சம்விறகு இருக்கிறது! (விறகைக் கட்டாகக் கட்டிக்கொண்டு வைத்தல்)

கோவிந்த:—(நோக்கி) ஸரி! இந்த விறகு போதும்! மற்றவை வேண்டுமே?

போஜ:—ஆயின் இப்பொழுது அவஶ்யமாய் வேண்டியவை எவை?

கோவிந்த:—கொஞ்சம் நெய்யுந் த்ரவ்யமுந்தான் வேண்டும். தர்ப்பை ஸமித்துக்களுடன் அந்த ப்ராஹ்மணோத்தமர் வந்துவிடுவார். அவரை வைத்துக்கொண்டு மற்றவைகளை நடத்திமுடிப்பேன்.

போஜ:—எங்கேயாகிலும் ஸமீபத்திற் கடைகளிருக்கின்றனவோ?

கோவிந்த:—ஆதித்யவர்ம மஹாராஜருடைய பட்டணத்தில் கடைகளுக்கென்னகுறை? பணமிருந்தால் வேண்டியவை யெல்லாம் ஆபணத்திற் கிடைக்கும்!

போஜ:—அப்பட்டணம் எவ்வளவு தூரத்திலிருக்கின்றதோ?

கோவிந்த:—இங்கிருந்து கால் க்ரோஶமிருக்கும்.

போஜ:—அப்படியாயின், யான் ஒரு க்ஷணத்திற்சென்று வேண்டியவற்றை வாங்கிக்கொண்டு வருகின்றேன்! தாங்கள் அதற்கு முன்னதாக என்னவென்ன செய்யவேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து வைத்துக்கொள்ளுங்கள்!

கோவிந்த:—அப்பா! மற்றவையெல்லாம் ஒரு க்ஷணத்தில் ஸித்தப்படுத்திவிடுவேன். (நோக்கி) அந்தப்பிராஹ்மணோத்தமரும் இதோ அக்னிகுண்டத்தை எடுத்துக்கொண்டு வருகிறார்! ஶீக்ரஞ்சென்று வாங்கிக்கொண்டு வருவாய்!

போஜ:—இதோ ஒரு க்ஷணத்தில் வந்து விட்டேன்! (நிஷ்க்ரமித்தல்)

கோவிந்த:—ஸோமஸுந்தர தீக்ஷிதரே, வரவேண்டும்! (ஸோமஸுந்தர தீக்ஷிதர் தர்ப்பை ஸமித்துகளுடன், அக்னி குண்டத்தை யெடுத்துக்கொண்டு ப்ரவேஶித்தல்)

ஸோம:—மற்ற ஸாமக்ரிகள் வந்து விட்டனவோ?

கோவிந்த:—இன்னும் இல்லை! அப்பிள்ளையாண்டான் போயிருக்கின்றான்! ஶீக்ரத்தில் வந்துவிடுவன்! தாங்கள் அதோ அம்மண்டபத்திற்குட் சென்று ஆரம்பித்து விடுங்கள்! நானும் ஸ்நாநஞ்செய்துவிட்டு ஒரு க்ஷணத்தில் வந்துவிடுகின்றேன்.

ஸோம:—கொஞ்சம் தீர்த்தம் வேண்டும்.

கோவிந்த:—யாரடியங்கே? ஒரு செம்பிலே மடியாய்த் தீர்த்த மெடுத்துக்கொண்டு வந்து மண்டபத்திற்குள் வைத்துச் செல்!

(நேபத்யத்துள்)

இதோ கொண்டுவந்து வைத்துவிட்டேன் !

கோவிந்த:—ஸரி! நான் போய் வரட்டுமோ ?

ஸோம :—அப்படியே செய்கிறது ! ஶீக்க்ரம் வந்து விடுங்கள் !

கோவிந்த:—ஒரு க்ஷணத்தில் வந்து விடுகின்றேன்.

(இருவரும் நிஷ்க்ரமித்தல்)

---

## இரண்டாங் களம்

---

இடம்:—அதேவிடத்தில் ஓர் பாதை

(பிறகு ஹரிஹரரை முன்னிட்டுக்கொண்டு, விநீத வேஷத்துடன், ஶஶிப்ரபா தேவியாரும், சாருமதீ தேவியாரும், விலாஸவதீ தேவியாரும் ப்ரவேஶித்தல்)

சாருமதி:—அடிகாள் ! தங்களுக்கு மிக்க ஶ்ரமத்தைக் கொடுத்துவிட்டோம். நாம் அவ்விடத்திற் கண்ட தபோவநம் இவ்வளவு தூரமிருக்குமென்று யாம் நினைத்திலேம். ஒரு வேளை நாம் வழிதப்பி வந்துவிட்டோம் போலிருக்கின்றது ! இவ்விடத்தை நோக்கில் இஃதொருபாலைவநம்போல் தோன்றுகின்றதே !

* 'விரிந்தசெங் கமர்களும், வெயிலின் வெந்துகீழ்
சரிந்தமண் டபங்களும், சருகு வெந்துமேற்
பொரிந்தமா மரங்களும், புகைந்து பார்மிசை
எரிந்தெழு கடுஞ்சுரத் தெல்லையெய்தினோம்!''

---

* அரிச்சந்திரபுராணம்

ஶஶி:—ஆம்! நாம் வழிதப்பித்தான் வந்திருக்க வேண்டும். அன்றேல் உதித்து நாலுநாழிகைப் பொழுதிற்குப்புறப்பட்ட நாம், உச்சிப்பொழுதாகியும் ஆஶ்ரமத்தை அடையாமற் போவது எப்படி? மேலும், ஒரு நாளுமில்லாமல், இன்று அகோரமாய்க் கொளுத்துகின்றதே வெயில்!

விலாஸவதி:—ஆம்! ஆயினும் இவ்வெயிலே இவ்வநத்திற்கு எவ்வளவு ஶோபையையுண்டு பண்ணுகின்றது பாருங்கள்!

"அந்தவெயி லத்தகல் விசும்பிடை வெடித்துவிழு
மானையினெடுந்
தந்தமணி யைத்துளி யெனக்கருதி யுண்டுழல்வ
சாதகமெலாம்!
வெந்தெரி கொளுஞ்சுரு கெழுந்துவிழு கங்குலில்
விரிந்தநிழலில்
வந்தடரு மெண்குமரை யுங்கடமை யுங்கலையு
மானினமுமே!"*

ஹரிஹரர்:—ஸகல தேஶங்களிலும் ஸஞ்சரித்தும் பழக்கமுள்ள எனக்கே இவ்வெயிலில் கால்கள் தத்தளிக்கின்றனவே! பால்யம் முதற் கஷ்டமென்பதே இன்ன தென்றறியாமல், எப்பொழுதும் அரண்மனையினிடையில் பஞ்சணையின் மீதும், ரத்நக்கம்பளங்களின் மீதுமே யுலாவிவந்த நுங்களது மெல்லிய பாதங்கள் இக்கொடு வெயிலில் நடப்பதனால் எவ்வளவு நொந்தனவோ?

ஶஶி:—ஆம்! விரைந்து செல்வோமென்றாலும், கண்ணுக்கெட்டியவரையிலும் அத் தபோவநம் காணப்படவில்லையே.

* அரிசந்திரபுராணம்

சாருமதி:—ஆகலின் நாம் என்னசெய்வோம்? குழந்தாய் உனக்கு எவ்வளவு கஷ்டத்தைத் தருகிறோம்.

விலாஸவதி:—என்னருமைத்தாயே! எனக்கொன்றும் கஷ்டமில்லை. ஆயினும் பெரியோர்களான உங்களுக்கெல்லாம் மஹத்தான ச்ரமத்தைத் தந்துவிட்டேன். இப்பாவியின் ஜந்மம் பெரியோர்களை வருத்துவதற்காகவே ஈசனால் ஸங்கல்பிக்கப் பட்டது போலும்? இல்லாவிடில், இவ்வித சிந்தைகளுக்கெல் லாம் ஆளாகியும் எனது ப்ராணன்கள் வஜ்ரத்தினற் செய்யப் பட்டவைபோற் கொஞ்சமேனும் சலங்காமல் நிற்கின்றனவே!

சசி:—ஐயோ! நாமெங்குச் சென்ருல் தானென்ன? என் செல்வனிருக்கும் இடமே தெரியவில்லையே! அவனை நான் திரும்பியும் இக்கண்களினாலும் பார்ப்பேனோ?

விலாஸவதி:—அந்தோ! விதித்தகாலத்திலல்லாமல் மர ணம் நேரிடாதென்று பெரியோர்கள் சொல்வது வாஸ்தவமே! அதற்கு நானே நிதர்சனமாயிருக்கின்றேன்! என் ப்ராணநாத ரைவிட்டகன்றும் யான் இன்னும் ஜீவித்திருக்கின்றேனன்றோ? அப்பாவி புஞ்ஜனால் எவ்வளவு கஷ்டங்களை யெல்லாமடைந் தும், அவற்றையெல்லாம் பொறுத்து, இக்கல்லுடல் கரையா திருக்கின்றதே!

ராகம்-நீலாம்பரி : தாளம்-த்ரிபுடை

பல்லவி

ஆ ஹந்தா! வென் ஸந்தாபத்தை
ஆருடனறைவேன்!

அநுபல்லவி

மோஹத்தால் மாமனைநம்பி
முழுமோசம் போனேன்!— (ஆ)

காரணங்கள்

சிந்தை கைந் துருகியான்
  தியங்குகின்றேனே !
வந்தெனைக் காவாவிடில்
  மகம் மகிழ்வேனோ ?— (க)

நாதா ! உன்றன் முகத்தை
  நான் காண்பதென்றோ ?
பாதகி யானிங்கே
  பரிதவிக்கின்றேன் ?— (க)

பாவி என்கொடுமையாற்
  பட படைக்க வெயில்,
ஆவி சோர்ந்தார்யபுத்ரர்
  ஐயோ வலைகின்றாரோ !— (க)

கல்லினுங் கடினமாய்க்
  கரைந்துருகா தென்றன்
பொல்லாத ப்ராணந்தான்
  போகவில்லையே யந்தோ !— (க)

சாருமதி :—என் கண்மணீ ! இவ்வுடல் என் செய்யும் ? இருத்தலும் சாதலுந் தைவச்செயலன்றோ ?

விலாஸவதி :—என் அன்னையே ! என் ப்ராணநாதரைப் பறந்தோடச் செய்தேன் ! என் பெரியோர்களை என்விஷய மாய்ப் படாதபாடுகளையெல்லாம் படப் பண்ணினேன் ! என் ஶீலத்தைக் கெடுக்கவந்த அப்பாதகனால் மஹாபயமடைந்தேன் ! என் அருமைமாமியோடு சிறைச்சாலையில் அளவற்ற கஷ்டங் களையெல்லாம் பட்டேன் ! இவற்றிற்கெல்லாம் சகித்ததோ என் தக்தஹ்ருதயம் ? மேல் விழுந்த இடியைச் சட்டைபண்ணமல் நிற்கின்ற பர்வதஶிகரம்போல், இவ்வளவு துக்கங்களை யெல்லா மடைந்தும், இன்னுமெவ்வளவு வந்த போதிலும் சலியேனை

ன்று சொல்வதுபோல், ஸ்திரமாய் அமைக்கப்பட்டிருக்கின்றதன்றோ என் ப்ராணன் !

ஹரி:—ராஜபுத்ரீ ! ஸகல நீதிகளையுமறிந்த நீயே இப்படி வருந்துவது தக்கதன்று! உனக்கு ஒரு குறையும் வாராது! ஈசனது அருளால், கணவனை நீ வெகு சீக்கிரத்தில் யடையப்போகின்றாய் !

விலா:—அது துர்லபம்! துர்லபம்! இப்பாவியேன் மீதும் ஈசனுக்கருள் உண்டாகுமோ ?

ஹரி:—அடி பேதாய் ! ஈசன் உன்னைப்போன்ற மஹா பதிவ்ரதைகளுக்கு உதவி செய்யாவிடில், பின்யாருக்குத்தான் செய்வர் ?

விலா:—மந்தபாக்யமுடையவளான யான் அம்மஹாநுபாவரையு மடையப்பெறுவேனோ ? ஆசையினுற் பத்தப்பட்டு என்னன்பரைப் பறிகொடுத்தேனே ! பாவியேன் நானன்றோ அப்புருஷோத்தமருடைய நாசத்திற்குக்காரணமானேன் !

ஶசி:—அடிபேதாய் ! ஏன் இவ்வாறெல்லாம் வீணாய்ச் சிந்திக்கின்றனை ? உன் பாதிவ்ரத்யமஹிமையே என் செல்வனை ஸகல ஆபத்துக்களினின்றும் ரக்ஷிக்குமே! அவனுக்கு ஒரு குறையும் நேரிடாது! மநத்தைத் த்ருடஞ்செய்துகொள் !

விலா:—என்னருமை மாமி! என்மநம் எப்படித் த்ருடங்கொள்ளும் ! என் ப்ராணபந்து இந்நேரம் உயிருடனிருப்பாராயின், தாங்கள் படும் இத்தனைத் துயரங்களைக்கண்டுஞ் சும்மா விருப்பரோ ? அவர் ப்ராணனுடனிருப்பாராயின், அவர் இருக்குமிடமாயினுந் தெரிந்திருக்கு மன்றோ ? ஏது ? ஏது ? அப்பாதகன் முஞ்ஜனுற் கொலையுண்டுதான் இறந்திருக்கவேண்டும் !

ஶசி:—பக்தஸம்ரக்ஷகர் என்று காரணப்பெயர் பூண்ட ஹே ப்ரணதார்த்திஹர! ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காக விரைந்து சென்று துஷ்டநிக்ரஹஞ் செய்யும் ஹே சரண்ய !

எங்கள் விஷயத்தில் நமது கல்யாணகுணங்களெல்லாம் மித்தையாகக் காணப்படுகின்றனவே! நம்மையே தஞ்சமென்று அடுத்திருக்குமெங்களைத் தேவரீர் மறந்துவிட்டீரோ? எங்களுடைய ப்ரலாபங்கள் தேவரீருடைய திருச்செவிகளிற்படவில்லையோ? ஐயோ! காண்கிலேனே என் செல்வனை! உயிருடனிருப்பானோ என்கண்மணி? பாவியேன் யான் அச்சிறைச்சாலையிலேயே மடிந்திருக்கலாகாதா!

* 'பிறியார் பிறிதல் பெரியோய் தகவோ?
நெறியோ நிலைநீ நினையாதிருத்தல்?
வறியோர் தநமே தமியேன் வலியே!
அறிவோ வினையோ அரசே யரசே!

விலா:—(சோகாக்ராந்தையாய்) ஹா ஸர்வலோகமநோஹர! ஸத்யபரிபாலநத்தையே வ்ரதமாகக்கொண்ட ஹே தர்மஜ்ஞ! சரணமடைந்தாரை ரக்ஷிப்பதர்காக ஸர்வஸ்வத்தையுந் துறக்கத்துணிந்த ஹே ஸர்வஜீவகாருண்யக்தே! துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலநார்த்தம் நீண்ட திருக்கைகளையுடைய ஹே புருஷோத்தம! பௌலகேசிமுதலான சூரத்தவீரர்களையெல்லாம் க்ஷணத்தில் விபாதஞ்செய்த நமக்கு இவ்வேழைகளை ரக்ஷிப்பதற்குக் கை நீளவில்லையோ? கற்பழிக்கவந்த காதுகனைக் கண்டிப்பது தர்மபரிபாலநமாகாதோ? ஹா நாதா! காணேனே நமது திருக்கைகளை! ஹா ப்ராணபந்தோ! மறந்துவிட்டீரோ எங்களை?

* 'திரையார் கடல்சூழ் லுலகின்
றவமே! திருவின் றிருவே!
நிறையார் கலையின் கடலே!
நெறியார் மறையின் னிலையே!

* கம்பராமாயணம்

கரையா வயர்வே யெமைமீ
　கருணு லயனே யெனிமென்
றுரையா யிதுதா னழகோ
　வுளமொக் தடியே மலேதல் ?

சாரு:—(விலாஸவதியைத்தழுவி) ஆ என் கண்மணீ! ஏன் இப்பாவியின்வயிற்றிற்பிறந்தனை? ஆ ஸஹோதரா! உனது தந்த்ரமே தந்த்ரம்! அற்ப காலமநுபவிக்கத்தக்க ராஜ்யத்திற்காசைப்பட்டு என்னவென்ன வெல்லாஞ் செய்யத்துணிந்தனை?

ஹரி:—அம்மணீ! ஸகல தர்மங்களையு மறிந்த தாங்களே இவ்வாறெல்லாம் வ்யஸநப்படுவது தகுதியன்று!

* "ஆக்கமும் வறுமை தானும்
　அல்லது மகிழ்வு மெல்லாம்
நீக்கமில் லுயிர்கட் கென்றும்
　நிலேயெனக் கொள்ளற் பாற்றே!
மேக்குயர் கடவுட் டிங்கள்
　வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளும்
　முறைமுறை பொருந்திற்றன்றே!"

விலா:—(வாமாக்ஷிஸ்பந்தநத்தை நடித்து) ஆ! இஃதென்ன? திடீரென்று எனது இடதுகண் துடிக்கின்றதே?

ஹரி:—சாபம்! சாபம்!

விலா:—இந்த மந்தபாக்யைக்கும் சாபம் கிடைக்கப் போகின்றதோ?

ஹரி:—அம்மணீ! ஸுகமுந் துக்கமும் மஹான்களுக்கு இயல்பாயுள்ளனவன்றே? ஆகலின் நன்னெறி பிறழாத தமக்கு நலம் விரைவிலமாய்க்கிடைக்கவே போகின்றது.

---

* கந்தபுராணம்

ஶசி:—ஐயோ ! கால்கள் பொரிந்து போகின்றனவே ! எங்கேயாகிலும் ஓரிடத்திற்குச் செல்வோமென்றால், கண்ணுக் கெட்டியவரையிலும் ஓர் ஊருங்காணப்படவில்லையே !

ஹா :—அம்மணீ ! நீங்கள் அதோ அம்மண்டபத்திற் கருகாமையிலிருக்கும் மாமரத்து நிழலிற் சற்றுத் தங்கியிருங்கள் ! நான் சென்று ஸமீபத்தில் ஏதாயினும் ஊர் உளதோ வென்று பார்த்துவருகிறேன்.

சாரு :—ஆம் ! அப்படிச் செய்வதுதான் யுக்தம்.

(யாவரும் நிஷ்க்ரமித்தல்)

## மூன்றாங் களம்

இடம்—அதேவிடத்தில் மண்டபத்திற்குள் ஓர் அக்நிஶாணம்

(பிறகு ஸோமஸுந்தர தீக்ஷிதர் அக்நிகுண்டத்தைக் கீழே வைத்து, தர்ப்பைகளைப் பரப்பி, நெருப்பை மூட்டிக் கொண்டிருக்க ; ஶசிப்ரபையும் சாருமதியும், விலாஸவதியும் ஒரு மரத்தடியில் வீற்றிருக்க, கோவிந்தபண்டிதர் பரபரப்புடன் ப்ரவேஶித்தல்)

கோவி:—ஶாஸ்த்ரிகளே ! எல்லாம் ஸித்தமாயினவோ ?

ஸோம:—ஸகலமும் ஸித்தமாய் விட்டது. இந்த ஸர்ப்ப ஹோமத்திற்குப் பூர்வாங்கமாகிய விக்நேஶ்வர பூஜை முதலிய க்ரியைகளும் முடிந்துவிட்டன. இனிமேல் ஸங்கல்பம் பண்ணிக்கொண்டு முக்யாஹுதி பண்ணவேண்டியது தான். பாக்கி வந்துவிட்டால் தொடங்கிவிடலாம். அது வராதது தான் தாமஸம்.

கோவி:—அந்தோ ! அப்பொழுது சென்ற அப்பிள்ளையாண்டான் இன்னும் நெய் வாங்கிக்கொண்டு வாராமலிருப்பதற்

ருக்காரணம் யாதோ? நாழிகையாய் விடுகின்றதே! அம்மு ஹூர்த்தம் அதிக்ரமித்துவிட்டால் ஸர்வப்ரயத்தநமும் வ்யர்த் தமாய்விடுமே! (சுற்றி நோக்கி) இதோ யாரோ இம்மரத்தடி யில் வெயிலினால் வருந்தி விஶ்ரமிக்கின்றனர் போலும். இவர் களைக்கேட்டால் ஏதாயினும் த்ரவ்யங் கிடைக்குமென்று தோன் றுகின்றது. (அருகிற் சென்று) யாவரோ உயர்குலத்திலுதித்த ஸ்த்ரீகள் போலிருக்கின்றனர்! (ப்ரகாஶமாய்) புண்யவதிகாள்! இங்கொரு ராஜகுமாரனுடைய ப்ராணனை ஸர்ப்பத்தினின் றுங் காப்பாற்றுவதற்காக ஒரு ஸர்ப்பஹோமம் பண்ணவேண் டியிருக்கின்றது. அதற்காகக்கொஞ்சந் த்ரவ்யமிருந்து கொடுப் பீர்களாயின், அவனது ப்ராணனைக் காப்பாற்றிய பலன் உங்க ளுக்குண்டாகும்.

சாரு:—ஐயோ பாவம்! இந்தாருங்கள்! (நூறு நாணயங் களைக்கொடுத்து) பாவம்! எந்த ராஜகுமாரனையோ?

கோவி:—அடே பையா ராமக்ருஷ்ணா! இங்கே ஶீக்ரம் ஓடிவாடா!—அம்மணீ! இந்தப் பேருதவிக்கு நான் தங்களுக்கு என்ன ப்ரதி செய்யப்போகின்றேன்.

(வேகமாய்ப் ப்ரவேசித்து)

ராம:—ஏன் அப்பா! ஏதுக்குக் கூப்பிட்டே?

கோவி:—(ஒரு நாணயத்தைக்கொடுத்து) இதை எடுத்துக் கொண்டுபோய் ஶீக்ரம் ஒரு வீசைநெய் வாங்கிக்கொண்டு ஓடிவா!

ராம:—நெய்யா! இதோ ஒரு நிமிஷத்தில் வந்துவிட் டேன்! (நிஷ்க்ரமித்தல்)

ஶஶி:—
விலா:— } எந்த ராஜகுமாரரோ?

கோவி:—எந்த ராஜகுமாரனா! இந்நகரில் இப்பொ ழுது எவனைப்பற்றிப் ப்ரமாதமான யுத்தம் நடக்கப் போகின்ற தோ அந்த ராஜகுமாரனே!

சாரு:—இந்நகரின் பெயர் யாதோ? அஃது இன்னும் எவ்வளவு தூரமிருக்கின்றதோ?

கோவி:—அம்மணீ! இதுதான் ஆதித்யவர்ம மஹா ராஜர் ஆளும் உஜ்ஜயிநீநகரம்: ஒரு கால் க்ரோஸமுங்கூட இல்லை.

விலா:—(ஜநாந்திகமாய்) உஜ்ஜயிநீ நகரத்திற்கே தான் நாம் வந்தோமோ!—அடிகாள்! அந்த ராஜகுமாரர் இப்பொழுது எங்கே இருக்கின்றனரோ?

கோவி:—அம்மணீ! அவன் இருக்கு மிடம் ஒருவருக்குந் தெரியவில்லை. அவ்விளங்குமரன் தன் சிற்றப்பனால் ராஜ்யத்தினின்றும் வஞ்சனையாய்த் துரத்தப்பட்டு எங்கேயோ சென்றனனும். ஆயினும், அவனது ப்ராணநேசனுகிய காளிதாஸன் என்பவன் ஒருவன் மாத்ரம் அவன் உயிருடனிருப்பதாகச் சொல்லுகின்றான்! ஆனல், அவனுக்கும் அந்த ராஜகுமாரனிருக்குமிடந் தெரியவில்லையாம்.

ஸஸி:—(ஜநாந்திகமாய்) ஆ! இஃதென்ன! விந்தையாயிருக்கின்றது! ஒருவேளை நம் செல்வன்தான் இந்த ராஜகுமாரனுயிருப்பனே? (ப்ரகாஸமாய்) ஐயா! அந்த ராஜகுமாரன் எந்த நகரத்தைச் சேர்ந்தவனே? அவனது பெயர் யாதோ?

கோவி:—அவனது பெயர் தெரியாதவர் யாவர்? அத்தர்மராஜனது பெயரை ஒருதரஞ்சொன்னல், வருமிடையூறுகளெல்லாம் ஊழிக்காற்றிற் பூழிப்பஞ்சுபோலாகுமே!

(போஜன் தள்ளாட்டங்கொண்டு ராமக்ருஷ்ணனுடைய தோளைப்பற்றிக்கொண்டு நெய்ப்பாத்ரத்துடன் ப்ரவேஸித்தல்)

கோவி:—(போஜனை நோக்கி) அப்பா! ஏனிவ்வளவுதாமஸம்? (நெய்யைக் கையில் வாங்கிக்கொண்டு) ஏனெரு மாதிரியாயிருக்கின்றாய்! இதோ இப்படி உட்கார்ந்துகொள் (போஜன் அவ்விடத்தில் ஒரு புறமாய் உட்கார) ஸாஸ்த்ரிகளே ஸீக்

த்ரம் ஆரம்பித்துவிடுங்கள். அம்மணி! நீங்களுமிங்கேவந்து உட்காரலாம்!

ஸோம:—இதோ அப்படியே! (ஆசமநஞ்செய்து ப்ராணாயாமம் பண்ணி ஸங்கல்பம் சொல்லுதல்)

ஶசி:—(ஜநாந்திகமாய்) இச்சிறுவன் யாவனோ? இவனைப்பார்க்கும்பொழுதே என்கண்மணி போஜனைப் பார்ப்பது போலிருக்கின்றது!

சாரு:—ஆம்! ஆயினும் இவனது உடையைப்பார்த்தால் யாரோ பரதேஶி போலிருக்கின்றனனே!

விலா:—(ஆத்மகதமாய்) இவரது முகம் ஏன் இப்படி தைந்யத்தை யடைந்திருக்கின்றதோ? ஒருவேளை இவர் தாம் அந்த ராஜகுமாரரோ?—அஃதெங்ஙனங்கூடும்! அவரிருக்குமிடம் யாருக்குந்தெரியாதென்று சொன்னரே! (மூவரும் மண்டபத்தில் வந்துட்காருதல்)

ஸோம:—என்ன! ஆரம்பித்து விடலாமோ இல்லையோ?

கோவி:—அதற்கென்ன தடை? இவ்வுத்தமிகளுடைய பேருதவியினல், ஸகலமும் நிர்விக்நமாகவே முடியும்.

ஸோம:—அதற்கையமுண்டோ?

ஓம் ஸ்ரீ கோவிந்த! கோவிந்த!! கோவிந்த!!! அத்ய ஸ்ரீ பகவத:..........விக்ரமஶகாப்தே கoஎo-தமே ஆநந்த நாமஸம்வத்ஸரே உத்தராயணே வைஶாக மாஸே ஶுக்லபக்ஷே த்ரயோதஶ்யாம் ஶுபதிதௌ ஶுபயோகே ஶுபகரணே முஹூர்த்தே அத்ய ஸ்ரீ பகவதஶ் ஶேஷஶாயிந: ப்ரஸாதஸித்த்யர்த்தம், ஸ்ரீபோஜகுமாரஸ்ய ஸர்ப்பபய நிவாரணார்த்தம், ஸமஸ்த அரிஷ்டநிவாரணார்த்தஞ்ச, ஸர்ப்பஹோமம் ஹோஷ்யாமி. ஹோமஸம்ரக்ஷணார்த்தம், ப்ராஹ்மணம் த்வாம் வ்ருணே.

கோவி:—தயாஸ்து! (போஜனை நோக்கி) அப்பா! ஏன் சாய்கின்றாய்? ஒருவேளை உனக்குப் பயமாயிருந்தால் உள்ளே போகலாம்!

போஜ:—அஃதொன்றுமில்லை! தாங்கள் ஸமீபத்திலிருக்கும்பொழுது யாருக்குத்தான் பயம்? அடியேனுமிந்த ஹோமத்தைப்பார்த்துக் கொண்டிருக்கும்படி தாங்கள் திருவுளஞ்செய்யவேண்டும்!

கோவி:—ஆனால் ஸரி! இப்படியே ஒரு புறமாய் உட்கார்ந்துகொள்? (போஜன் அப்படியே உட்காருதல்)

சாரு:—அக்கா! இச்சிறுவனுடைய குரலைக் கேட்டீர்களோ?

ஶஶி:—என்னவோ? இவ்விளங்குமரனைப் பார்க்கப் பார்க்க என்மநத்தில் தோன்றாத எண்ணங்களெல்லாந் தோன்றுகின்றன.

விலா:—ஆ! எனக்குமப்படியே தோன்றுகின்றன.

ஸோம:—(ஸர்ப்பங்களை ஆஹ்வாநம் பண்ணிக்கொண்டு)

" ஆயாஹீந்த்ரபயிஷி ரீளிதேஷிர்
யஜ்ஞமிமம் நோ பாகதேயம் ஜுஷஸ்வ;
த்ருப்தாம் ஜுஹோமி மாதுளஸ்யேவ யோஷா
ஸாமஸ்தே பைத்ருஷ்வஸேயீ வபாமிவ!.

" புஶஸ்கரம் பலவந்தம் ப்ரஸாந்த்வம்
த்வமேவராஜாயிபதிர் பவஸ்வ;
ஸங்கீர்ணநாமாஶ்வபதிர் நராணும்
ஸாமங்கல்யம் ஸததம்தீர்வ மாயு: !"

XVII

THE SARPA-HOMA

OR

" BHOJA IS RECONCILED TO VILASAVATI "

——*Act VI, Scene 3, page* 351

Facing page ௩௫௧

3

# XVII

## ஸர்ப்ப ஹோமம்

அல்லது

### "போஜன் விலாஸவதியை ஸ்வீகரித்தல்"

விலா:—(போஜனருகிற் சென்று) ஆர்யபுத்ரா! அடியேன் செய்த அபராதங்களை யெல்லாம் மநத்தில் வைக்காமல் இப்பேதையை மன்னிக்க வேண்டும். (போஜனுடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தல்)

போஜன்:—(விலாஸவதியைத் தூக்கி எழுப்பி) ஆ என் ப்ராணேஶ்வரீ! பாவியேன் சிறிதேனு முன்றன் நற்குணங்களை யறியாமல், உனக்கு பலவிதத்திலு மபராதியானேன்.

குலதந ரநுரஞ்ஜிப் பர்களஃரோ குணத்தை
ஜலஜஸ்பக நேத்ரீ! ஸாத்வி! என்னை க்ஷமிப்பாய்;
தலையிலணிவதே தான் தாத்ரியெங்கும் ப்ரஸித்தம்,
மணிரதனை யுதைத்துத்தள்ளுவார் மண்ணிலுண்டோ?

விலா:—(ஸாத்வஸ ஸந்தோஷத்துடன்) ஆர்ய புத்ர! இப் ப்ரியவசநங்களுக்கு யான் அர்ஹை யாவேனோ? இன்றன்றோ எனது ஜந்மம் ஸபலமாயிற்று!

(இருவரும் ஒருவரை யொருவர் தழுவி நிற்றல்)

—அங்கம். VI, களம். 3, பக்கம் உ௫௬

போஜ:—(ஆத்மகதமாய்) அந்தோ ! என்னவோ மயக்கம் போல்வருகின்றதே !

ஸோம:—ஓம் !

* " நமோ அஸ்து ஸர்பேப்யோ
யே கே ச ப்ருதிவீ மநு ;
யே அந்தரிக்ஷே யே திவி
தேப்யஸ் ஸர்பேப்யோ நம : !"

ஓம் தக்ஷகாய ஸ்வாஹா ! ஓம் தக்ஷகாயேதந் ந மம ! (அக்நியில் ஆஹுதிசெய்தல்)

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ ! இஃதென்ன ! என்னை அறியாமலே என் தேஹம் சோர்வடைகின்றதே ! வாய் உலர்கின்றது ! எனது அங்கங்கள் கம்பமடைகின்றன ! உட்கார்ந்திருப்பதற்குக் கூட சக்தியற்றவனா யிருக்கின்றேனே ! எவ்வளவு த்ருடஞ்செய்துகொண்டாலும் எனது மநம் ப்ரமையடைதல் போலிருக்கின்றதே !

ஶசி:—(ஜநாந்திகமாய்) இச்சிறுவனைப் பார்த்தால் ஏதோ வருத்தமுற்றவன் போற்றோன்றவில்லையா ?

சாரு:—(ஜநாந்திகமாய்) ஆம் ! அப்படித்தானிருக்கவேண்டும் !

'சோர்ந்த யாக்கையும் சோர்ந்த முடியும்
கூர்ந்த வியர்வுங் குறும்பல் லியாவும்
வற்றிய வாயும் வணங்கிய வுறுப்பும்
உற்று நோக்குவோர்க் குண்மை விளங்குமே !'

விலா:—(ஆத்மகதமாய்) அந்தோ ! இவருடைய வருத்தத்திற்குக் காரணம் யாதோ ? இவரைப்பார்க்கப் பார்க்க ஏனோ என் மநம் இவரிடத்திற் பத்தப்படுகின்றதே.

ஸோம:—ஓம் !

*“ யே௦தா ரோசனே திவோ
 யே வா ஸூர்யஸ்ய ரஸ்மிஷு ;
யேஷா மப்ஸு ஸதஸ்க்ருதம்
 தேப்யஸ் ஸர்பேப்யோ நம: !”

ஓம் வாஸுகயே ஸ்வாஹா! ஓம் வாஸுகயே ஸர்பராஜாயே தந் ந மம ! (மறுபடியும் ஆஹுதிசெய்தல்)

போஜ:—(ஆத்மகதமாய்) அந்தோ என்னை எங்கேயோ தூக்கிக்கொண்டு போகின்றதே. ஈஸ்வரா ! என்னை நீ தான் காப் பாற்றவேண்டும் !

சாரு:—ஏன் இச்சிறுவனுடைய தலை யாட்டங்கொள்கின் றது ?

கோவி:—அப்பா ! பயப்படுகின்றனையோ ? வேண்டுமா யின் என்னெதிரில் உட்கார்ந்துக்கொள் ! இதோ ஹோமமும் முடிவதற்காயிற்று ! இன்னமோர் ஆஹுதிதான் !

ஸோம:—ஓம் !

“ யா இஷவோ யாது யாநாநாம்
 யே வா வநஸ்பதீ ரநு ;
யே வா வடேஷு ஸேரதே
 தேப்யஸ் ஸர்பேப்யோ நம : !”

ஓம் அநந்தாய ஸ்வாஹா! ஓம் அநந்தாய ஆதிஸேஷாயே தந் ந மம(பூர்ணாஹுதி பண்ண, ஒரு ஸர்ப்பம் போஜனது தலைமீது பட்டு அக்நியில் வீழ்ந்து பஸ்மமாதல்)

போஜ:—ஹா அம்ப! (மூர்ச்சித்து வீழ்தல்)

யாவரும்:—ஹா ! ஹா !! ஹா !!!

கோவி:—இஃதென்ன ! ஆஸ்சர்யமாயிருக்கின்றது !

விலா:—ஐயோ! இவர் திடீரென்று கீழேவிழுந்து விட்டனரே!

சாரு:—அந்தோ! ஸர்ப்பந்தீண்டிவிட்டது போலிருக்கின்றது?

விலா:—உயிருடன் பிழைத்திருப்பரா?

கோவி:—(போஜனைத் தடவிக்கொண்டு) ஆ கஷ்டம்! (நடுக்கத்துடன்) ஶாஸ்த்ரிகளே! ஶ்வாஸம் வரவில்லையே! இஃதென்ன ஸங்கடம்! இவனை ஸர்ப்பந்தீண்டினதெப்படி?

சாரு:—ஒருவேளை இவன் தான் அந்த ராஜகுமாரனோ?

கோவி:—ஐயோ! கைகால்களெல்லாந் தடித்து விட்டனவே! ப்ராணன் போய்விட்டது போலிருக்கிறதே!

ஸுந்தரி:—ஐயோ! கொஞ்சந் தீர்த்தங்கொடுங்களேன்!

ஸோம:—என்ன ஆஶ்சர்யமாயிருக்கின்றது! அச்சிறுவனு விழுந்துவிட்டனன்?

கோவிந்த:—(தீர்த்தகலஶத்தை வாங்கி, போஜனது வாயில் கொஞ்சந் தீர்த்தத்தைவிட்டு) அந்தோ! தீர்த்தங்கூட இறக்கவில்லையே!

யாவரும்:—(போஜனருகிற்சென்று) ஹா! கஷ்டம்!

ஶஶி:—ஐயோ! வியர்வை கொட்டுகின்றதே! யாராவது துடையுங்களேன்?

கோவி:—(மேல்காவியங்கியைக் கழற்றி ஆஶ்சர்யத்துடன்) ஆ! இவனே அந்த ராஜகுமாரன்?

ஶஶி:—(நோக்கி) அந்தோ! என் செல்வன் போஜனே! (மூர்ச்சித்து வீழ்தல்)

விலா:—என் ப்ராணபந்துவே! (மூர்ச்சித்து வீழ்தல்)

சாரு:—என் கண்மணியே! (மூர்ச்சித்து வீழ்தல்)

கோவி:—(மோகங்கொண்டு) இது கருணைப்புதயாகவல்லவோ இருக்கின்றது! அந்தோ! இந்த வாத்விகள் இச்

சிறுவனுக்கு வேண்டியவர்களே ! (நோக்கி) நமது நாட்டின் ராஜஸ்த்ரீகளே ! ஐயோ ! இவர்களும் மூர்ச்சித்து வீழ்ந்து விட்டனரே ? இப்பெரும் ஸங்கட்டத்திற்கென்ன செய்வது ?

ஸோம:—(போஜனைத்தடவி) இருங்கள் ! அவஸரப்படாதீர்கள் ! (கைபிடித்து கிதானித்து) இவனது ப்ராணனுக்கு ஓர் அபாயமு மில்லை. இவ்வாஜ்ய ஸேஷத்தைப் ப்ரோக்ஷித்தால் உடனே எழுந்துவிடுவான். (திரும்பியும் ஹோமம் பண்ணினவிடத்திற்குச் சென்று ஆஜ்யதொன்னையை யெடுத்து பாவகஞ்செய்தல்)

சாரு:—(கண்விழித்துப் போஜனைத் தழுவிக்கொண்டு) ஆ ! என்னருமைக் கண்மணியே ! இவ்வேழைகளைக் கண்ணெடுத்துப் பாராயோ ?

ராகம்-அஸாவேரி : தாளம்-ரூபகம்

பல்லவி

எப்படி உயிர்த்திருப்போம்-என்செல்வனே !
எப்படி உயிர்த்திருப்போம் !

அநுபல்லவி

அப்பாதகன் முஞ்ஜன் - அரிய கையினின்றுந்
தப்பினுயென்றன்றோ-தநுவையாம் தாங்கினோம் !—(எப்)

சரணம்

எவ்வித விடையூறும்-லேஸாயெண்ணுமுனக்
கிவ்வித ஆபத்து-எங்கிருந் தணுகிற்றோ ?
செவ்விதழ்க் கமலத்தைத்-திரஸ்காரஞ் செய்யுமுன்றன்
பவ்விய முகசந்த்ரன்-பாவிக்கவில்லையே !— (எப்)

விலா:—(கண்விழித்துப் போஜனை நோக்கி) ஆஹா ! இஃதென்ன விந்தை !

ராகம்-முகாரி : தாளம்-ஆதி

பல்லவி

என்னன்பர் - இவர்தாமோ
சிந்ஹும் சிறிதேனுந் - தெரியவில்லையே !

அநுபல்லவி

முன்னவன் ஸோதராகில்
மன்னிப்பாரோ வென்னை ! — (என்)

சரணம்

என்காந்தா ! என்னோடுண்டோ வைரம்,
இல்லா விட்டால்
என் காலக்கேடே இப் ப்ரகாரம்,
என் ப்ராணே ஶர்க்கு
வன்காட்டில் யார்காண் பரிவாரம்,
வன்பிழை செய்தாலும்
உன் கான் மலரன்றோ ஜீவாதாரம் ;
உமக்கும் ஶ்ருங்காரம்,
பாபமே தாபகாரணம்
கர்மமே மர்மதாரணம்
அதனினும் நன்றுமாரணம்
அதிதாருணம் !— (என்)

ஶஶி:—(கண்விழித்து எழுந்து) ஹாபுத்ரகா ! இக்கதியை யடையவோ என் வயிற்றிற்பிறந்தனை ? உலகத்தை வெறுத்துக் காவியுடுத்துக் காட்டிற் பரிதவித்து, இப்படி இறக்கவோ நீ வளர்ந்தாய் ?

நல்லுணவருந்தி நல்லணி பொருந்தி
நல்லுடை தரித்து நலமுடனிருந்த நீ
புல்லரிசிதின்று புன்னீரருந்தி
தொல்லைப்படுவையோ துணிந்துரைப்பாயே !

பஞ்சணைமீதும் பல்லக்கின்மீதுங்
கொஞ்சிவிளையாடிக் கொலுவிலிருந்த நீ
வஞ்சனையாலிங்கு வநந்தனிலலைந்து
பஞ்சைபோல் மரிப்பையோ பகர்ந்திடுவாயே !

வொரந்தமென்றறிந்துஞ் சொல்லாதொருமொழி
விந்தையே என்னை நீ வேறுகொண்டாயோ?
சிந்தனைசெயாமல் ஸ்னேஹமும்பாராமல்
வந்தெனை யணையாமல் மரித்தையோ சொல்லாயே!

கோவி:—ஆஹா! இம்மாதரசி தான் ஸம்ப்ரபாதேவி யார்! இவ்வநிதோத்தமை தான் விலாஸவதியாயிருக்கவேண்டும்! இப்புண்யவதியே பூபாளநாட்டரசனது பட்ட மஹிஷி சாருமதிதேவியாராகவேண்டும்! அந்தோ! இவர்களது ஸங்கடத்தையான் எப்படி நிவாரணம்பண்ணப்போகின்றேன்?

ராகம்-ப்யாக் : தாளம்-ஏகதாளம்
கண்ணிகள்

கருணைகூர்ந்திவர்களைக் - கண்ணெடுத்துப் பாராயோ?
கருணைக் கடவுளே - காத்தருள்வாய்! (கரு)

கரையுமே கல்லுங் - கன்மனமுமுருகுமே!
உரிமையோ வினக்கினி - உரையாயுபேக்ஷித்தல்? (கரு)

காலகாலனென்றங் - காலகண்டனென்றுஞ்
ஸீலப்பெயர் தானும் - ஸித்திக்குமோ சொல்லாய்! (கரு)

காண்பதுங் கனவோ - காலத்தின் கொடுமையோ?
வீண் புவிபாரமே - வேதங்களும்! (கரு)

ஸுந்தரி:—(போஜனைச் சற்றுநேரம் உற்றுநோக்கிக் கொண்டிருந்து) இவ்விராஜகுமாரருக்கு ஒரு பயமுமில்லை! பாருங்கள்! இவரது கால் சட்டைவிரல் அசைகிறது!

சாரு:—என் கண்மணியும் பிழைப்பனா? என் விலாஸவதியும் ஸுகித்திருப்பளா?

ஸுந்தரி:—அம்மணீ! இப்பெண்மணியின் கற்பே இவனையும் இவளுடைய பர்த்தாவையும் என்றென்றுங் காப்பாற்றுமே!

கோவி:—ஆம்!

*'அவனுக் குயிரவ் வளவே யெனினும்
இவள்கற் பினின் ஹுறுமோ விசைவாற்
றவளத் தனிவாணகைதன் னுரையைச்
சிவனத்தகு நூன்முறை தேர்ந்திலரோ!'

ஸம்ஸ:—அஹோ! அஸாத்யம்! அஸாத்யம்!!

ஸோம:—ஸகலத்தையுமறிந்த தாயே! ஒரு பயமுமில்லை. இனி மேன்மேல் ச்ரேயஸ்ஸையடைந்து ஸாம்ராஜ்யாதிபதியாய் இருப்பதற்காகத்தான் இவ்விளங்குமரனை ஸர்ப்பந்தீண்டியதென்று நிஸ்சயமாய்க்கொள்ளுங்கள். இதனுடன் இவனுக்கு விதித்திருந்த ஆபத்துக்களெல்லாம் நீங்கின! இனி பந்துமித்ரர்களோடுகூடி அழிவிலாப் புகழ்பெற்று விளங்கப் போகின்றனன்! இதோ இந்த மந்த்ர பரிபூதமான ஆஜ்ய ஸேஷத்தையும் ப்ரோக்ஷிக்கின்றேன்! தூங்கி எழுபவன்போல் ஒரு க்ஷணத்தில் எழுந்துவிடுகின்றான் பாருங்கள்.

ஸம்ஸ:—எல்லாந் தங்களுடைய அநுக்ரஹமே!

ஸோம:—(ஆஜ்யத்தை தர்ப்பையால் தடவிக்கொண்டு)

"காளிகோ நாம ஸர்ப்போ
நவநாக ஸஹஸ்ர பல:;
யமுநஹ்ரதே ஹ ஸோ ஜாதோ
யோ நாராயணவாஹந:!"

"யதி காளிக துஷ்டஸ்ய
யதி வா காளிகாத்பயாத்:
ஜந்மபூமி மதிக்ராந்தோ
நிர்விஷோ யாதி காளிக:!"

* பாரதம்.

" ஸர்ப்பாஸர்ப்ப ஸுபத்ரந் தே
 தூரங் கச்ச மஹாயஸ :;
ஜநமேஜயஸ்ய யஜ்ஞாந்தே
 ஆஸ்தீகவசநம் ஸ்மர.
ஆஸ்தீகவசநம் ஸ்ம்ருத்வா
 ய: ஸர்ப்போ ந நிவர்த்ததே;
ஸததா பித்யதே மூர்த்நி
 ஸிம்ஸ வ்ருக்ஷபலம் யதா."

(போஜனருகிற்சென்று ஆஜ்யத்தைப் ப்ரோக்ஷித்துக்கொண்டு) ஓம் !

" யதி க்ஷிதாயுர் யதிவா பரேதோ
 யதி ம்ருத்யோ ரந்திகம் நீத ஏவ ;
த மாஹராமி நிர்ருதே ருபஸ்தா
 தஸ்பார்ஷ மேநம் ஸதஸாரதாய.
ஸதம் ஜீவ ஸரதோ வர்த்தமாந:
 ஸதம் ஹேமந்தாந் ஸத மு வஸந்தாந் ;
ஸதம் இந்த்ராக்நீ ஸவிதா ப்ருஹஸ்பதி
 ஸதாயுஷா ஹவிஷேமம் புநர்து:!"

கோவி:—(போஜனை நோக்கி) தைவாதீநம் ! இப்பொழுதுதான் மெதுவாய் மூச்சுவருகின்றது.

போஜ:—(மெதுவாய் மூர்ச்சையினின்றுந் தெளிந்து) ஹா ! அம்ப ! ஸஸிப்ரபா !

ஸஸி:—(ஓடிவந்து போஜனையணைத்துக்கொண்டு) ஆ ! என் துரையே ! இதோ இருக்கின்றேன் !

போஜ:—(நோக்கி) ஆ ! இதென்ன ! ப்ரமையோ ? என்னருமைத்தாய் ஸஸிப்ரபையோ என் முன் நிற்பது ? ஆ ! என் அத்தை சாருமதி ! என் ப்ரிய விலாஸவதி !! இஃதென்ன ! கனவோ யான் காண்பது !

கோவி :—ராஜகுமாரா ! நீ காண்பதெல்லாம் வாஸ்தவமே ! உனக்கு நேர்ந்த இடையூறுகளெல்லாம் தைவாநுகூலத்தால் நீங்கின ! இனி உன் ப்ரியபந்துக்களையடைந்து ஸுகித்திருப்பாய் !

போஜ:—அடிகாள் ! தாங்கள் செய்த இப்பேருதவிக்கு யான் என்ன ப்ரதி செய்யப்போகின்றேன்.

கோவி:—
ஸோம :— } ராஜகுமாரா ! நீ தீர்க்காயுஷ்மானுய்ஶீக்ரத்திலேயே ஸகல ஸாம்ராஜ்யத்தையும் பெறுவாயாக !

போஜ:—எல்லாந் தங்களுடைய ஆஶீர்வாதமே !

கோவி:—அரசே ! நினக்கினி யாதொரு குறையும் நேரிடாது !

ஈஶனே நின்மேல் நேசமாயிருப்பார் !
பற்பலவுதவுங் கற்பகத்தருப்போல்
ஊழி நீடூழி வாழுதி ! நினக்குப்
பெரும்புகழ் புவியில் நிரம்பியோங்குக !

போஜ:—அடிகாள் !

வழிபடுந் தைவமாய் வந்திவண் தாமே
மொழியிலெமக்கு முட்டுப்பா டுறுமோ !
நும்போற் பெரியோர் நோக்கமிருக்கில்
எம்போலரசர்க் கென்ன குறையாம் !

ஶஶி:—என் கண்மணீ ! உன்னைக்காணுது நாங்கள் என்ன வருந்தினேம் தெரியுமோ ?

போஜ:—அம்மா ! எல்லாம் அறிந்தேன் ! எல்லாம் முன் ஜந்மத்தில் நான் செய்த பாபத்தின் பலனே !

சாரு:—என்னருமைச்செல்வனே ! இஃது ஒருவருடைய செயலுமன்று! ஈஶனது ஸங்கல்பம் இப்படி யெல்லாம் நடக்க வேண்டியிருந்தது !

ஸுமதி:—என் செல்வனே! நீ யன்று ராத்ரி என் கண்மணி விலாஸவதியினிடம் செல்வதாகச் சொன்னவார்த்தை அம்ருத தாரைபோல் எனக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது. பிறகு அப்பாதகன் வினது சிற்றப்பன் புரிந்த வஞ்சனையால் ஸௌந்தர்யமும் க்ஷமையுமே யுருவெடுத்து வந்திருக்கும் கற்பிற்கரசியாகிய நமது விலாஸவதி உனக்காக பட்ட கஷ்டங்களை நான் என்ன சொல்வேன்! ஆயினும் உங்களை இருவரையும் ஈச்வரன் இன்றாயினும் கூட்டிவைத்தனரே!

விலா:—(ஆத்மகதமாய்) ஐயோ! யான் மஹாபாதகியானேனே! என் ப்ராணநாதருடைய ப்ரியத்துக்கும் நான் பாத்ரையாவேனோ?

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ! இஃதென்ன! இவ்விலாஸவதியைக் காணும்பொழுதே என் மனம் களிப்புஞ் சினமுங் கொள்ளுகின்றதே! இவள் வீரபராக்ரமியென்றறிந்தும் என் மனம் இவளிடத்தினின்றும் விலகி நிற்கின்றதே!

ஸுமதி:—என் கண்மணீ! ஏன் இவளிடத்தினின்றும் முகத்தைத் திருப்பிக்கொள்ளுகின்றாய்! இவளுடைய பாதிவ்ரத்யமஹிமையினாலன்றோ நீ க்ஷேமமாயிருக்கின்றாய்? இவ்வுத்தமியினாலேயே உனக்குச் சிறந்த கீர்த்தி கிடைக்கப்போகின்றது! இவளை ஸ்வீகரிப்பாய்!

விலா:—(ஆத்மகதமாய்) என் ப்ராணநாதர் என்ன சொல்லுவரோ?

போஜ:—அம்மா! என்னை மன்னிக்கவேண்டும்! இக்கொடுமைக்கெல்லாம் காரணமாகிய அந்த த்ரோஹியினுடைய ஆதீனத்திலிருந்த இவளை யான் எப்படி அங்கீகரிப்பேன்? உலகத்துளோர் நம்மைப் பழியார்களோ?

விலா:—(ஆத்மகதமாய்) அந்தோ! இவ்வவதூறுக்கும் பாத்திரையாகவோ யான் இன்னும் இப்பாழுடலைச் சுமந்திருக்கின்றேன்! (கண்ணீர் விடுதல்)

ஶஶி:—என் கண்மணி! இவளுடைய கற்பின் பெருமையை அறியாமையால் நீ இவ்வாறுரைத்தனை? இவளைக் கைப்பற்றி எம்மைக்களிக்கச் செய்வாய்!

போஜ:—என்னருமைத்தாயே! யான் ஸம்மதிக்கின்றேன்; சான்றோர் ஸம்மதிப்பரோ?

ஶஶி:—என் செல்வனே! இப்படி எங்களுடைய மாநம் நோகும்படி நீ தெரியாமல் உரைப்பது தகுதியன்று!

உயர்வர மக்களால் துயரம் நீங்கி
இருமையும் பெறுவது பெரியவர் இயற்கை!
தர்மமே யெல்லா முருவாய் வந்த
நின்னைப் பெற்ற நின்தாய், அத்தையும்
உளமெலி வாகித் தளருவ தழகோ?
சொல்லை மறாத நல்ல புதல்வரைப்
பெற்றோர் யார் துய ருற்றோர் சொல்வாய்!

ஏதோ! இவையெலாஞ் சொல்லி நினக்கொரு கெடுதியைச் செய்ய நினைப்பதாய்க் கொள்ளாதே. உனது நன்மைக்காகவே சொல்லுகின்றேன்! இவள்மீது பழிசொல்லின் நாக்கு அழுகியறுந்து விழும்! இவளைக் கைவிடிலோ தர்மதாரபரித்யாகமஹாதோஷத்தையடைந்து குலத்தோடு நஶிக்கவேண்டி வரும்!

விலா:—(கண்ணீர் சொரிய) என் ப்ராணநாதர்மீது பழி சொல்வதிற் பயனென்ன! இவை எல்லாம் யான் பூர்வஜந்மத்திற் செய்தபாவமே!

சாரு:—(ஜநாந்திகமாய்) குழந்தாய்! அழாதே! உனது கன்னடத்தை உன்னை என்னாளும் காப்பாற்றும்.

விலா:—(ஶோகாக்ராந்தையாய், ஜநாந்திகமாய்) அம்மா! யான் இனியும் பிழைத்திருக்கவேண்டுமோ?

போஜ:—(ஆத்மகதமாய்) இவளை நிர்தோஷி என்றறிந் தும், ஏனோ மந்த்ரத்தினுற் கட்டுண்ட ஸர்ப்பம்போல், என் மநமானது இவள் விஷயத்தில் ஒடுங்கியே போகின்றதே! தோஷியெனத் துணிந்து விடுவதற்குத் தைர்யம் வரவில்லை, தொடுவதற்கும் மநம் வரவில்லையே! இத்தர்ம ஸங்கடத்தில் என்னசெய்வேன்.

(பிறகு புத்திஸாகரரும், காளிதாஸரும், ஹரிஹரருடன் ப்ரவேசித்தல்)

புத்தி:—ஹரிஹரரே! தேவியார் எங்கே? காணுமே! இம்மரத்தடியில் ஒருவருமில்லையே!

காளி:—(நோக்கி) இம்மண்டபத்தில் யாரோ கூட்டமா யிருக்கின்றனர்!

ஹரி:—(நோக்கி) அவர்களே!

காளி:—ஆம்! (நோக்கி) ஆ! இஃதென்ன யான் காண் பது கனவோ? நினைவோ? என் ப்ராணநேசன் போஜனே இங்கே நிற்கின்றவன்?

புத்தி:—என்ன! நம் போஜனு! (ஓடிப் போஜனைக்கட் டியணைத்து) என் கண்மணீ! நீ பிழைத்திருக்கின்றாயோ?

போஜ:—எந்தையே! சரணம்! யான் புத்தியின்றிச் செய்த அபராதங்களை எல்லாம் மன்னித்தருள வேண்டும்!

புத்தி:—என் செல்வனே! உனக்கு அமோகமாய் மங் களமுண்டாகுக!

போஜ:—அடிகாள்! இப் ப்ராஹ்மணோத்தமர்கள் தாம் என் ப்ராணனைக் காப்பாற்றினர்! ஸர்ப்பந்தீண்டித்துடித்த நான் இவர்களில்லாவிடில் இந்நேரம் இறந்திருப்பேன்?

கோவி:—எங்களாலென்ன செய்யப்பட்டது? அம்மாது சிரோமணி விலாஸவதீ தேவியின் கற்பின் மஹிமையே உன் னைக் காப்பாற்றிக்கொடுத்தது.

புத்தி:—ஓஹோ! கோவிந்தபண்டிதரா! தங்களைக் கண்டு அனேக நாட்களாயின! தாங்கள் என்று தாரையை விட்டுச் சென்றீர்களோ, அப்பொழுதே அந்நகர் பாழடைந்து விட்டது! அதர்மம் நான்குபாதங்களோடும் உலாவிவருகின்றது! (விலாஸவதியை நோக்கி) இக்கற்பிற்கரசி விலாஸவதீதேவி ஏன் கண்ணீர் சொரிகின்றனள்?

போஜ:—அடிகாள்! யாவற்றுக்கும் இப்பாவியே காரணம்! அர்யனுடைய ஆதீநத்திலிருந்த இவளை யான் எப்படி அங்கீகரிப்பேன்?

புத்தி:—இஃதென்ன பேதைமை! நீ ஸங்கை கொள்வது ஆஸ்சர்யமே! இப்பெண்மணியின் பாதிவ்ரத்ய மஹிமையை யான் அறிவேன்.

* 'மண்ணினும் நல்லள்! மலர்மகள் கலைமகள் கலையூர்
பெண்ணினும் நல்லள் பெரும்புகழுடை விலாஸவதி
கண்ணினும் நல்லள்! கற்றவர் கற்றிலாதவரு
முண்ணுநீரினு முயிரினுமவளையே யுவப்பர்?

ஆகலின், தடையின்றி இவ்வநிதோத்தமையைக் கைப்பற்றி எனக்கும், ஏனையோர்க்கும் மகிழ்ச்சி விளைப்பாயாக!

காளி:—நண்ப! ஏனிந்தச் சஞ்சலம்! ஒழிப்பாய் இவ் வீண் கவலையை! உனக்குக் குருவாயுந் தந்தையாயு மிருக்கும் நமது மந்த்ரியாரே யுனக்கு அநுமதி தந்தனர்! அவர் உனக் கிட்ட பிரதிஜ்ஞையையும் நீக்கிவிட்டனர்! இனி என்ன தாமஸம்?

போஜ:—அடிகாள்! தங்கள் சொல்லுக்கு நானென்ன தடை சொல்லப்போகின்றேன்?

புத்தி:—(விலாஸவதியைநோக்கி) ராஜபுத்ரீ! இதைப் பற்றி நீ வருந்துவது தகுதியன்று! இப்படிக்கெல்

* கம்பராமாயணம்

லாம் நடக்கவேண்டுமென்பது ஈசனது ஸங்கல்பம் போலும்! ஆகலின், உன் ப்ரிய வல்லபனையடைந்து மகிழ்ந்திருப்பாய்!

விலா:—அடிகாள் நீங்களே எனக்குத் தந்தையார்! எல்லாந் தங்களுடைய ஆசீர்வாதமே! (புத்திஸாகரரை வணங்குதல்)

புத்தி:—தீர்க்க ஸுமங்கலீ பவ!

சாரு:—அடிகாள்! புத்தி ஹீநத்தினால் நாங்கள் தங்களுக்குச் செய்த அபராதத்தை மன்னிக்கவேண்டும்! இப்பொழுதன்றோ தங்களுடைய ஹிதமான எண்ணம் விளங்குகின்றது.

புத்தி:—அம்மணீ! யான் சிறிதேனும் உங்களுடைய குறைகுணங்களை யோஜியாமல், இவ்வதிதோத்தமை விலாஸவதிக்குப் பெருந்தவறிழைத்தேன்! வஞ்சகமே யுருவெடுத்து வந்திருக்கும் முஞ்ஜராஜனுடைய ஆதீநத்திலிருந்தபடியால் நங் கண்மணி போஜனுக்கு அவனால் ஏதாயினும் ஆபத்து நேரிடுமென்று நினைத்து, அவனை இம்மாதுசிரோமணி விலாஸவதியினிடம் நெருங்கவேண்டாமென்று தடுத்துவந்தேன்! உங்களையுங் கவனியாது விடுத்தேன்! இவற்றையெல்லாம் பொறுத்து என்னை மன்னிக்கவேண்டும்!

சாரு:—அடிகாள் நீங்களேன் வீணாய் மனவருத்தப்படவேண்டும்!

* "புகன்றிடு நன்மை தீமை
பொருந்தலூழ் வினையா மீசன்
ஜகந்தனி லுயிர்கட் கெல்லாந்
தானுயிர்க் குயிராய் நின்றும்
அந்தமெய்ஞ்ஞானங் கல்வி
யழித்தமைத் திடுவ னல்லாற்
பகர்ந்திடு புருஷராலே
நினைத்தவை பலித்திடாவால்!"

* கந்தபுராணம்

ஆகலின், தாங்கள் செய்தனவெல்லா மெங்களுடைய நன்மைக்காகவேயன்றி வேறல்ல !

போஜ:—ஆம் !

எல்லார் செயலு மிறைவ னியற்றுவதே
யல்லா தலையோ ரணுவுமசை யாதெவையு
மில்லா தருளின்றே னீயின் றவன்பாலிற்
செல்லா வெமது செயலுமவன் செய்கையதே !

விலா:—(போஜனருகிற்சென்று) ஆர்யபுத்ர! அடியேன் செய்த அபராதங்களையெல்லாம் மனத்தில் வைக்காமல் இப்பேதையை மன்னிக்கவேண்டும் ! (போஜனுடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தல்)

போஜ:—(விலாஸவதியைத் தூக்கி எழுப்பி) ஆ ! என் ப்ராணேச்வரீ ! பாவியேன் சிறிதேனு முன்றன் நற்குணங்களை யறியாமல், உனக்குப் பலவிதத்திலும் அபராதியானேன்!

குலதந ரநுராஜிஞுப் பர்களன்றோ குணத்தை !
ஜஜ்ஜஸ்பகநேத்ரீ ! ஸாத்வி ! என்னை க்ஷமிப்பாய்!
தலையிலணிவதே தான் தாத்ரியெங்கும் ப்ரஸித்தம்,
மலரதனையுதைத்துத் தள்ளுவாரெங்கு முண்டோ ?

விலா:—(ஸாத்வஸஸந்தோஷத்துடன்) ஆர்யபுத்ர ! இப்ப்ரியவசநங்களுக்கு யான் அர்ஹையாவேனோ ? இன்றன்றோ எனது ஜந்மம் ஸபலமாயிற்று ! (இருவரும் ஒருவரையொருவர் தழுவி நிற்றல்)

கோவி —
ஸோம — } (வாழ்த்திக்கொண்டு)

ஜய ! ஜய !! ஜய !!! போஜ ! ஜய ! விஜயீ பவ !

ஸுந்தரி :—(வாழ்த்திக்கொண்டு)

ஜய ! விலாஸவதீ ஸமேதனாக !

ஹரி :—
காளி :— } (வாழ்த்திக்கொண்டு)

நயமுடன் லக்ஷ்மியோடு நாராயணன்போல
நாளுமே யிவளுடன் இணைந்து நிற்க !

புத்தி :—(வாழ்த்திக்கொண்டு)

பயமகிலத்தையும் போக்கி நீ யாவர்க்கும்
பந்துமித்ரர்களோடு வாழ்ந்திருக்க !

ஶஶி :—
சாரு :— } (வாழ்த்திக்கொண்டு)

தயையுடனெவரையுந் தன்போல் நினைத்து நீ
தரையொரு குடைக்குளே தாங்கியாள்க !

போஜ :—(வணக்கத்துடன்)

ஆதி தெய்வமன்றோ வெமக் கந்தணர்கள் !
ஆகுமிவையெலாம் நுங்கள் தநுக்ரஹத்தால் ;

விலா :—(நமஸ்கரித்து)

ஹேதுவன்றியு மெவரையும் பாதுகாத்தல்
ஈஶனடியார்க ளெல்லோர்க்குமியற்கையன்றோ ?

(நேபத்யத்திற்குள் ஶங்கத்வாநம்)

காளி :—(செவிகொடுத்து) அடிகாள் ! கேட்டீர்களோ ஶங்கத்வநியை. பகைவனது ஸைநிகர்களுக்கு யுத்தந் தொடங்க ஆஜ்ஞை கொடுக்கப்பட்டதுபோலும் ! நாம் இனி ஒரு நிமிஷமேனுந் தாமதிக்காமல் ஶிபிரஞ் செல்லவேண்டும் !

ஹரி :—என்ன ! முஞ்ஜன் இவ்வளவு ஶீக்ரத்தில் வந்து விட்டனனோ இந்நகர்க்கு ?

## XVIII

## MUNJA'S CAMP

OR

"MUNJA'S MOST MISERABLE END, AND BHOJA'S VAIN ATTEMPT TO THWART IT"

——*Act VII, Scene* 1, *pages* 364-365

Facing page [illegible]

## XVIII

# முஞ்ஜராஜனது பாசறை

### அல்லது

### "முஞ்ஜராஜனது பரிதாபகரமான முடிவும் அதைத் தடுக்கச்சென்ற போஜகுமாரனது வீண் முயற்சியும்"

போஜ:—(பரபரப்புடன்) ஆ! வில்லும்! வில்லும்!! அவஸரப்படாதீர்! அவஸரப்படாதீர்! (அருகிற் சென்று தான் போர்த்திருந்த மாறு உடையை எறிந்து விட்டு) ஆ! சிற்றப்பா! சிற்றப்பா! யான் இருக்கும்பொழுது தாம் ஒன்றுக்கும் பயப்பட வேண்டியதில்லையே.

முஞ்ஜ:—(நோக்கி) ஆ! இஃதென்ன! நிஃசயமாய் போஜனே! (கண்ணீர் சொரிய) குமார! குமார! நீ உயிருடனிருக்கின்றனையோ?

போஜ:—எந்தையே! யான்! கொலையுண்டிறக்க வில்லை. உம்மைக் காப்பாற்றுவதற்கு யான் எப்பொழுதும் ஸந்நத்தனாகவே யிருக்கின்றேன்!

முஞ்ஜ:—ஆ! குமார! இனி என்னைக் காப்பாற்றுவது எங்ஙனம்?...... ........இதோ யான் புரிந்த கொடுங்தொழிலின் பயனை க்ஷணத்தில் அநுபவிக்கப் போகின்றேன். இதோ என் ப்ராணன் வெளியிற் புறப்பட்டு விட்டது பார்!.........

போஜ:—(நோக்கி) ஆ! ஸாஹஸம்! ஸாஹஸம்!!

முஞ்ஜ:—குமார! யான் உனக்குப் பல விதத்திலும் தீங்கிழைத்தேன். அவற்றை மறந்து என்னை மன்னிப்பாய்!

(போஜனது காலை வணக்கமாய்ப் பிடித்துக்கொள்ளல்)

—அங்கம். VII, களம். 1, பக்கம். [illegible]

**புத்தி:**—வந்து மூன்றுநாட்களாயின ! அவனது கார்யங் களை லேஸாக நினைக்கவேண்டாம் ! தன்னுடன் ஐந்து பேரி ருந்தாலும் அஞ்சாமல் நின்று யுத்தஞ்செய்யத் துணிந்தவன் !

**சாரு:**—எமது ஸேனைகள் யாவும் பூபாளநாட்டினின்றும் வந்துவிட்டனவோ ?

**புத்தி:**—இன்று காலையிலேதான் வந்துசேர்ந்தன ! ஆயி னும் ஸ்ரீ ஆதித்யவர்ம மஹாராஜருடைய பேருதவியால் ஸகல ரும் யுத்தத்திற்கு ஸந்நத்தராகவே யிருக்கின்றனர் ! நமது போஜன் இருக்குமிடங்கூட தெரியவில்லையே யென்றுமாத் ரம் வருத்தங்கொண்டிருந்தோம் ! அவ்வருத்தத்தையும் ஈஶன் இப்பொழுது நீக்கிவிட்டனர். இனி நமக்கு ஜய முண்டாகு மென்பதற்கு ஸந்தேஹமில்லை.

**போஜ:**—அடிகாள் ! தாங்கள் எல்லோரும் இவ்வடியே னுக்குச் செய்யும் பேருதவிக்கு யான் என்ன கைம்மாறு செய் யப்போகின்றேன் ! நீங்கள் செய்த நன்மை மேகம் உலகத்திற் குச் செய்வதைப்போன்றது !

(நேபத்யத்தினின்றும் மறுபடியும் ஶங்கத்வநி)

**நாளி:**—அடிகாள் ! நாமினித் தாமதிக்கலாகாது ! ஶங்க நாதம் திக்குகளெல்லாம் நடுநடுங்கும்படி வ்யாபித்துவிட்டது ! ஶத்ருவின் ஸைந்யம் கிளம்பிவிட்டதுபோற் றோற்றுகின் றது.

**புத்தி:**—ஆம் ! அப்படித்தானிருக்கவேண்டும் ! (ஹரி ஹரரை நோக்கி) ஹரிஹரரே ! தாங்கள், தேவிமார்களையும் போஜனையு மழைத்துக்கொண்டு நாம் இறங்கியிருக்கும் விடுதி யரண்மனைக் குடனே செல்லுங்கள் ! நாங்களிருவரும் இப்படி யே ஸேநாநிவேஶத்திற்குச் சென்று, தகுந்த ஏற்பாடுகளெல் லாஞ் செய்துவிட்டுக் ஶீக்ரத்தில் வந்து சேருகின்றோம் !

**போஜ:**—அடிகாள் ! நானுந் தங்களுடன் வருகின்றேன் ! இவர்கள் மாத்ரஞ் செல்லட்டும் !

புத்தி:—அரசே! நீ இப்பொழுது மிகவுங் களைத்திருக்கின்றனை? அரண்மனைக்குட் சென்று சற்று விச்ராமித்துக்கொள்! நாங்களுமதற்குள் வந்துவிடுகின்றோம்! (நிஷ்க்ரமித்தல்)

ஶசி:—ஸரி! அப்படியே செய்வோம்! (கோவிந்தபண்டிதரை நோக்கி) கோவிந்தபண்டிதரே! தாமும் இப் ப்ராஹ்மணோத்தமரும் செய்த இவ்வுபகாரத்திற்கு நாங்கள் என்ன ப்ரதி செய்யப்போகின்றோம்! ஆயினுமிந்தஸமயத்தில் நீவிர் இருவரும் இதையநுக்ரஹிக்கவேண்டும்! (இருவருக்குமிரண்டிடை நிறைய நாணயங்களை யளித்தல்)

ப்ராஹ்மணர்:—தேவி! இவையெலா மெதற்கு? (பெற்றுக்கொண்டு) தங்களுடைய க்ருபையிருந்தாற் போதும். உங்கள் செல்வன் ஶீக்ரத்திலேயே சக்ரவர்த்தியாகப்போகின்றான்!

சாரு:—எல்லாந் தங்களுடைய ஆஶீர்வாதமே!

போஜ:—அடிகாள்! நாங்கள் போய்வர விடையளித்தருளுங்கள்!

ப்ராஹ்மணர்:—அப்படியே சென்று வெற்றிகொண்டோங்குவாய்!

ஹரி:—வெகு நாழிகையாய்விட்டது! ஶீக்ரம் அரண்மனைக்குச் செல்லுவோம் வாருங்கள்! (யாவரும் நிஷ்க்ரமித்தல்)

## ஆறும் அங்கம்

முற்றிற்று

# ஏழாம் அங்கம்

## முதற்களம்

இடம்:—உஜ்ஜயிநீ நகர்: ஸிப்ராநதிக்கரையில் முஞ்ஜராஜன் தங்கியிருக்கும் பாசறை.

(அங்கரக்ஷகர்கள் இருவர் இருபுறத்திலுமயர்ந்து நித்ரைசெய்துகொண்டிருக்க, முஞ்ஜராஜன் ஒரு பயங்கரமான கனவுகண்டு மஞ்சத்தினின்றும் அலறி விழுந்துகொண்டபடி ப்ரவேஸித்தல்)

முஞ்ஜ:—(அங்கங்களெல்லாம் நடுநடுங்க கண்கள் மூடியபடி ஆழ்ந்தகுரலுடன்) ஆ! ஆ!! (ஆவிதளருவதுபோல் அபிநயித்து) அந்தோ! மாள்கின்றேன்! ஐயோ! ஸஹிக்கமுடியாத துர்நாற்றம் பொருந்தியதும், நரகத்தைப்பார்க்கினு மதிகபயங்கரமானதும், காளராத்ரியைப் பார்க்கினுங் காரிருள் மூடியதுமான இவ்வகாதமான மலபங்கத்தில் மூழ்கி முடிவெய்துகின்றேன்! ஆ! இதனின்றுந் தப்பி எப்படிக்கரையேறுவேன்? (கால்களையுதறிக்கொண்டு) ஐயோ எனது கால்களையொருபெரு முதலை கவ்வுகின்றதே! (நோக்கி) ஆ! இவள் யார்? பார்ப்பதற்கே பயமாயிருக்கின்றனளே! ஐயோ! என்னைக் கழுத்திற் கைபோட்டு யமன்திசையை நோக்கியிழுக்கின்றனளே! ஹா! (அலறிவிழித்துக்கொண்டு) ஆ! இஃதென்ன! யான் இருக்குமிடம் யாதோ? என் தலையை மொட்டையடித்து என்னிடையில் மலிநவஸ்த்ரத்தை யுடுத்தி, மலபங்கத்திற் றள்ளின அம்மஹாவீரன் சென்றனனோ? (மெதுவாய்க் கண்க

ளைத் துடைத்துக்கொண்டு சுற்றிலும் நோக்கி) இஃதென்ன ! சித்தப் ப்ரமையோ ? அல்லது என் கண்கள்தாம் மாந்த்யத்தை யடைந்துவிட்டனவோ ? எனது அங்கரக்ஷகர்களல்லவோ இவ் விடத்திற் படுத்துறங்குகின்றனர் ? இது நாம் படுத்திருந்த பாசறை யல்லவா ? (யோஜித்து) ஒரு வேளை யான் கண்டதெ ல்லாங் கனவோ? (தலையைத் தடவிப்பார்த்துக்கொண்டு) என்ன ஆம்சர்யம் ! என் சிரஸிலிருந்த மயிர்கள் அப்படியே யிருக்கின் றனவே ! (இடையைப்பார்த்து) நான் தரித்திருக்கும் வஸ்த் ரமும் எனது பீதாம்பரமே ! சீ ! இவையெலாம் கனவாகவே இருக்கவேண்டும். ஆஹா ! என்னகொடிய கனவு! அவையெ லா மின்னுமென் முன்னர்நடப்பன போற்றோன்றுகின்றன வே ! ஒருவேளை நமது கதி இப்படித்தான் முடியுமோ ? அந் தோ ! அம்மஹாவீரன் யாவனோ ? அர்க்கமண்டலம்போல் ஜ்வ லித்துக்கொண்டு, வெண்பட்டுடுத்து, வெண்மாலைசூடி, ஸுந்த ரத்திருக்கோலத்துடன் இந்நகரத்து ராஜகுமாரியின் பாணி யைப் பிடித்தனனே, அம்மஹா புருஷன் யாவனோ?—சீ! இஃ தென்ன! வீணெண்ணங்களெல்லாங் கொள்ளுகின்றேன்! ஒரு வேளை அந்தப் போஜன்தான் இப்பதவியை யடைவனோ?—சீ என்ன பைத்யம் ! போஜன் கொலை யுண்டிறந்து எத்தனை நாட்களாயின ! அவன் திரும்பி வருவதெங்ஙனம் ?—ஆஹா ! அக்காட்சியை நினைத்தமாத்ரத்தில் மயிர்க்கூச்சுறுகின்றதே ! பொழுது விடிவதற்கு இன்னு மெவ்வளவு நாழிகை யிருக்கும் ? (நோக்கி)

* "ஊழிவெங் கதிரவ னுதய முன்னரிந்
தாழியுந் திங்களு மார்ப்ப டங்கின
கோழியு மார்த்தன ! குக்கி லார்த்தன ;
சூழியிற் புள்ளெலாந் துள்ளி யார்த்தவே !"

* அரிச்சந்திரபுராணம்

அம்ம ! அருணோதயமாகப் போகின்றதே ! இன்று காலையிலாயினும் நாம் ஜயமடைவோமா ? ஐயோ ! அதிகாலையில் ஸ்வப்நங்கண்டால் அவஶ்யமாய்ப் பலிக்குமென்பார்களே ! நமது முடிவு எப்படி யிருக்கின்றதோ ? நாமும் ஜயித்து நம்நாடு செல்வோமா ? (தைர்யத்துடன்) ஆஹா ! நமது ஸேனைகள் மாத்ரம் முன்போல் நம் பக்ஷத்தில் நிற்பார்களாயின், இவ்வாதித்யவர்மனைப்போற் பதினாயிரம் ஆதித்யவர்மர்கள் வந்தெதிர்த்தபோதிலும் அஞ்சேம் ! அப்படியிருக்க, அக்கிழப் ப்ராஹ்மணன் வரவழைத்திருக்கும் பூபாள நாட்டு ஸேனைக்கு அஞ்சுவேனோ ? ஆயினும் நேற்று மாலையில், நமது பகைவர்களையெல்லாம் எத்திசையிலும் நிற்கவொட்டாமற் பறக்கடித்து, அவ்வாதித்யவர்மனையுங் கைப்பிடியாய்ப் பிடித்துக், கைதி செய்து விட்டோமென்று நாம் ஸந்தோஷத்துடன் திரும்புங் காலையில், யானைக்கூட்டத்தின் மத்தியில் ஒரு ஸிம்ஹக்குட்டி பாய்வதுபோல், திடீரென்று கிளம்பி, ஒரு க்ஷணப்பொழுதில் நமது ஸேனைகள் இருந்தவிடமே தெரியாமலோட்டி, அவ்வாதித்யவர்மனையும் விடுவித்துக்கொண்டு சென்ற அம்மஹாவீரன் யாவனோ? அவனுக்குத் துணையாய்வந்த வீரர்கள் யாவரோ? அவனைக் கண்டது முதல் எனது ஸைநிகர்கள் சண்டைசெய்யப் பயப்படுகின்றார்களே !

(நேபத்யத்தினுள் கலகல ஶப்தம்)

மூஞ்ஜ:—ஆ ஆ! இஃதென்ன ஶப்தம்! இந்த அதிகாலையில் இவ்வளவு பெருத்த ஶப்தம் கேட்பதற்குக் காரணமென்ன ?

(ப்ரவேஶித்து)

பைரவன்:—(பரபரப்புடன்) மகாராசா ! நமது சேனைகளையெல்லாங் கூட்டிக்கிட்டு நம்ப சேனைத்தலைவர் வச்சராசர் எங்கேயோ விரைந்து செல்கின்றாங்க ! அவங்கபோகிற வேகத்தையும் ஆடம்பரத்தையும் பார்த்தால் நம்ப பகைவங்களோடே சேர்ந்துகொள்வாங்கபோலிருக்குது ! நம்பளைச்சேர்ந்தவங்

கூட பயந்து மூலைக்குமூலை ஓடுருங்க! இனிமகாராசா அவங்களின் சித்தம்.

முஞ்ஜ:—(ஆத்மகதமாய்) இதுதானே இப்பொழுது கிளம்பிய பெருங்கூச்சலுக்குக் காரணம். நல்ல திருக்கட்டும்! (ப்ரகாஶமாய்) பைரவா! பத்ரநாராயணரை நாம் ஸேநாதிபதியாய் நியமித்திருப்பதாக அவரிடந் தெரிவித்து, ஸேனைகளை ஓடவொட்டாமல் ஸமாதாநஞ் செய்யச்சொல்லு! நாமுமிதோ பின்னரே வருகின்றேம்.

பைர:—புத்தி, மகாராச! (நிஷ்க்ரமித்தல்)

முஞ்ஜ:—ஆ ஆ! நாம் கனவிற்கண்டது உண்மையாகவே முடியும்போற்றேற்றுகின்றதே! வத்ஸராஜன் நம்பக்ஷத்தில் இருப்பவன்போல் நடித்து வருகின்றனனென்று நாம் அப்பொழுதே நினைத்தோம்! என்னவோ அவனது செயல்களை நினைத்துக்கொண்டால், வாராத எண்ணங்களெல்லாம் வருகின்றன? இப்பொழுது செய்யக்கூடிய உபாய மென்னவிருக்கின்றது?

(வேகு ஸம்ப்ரமத்துடன் ப்ரவேஶித்து)

தநஞ்ஜயர்:—மஹாராஜ! அடியேங்களைக் காப்பாற்ற வேண்டும்! (காயத்துடன் ஓடிவந்து மூச்சுத்தளரக் கீழேவீழ்தல்)

முஞ்ஜ:—தநஞ்ஜயரே! என்ன ஸமாசாரம்! ஏனிப்படி அஞ்சி நடுங்குகின்றீர்? எழுந்திரும்! எழுந்திரும்!

தந:—மஹாராஜ! யான் என்னசொல்வேன்! விலாஸவதீ தேவியாரும் ஶஶிப்ரபா தேவியாரும் சிறைச்சாலையினின்று மெப்படியோ எனக்குத் தெரியாமல் தப்பித்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டனர்?

முஞ்ஜ:—(திடுக்கிட்டு) ஆ! என்ன? விலாஸவதிகூடவா? அவர்கள் எங்கே சென்றனர்களாம்?

தந:—சிலர் பூபாள நாட்டிற்குச் சென்றதாகச் சொல்லு கின்றனர்! வேறு சிலர் இவ்வுஜ்ஜயிநீகருக்கே ஹரிஹரரு டன் சென்றதாக உரைக்கின்றனர்.

மூஞ்ஜ:—பிறகு இப்பொழுது நமது நகரை யார் பாதுகா த்து வருகின்றனர்?

தந:—மஹாராஜ! தாங்கள் நகரத்தை விட்டுக்கிளம்பி னதும், ஜநங்களெல்லோரும் பெருங்கூட்டங்கூடி, நகரத்தை அல்லோல கல்லோலப்படுத்திக், கோட்டைவாயில், அரண் மனை முதலானவற்றையும் பிடித்துக்கொண்டனர்கள்!

மூஞ்ஜ:—(கோபத்துடன்) என்ன? ஸரி! நீரும் வெளியே செல்லும்! நான் ஒருவனுகவே சின்று நடக்கவேண்டியதைப் பார்த்துக் கொள்ளுகின்றேன். (தநஞ்ஜயர் பயந்து நிஷ்க்ர மிக்க) ஆ ஆ! புருஷபலத்தினுல் ஆவது ஒன்றுமில்லை! எவ் வளவு வல்லமையுள்ளவனு யிருப்பினும் தைவபலமில்லாத வன், நாசமடைவது திண்ணம்.

தநபல மிருந்தென்? தைரிய மிருந்தென்?
மநவலி யிருந்தென்? மாட்சிமை யிருந்தென்?
கநமிக விருந்தென்? காவல ரிருந்தென்?
அநக னருளிலே லழிவரே யாரும்!

ஆ! ஆ! நாமொன்று நினைக்கத் தைவமொன்று நினைக்கு மென்பார்களே: அது வாஸ்தவமாயிற்று! போஜனைக்கொ ன்று தாராநாட்டைக் கைப்பற்றியதுமன்றி, விலாஸவதியையும் எவ்விதத்திலாயினும் வஞ்சித்து மறுமணஞ்செய்து கொண்டு, பூபாளநாட்டிற்கும் அரசனுகிவிடலாமென்று நினைத்தோமே! அஃதினி எங்ஙனம் ஸாத்யப்படப்போகின்றது? உள்ளதற்கே மோசம் வந்துவிடும்போலிருக்கின்றதே!

பெற்றதைக் கண்டுவந்து
பிழையில் வழியினின்று,
மற்றவர் வாழ்வையெண்ணி
மநத்தினைத் தூயதாக்கி,

அற்றவர்க்குதவி நாளும்
அன்புடை யார்களுக்கே
செற்றமின் மநத்துத்தேவர்
செய்விப்பர் நன்மை யம்ம !

ஆஹா ! இனிநமக்குத் தூரையாயினும் ஸித்திக்குமா ?

உள்ளத்தி லுதிக்குமெண்ணம்
ஒருவனுக் குறுதியாகும்,
உள்ளத்தி லுதிக்குமெண்ணம்
ஒருவனை யொழிப்பதாகும் :
உள்ளத்தினினைவான்மாந்தர்
உய்குவ ரழிவ ரந்தோ !
உள்ளத்தின் றீமையாலே
உலகெலாம் பகையாய்க்கொண்டேன் !

இனி, எதுவரினும் பட்டே தீரவேண்டும்.

(ப்ரவேசித்து)

பத்ரநாராயணர் :—(பரபரப்புடன்) மஹாராஜ ! நாம் போய்விட்டோம் !

முஞ்ஜ :—மந்த்ரீ ! என்ன செய்தி ? என்ன செய்தி ?

பத்ர :—மஹாராஜ ! தாங்கள் கவனித்துக் கேட்கவேண்டும் ! நம் ஸேனைத்தலைவர் வத்ஸராஜர் பகைவருடன் சேர்ந்து விட்டனர் ! நமது ஸேனைகளெல்லாம் பகைவர்களால் நான்கு பக்கங்களிலுஞ் சூழப்பட்டு ஜஞ்ஜாமாருதத்தினால் முறிந்து வீழ்த்தப்பட்ட மரங்கள்போற், சிந்நபிந்நமாய்ச்சிதறிப் பறந்து விட்டன ! நான் பிழைத்துத் தம்மிடம் வந்ததே அஸாத்யமாய் விட்டது. தாங்களே நேரேவந்து தைர்யஞ்சொல்லினால் ஒரு வேளை மிருந்துள்ள ஸேனைகளை ஓடாமல் நிற்கச்செய்யலாம்.

(போஜன் மாறு வேஷத்துடன் ஓர் பர
தேசியைப்போல் ப்ரவேசித்தல்)

முஞ்ஜ:—மந்த்ரீ! நீ சீக்ரஞ் சென்று நாம் வருவதாகச் சொல்லி, ஸேனைகளை நிற்கும்படி செய்! அவ்வாதித்யவர்மனையும் அக்கிழவனையும் இனிக் கொல்லாமல் விடுவதில்லை! (பத்ரநாராயணர் நிஷ்க்ரமிக்க) ஆ ஆ! என்ன புத்திஹீநனானேன்! வத்ஸராஜனுடைய வார்த்தையை நம்பி யன்றோ இவ்வாதித்யவர்மனை யெதிர்க்கத் துணிந்தேன்! அவன் நம்மை ஸமயத்திற் கைவிடுவனென்று கனவிலும் நினைக்கவில்லையே! நாம் செய்த மோசம் நமக்கே வாய்த்ததுபோலும்? நான் பிறருக்கு இட்டதைப் பிறர் எனக்கிடுகின்றனர்.

* "சுழல் சகடக்கால் போலுந்
தோன்றியே யழிமின் போலும்,
மழன் மகவேளை போலும்,
மருவிதி மேவி நீங்கும்,
பழமைபோ லதனை நம்பிப்
பழியுறச் செருக்கன் மேக
நிழலினை நம்பிகைக் கொ
ணெடுங் குடை நீத்தலொப்போ!"

ஆகலின், இனி நாம் பகைவரை வெல்வதெங்ஙனம்? நாமெங்கேயாகினுஞ் செல்வோமா?

† "நிலை தளர்ந்திட்டபோது நீணிலத்துறவுமில்லை,
ஜலமிருந்தகன்றபோது தாமரைக் கருக்கன் கூற்றம்;
பலவந மெரியும்போது பற்றுதீக் குதவுங்காற்று,
மெலிவிலிவிளக்கேயாகில் மீண்டுமக்காற்றேகூற்றாம்"

சீ! நாமிதுகாறும், ஸாஹஸ வீரனென்று உலகெலாம் பெயர் பெற்று, இப்பொழுது இவ்வழிவுடலுக்குப் பயந்து பின் வாங்கு

* நீதிநூல். † விவேகசிந்தாமணி

வோமாகில் நம்மை மாற்றரசர்கள் என்ன வினையார்கள் ? பின்பு நமது ஸொந்தநாடாகிய தாரைதான் நமக்கு கிலேக்குமோ ?— மேலும் எப்படி நாம் தப்பித்துச் செல்வது ? பகைவர் கையிலகப்பட்டுத் தவிப்பதைவிட நேரே யவர்களுடன் யுத்தஞ் செய்து கையுங்கத்தியுமாய் மடிவதே மேன்மை ! எதற்கும் போர்க் கோலம் பூண்டு வெளியிற் செல்வோம் ? (நான்கடி பரிக்ரமித்து, நோக்கி) அந்தோ! இஃதென்ன என் முன் னிற்கின்றதே!

போஜன் :—(மறைந்து நின்றபடி) ஆஹா ! என்ன வஞ்சனை ! எவ்வளவு த்ரோஹம் !

முஞ்ஜ:—(உற்றுநோக்கி, அச்சங்கொண்டு) ஆ ஆ ! இஃதென்ன ? நாம் காண்பது கனவோ ? அந்தோ ! போஜனுடைய குரல்போலவேயிருக்கின்றதே ! ஒருவேளை நான் தொலேப்பித்த அவனது ஆவிதான் இவ்வுருவங்கொண்டு வந்திருக்கின்றதோ ?

போஜ:—ஆ ! சிற்றப்பா! என்னைக் கொல்லப் பார்த்ததுமன்றிப் பேதையான விலாஸவதியையும் கெடுக்கப் பார்த்தனையே !

முஞ்ஜ:—(தலேகுனிந்தபடி நடுக்கங்கொண்டு ஆத்மகதமாய்) ஐயோ ! இஃது போஜனது உருவமே ! (ப்ரகாஶமாய்) குமார ! உன்னை வேண்டிக்கொள்கின்றேன் ! என்முன் னில்லாமல் விலகிச்செல் !

போஜ:—கெடுவான் கேடு நினைப்பான்' என்பதையறியாயோ ?

மண்ணினிற் பெண்ணிற் பொன்னின்
மாறலில்லாசை கொண்டார்
கண்ணினை யிழந்தாராகிக்
கடுவழிச் சென்றுகெட்டே,

புண்ணுறு மனத்தராகிப்
புலம்பியே யவழிவரிங்கும்
பண்ணினும் மூன்றிற்றீங்கு
பட்டழிவுறுவாய் மூடா !

மூஞ்ஜ:—(கைகளைக்கூப்பி) ஐயோ ! உன்னை வேண்டிக் கொள்கின்றேனே ! என்னை வருத்தாமல் விட்டகலேன் ! (செவிகொடுத்து) ஆ ! இஃதென்ன ? திடீரென்று ஸங்கத்வனியும் கேட்கின்றது ! பகைவர்களுமிச்சமயத்தில் என்னைச் சூழ்ந்து கொண்டனர்களோ ?

போஜ:—ஆ ஆ ! இதுதான் உன் செய்கைகளுக்கு நீ யடைந்த பயன் போலும் ?

* "தாயநீர்க்குமிழி யதினுறு மின்பங்
கானலிற் புனலிது தனக்கிங்
காயவித்துயர மளவிலை யிதை நீ
யாய்வுறாமை மையினா லழிந்தற்றாய் !
நீ யினிக்கவலை நினைவெலா மொழித்து
நேயமாய் வந்தெனக் குடன்பட்
டாய நற்சொரூபற் கன்பமே தயிசைந்தா
லரியதேதார் நமக் கெதிரே !"

(ப்ரவேஸித்து)

பைரவன்:—(பரபரப்புடன்) இதோ தம்மைக் கையும் பிடியுமா கொண்டுபோவதற்கு ஆதித்யவர்ம மஹாராஜாவே பெருத்த சைன்யத்துடன் வருகிறாங்க !

மூஞ்ஜ:—ஆ ! இவன் கையிலும் யான் உயிருடன் அகப்படுவேனா ? இவன் வருவதற்கு முன்னரே நானே இக்கரவாளத்தினால் குத்திக்கொண்டிறக்கின்றேன் ! (குத்திக்கொண்டு கீழே வீழ்தல்)

---

* குறள்திரட்டு

போஜ:—(பரபரப்புடன்) ஆ! நில்லும்! நில்லும்!! அவஸரப்படாதீர்! அவஸரப்படாதீர்!! (அருகிற் சென்று, தான் போர்த்திருந்த மாறு உடைய எறிந்துவிட்டு) ஆ! சிற்றப்ப! சிற்றப்ப! யான் இருக்கும்பொழுது தாமொன்றுக்கும் பயப்பட வேண்டியதில்லையே.

முஞ்ஜ:—(நோக்கி) ஆ! இஃதென்ன! நிச்சயமாய்ப் போஜனே! (கண்ணீர் சொரிய) குமார! குமார!! நீ உயிருடனிருக்கின்றனையோ?

போஜ:—எந்தையே! யான் கொலையுண்டிறக்கவில்லை! உம்மைக்காப்பாற்றுவதற்கு யான் எப்பொழுதும் ஸந்நத்தனாகவே யிருக்கின்றேன்!

முஞ்ஜ:—ஆ! குமார! இனி என்னைக் காப்பாற்றுவது எங்ஙனம்?

*"அவரவர் வினையி னவரவர் வருவா
ரவரவர் வினையள வுக்கே,
அவரவர் போக மென்றதே யாயி
னாருக்கார் துணையதா குவர்கள்?
அவரவர் தேஹ முளபொழு துடனே
யாதர வாரென நாடி,
அவரவ ரடைத னெறிகன்மத் தடையு
மாதர வாதர வாமோ?"

இதோ யான் புரிந்த கொடுந்தொழிலின் பயனை க்ஷணத்தில் அநுபவிக்கப்போகின்றேன்! இதோ என் ப்ராணன் வெளியிற் புறப்பட்டுவிட்டது பார்!

*"கொலைகளவு காமாதி
கொடுநரகத் தீச்சூழ்ந்து
நிலைகலங்கி மநம்புழுங்கி
நெறியொதுங்கி நின்றேனைக்

* குமாரதேவர்:

கலையுணர்வி னெஞ்சாந்திக்
கட்லாடச் சுகமீட
மலைவ்வாட வைததவடி
மாண்பதனை மறப்பதுவே!"

போஜ:—(நோக்கி) ஆ! ஸாஹஸம்! ஸாஹஸம்!!

முஞ்ஜ:—குமார! யான் உனக்குப் பலவிதத்தினுந் தீங்குகளிழைத்தேன்! அவற்றை மறந்து என்னை மன்னிப்பாய்! (போஜனது காலை வணக்கமாய்ப் பிடித்துக்கொண்டு)

'பித்தனெனத் தீமை
பிதற்றிய தெண்ணுந்தோறும்
உத்தமனே! என்னுடைய
உள்ள முருகுதடா!

இப்பாவி நெஞ்சால்
இழுக்கிழைத்தே னுங்கதனை
அப்பா! நினைக்கிலெனக்
கஞ்சும் கலங்குதடா!

பொருந்துகின்ற வஞ்சப்
புதுமையெண்ணி யெண்ணியையோ
வருந்துகின்ற தோறுமுள்ளே
வாளிட் டறுக்குதடா!

ஊனமிலா நின்னை
உரைத்தகொடுஞ் சொல்லையெலாம்
ஞானமிலே னெண்ணுந்தோறு
நாடி நடுங்குதடா!

இனியேது செய்வேன்
இகழ்ந்துரைத்த சொல்லை
தனியே நினைந்திடினுந்
தாது கலங்குதடா!

வெந்நரகில் வீழும்
வினைவால் விளம்பியதை
என்னரசே! எண்ணுதொறு
மென்னை விழுங்குதடா!

ஆவ தறியா
தடியே னிழைத்தகொடும்
பாவ வினைக்கப்
பகிரென் றலைக்குதடா!'

**போஜ:**—அதனாலென்ன! தமது கட்டளைப்படி இப்பொழுதும் நடக்கக் காத்துக்கொண்டிருக்கின்றேன்!

**முஞ்ஜ:**—(கண்ணீர்சொரிய **போஜனை** இரண்டு கைகளாலும் மார்புடனணைத்துக்கொண்டு) என் செல்வனே! இனி எனக்குவேண்டியது மிருக்கின்றதோ? இதோ பார்! என் கண்கள் இருள் மூடிவிட்டன! இந்த்ரியங்கள் வலிவற்றுப் போயின! நினைவு தடுமாற்றங்கொள்கின்றது! ஹ்ருதயம் சூன்யமாய்விட்டது! இதோ மாள்கின்றேன்!

* "எடுத்தமா ஜன்மம் பாழி
லேதுதற் கஞ்சா ரஞ்சி
யடுத்தவர்க் கருளா ரச்ச
மாடுவர் பொருட்கைக் கொண்டே
யுடுப்பது முண்பதும்பின்
னுறங்கலுந் தவமாய்த் தர்க்கந்
தொடுப்பதி னூட்க ழிக்குந்
துஷ்டருக் கஞ்சு மாறே!"

போஜ:—எந்தையே! ஆற்றுதலடைவீர்! ஆற்றுதலடைவீர்!!

* அறபவா சந்த தீபிகை

முஞ்ஜ:—இனி ஆற்றுதலடைவதெங்ஙனம்? எண்ணை யற்றபின்னர் தீபத்தின் ஒளி முன்போலத் திகழுமோ? நதியின் வேகம் தன் கரையினையே கரைப்பதுபோல் நான் செய்த துஷ்க்ருத்யமே என்னைக் கரைத்தழிக்கின்றது! ஆ! என்னருமைச் செல்வனே! நீ என்னை மன்னிக்காவிடில் நான் நற்கதி பெறேன். ஆ! இப்பொழுதே ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் இவைகளில் ஒன்றையு முணர்கிலேன். ஆ! மாள்கின்றேன்! மாள்கின்றேன்!!

*"கலைமுடிவு கண்டறியேன்,
கரணமெலா மடங்குங்
கதியறியேன், கதியறிந்த
கருத்தர்களை யறியேன்,
கொலைபுலைகள் விடுத்தறியேன்,
கோபமறுத் தறியேன்,
கொடுங்காமக் கடல்கடக்குங்
குறிப்பறியேன், குணமா
மலைமிசையின் றிடவறியேன்,
ஞானநடம் புரியும்
மணிமன்றந் தனையடையும்
வழியுமறி வேனோ?
இலையெனுமிவ் வுலகினிடை
யெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்ன செய்வேன்
ஏதுமறிந் திலனே!"

"வாதமே புரிவேன்! கொடும்புலி யனையேன்!
வஞ்சக மனத்தினேன்! பொல்லா
ஏதமே யுடையேன்! என்செய்வேன்? என்னை
என்செய்தாற் றீருமோ வறியேன்!

* திருவருட்பா

போதமே! ஐந்தாம் பூதமே! ஒழியாப்
புநிதமே! புதுமணப் பூவே!
பாதமே ஶரணம் ஶரணமென் றன்னை
பாதுகாத்தளிப்பதுன் பரமே."
(கீழே வீழ்ந்து மரணபாதையை யபிநயித்தல்)

போஜ:—ஆ! கஷ்டம்! கஷ்டம்!

பேதை நீ மண்ணைப் பெண்ணைப்
பெற்றுடல் களிக்க நாடி,
ஏதையு மெண்ணு யாகி
யிழைத்தை பல்வினை களந்தோ!
ஓதினய்! உணர்ந்தாய்! சால
உலகெலாந் தூற்ற நின்றாய்!
கோதினருள்ள மிங்குக்
குலைவின்றி வாழ்ந்ததுண்டோ!

பைர:—ஹா! ஹா! (ஓடுதல்)

போஜ:—ஆ! ஶ்ரீஶா! உனது செயலை யான் என் சொல்வேன்! (கண்ணீர் சொரிய)

*"தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
சுடரே! தொடக்கறுத்தோர் சுற்றமே! பற்றி
நீந்த வரிய நெடுங்கருணைக் கெல்லா
நிலயமே! வேத நெறிமுறையி னேடி
யாய்ந்த வுணர்வி னுணர்வே! பகையா
லலைப்புண் டடியே மடிபோற்ற வந்நா
ளீந்த வரமுதவ வெய்தினையே யெந்தாய்!
இருநிலத்தவோநின் னிணையடித்தாமரைதாம்!"
(போஜன் மூர்ச்சித்து வீழத் திரை வீழ்தல்)

---

* இராமாயணம்

## இரண்டாங் களம்

இடம்:—உஜ்ஜயிநீ நகர்: ஆதித்யவர்ம மஹாராஜருடைய ஆஸ்த்தாந மண்டபம்

(ஸிம்ஹாஸநத்தினிருபுறத்திலும் இரண்டு ஸேவகர்கள் வெள்ளித்தடிபிடித்து நிற்க, இரண்டு யவநிகள் வெண்சாமரை வீச, மந்த்ரி ஸுகேஸர் முதலிய சில ஆஸ்தாநிகருடன் ஆதித்யவர்ம மஹாராஜர் பத்மாவதீ தேவியாருடன் ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருந்தபடி ப்ரவேஸித்தல்)

ஆதி:—மந்த்ரீ! அன்று நம்மைப் பகைவர்கையினின்றும் போர்க்களத்திற் காப்பாற்றிய அம்மஹாவீரர்களிருவரையும் அழைத்துவரச் சென்றனர்களோ? போஜகுமாரரும் பூபாள தேஸத்து மஹாராணியாரும் அவரைச் சேர்ந்தவர்களுடன் இப்பொழுது நம்மைக்கண்டு விடைபெற்றுச் செல்வதற்காக வருவதாய்த் தெரியப்படுத்தினர். நாம் அவர்களுக்குத் தக்கபடி மர்யாதை செய்து வழியனுப்பல் வேண்டுமன்றோ?

ஸுகேஸர்:—மஹாராஜ! அவர்களை யழைத்துவருவதற்காக நமது ஸேனைத்தலைவர் வீரஸேநரே சென்றிருக்கின்றனர்: இன்னுஞ் சிறிது நேரத்திற்குள் அவர்கள் இங்கே வருவார்களென்று நினைக்கின்றேன். போஜகுமாரரையும் சாருமதீ தேவியாரையும் நானே எதிர்கொண்டு சென்று மர்யாதைகள் செய்து அழைத்து வருகின்றேன்! (நிஷ்க்ரமித்தல்)

ஆதி:—ஈஸனது க்ருபையால் எல்லாம் நன்றாய் முடிந்தன! அக்கொலைப்பாதகன் முஞ்ஜராஜனும், தான் செய்த கொடுந்தொழிலுக்குத் தக்கபடி, தானே குத்திக்கொண்டு இறந்தனன்! நமது ப்ரிய நண்பராகிய ஸ்ரீ ஸிந்துலமஹாராஜருடைய புதல்வர் போஜகுமாரரும், பலவித ஆபத்துக்களினின்றுந் தப்பித் தமது பந்துமித்ரர்களுடன் சேர்ந்தனர்! ஆஹா! அவ

ருடைய பராக்ரமத்தை யான் என் சொல்வேன்! நானும், அவ்வீரர்கள் இருவரும், அப்பாதகன் முஞ்ஜனது கபடத்தால் திடீரென்று கையும் பிடியுமாய் அகப்பட்டுக்கொண்டு சத்ரு ஸிபிரத்திற்குக் கொண்டு போகப்படும் ஸமயத்தில் எங்கேயிருந்தோ வேற்றுருவங்கொண்ட தேவஸேநாபதிபோல் விரைந்தோடிவந்து, என்னையும் அவ்வீரர்களையும் க்ஷணத்தில் விடுவித்து, அப்பாதகனையுந் தலைகாட்டவொட்டாமல் ஓடச்செய்தனரன்றோ அம்மஹாவீரர்?—ஆஹா! இந்த ஸமயத்தில் நமது கண்மணி லீலாவதி யிருந்திருப்பாளாயின், அவருக்கே அவளை மணஞ்செய்து கொடுத்து, இந்த ராஜ்யத்தையு மவர்களுக்குத்தந்து, யான் பேரானந்த மடைவேனே!

பத்மா:—ப்ராணேஶ்வரா! நேற்று நாம் ஶஶிப்ரபா தேவியாரையும் சாருமதீ தேவியாரையுங் காண்பதற்காகப் போனபொழுது, வழியில் இருவரைத் தாங்கள் காண்பித்தீர்களே, அவர்கள் தாமோ அம் மஹாவீரர்கள்?

ஆதி:—ஆம்! ஆம்! அவர்களே!

பத்மா:—அவர்களில், அச்சிறுவனைப் பார்த்தீர்களோ? அவனைக் கண்டதுமுதல் என்மநத்தில் தோன்றாத எண்ணங்களெல்லாந் தோன்றுகின்றன. அவனைப் பார்த்ததும் நமது கண்மணி லீலாவதியைக் கண்டதுபோலிருந்தது!—(கண்ணீர் சொரிய) அச்செல்வியையும் நாம் காணப்போகின்றோமா?

ஆதி:—ஆம்! எனக்கும் அவர்களைக் கண்டதுமுதல் அச்சிறுவனிடத்தில் ஸொந்தப் பிள்ளையினிடத்திற்போல அளவுக்கடங்காத அன்பு உண்டாயிருக்கின்றது. ஆயினும், நமக்கினி அப்படிப்பட்ட பெண்மணியுங் கிடைக்கப்போகின்றனளா? நெடுநாள் வரைக்கும் மக்களில்லாது வருந்தினோம்! ஏதோ ஸ்ரீ காலப்ரியநாதருடைய அநுக்ரஹத்தாற், புத்ரனில்லாவிடினும், வனிதாரத்நமாகிய லீலாவதியைப் புதல்வியாயடைந்தோம். மக்களில்லா வருத்தத்தையும் சிலநாள் மறந்தோம்.

பூண்டோம் இவ்வுஜ்ஜயிநீ ராஜ்யாதிபத்யத்தை. ஆண்டோம் குறைவின்றி யநேக வர்ஷம்! கொண்டோம் திக்கெலாம் வெற்றியை! கண்டோம் ஸகல ஸுகங்களையும்! இவற்றை யெல்லாம் நினைப்பதிற் பயனென்னை? நமது கண்மணியை நாம் உயிருடன் பறிகொடுத்துப் பன்னிரண்டு வர்ஷங்களா யினவே! இன்னு மவளது செய்தி ஏதும் தெரியவில்லையே! இப்பொழுது அவள் உயிருடனிருப்பின், பதினாறுவயதுள்ள திவ்ய யுவதியாய், விவாஹோசிதையாய், விளங்குவளன்றோ? அவள் கிடைப்பின் நமக்கு நிகர் யார்?

பத்மா:—ப்ராணநாத! நினைக்க, நினைக்க, நங் கண்மணி உயிருடனிருப்பாளென்றே தோன்றுகின்றது!

ஆதி:—ஸ்ரீ தேவியே யுருவெடுத்து வந்தாற்போலிருந்த அப்பெண்மணியைக் கண்டாயினும் யாம் உயர்நலம் பெறலா மென்றெண்ணி யிருந்தோமே! அவளைப் பறிகொடுத்தும், நாம் இந்த ராஜ்யஸுகத்தை யநுபவித்திருக்க வேண்டுமோ? மேகத்திற்றோன்றும் மின்னலைப்போல் க்ஷணபங்குரமான சிற் றின்பங்களை யநுபவித்தோமே யன்றி, பரத்திற்கு ஸாதநமான ஒரு நற்றவத்தையும் யாம் புரிந்திலோமே!

> மக்கள் யாவரு மொக்கவே யடையும்
> இறப்பெனு முண்மையை மறப்ப ராயின்,
> கேடுவே றுண்டோ? வீடுபேற் றிற்குத்
> துறப்பெனுந் தெப்பந் துணைசெய் யாவிடில்,
> பிறப்புப் பெருங்கடல் கடக்க லாகுமோ?
> ஞான நெறியிற் போனவ ரன்றியும்
> செல்வம் நீக்கிய செல்வ ரன்றியும்
> யாவ ருயர்ந்த தேவநா டடைந்தார்?

(ப்ரவேசித்து)

ஒரு ஸேவகன்:—மஹாராஜா! நமது ஸேனைத்தலைவர் யாரோ இரண்டுபேரை யழைத்து வந்திருக்கிறார்! உள்ளே வர உத்தரவு கேட்டுவரச்சொன்னார்.

ஆதி:—உடனே சென்று வரச்சொல்! (ஸேவகன் விஷ்க்ரமிக்க) ப்ராணேஸ்வரி! இவர்கள் தாம் நம்மை முதன் முதலிற் காப்பாற்றவந்த வீரர்களாயிருத்தல்வேண்டும்.

(ஜயபாலனும், புருஷவேஷத்துடனிருக்கும் லீலாவதியும், வீரஸேநனை முன்னிட்டுக்கொண்டு ப்ரவேசித்தல்)

ஆதி:—(எழுந்து) வாருங்கள் எமது ப்ரிய நண்பர்காள்! இவ்வாஸநத்தில் வீற்றிருங்கள்! உங்களது உதவியாற்றான் யாம் அன்று பிழைத்தோம்! நீவிர் செய்த பேருதவிக்கு யாம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோம்? இந்த ராஜ்யத்தையே தங்களுக்குப் பரிசாய்க்கொடுத்தாலும் போதாதே!

ஜய:—மஹாராஜ! இத்தனை மர்யாதையுந் தாங்கள் புரிய நாங்கள் யாதோருதவியுஞ் செய்யவில்லையே! அப்போஜகுமாரராலேதான் நாமெல்லோரும் உயிர்கொண்டு மீண்டோம். அம் மஹாவீரரை யழைத்து, அவருக்குச் செய்யுங்கள் இம் மர்யாதைகளையெல்லாம்.

லீலா:—(ஜநாந்திகமாய்) எந்தாய்! இவர்தாமோ ஆதித்யவர்ம மஹாராஜர்?

ஜய:—(ஜநாந்திகமாய்) ஆம்! குழந்தாய்!

லீலா:—(ஆத்மகதமாய்) ஆஹா! இவரைப்பார்க்கும்பொழுதே என்மனத்தில் இவரிடத்திலோர் அதிசயமான குருபக்தியுண்டாகின்றதே!

ஆதி:—(ஜயபாலனை நோக்கி) இச்சிறுவன் தமக்கு என்ன ஆகவேண்டுமோ? இவனது செயலைக் கண்டு மிகவும் இவனை கொண்டாடுகின்றோம்.

ஜய:—மஹாராஜ ! இச்சிறுவன் நம் புதல்வரி லொருவன். தமக்கே இவனைப் பரிசாயளிக்க அழைத்துவந்தேன். இவனால் தமக்குப் ப்ரியமுண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை.

லீலா:—வந்தநம் ! (ஆதித்யவர்ம மஹாராஜரை வணங்குதல்)

ஆதி:—(ஆத்மகதமாய்) ஆஹா ! இவனது குரலும் நம் கண்மணி லீலாவதியின் குரலை யொத்திருக்கின்றதே ! என்ன விநயம் ! என்ன பொறுமை ! (ப்ரகாஶமாய்) பாலகா ! நீ இன்றுமுதல் எம்மையும் ஒரு தந்தையாக நினைக்கவேண்டும் !

லீலா:—மஹாப்ரஸாதம் !

(ப்ரவேஶித்து)

ஸுகேஶர்:—மஹாராஜ ! அவர்களெல்லோரும் நம்மரண்மனைத் தலைவாயிலில் வந்திருக்கின்றனர் ! உள்ளேயழைத்துவரலாமோ ?

ஆதி:—மந்த்ரீ ? அதற்கென்ன தடை ! ஶீக்ரஞ்சென்று அழைத்துவாரும்.

ஸுகே:—அப்படியே ! (நிஷ்க்ரமித்தல்)

ஆதி:—(ஜநாந்திகமாய்) எனது ப்ரியநாயகீ ! ஜகதீஶனது க்ருபையால் ஸகலமும் மங்களமாய் அமைந்தன ! நமக்கு இந்த யுத்தத்தில் இவ்வளவு பெருமையும் வெற்றியும் ஆக்கிய அம்மஹாவீரருக்கு நாம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றோம் ?

பத்மா:—(லீலாவதியைப் பார்த்துக்கொண்டே ஜநாந்திகமாய்) ஆஹா ! இந்தஸமயத்தில் நமது லீலாவதி கிடைப்பாளாயின், அவளை இவருக்கே மணஞ்செய்துகொடுத்து, இந்த நாட்டையு மவர்களுக்குக் கொடுத்துவிடலாமே.

(நேபத்யத்திலிருந்து மங்களகோஷம் முழங்குதல்)

ஆதி:—இதோ அவர்களும் வருகின்றார்கள்! (எல்லோரும் எழுந்திருத்தல்)

(போஜகுமாரர், காளிதாஸர், புத்திஸாகரர், வத்ஸராஜர், ஹரிஹரர், கோவிந்த பண்டிதர் முதலியோர் ஒரு புறத்திலும், லீலாவதீதேவியார், சாருமதீதேவியார், விலாஸவதி, ஸுந்தரி முதலியோர் மற்றொரு புறத்திலும், ஸுதேஹரை முன்னிட்டுக்கொண்டு ப்ரவேசித்தல்)

ஸபையோர்:—(எழுந்து நின்று) ஜய! ஜய! விஜயீ பவ!

ஆதி:—(எதிர்கொண்டு சென்று) போஜகுமாரரே வாரும்! எம்முயிரைக் காப்பாற்றிய வீரஸிம்ஹமே வாரும்! வாரும் காளிதாஸரே! வாரும் எமது ப்ரிய நண்பராகிய புத்திஸாகரரே! எல்லோரும் வருக, வருக! உங்களது உதவியாலேதான் எமது கீர்த்தியும், ராஜ்யமும் நிலைத்தன! யாவரும் இங்கு விஜயஞ்செய்ய வேண்டும்! (யாவரும் ஆதித்யவர்மாவை வணங்கி யுட்காருதல்)

பத்மா:—(தேவிமார்களுக்கு முன் சென்று) மஹாதேவியாரவர்கள் வரவேண்டும். (கைலாக்குக்கொடுத்துத் தன் பக்கலில் மர்யாதையுடன் உட்காரவைத்தல்)

போஜ:—மஹாராஜ! நாங்கள் என்ன உதவிசெய்தோம்? தம்முடைய பேருதவியினாலேதான் நாங்கள் இப்பதவியை யடைந்தோம்.

ஆதி:—ராஜகுமார! உன் விநயமே எம்மைப் பரவசப்படுத்துகின்றது. இனி இந்த ராஜ்யமு முன்னுடையதே!

போஜ:—மஹாராஜ! யான் இவ்வளவு மர்யாதைக்கு அர்ஹனல்லேன்! வேண்டுமாயின் பரமோபகாரியான இப்

ப்ராஹ்மணோத்தமருக்குச் செய்யுங்கள் இம்மர்யாதைகளை யெல்லாம்.

கோவிந்த:—ராஜகுமார ! என்னைப்போன்ற ஏழைகளுக்கு இம்மர்யாதைகள் தகுமா ? நீ இவைகளை யெல்லாம் பெற்றுச் சக்ரவர்த்தியாகிப் ப்ரஜைகளைப் பாதுகாத்து வந்தால், அதுவே எனக்கு ஸகல ஸாம்ராஜ்யமுங் கிடைத்ததுபோலாகும்.

ஜய:—மஹாராஜ ! என்னை மன்னித்து, யான் கூறுமவற்றைச் சிறிது கருத்தோடுங் கேட்கவேண்டும். யான் தமக்குமாத்ரமன்று, இந்த ராஜகுமாரருக்கும் பெருந்தீங்கிழைத்துவிட்டேன்.

ஆதி:—இஃது விந்தையினும் விந்தையே !

போஜ:—(ஜயபாலனை நோக்கி ஆத்மகதமாய்) ஆ ! இஃதென்ன ! இவனன்றோ அப்பில்லராஜன் ! இச்சிறுவன் யாவனோ ? இவனைப் பார்க்கும்பொழுது என்னுயிர்க்காதலி லீலாவதியின் ஞாபகம் வருகின்றதே !

ஜய:—இல்லை ! மஹாராஜ ! என் மதிஹீநத்தினால் தமக்கும் இந்த ராஜகுமாரருக்கும் மஹத்தான அபராதத்தைப் புரிந்துவிட்டேன் !

இரக்கமுளங் கொள்ளாம
லிச்சிறுவ னோடுந் தமக்கும்
அரசே ! யான் செய்தவப
ராதத்தை யென்சொல்வேன் !
புரிந்தபிழை பொறுத்தெனக்குப்
போதித்து நல்வழியைக்
கருணையுட னடியேனைக்
காப்பதினி நும்பாரம்.

ஆதி:—நீர் கூறுவதெல்லாம் விந்தையே ! ஆயினும் நுமது கருத்தை விளக்கியருளும்.

ஜய:—மஹாராஜ ! சொல்கின்றேன் ! கவனித்துக் கேட்டருளுக ! யான் தாரை நாட்டிற்கும் இந்நாட்டிற்கும் மத்தியிலிருக்கும் ஒரு மலைநாட்டை யாண்டுவரும் பில்லராஜன் ! என்னை ஜயபாலன் என்பர் ! களவே எங்களுக்குக் கைவந்த தொழிலாயிருந்தது !

லீலா:—(ஆத்மகதமாய்) இதையுமொரு சிறந்த தொழிலென்று சொல்லுகின்றனரே ! (தலைகுனிந்து நிற்றல்)

ஆதி:—(புன்சிரிப்புடன்) அதனாலென்ன ! உலகத்தில் இதுவுமொரு தொழிலே ! அதனாலேதான் 'களவுங் கற்று மற' என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர். இனி யதை நீரும் மறப்பீரென்றே நம்புகின்றோம் !

ஜய:—உங்களது அநுக்ரஹத்தால் அக்கொடுந்தொழிலை யான் முன்னரே கட்டோடே விட்டுவிட்டேன். அது நிற்க, தங்களுக்கு ஞாபகமிருக்குமே ? ஸுமார் பன்னிரண்டு வர்ஷங்களுக்குமுன், தாமுந் தேவியாரும் நான்கு வயதுள்ள ஒரு பெண் குழந்தையுடன் எனது துர்கத்திற் கருகில் வேட்டையாட வந்தீர்களன்றோ ?

ஆதி:—ஆ ! கஷ்டம் ! அஃது இன்னும் நன்றாய் ஞாபகமிருக்கின்றது.

ஜய:—அப்பொழுது திடீரென்று ஒரு பதினறடிவேங்கை துரத்திவர, ஒரு மரத்தடியில் அக்குழந்தையுடன் தங்கியிருந்த தமது பரிவாரங்கள் பயந்து அவ்விடத்திலேயே குழந்தையை விட்டுவிட்டு ஓடத்தலைப்பட்டனரன்றோ ?

ஆதி:—ஆம் ! வாஸ்தவமே ! பிறகு அக்குழந்தையின் கதி என்னவாயிற்றோ ?

ஜய:—நான் அச்சமயத்தில் தற்செயலாய் அவ்விடம் வந்தேன். அக்குழந்தை தனியாய் அழுதுகொண்டிருப்பதைக் கண்டு, அதனை விட்டுப்பிரிய மனமில்லாமல், என்னுடனெடுத்துச் சென்றேன். தாங்களும் அவ்விடத்தில் எங்குந் தே

XIX

ADITYAVARMAN'S IMPERIAL DURBAR

OR

"THE WONDERFUL REVELATION BY JAYAPALA OF LILAVATI, THE MISSING DAUGHTER OF THE KING OF UJJAIN"

——*Act VII, Scene 2, page* 377

Facing page ௩௭௮

## XIX

# ஆதித்யவர்ம மஹாராஜரின் ஆஸ்தாந மண்டபம்

அல்லது

### "காணமற்போன தன் அருமைப் புதல்வி லீலாவதியைக் கண்டெடுத்து ஆதித்யவர்ம மஹாராஜர் ஆநந்தக் கடலில் மூழ்குதல்"

பத்மா:—நல்லது! அவள் உயிருடனிருக்கின்றனளோ?

ஜய:—(லீலாவதியைக் காட்டி) அம்மணீ! இதோ இச் சிறுவனைப்போல் உடைதரித்து நிற்பவளே தமது செல்வப் புதல்வி லீலாவதி.

லீலா:—(ஆத்மகதமாய், ஸந்தோஷத்துடன்) ஆ ஆ! இம்மஹாராஜாவோ என் தந்தையார்! இம்மாதரசிதானோ என்னைப் பெற்றவள்! இதுவரை இப் பில்லர்களின் வயிற்றிற் பிறந்தவளென்றன்றோ நினைத்திருந்தேன்.

ஜய:—குழந்தாய்! நீ போர்த்திருக்கும் புருஷ உடையைக் கழற்றிவிட்டு உன் தாய் தந்தையருக்கு அடிபணிவாய்.

ஆதி:—ஆ! இதென்ன? இவ் வாநந்த பரம்பரையால் எனக்குச் சித்தப் ப்ரமை யுண்டாகும் போல் தோற்றுகின்றதே! என்ன ஆச்சர்யம்! யான் இழந்து விட்ட என்னருமைப் புதல்வியோ இவள்! (லீலாவதியைக் கட்டி யணைத்து) என் கண்ணே! உன்னை யான் இம்மங்களகரமான ஸமயத்திற் பெற்ற பாக்யமே பாக்யம்.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ! என்னுயிர்க்காதலி லீலாவதியே! இவள் ஆதித்யவர்ம மஹாராஜருடைய புதல்விதானோ? அன்றேல், இவ்விரு குணமும் கட்டழகும் எங்கிருந்து வரும்!

—அங்கம். VII, களம். 2, பக்கம். [illegible]



XIX] ஆதித்யவர்ம மஹாராஜரின் அஸ்த்தாந மண்டபம் [உசுக

டிவிட்டு ஒரிடத்திலுங்காணுமல் மகம்வாடி கண்ணீரோடு நகருக்குத்திரும்பி வந்துவிட்டீர்கள்! அதுமுதல் அக்குழந்தை தாங்களிட்ட நாமதேயத்துடனே என் ஸொந்தமகளைப்போல் வளர்த்து வரப்பட்டனள்!

பத்மா:—நல்லது! அவள் உயுருடனிருக்கின்றனளோ?

ஜய:—(லீலாவதியைச்காட்டி) அம்மணி! இதோ இச்சிறுவனைப்போல் உடைதரித்து நிற்பவளே தமது செல்வப் புதல்வி லீலாவதி.

லீலா:—(ஆத்மகதமாய் ஸந்தோஷத்துடன்) ஆ ஆ! இம்மஹாராஜாவோ என் தந்தையார்! இம்மாதரசி தானே என்னைப் பெற்றவள்! இதுவரை இப் பில்லர்களின் வயிற்றிற் பிறந்தவளென்றன்றோ நினைத்திருந்தேன்.

ஜய:—குழந்தாய்! நீ போர்த்திருக்கும் புருஷ உடையைக் கழற்றிவிட்டு உன்தாய் தந்தையருக்கு அடிபணிவாய்! (லீலாவதின் தலைப்பாகையை யெடுத்துவிடுதல்)

அதி:—ஆ இதென்ன! இவ்வாநந்த பரம்பரையால் எனக்குச் சித்தப் ப்ரமை யுண்டாகும்போல் தோன்றுகின்றதே! என்ன ஆச்சர்யம்! யான் இழந்துவிட்ட என்னருமைப் புதல்வியோ இவள்! (லீலாவதியைக் கட்டியணைத்து) என் கண்ணே! உன்னையான் இம்மங்களகரமான ஸமயத்திற் பெற்ற பாக்யமே பாக்யம்.

போஜ:—(ஆத்மகதமாய்) ஆ! என்னுயிர்க்காதலி லீலாவதியே! இவள் அதித்யவர்ம மஹாராஜருடைய புதல்வி தானே? அன்றேல் இவ்வித நற்குணமும் கட்டழகும் எங்கிருந்துவரும்?

ஸபையோர்:—(ஸந்தோஷத்துடன்) ஆச்சர்யம்! ஆச்சர்யம்!!

பத்மா:—(லீலாவதியை நோக்கி) என் கண்மணீ! என்னருகில் வந்து என்னைக் கட்டியணைப்பாய்! (கண்ணீர் பெருக)

உன்னைக் காணுமல் நாங்கள்படும் வருத்தத்தை என் சொல்வோம் !

லீலா :—(அப்படியே செய்து) என்னருமைத்தாயே! எல்லாம் ஈசனது அருளே !

ஶஶி:—(லீலாவதியைக் கட்டியணைத்து) குழந்தாய் ! நற்சமயத்தில் கிடைத்தனை !

விலா :—என் அருமைத் தங்கையே இப்படி வருவாய் ! (தன்பக்கலில் கட்டியணைத்து உட்காரவைத்தல்)

லீலா :—அக்கா ! தங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களையெல்லாங் கேள்வியுற்றேன். ஜகதீஶ்வரன்தான் தங்களைத் திரும்பவும் போஜகுமாரருடன் சேர்த்துவைத்தனர். (தேவிமார்கள் எல்லோரும் லீலாவதியுடன் உள்ளே நிஷ்க்ரமித்தல்)

ஆதி :—ஜயபாலரே ! இப்பேருதவிக்கு யாம் உமக்கு என்ன ப்ரதி செய்யப்போகின்றோம் !

ஜய :—மஹாராஜ ! தாங்கள் என்னை மன்னிப்பதே எனக்குச் சிறந்த கைம்மாறு. யான் இப்பெண்மணியைப்பற்றி ஒரு சிறிய விண்ணப்பஞ் செய்யவேண்டியிருக்கின்றது.

(மறுபடியும் தேவிமார்கள் பெண்ணுடை தரித்திருக்கும் லீலாவதியுடன் ப்ரவேஶித்தல்)

ஆதி :—என்ன! இவளை யாருக்காயினும் மணஞ் செய்து கொடுத்து விட்டீரோ ?

ஜய :—மஹாராஜ ! இன்னுமில்லை ! அதைப்பற்றியே யான் சொல்லவந்தேன் ! இதோ நிற்கின்றனரே போஜகுமாரர், இவர் இன்னாரென்றறியாமல், இவரை யொரு கடுங் காட்டிற்கண்டு, இவரைக்கொண்டே இவரது அரண்மனையைக் கொள்ளையடித்தேன். பிறகு இவரது பராக்ரமத்தைக்கண்டு, இவரை என் துர்கத்திற் கழைத்துச் சென்று, இப்பெண்மணியையும் இவருக்கு மணஞ்செய்து கொடுக்க நாடியிருந்தேன் ! இப்பெண்மணியும் இவர்மீது அளவற்ற காதல் கொண்டனள் !

இவருக்கும் இவள்மீது காதலுண்டா யிருக்கின்றதென்றறிந்து ஆநந்தங்கொண்டேன்! பிறகு கொலைபாவங்களுக் கஞ்சாதவளான என் மனைவியின் சொல்லுக்கிணங்கி இவரைக்கொல்லத் துணிந்தேன். இதையறிந்து இப்பெண்மணியே இவரை எங்கள் கையினின்றுங் காப்பாற்றினள்! இவரது மெய்க்காதலையும் பெற்றனள்! ஆகலின், இச்சமயத்தில் தாங்கள் இப்பெண்மணியை இம்மஹாவீரருக்கே முறைப்படி மணஞ்செய்து கொடுப்பீர்களென்று ப்ரார்த்திக்கின்றேன்!

விலா:—ஆஹா! என்ன ஆநந்தம்! ஆநந்தம்!!

ஆதி:—சர்க்கரைப்பந்தலில் தேன்மாரிபொழிந்தாற்போலாயிற்று!

ஜய:—(போஜனை நோக்கி) ராஜகுமாரரே! யான்செய்த பிழைகளைப் பொருத்தருளவேண்டும்!

போஜ:—தாம் எனக்குச் செய்தவைகளில் அபராதமேதும் இல்லையே!

ஆதி:—புத்திஸாகரரே! தமக்கிந்த ஸம்பந்தம் ஸம்மதமோ?

புத்தி:—மஹாராஜ! இக்காட்சியையும் காண்பேனோவென்றிருக்க, இப்படித் தாங்கள் கேட்பது விந்தையே! இப்பெண்மணி பிறந்த உடனே இந்த ஸம்பந்தத்தை தாமும் தமது நண்பர் ஸ்ரீவிந்துலராஜரும் ஏற்படுத்தி விட்டீர்களன்றோ? ஈசனது அருளால், இதற்குக் குறுக்கே நின்ற அப்பாதகன் முஞ்ஜனும் தற்கொலைபுரிந்துகொண்டொழிந்தான்! இக் கற்பிற்கரசி விலாஸவதியும் தன்ப்ராணபந்துவை யடைந்தனள்! தாமும் வெகுநாளாய்க் காணாதிருந்த தமது அருமைப் புதல்வியைப் பெற்றீர்கள்! இனி இவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து மனமகிழ்ந்திருப்பதைக் காண்பதைவிட எனக்கு வேறென்ன வேண்டியது? ஆயினும் மஹாதேவியாரின் அபிப்ராயமெப்படி யிருக்கின்றதோ?

ஸுமதி:—எனக்கென்ன வேறு அபிப்ராய மிருக்கின்றது? ஆயினும் சாருமதீ தேவியார் என்ன நினைக்கின்றனரோ?

சாரு:—அக்கா! தாங்கள் இப்படி யுரைப்பது விந்தையே! ஈச்வரனுக்கே இப்படிப்பட்ட ஸம்பந்தம் நேரிடவேண்டு மென்றிருக்க யார் தான் அதற்குத் தடைசொல்வர்.

லீலா:—எனக்கும் பூர்ண ஸம்மதமே.

ஆதி:—ராஜகுமார! எம்புதல்வியைத் தாம் முன்னரே காந்தர்வத்தினால் மணந்தவராயினும், மறுபடியும், இப்பொழுது நாங்கள் கண்டு களிக்க, இவளைப் பாணிக்ரஹணஞ்செய்து கொண்டு எங்களை யநுக்கிரஹிக்கவேண்டும். (போஜனுக்கும் லீலாவதிக்கும் பாணிக்ரஹணஞ் செய்வித்தல்)

போஜ:—இவையெலாம் ஈசனது திருவருளே?

*"உலகொடுயிர் பரமாகி யொளிருமொரு பொருளை
யுவமைகடந் தப்பாலுக் கப்பாலாம் பொருளைக்
கலகமிடுங் காமாதி பகைஞர்வலைப் பட்டுக்
கலக்கமுறு முயிர்ப்பறவைகளைக் களையும்பொருளைப்
பலகலையின் முடிவின்முடி வாயிலகுபொருளைப்
பாவாபா வங்கடந்தோர் பங்கிலுறை பொருளை
யலகறுமா நந்தநிறை வேவடிவாம் பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக்கலமே!"

ஆதி:—ஸபையோர்காள்! யான் கருதியதொன்றுளது அதை நீங்கள் நிறைவேற்றி வைக்கவேண்டும்.

† "ஐய சாலவு மலசின னரும்பெரு மூப்பும்
வெய்ய தாய துவியலிடப் பெரும்பரம் விசித்த
தொய்யின் மாநிலச் சுமையுறு சிறைதுறந் தினியா
னுய்ய லாவதோர் நெறிபுக வுதவிட வேண்டும்!"

* அநுபவாநந்ததீபிகை  † கம்பராமாயணம்.

ஆகலின், இப்பொழுதே இவர்களுக்கு முடிசூட்ட விடைதந்தருளவேண்டும்.

சாரு:—சான்றோர்காள்! யானும் இப்பரமாநந்த ஸந்தர்ப்பத்தில் போஜகுமாரருக்கு பூபாள ராஜ்யத்திற் கரசராக, இப்பெண்மணி லீலாவதியுடன் கூடவே, எனது ஏகபுத்ரியான விலாஸவதியையும் ஸிம்ஹாஸநத்தினமீது வீற்றிருக்கச்செய்து முடிசூட்டவிரும்புகின்றேன். அதையும் நீவிர் அநுமோதிப்பீர்களெனப் ப்ரார்த்திக்கின்றேன்.

ஆதி:—ஆநந்தம்! ஆநந்தம்! இதுவே என்னுடைய மனோரதமும். பழம் நழுவிப் பாலிற் விழுந்தாற்போலாயிற்று!

ஸபை:—அப்படியே! மிக்க ஸந்தோஷம்!

ஆதி:—(போஜனையும் விலாஸவதியையும் லீலாவதியையும் தனது ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருக்கச்செய்து, சாருமதீ தேவியார் தன் மகுடத்தை விலாஸவதிக்குச் சூட்ட, பத்மாவதீ தேவியார் தன் மகுடத்தை லீலாவதிக்குச் சூட்ட, புத்திஸாகரர் முஞ்ஜன் இதுகாறும் அணிந்திருந்த மகுடத்தை போஜனுக்குச் சூட்ட) போஜகுமாரரே!

† "மன்னவன் வலிசெங் கோலினு லன்றி
வாளினுல் ஸேனையா லில்லை,
நன்னெறி வழுவா மன்னவன் றனக்கு
நாடெல்லாம் பேரர ணுலகின்
மன் னுயி ரெல்லா மவன்படை யன்றோ
மநமெலா மவனுறை பீடம்
இன்னதன் மையினு லரசளிப் பவனை
யிகல்செயுந் தெருநரு முளரோ?"

---

† சீதிநூல்

ஆதலால், தாம் இவ்விரண்டு பெண்மணிகளையும் பட்டமஹிஷிகளாயடைந்து, நமது பந்து மித்திர ப்ருத்ய வர்க்கங்களுடன் அறுவகை ராஜ்யாங்கங்களும் நிறையப்பெற்று நீடூழிகாலம் இந்த ஸிம்ஹாஸநத்தின்மீது வீற்றிருந்து, ராஜாதிராஜராய், தாரா ராஜ்யத்தையும் பூபாளராஜ்யத்தையும் எப்படிப் பரிபாலித்து வருவீரோ, அப்படியே இவ்வுஜ்ஜயிநீ ராஜ்யத்தையும் இரண்டாவது விக்ரமாதித்யனென்று சொல்லும்படி சக்ரவர்த்தியாயிருந்து, இம்மாளவ மஹாராஜ்யம் முழுமையும் பரிபாலித்து வருவீரெனப் ப்ரார்த்திக்கின்றேன்!

ஸபை:—காவலர்திலக! அப்படியே செய்து எங்களை நுந்தந்தையார் விக்ரமாதித்ய மஹாராஜரைப்போற் களிக்கச் செய்வீரென்று ப்ரார்த்திக்கின்றோம்! உம்மை இம்மாளவ மஹாராஜ்ய ஸிம்ஹாஸநத்தில் பட்டாபிஷேகஞ் செய்து முடிசூட்டும் ஸமயத்தில், நிர்ருதி, யமன், அக்நி, விஶ்வேதேவர்கள், மித்ரன், வருணன், ஸோமன் முதலிய ஸகல தேவர்களுங் காப்பாற்றுவாராக!

" அம்நே! ஸஹஸ்வ ப்ருதநா:,
அபிமாதீர் அபாஸ்ய;
துஷ்டரஸ் தாந் நராதீ:,
வர்ச்சோ தா யஜ்ஞவாஹஸே."

(என்று வேதோக்தமாய் ஆஶீர்வதித்தல்)

**போஜ:**—ஸபையோர்காள்! ஏதோ எம்மாலியன்றமட்டும் நீதிநெறிவழுவாமல் அரசுபுரிகின்றோம்.

**புத்தி:**—ராஜகுமார! நீ எல்லா முணர்ந்தவனாயினும், இச்சமயத்தில் யா முனக்கு ஒன்று சொல்லவேண்டியது இருக்கின்றது! அதனைக் கவனித்துக் கேட்டருள்வாய்.

" கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினும் மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால் !"

போஜ:—எல்லாம் அவர்களுடைய அநுக்ரஹமே யன்றி வேறன்று என்பதை நன்கு அறிவேன் !

ஹரி:—அதற்கென்ன ஸந்தேஹம் !

வத்ஸ:—அரசே ! யாமுனக்கு அதிகமாய்க் கூறவேண்டிய தொன்றுமில்லை.

* " சூது முந்துறச் சொல்லிய யாவையும்
நீதி மன்ன ! நினக்கிலை யாயினும்,
ஏதமென்பன யாவையு மெய்துதற்
கோது மூல மவையென வோர்தியே !"

போஜ:—அப்படியே !

ஹரி:—ராஜஸத்தம ! ஸகலத்தையுமறிந்த உனக்கு யான் நீதியெடுத்துரைப்பது பேதைமையே ! ஆயினும்,

" யாரொடும் பகைகொள்கில னென்றபின்
போரொடுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொ டுங்கல்செல் லாதது தந்தபின்
வேரொ டுங்கெடல் வேண்டலுண் டாகுமோ ?"

போஜ:—அடிகாள் ! ஒருநாளுமில்லை !

காளி:—நண்ப ! அரசுரிமையில் யாவருந்துதிக்கத்தக்கவனென உனக்கு யான் கூறலும் வேண்டுமோ ?

* கம்பராமாயணம்

* "உமைக்கு நாதற்கும் ஒக்குபுன் னூர்திக்கும்
இமைப்பி னூட்டமோ ரெட்டுடை யானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கின ராயினும்
அமைச்சர் சொல்வழி யாற்றுத லாற்றலே!"

போஜ:—நண்ப! இத்தகைமறக்குமன்னர் வுயிர்ப்பின்றி உடலோடிருக்க நாடுவோரே.

ஸுகேஸரீ:—இதுதான் நீதிமன்னர்களுக்குரிய லக்ஷணம்!

* "வைய மன்னுயி ராகவம் மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருண்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ?"

வீர:—வாஸ்தவம்!

* "இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
வினையன் றூயன் விழுமியன் வென்றியன்
நினையு நீதி நெறிகட வானெனி
லனைய மன்னற் கழிவுமுண் டாங்கொலோ!"

கோவி:—ராஜ குமாரா! ஸகல தர்மங்களையு மறிந்தவனான வுனக்கு வைதிக ப்ராஹ்மணனான யான் என்ன நீதி கூறப்போகின்றேன்.

மஹநீய சரிதைக மார்கே மனஸஞ்சரந்
மா ஸ்ம ப்ரூயா: கஸ்யாऽபி மர்மஸு வஸ்து,
குரு ஸர்வஸமீஹிதேஷு கருணாம் அகாரணாம்,
ஸத்ய மேவ ப்ரூஹி ஸங்கடேऽபி;

* கம்பராமாயணம்

XX

# THE MOST HAPPY CATASTROPHE

OR

'THE IMPERIAL CORONATION OF PRINCE BHOJA WITH VILASAVATI AND LILAVATI, AS THE SUPREME EMPEROR OF DHARA, BHUPAL AND UJJAIN"

——*Act VII, Scene 2, pages* 380-381

Facing page ௩அ௧

# ஸ்ரீ திவ்யாநந்த நிர்வஹணம்

## அல்லது

## "தாரா ராஜ்யம், பூபாள ராஜ்யம், உஜ்ஜயினீ ராஜ்யம் இம் மூன்றுக்கும் போஜகுமாரரைச் சக்ரவர்த்தியாக முடிசூட்டுதல்"

---

ஆநீ:—ஸபையோர்காள்! யான் கருதிய தொன்றுளது. அதை நீங்கள் நிறைவேற்றி வைக்கவேண்டும்..... .........
ஆகலின், இப்பொழுதே இவர்களுக்கு முடிசூட்ட விடை தந் தருள வேண்டும்.

சாரு:—சான்றோர்காள்! யானும் இப்பரமாநந்த ஸந்தர்ப் பத்தில் போஜகுமாரருக்கு, பூபாள ராஜ்யத்திற் கரசராக, இப் பெண்மணி லீலாவதியுடன் கூடவே எனது ஏக புத்ரியான விலாஸவதியையும் ஸிம்ஹாஸநத்தின்மீது வீற்றிருக்கச் செய்து, முடிசூட்ட விரும்புகின்றேன். அதையும் நீவிர் அநு மோதிப்பீர்களெனப் ப்ரார்த்திக்கின்றேன்.

ஆநீ:—ஆநந்தம்! ஆநந்தம்!! இதுவே என்னுடைய மனோரதமும்! பழம் நழுவிப் பாலிற்விழுந்தாற்போ லாயிற்று.

ஸபை:—அப்படியே! மிக்க ஸந்தோஷம்!

ஆநீ:—(போஜனையும் விலாஸவதியையும் லீலாவதியை யும் தனது ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருக்கச் செய்து, சாருமதீ தேவியார் தன் மகுடத்தை விலாஸவதிக்குச் சூட்ட, பத்மாவதீ தேவியாரைக் கொண்டு தன் மகுடத்தை லீலாவதிக்குச் சூட்ட புத்திஸாகரர் முஞ்ஜன் இதுகாறு மணிந்திருந்த மகுடத்தை போஜகுமாரருக்குச் சூட்ட) போஜ குமாரரே!........சக்ர வர்த்தியாயிருந்து இம் மாளவ மஹாராஜ்யம் முழுமையும் பரி பாலித்து வருவீரெனப் ப்ரார்த்திக்கின்றேன்.

—அங்கம். VII, களம். 2, பக்கம். [illegible]

நிரதிஶயாநந்த நித்ய மோக்ஷா ஸம்ருதம்
ஸவஸ்நேவர்ஜிதம் ஸவ நிபீய,
ஸகலலோகேஶ்வரம் ஸகல ஸாஸ்வோஸ்பதம்
ப்ரணதசிந்தாமணிம் ப்ரணம ஸ்ஸூப,
நிருபமாகாஶ நிர்குண நித்யமுக்த-
ஸச்சிதாநந்த ஸம்பூர்ண ஸர்வஶக்தி-
விஶ்வகாரண நிர்மல விஷயரூப-
பரமபுருஷம், ஸ ஸர்வதா பாலயேத் த்வாம்!

போஜ:—எல்லாந் தங்களைப் போன்ற பரமஸாதுக்களான ப்ராஹ்மணர்களின் ஆஶீர்வாதமே.

ஶஶி:—என் கண்மணி!

* "அந்தணாளர் முனியவு மாங்கவர்
சிந்தையா லருள் செய்யவுந் தேவரில்
நொந்துளாரையு நொய்துயர்ந் தாரையும்
மைந்த! எண்ண வரம்பு முண்டாங் கொலோ?"

சாரு:—அதற் கையமு முண்டோ!

* "ஶீல மல்லன நீக்கி செம்பொற்றுலைத்
தால மன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
கால மல்லது கண்ணு முண்டாகுமோ!"

பத்மா:—உண்மையே! ஆயினும் யான் கூறுவது ஒன்றுண்டு.

* கம்பராமாயணம்

* "உருளு நேமியு மொண்கவ ரேங்கமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்
தெருளு நல்லறமு மநச் செம்மையும்
அருளு நீத்தபி னவதுண்டாகுமோ !"

ஸாந்த :—ராஜபுத்ர ! ஸகலமான ராஜநீதிகளேயு மறிந்தவர்களான உங்களுக்குப் பேதையான யான் என்ன புத்திமதி கூறப்போகின்றேன். ஆயினும்,

* "கோளு மைம்பொறியுங் குறைபப் பொருள்
நாளுங்கண்டு நடுக்குறு நோன்மையின்
ஆளுமவ்வரசே யரசன்னது
வாளின் மேல்வரு மாதவம் மன்னனே !"

போஜ:—உங்களது அநுக்ரஹமிருக்குமளவும் எமக் கென்னகுறை ?

கன்றினைத் தாய்போலு மருளுடன் மக்களைக்
கருத்துள மிருத்தி வேந்தர்
கடலிறை சூழுமிப் புவநமகி லத்தையுங்
காப்பதே கடமை யாகும் !

மன்றுபுகழ் மாளவ மென்றென்று மோங்குமா
வளமுடன் பாது காத்து
மநஸ்ஸாக்ஷி யாகவும் ப்ரவத்ய மாகவுமவ்
வண்கடமை நிறைவேற்றுவாம் !

நன்றுமதி சொலியெமக் குறுதியொடு வல்லமையு
நல்கியொரு தவறுமின்றி

* கம்பராமாயணம்

நாட்டினில், ஜாதிமத பேதங்கள் பாராது
நாட்டி நற்றன்ம நிலைமை
என்றனுள மேவிநின் றெங்கணு நிறைந்துளோ
னீஸ்வரன் தேவதேவன்
என்னுடை விருப்பத்தை நிறைவேற்றுவாராக
வேமமா மெம்பிரானே !

ஆதி:—அவ்யாஜகருணாமூர்த்தியான எம்பிரான் அப்படியே நிறைவேற்றுவர் !

போஜ:—சான்றோர்களே ! யான் இவ்வளவு ஸுகத்தையும் நலத்தையும் பெறத்தக்கவனல்லேன் ! என் பிதாவுக்குப் ப்ராணநேசரும் எனக்கு ஆசிரியருமான புத்திஸாகரரையே எனது முதன்மந்த்ரியா யடையப்பெற்றேன் ! ஸகல நீதிகளையு மறிந்த ஹரிஹரரையும் ஸுகேசரையும் எமது முக்ய ஸசிவர்களாகக்கொண்டேன் ! எனக்குப் பரமோபகாரஞ் செய்த வத்ஸராஜரையும் வீரஸேநரையும் எனது மஹாராஜ்யத்திற்கு ஸேநாதிபதிகளாகக் கொண்டேன் ! என்னைக் கொடிய ஸர்ப்பத்தின் வாயினின்றும் காப்பாற்றிய கோவிந்த பண்டிதரை எனது ஆஸ்தாந பண்டிதராகப் பெற்றேன் ! பசிதாஹத்தினாற் காட்டில் வருந்திக்கஷ்டப்பட்ட என்னைக் கருணையுடன் காப்பாற்றிய பில்லராஜர் ஜயபாலரையே எனது தநபாலகராக வடைந்தேன் ! என் ப்ராணனைப்பன்முறைக்காப்பாற்றின என் ப்ராணநேசர் காளிதாஸரையும் அந்த்ரதேசத்தையாண்டுவர எனக்குப் ப்ரதிநிதியாகக் கொண்டேன் ! ஆதித்யவர்ம மஹாராஜரது நல்ல அபிப்ராயத்தையுங்கொண்டேன் ! என் அத்தை சாருமதிதேவியாரின் கருணைகடாக்ஷத்திற்குப் பாத்ரனானேன் ! கற்பிற்கரசி விலாஸவதியையும் அடைந்தேன் ! என்னுயிர்க் காதலியாகிய லீலாவதியையும் மணம்புரிந்தேன் ! நுங்களது அநுக்ரஹத்தால் இம்மத்தியதேசம் முழுதிற்கும் சக்ரவர்த்

தியானேன் ! இவ்வுலகில் யான் விரும்பத் தக்கன வெல்லா மெய்தினேன் ! இனி எனக்கென்ன குறை ?

ஆக்குவது மழிப்பதுவு நம்மாலிங்கே
அணுவளவு மில்லையென வகத்திற்கொண்டே
ஆக்குவது மழிப்பதுவு மநாதியாய
அரும்பொருளின் செய்கையென அறிதல்வேண்டும்;
போக்கியென்னை யுயிர்நீக்கிப் புவிமீயா டென்றன்
பூவையுடன் வாழ்ந்திருக்கப் புந்தி பூண்டான் !
ஆக்கையழி வுறப் பழியே கண்டா னம்மா !
அதைநினைந்து நீதியுட னுண்டு வாழ்வோம் !
ஆகலின் எல்லாம் ஈசனது திருவருளே !

*"தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை
மூவர் கோனாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்,
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம் ;
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே !"

## பரதவாக்யம்

(எல்லோரும் எழுந்து நிற்கின்றனர்).

லீலா :—(கைகூப்பி)

ஸ்ரீதேவ-தேவ ! விபோ !
ஸ்ரிதஸகல-பந்தோ !
ஸ்ரீமௌளீ-வல்லப ஹோ,
ஸ்ரீ கருணா-ஸிந்தோ !

---

* திருவாசகம்

விலா:—(வணக்கத்துடன்)

வேதே ச-வேதாந்தே
விதிதபர-ப்ரஹ்மந் !
விஹித ஜக-ஜ்ஜந்மலய
விபவஸ்வாஸ-கர்மந் !

போஜ:—(அஞ்ஜலி செய்துகொண்டு)

ஸோ தேஹி-ஸௌம்யதமம்
ஸ்வவரேண்ய-சரித !
ஸ்வகபதே !-பரமபதே !
வாயுவிநுத-ஸ்வகுத !

ஸபையோர்:—(கைகூப்பிக்கொண்டு)

ஆதேசம்-அபிவிதிதாம்
அவ ஸததம்-ஸம்ஸாரம்,
அமணிதஸத்-ஸம்யபுதாம்
ஸாமான விலா-ஸஸஹாம் !

(நடர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கானஞ்செய்தல்)

(முதற் பதிப்பின் ஸாம்ராஜ்ய கீதம்)

ஆங்கல கீதி

ய ய ஸரிமா-மாம மமம-ரிமஸ ரிமமமா ।
ஸ ஸ ஸ ரிமா-ஸாரி ஸஸரி-யபிப யாரிஸா ॥

பல்லவி

ஜயதி ஜயா விஜிதார்யா சக்ரபாலிகா !

அநுபல்லவி

ஐமஹெவிலம்-பாலயந்த்ய-நந்யநாயிகா ॥ (ஜயதி).

சரணங்கள்

ரக்ஷதி யா-ஸாவி ஸுயா-ஸாரதாந் ஸமா ।
ரணயந புர-கல்பிதா ஸ்வேஷக-விஸ்ரமா ॥ (ஜயதி).
நா ஸ்தம்பெதௌ-யஃ ஸாவிதா-விந்தூபூஷணௌ ।
நவநவ படு-மாஸ்த்ர ஸிஃய-சித்ரஸாக்ஷிணௌ ॥ (ஜயதி)
ஜீவ சிரம்-ஜநநீவல்-லோக ரஞ்ஜநீ ।
ஜிதஸகலா-ராதிமணு-மோக ஸஞ்ஜநீ ॥ (ஜயதி)

(இரண்டாம் பதிப்பின் ஸாம்ராஜ்ய கீதம்).

ஆங்கல கீதி

யநிஸ நீயபா । யநிஸநீயபா ॥
யநிஸநீய பாப மமப-யநிஸ நீயபா ।
மாயபமரி-மாபமரிஸ-ரிமமமாரிஸா ॥

பல்லவி

விஜயதாம் ஸதா । விஜயதாம் ஸதா ॥

அநுபல்லவி

விஜயதாம் ! ஸ ஈஷ்யவ்ருத்த-ஸப்தமோ ந்ருபா ।
விதேஶிநஸ் ஸ்வ-தேஶிநோ ஽ப்ய-வந் ஸம: ஸதா ॥ (வி)

சரணங்கள்

ஜீவதாந் ந்ருத: । ஜீவதாந் ந்ருத: ॥
ஜீவதாத் களத்ர புத்ர-பௌத்ரஸம்வ்ருத: ।
ஜீவலோக-து:வஹரண-கல்பித வ்ரத:॥ (வி)

ஸ்வஸ்தி தே ப்ரஹோ। ஸ்வஸ்தி தே ப்ரஹோ ॥
ஸ்வஸ்தி தே ஹ்ருதாநயாயி-ராஜ்யமாவிஹோ।
ஸ்வஸ்வயர்மதோஸஹிரக்ஷ-ஸார்வஹௌமஹோ॥ (வி)

ராஜதாம் ஸம: । ராஜதாம் ஸம: ॥
ரர்மவத் நிஜப்ரஜாநு-ரஞ்ஜந க்ஷம:।
ரணயாநபுர-கல்பிதா ஹி-ஷேகவிஸ்ரம: ॥ (வி)

(மூன்றும் பதிப்பின் ஸாம்ராஜ்ய கீதம்)

ஆங்கல கீதி

ஸா ஸாரீ.-ரீ ஸரீ,
ஶா ஶாம.-ஶாரிஸா,
ரீரீ-ரிஸா ।
பா பா ப.-பா ம ஶா,
மா மா ம.-மா ஶ ரீ,
ஶாமஶரிஸ.ஶாமபா,
யபமஶ-ரிஸா॥

பல்லவி

பாஹ்யஸ்மச்-சக்ரிணம்,
பாஹி! ஜ-யார்ஜிநம்,
பாஹீஶ்-வர ।

அநுபல்லவி

ஸத்யர்ம-ஶாலிநம்,
ஸத் கீர்த்தி-மாலிநம்,
ஸாம்ராஜ்ய-பாலிநம்,
பாஹீஶ்-வர ॥ (டம)

சரணங்கள்

பாஹ்யஸ்ம-தீஶ்வரம்,
மேர்யாம-னோஹரம்,
ரக்ஷேஶ-வர ।

ஶாரதா-யீஶ்வரம்,
ஶ்ருதாந-மேயஶ்வரம்,
வைஹாரத்ந-ஹாஸ்வரம்,
ரக்ஷேஶ-வர ॥ (பா)

ஶத்ரூந் வி-நாஶய,
துஷ்டாந் ப்ர-ஶிக்ஷய,
உச்ஹந்-யீ தாந் ।

ஸாயுஜந் ப்ர-பாலய,
ஶிஷ்டாந் ஸம்-லாலய,
பாஹ்யஸ்ம-ஶாஶ்ரய,
த்வத்ஸம்-ஶ்ரிதாந் ॥ (பா)

ஏஹி ! ப்ரஶோ க்ஷிதிம்,
பாஹி ! ந: க்ஷமா பதிம்,
பாஹீஶ்-வர ।

ராஜ்ஞே யர்மே யுதிம்,
ஸத்யே த்ருஶாம் மதிம்,
யுத்யே ஜயோந்நதிம்,
தேஹீஶ்-வர ॥ (பா)

XXI

THE FOUR GENERATIONS OF ROYALTY

OR

"THE IMPERIAL ANTHEMS OF THEIR MAJESTIES,
VICTORIA, THE GOOD,
EDWARD VII, THE PEACE-MAKER,
AND
GEORGE V, THE SYMPATHISER"

——*Act VII, Epilogue, pages* 389-393

Facing page 508

# நான்கு ராஜ பரம்பரை

அல்லது

"ஸ்ரீ விஜிதார்யா சக்ரவர்த்தினி, ஸ்ரீ ஸப்தமேட்ய வ்ருத்த மஹா ராஜர், ஸ்ரீ ஜயார்ஜி பஞ்சமஸார்வ பௌமர் இவர்களின் ஸாம்ராஜ்ய கீதம்"

(1)

ஜயதி ஜயா விஜிதார்யா சக்ரபாலிகா ।
ஜம்பூவிலம் பாலயந்த்ய நந்ய நாயிகா ॥

........................

(2)

விஜயதாம் ஸதா । விஜயதாம் ஸதா ॥
விஜயதாம்ஸ ஏட்யவ்ருத்த-ஸப்தமோ முதா ।
விஷேஷிந : ஸ்வதேஷிநோऽப்யவந் ஸம : ஸதா ॥

........................

(3)

பாஹ்யஸ்மச்-சக்ரிணம்,
பாஹி ! ஜ-யார்ஜிநம்,
பாஹீஸ்வர !

........................

(4)

ஜயதிஹி விஜிதார்யா சக்ரவர்த்தி நயமோவா,
ஜயதிபாரத ஸம்ராட் ஏட்யவ்ருத்த : ஸமாஜ்ய : ।
ஜயது பாரதஸாம்ராஜ்யேஸ்வர : ஸ்ரீ ஜயார்ஜீ,
ஜயது ச யுவராஜ : ஸ்ரீஏட்யவ்ருத்த:ஸூவ்ருத்த : ॥

—பரதவாக்யம், பக்கம், ௯௮௧-௯௨௯

# தமிழ்ச் செய்யுண் முதற் குறிப் பகராதி

(* இக்குறியுற்றன மேற்கோட்பாக்களாம்;
† இக்குறியுற்றன மாறுத லடையப்பெற்ற
மேற்கோட்பாக்களாம்; மற்றவை
இந்நூலாசிரியர் இயற்றியபாக்களாம்)

# ஸம்ஸ்க்ருத ஶ்லோகங்களின் முதற்குறிப் பகராதி

## கீர்த்தந முதற்குறிப் பகராதி

# அநுபந்தம்

கலியுகராஜ வ்ருத்தாந்தம், நவஸாஹஸாங்க சரிதகாவ்யம், விக்ரமாங்கதேவ சரிதம், பாரிஜாத மஞ்ஜரீ, ராஜதரங்கிணி, போஜப்ரபந்தம், ப்ராசீநலேகமாலா, இண்டியென் ஆண்டிக்வெரி, எபிக்ராவியா இண்டிகா முதலிய க்ரந்தங்களின்படிக்கு

இந்நாடகத் தலைவராகிய

ஸ்ரீ போஜராஜதேவருடைய

வம்ஶாவளி

பரமார பரமேஶ்வரர் என்னும்
ஸ்ரீ க்ருஷ்ணராஜதேவர்

|

வஜ்ரடஸ்வாமி என்னும்
ஸ்ரீ வைரிஸிம்ஹதேவர்

|

ஹர்ஷதேவரென்னும்
ஸ்ரீ ஸீயகதேவர் (கி பி. 950-974)

|

ஸிம்ஹபடரென்னும்
ஸ்ரீவாக்பதிராஜதேவர்
(கி பி 974-994)

|

குமாரநாராயணர் வீரருத்ரதேவர்
நவஸாஹஸாங்கர் விக்ரமாதித்யரென்னும்
ஸ்ரீ ஸிந்துலராஜதேவர்
(இ. பி. 994-1000)

வீரநாராயணர் அமோகவர்ஷர் வாக்பதிராஜர்
வல்லபநரேந்த்ரரென்னும்
ஸ்ரீ முஞ்ஜராஜதேவர்
(இ. பி. 1000-1014)

ஸ்ரீ போஜராஜதேவர்
(இ. பி. 1014-1070)

ஈஸபோஜரென்னும் உதயாதித்யதேவர் (இ. பி. 1070-1104)

நகபோஜரென்னும் நரவர்மதேவர் (இ. பி. 1104-1133)

டிண்டிம போஜரென்றும் யஸோவர்மதேவர் (இ. பி. 1133-1138)

கல்யாண போஜரென்னும் அஜயவர்மதேவர் (இ. பி. 1138-1160)

ப்ரஸந்ந போஜரென்னும் விந்த்யவர்மதேவர் (இ. பி. 1160-1180)

தூர்யபோஜரென்னும் ஸுபடவர்மதேவர் (இ. பி. 1180-1211)

அர்ஜுநபோஜரென்னும் அர்ஜுநவர்மதேவர் (இ. பி. 1211-12[illegible]0)

# APPENDIX I

## Hints to Actors

These are days of Evening Performances and Night Performances are gradually disappearing. Now-a-days people care more for frolic and amusement than for instruction and reality. Burlesques and Burlettas, Tit-bits and Chow-chows, Comic operas and Musical farces have become the fashion of the day. Realistic and Instructive plays, Historical and Religious Dramas, can have no scope in their programme of performances. In fact, no standard drama whether in English or Samskrit, or Tamil, Telugu or other Indian vernacular can be effectively staged at these *Evening Performances*, without mutilating the plot of the play, and lowering it to the level of their own favourite standards. Some of the occasional Evening Performances, given by one or two Parsee Theatrical Companies, have recently created a false taste in the minds of many easy-going and fashionable young men as well as of members belonging to certain Amateur Dramatic Societies in Madras, and it has fortunately or unfortunately become a growing fashion amongst them to resort only to Evening Performances in staging all sorts of plays without any regard to their nature or object.

Evening Performances are, no doubt, good in themselves, and sometimes they conduce to the conveni-ence of the audience as well as of the actors. Chow-chows and Comic plays, Social operas and Musical farces are best fitted for Evening recreation. But

whatever might be the advantages of Evening Performances with regard to such operas and farces, they should not be resorted to for representing dramas of a serious nature, pregnant with historical lessons and religious morals. It cannot be denied for a moment that by the very restriction of time that is naturally and necessarily involved in such Performances, no real play worth the name of an author, and no standard drama of acknowledged merit—classical or modern—can be effectively put up on boards in the evenings without in the first instance mercilessly cutting short the play or drama into a three hours performance, and thereby sacrificing much of the beauty and purpose of the original piece, besides giving the actors absolutely no scope for showing their histrionic skill and musical talents, and practically depriving the stage-managers of any free choice for producing stage effects by changing the scenes and furnishing the necessary stage paraphernalia as often as necessary to suit the various situations.

It is only just a few days ago that I witnessed one of the best Tamil plays written by one of the best Tamil scholars represented at one of these Evening Performances by one of the most cultured Amateur Dramatic Institutions in Madras; and I cannot characterise the performance as anything but a mere farce, where even the best of its actors were more or less puppets in dumb-shows and the worthy author was rather shown up to the ridicule and contempt of the audience. Inspite of the fact that the play had been already cut short as much as possible, and that the stage had been managed by one of the ablest hands; several scenes had to be merely run over as in Tableaux-vivants, with scarcely

any opportunity to change the scenes as often as was necessary to suit the various situations of the play, and this merely to satisfy the restless audience who were naturally anxious to go home for their supper at that late hour of the night.

It is my sincere conviction that only by resorting to Night Performances, as of old, any real play—religious, moral, social, historical or realistic—can be staged with justice to the author as well as to the actors, with advantage to the audience as well as to the society at large. It is earnestly hoped that this new taste for Evening Performances which is vitiating the minds of so many of our young men in Madras and elsewhere, will soon disappear and that a sober and sound sense will, at no distant time, induce them to revert to Night Performances.

Having made these preliminary observations with regard to the acting of plays in general, I have only to make one or two suggestions with regard to the staging of the present play. The drama of Bhôja Charitram was written in those good old days when Evening Performances were not even heard of. It was, therefore, intended, as has been remarked in the Introduction, that the whole play should be enacted on *two nights*, and the drama was accordingly divided into two parts, the first three acts constituting its first part, and the remaining four acts its second part.

As the fashion of exhibiting dramas in parts is not now in vogue among Amateur Dramatic Societies, it is necessary that I should throw a few suggestions as to how it can be best enacted in a night, as well as at

an Evening Performance if necessary. If the play is to be enacted as a whole in a single night, then the following scenes alone—*viz.*, Act I-Scene 2, Act II-Scene I, Act II-Scene 2 B, Act III-Scene 1, Act III-Scene 3, Act IV- Scene 1, Act IV-Scene 2, Act IV-Scene 3, Act V- Scene 3, Act VI- Scene 1, Act VI- Scene 3, Act VII-Scene 1 and Act VII- Scene 2—may be taken with advantage, by omitting, of course, some of the prose passages, stanzas and songs as may not be very essential for the play. If, however, the same is required to be enacted as an Evening Performance Act I-Scene 2 B, Act II- Scene 1 B, Act VI- Scene 1 and Act VII- Scene 1 may be altogether omitted from the Scenes selected above for a Night Performance.

If on the other hand the audience and actors should desire to stage the whole play without being driven to the necessity of exhibiting it in parts, I may suggest a very simple device by which both the said objects can be achieved. The Drama might be easily converted into two distinct and complete plays, one as a Tragedy with King Muñja as the hero entitled "Vilâsavatî," and the other as a Comedy or Tragic-Comedy with Prince Bhoja as the hero entitled "Lîlâvatî." The first of these plays called after Vilâsavatî, the first wife of Bhôja shall consist of the following scenes, *viz.*, Act I- Scene 2, Act II- Scene 1 B, Act II- Scene 2 A, Act II- Scene 2 B, Act III- Scene 1, Act III- Scene 3, Act IV- Scene 2, Act V- Scene 1, Act VI- Scene 2, Act VI-Scene 3, and Act VII- Scene 1. The second of these plays called after Lîlâvatî, the second wife of Bhôja shall include Act I- Scene 1, Act II- Scene 1 A, Act II- Scene 3, Act III- Scene 2, Act III-Scene 4, Act IV-Scene 1, Act IV-Scene 3, Act V-

Scene 2, Act V- Scene 3, Act VI- Scene 1, and Act VII-Scene 2.

The above two plays are intended for enactment as two *Night Performances.* But the same may also be staged as two distinct Evening Performances by omitting altogether Act III-Scene 1 and Act V-Scene 1 from the first of these plays, and Act I-Scene 1 and Act V-Scene 2 from the second of these plays, and by cutting short, of course, many of the prose passages, stanzas and songs in the respective scenes retained to suit the convenience of the audience and exigencies of the time. In conclusion, I may suggest, that many of the scenes like Act III- Scene 1 and Act IV- Scene 1, or Act II- Scene 3 and Act IV- Scene 2, might be taken separately or together, with very great advantage, as a Chow-chow for any Evening Performance. They are specially suited for such purpose and can produce very good impression on the audience.

# APPENDIX II

## TAMIL AS A UNIVERSAL ALPHABET

As one of the true well-wishers and ardent admirers of the Tamil language and literature, I would wish to make the so-called 'தமிழ் நெடுங் கணக்கு' (The Tamil Alphabet) into a system of "Universal Alphabet," so that it may not only be scientifically and phonetically self-sufficient—capable of expressing accurately and clearly all the sounds of that ancient and melodious language,—but also universal and perfect so as to be capable of adequately representing the various articulate sounds found in the different languages of the civilized world in a most economic and simple manner both in printing and in writing. It is an admitted fact that although the Tamil language is as old and sacred as the Saṃskṛit language—both belonging, in my opinion, to the same A'rya family of languages,—and is decidedly superior to, and more ancient than its sister languages, Malayâlam, Telugu and Canarese; the Tamil alphabet is in no way adequate to represent even its own sounds. It is certainly the most defective of all the Indian alphabets, and its Orthography, like that of English, is arbitrary and irregular. The time-honoured defects and absurdities of the Tamil alphabet must be perfectly plain even to the staunchest Tamilian who is acquainted only with an unphonetic system of alphabet. To an unbiassed mind, accustomed from infancy to a

